உ

திருச்சிற்றம்பலம்

# திருவாசக அருள்முறைத் திரட்டு

சிந்துபூந்துறை பென்ஷன் தாசில்தார்

மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள், B A.

எழுதிய

**பதவுரை, விளக்கவுரையுடன்**

[illegible]டியாரவர்கள் குமாரர்

திருநெல்வேலி, இந்து கலாசாலை ஆசிரியர்

**நெ. நடராஜ பிள்ளை, B A, L T. அவர்களா[illegible]**

வெளியிடப்பட்டது.

முதலாவது பதிப்பு.

**1943.**



சாதா கட்டடம் ரூ 3 ]

# பதிப்புரை

இற்றைக்குச் சிறிது ஏறக்குறைய ஆயிரத்து அறுநூற்றைம்பது ஆண்டுகளுக்குமுன் திருவாதவூர் அண்ணல் திருவாய்மலர்ந்தருளிய "திருவாசகமென்னும் தேனை"ப் பருகி நுகர்வார் யாவரும் தம்மைத் தொன்மையிலே பிணித்துள்ள கட்டு (மலம்) நீங்குதற்கேதுவாகிய இருவினை ஒப்பெய்தித் திருவருட் பேற்றினை அடைதல் திண்ணம். ஆயினும் அந்நூல் முற்றும் ஓதியுணரப் பெறாவிடினும், "திருவடிக் கீழ்ச் சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்திலுள்ளார் சிவனடிக்கீழ்" என்று அருளிச் செய்தவாறு, இந்நூலின் பெருமையுடன் பொருண்மையும் உணர்ந்து ஓதும் மெய்யன்பர் தம் பக்குவத்திற்கேற்பச் சிவஞானச் செல்வப் பேறடைய வேண்டுமென்னும் பெரு நோக்கத்துடன் எனது தந்தையார் திருவாசகத்தில் தேர்ந்தெடுத்த 112 பாட்டுக்களுடன், முதற் சிவபுராணக் கலிவெண்பாவிலும், மற்றைய மூன்று அகவற் பாக்களிலும் சிறந்த கருத்துக்களடங்கிய சிற்சில வரிகளுக்கும், பதவுரையும் சித்தாந்த பரமாக விளக்க வுரையும் மாணிக்க வாசக சுவாமிகள் வரலாறு ஒன்றும் விரிவான ஆராய்ச்சி முறையில் எழுதி முடித்து, முற்றும் அச்சாகி வெளிவரும் தறுவாயில் இறைவன் திருவடி நீழலடைந்தனர். இஃதன்றியும், அவர்கள் தாம் "திருப்புகழ் அமிர்தம்" பத்திரிகை வாயிலாக முற்றிலும் விரிவுரை எழுதி அச்சிட்டு வெளி வந்துள்ள "கந்தரநுபூதி" நூலையும் கட்டடஞ்செய்து வெளியிடக் கருதியிருந்தனர். இவ்விரு நூல்களும் அவர்கள் ஆயுட் காலத்தில் வெளி வருவதற்குத் திருவருள்

கூட்டி வைக்காதது நினைந்து வருந்தி அப்பணியை முடித்துவைக்கும்படி எனக்கு ஆணை தந்து 1943-ம் வருடம் ஏப்ரல் மாதம் 14-ந் தேதியன்று காலஞ் சென்றமையால், முதன்முதலாக இந்நூலைக் கட்டடஞ் செய்து அவர்கள் எண்ணப்படி, தமிழுலகுக்கும் சைவ சித்தாந்த உணர்ச்சியுடையாருக்கும் பயன்படுமென்று எண்ணித் தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபையின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழாவில், சைவப் பெரியார் குழுமிய இப்பேரவையில் இன்று வெளி யிடுகிறேன். ஊண், உடைக்குங்கூடப் பஞ்சம் ஏற் பட்டுள்ள இந்தப் போர்க் காலக் கொடுமையையும் பொருட்படுத்தாது அடக்க விலைக்கு முந்நூறு படி களே வெளியிட நேர்ந்தது. ஆதலின், மெய்யன்பர் யாவரும் இந்நூலை வாங்கி ஆதரிப்பரென நம்புகிறேன். "கந்தர் அநுபூதி"யையும் இறைவன் அருளாலும் 'திருப்புகழ் அமிர்தம்' பத்திராசிரியர் பேருதவியாலும் கூடிய விரைவில் வெளியிட எண்ணியுள்ளேன். திருவருள்கூட்டி வைப்பதாக!

"தென்னாடுடைய சிவனே போற்றி
என்னாட்டவர்க்கும் இறைவா போற்றி"

சிந்துபூந்துறை
திருநெல்வேலி

நெ. நடராஜன்.

உ

சிவமயம்.

# முகவுரை.

---

சைவசமயச்சந்தான அருட்குரவர்கள் நால்வர்களில் ஒருவராகிய கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார், சைவசமய குரவர்கள் மூவருடைய தேவாரப் பதிகங்களிலிருந்து திரட்டியருளிய தொண்ணூற்றொன்பது பாட்டுக்களடங்கிய தேவார அருள்முறைத்திரட்டு என்றாலே எழுதப்பட்ட உரையுடன், சென்னை சைவசித்தாந்த மகாசமாஜத்தாரால் முதலாவது பதிப்பும், என்றால் இரண்டாவது பதிப்பும் முன்னே வெளியிடப்பட்டசெய்தி தென்தமிழ் நாட்டில் வாழும் சிவநேயர்களுக்குத் தெரிந்திருக்கும். அத்தேவார அருள் முறைத்திரட்டு நூல் உரையில் நான் சைவசித்தாந்த உண்மைகளை விளக்கி வெளியிட்டதுபோல, மாணிக்கவாசகஅடிகள் பாடியருளிய திருவாசகநூலிலிருந்தும் பலமுதன்மையானபாட்டுக்களைத்தேர்ந்து திரட்டி, அப்பாட்டுக்களில் அடங்கிய சைவசித்தாந்த உண்மைகளை திருவருளைத்துணைக்கொண்டு விளக்கி, சைவஉலகத்துக்கு எனது தாழ்மையான பணியாகச்செய்து உதவல்வேண்டுமென்று அவாக் கொண்டிருந்தேன். திருவாசகத்திற் பல பாட்டுக்களுக்கு நான், முன் பல ஆண்டுகளாக, செந்தமிழ்ச்செல்வி, சித்தாந்தம் பத்திரிகைகளுக்கு எழுதியனுப்பிய உரைகள் அப்பத்திரிகைகளில் வெளியிடப்பட்டுள்ளன. அப்பாட்டுக்களின் உரையில் பலவற்றை யெடுத்துக்கொண்டு திருத்தவேண்டிய இடங்களில் திருத்திச்சேர்த்தும், முன்உரை எழுதாத பல பாட்டுக்களைப் புதிதாகச்சேர்த்து அவற்றிற்கு உரையெழுதியும் நான்கு அகவற்பாட்டுக்கள் தவிர சேர்ந்த மொத்தம் 112 பாட்டுக்கள் உரையுடன் திருவாசக அருள்முறைத் திரட்டு உரையென இப்பொழுது நான் வெளியிடுகின்றேன். முதற்கண்ணுள்ள நான்கு அகவல்களையும் சேர்த்து மொத்தம் 658 பாடல்

களுள. நான்கு அகவல்களில் ஒவ்வொன்றிலிருந்தும் சில வரிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு அவற்றிற்கு உரையெழுதப்பட்டுள்ளது. திருச் சதகம் பத்துப்பகுதிகளில் ஒவ்வொன்றிலிருந்தும், ஏனைய பதிகங் கள் ஒவ்வொன்றிலிருந்தும், ஒரு பாட்டுக்குக் குறையாமல் பாட் டுக்கள் தேர்ந்தெடுத்து உரையெழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது.கோயிற் றிருப்பதிகத்துக்கு மாத்திரம் அதிலுள்ள பத்துப்பாட்டுக்களுக்கும் உரையெழுதப்பட்டுள்ளது. நான்கு அகவல்களிலுமுள்ள சில வரி கள் தவிர, சில பதிகங்களில் ஒன்றுக்குமேலே ஐந்து பாட்டுக்கள் வரை சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வாறாக மொத்தம் 112 பாட்டுக் கள் உரையுடன் இந்நூலில் அடங்கியுள்ளன.

நான்கு அகவல்களின் தலைப்புக்களுக்கும் அவற்றின்கீழே குறிக்கப்பட்டிருக்கிற ஞானப்பொருள்களுக்கும் விளக்கஉரைகள் எழுதப்பட்டுள்ளன. அவ்வாறே நான்கு அகவல்களுக்குப்பின் வரு கிற தலைப்புகளுக்கும், ஞானப்பொருள்களுக்கும் விளக்கஉரைகள் எழுதப்பட்டுள்ளன. இவ்விளக்க உரைகள் முன்னுள்ள உரைஆசிரி யர்கள் எவராலும் எழுதப்படவில்லை.

பேராயியற்கைப் பேரின்பவாழ்வு நிலையடைந்த மாணிக்கவாசக அடிகள் அவ்வாழ்வைத் தமக்கு உதவிய சிவபெருமானுடைய பேரருளை தமது உள்ளத்தில் நினைந்து கனிந்துருகிப்பாடிய திரு வாசகப் பாடல்களுக்கு உரைஎழுதல் எளிதன்று; மலக்குற்றம் முற் றிலும் நீங்கினவர்களே திருவாசகத்துக்கு உரையெழுதத்தக்கவர்கள். ஆயினும், மாணிக்கவாசக அடிகள் தாமே சிவபுராண அகவல் இறுதியில், "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்தினுள்ளார்" என்று கூறியபடி சிவஅன்பர்கள் திரு வாசகப்பாட்டுக்களை அவற்றின் பொருளுணர்ந்து அன்புடனே ஓதி அகங்குழைந்துருகி திருவருளைப் பெற்று நற்பெரும் பயனடை தற்கு என்னாலியன்ற சிவப்பணியைச் செய்தல்வேண்டும் என்ற எனது பேரவா இந்நூலை வெளியிடுதற்கு என்னைத்தூண்டியது. ஏறக்குறைய சென்ற இரண்டு ஆண்டுகளுக்குமுன், பத்து ஆண்டு

களாக திருவாசகப் பாட்டுக்களினுரையை பத்திரிகைகளுக்கு எழுதி வந்த பழக்கமும், அப்பேரவாவுக்குத் துணையாயிருந்து என்னைத் தூண்டியது. சென்ற இரண்டு ஆண்டுகளுக்குமுன் சில திங்கள் களில் என்னுடைய தேவார திருவாசகஉரைகள் செந்தமிழ்ச்செல்வி சித்தாந்தம் பத்திரிகைகளில் இடம்பெறாததால் நான் அப்பத்திரி கைகளுக்கு உரையெழுதி அனுப்புவதை நிறுத்திவிட்டேன்.

முன் வெளியிடப்பட்ட சில உரைஆசிரியர்கள் உரைகளிருப்ப இந்நூலை நான் வெளியிடவேண்டிய தென்னையெனின், அவ்வுரை கள் நூல்முழுவதுக்கும் எழுதப்பட்ட உரைகளாதலின், சுருக்கமாக எழுதப்பட்டுள்ளன. அவ்வுரைகளில், பாட்டுக்களில் நுண்ணியன வாய் மறைந்துள்ள சித்தாந்த உண்மைகள் மேற்கோள்களுடன் எடுத்துக்கூறப்படவில்லை. எந்த உரையிலாவது அகவல்களின் தலைப்புக்களுக்கும், பதிகங்களின் தலைப்புக்களுக்கும், ஞானப்பொ ருள்களுக்கும் விளக்கஉரைகள் எழுதப்படவில்லை. நான் அறிந்தபடி சில இடங்களில் உரை சித்தாந்தக் கருத்துக்கு மாறுபட்டிருக்கிறது. இக்குறைகளை யான் எனது அறிவுக்கு எட்டியவாறு ஒருவாறு நீக்கி இவ்வுரை எழுதியுள்ளேன். இவ்வுரையிலும் எனது அறிவுக்கு எட்டாத பல குறைகளிருக்கலாம். அக்குறைகள் அவற்றை ஓதியறி யும் சித்தாந்த அறிஞர்களுக்கும் பின்வருகிற உரைஆசிரியர்களுக் கும், திருந்திய புத்துரை விளக்கத்துக்கு காரணங்களாயிருக்கும்.

இவ்வுரையிற் சித்தாந்த உண்மைக்கு மாறான கருத்துப்பிழை களை சிவஅன்பர்கள் காண்பாராயின் அவற்றை அவர்கள் எனக்குக் காரணங்காட்டித் தெரிவிக்கும்படி நான் அவர்களைக்கேட்டுக்கொள் ளுகிறேன்.

இவ்வுரையிற் குறிப்பிடப்பட்டிருக்கிற அகவல் எண், பதிக எண், பாட்டு எண், ஆகிய இவைகள் சென்னை சைவசித்தாந்த சமா சப் பதிப்புத் திருவாசகத்திற் குறிப்பிடப்பட்டவாறு, குறிப்பிடப் பட்டிருக்கின்றன. அப்புத்தகம் இல்லாதவர்கள் சிவபுராணம்

## முகவுரை

முதல் நான்கு அகவல்களுக்கு வரிசையாக; 1, 2, 3, 4 எண்களும் திருச்சதகம் பதிகத்துக்கு எண் 5-ம் நீத்தல்விண்ணப்பம் முதல் அச்சோப்பதிகம் இறுதிவரை எண் 6 முதல் 51 வரை வரிசையாக எண்களை தங்கள் புத்தகத்தில் எளிதாய்க் குறித்துக்கொள்ளலாம். நான்கு அகவல்களில் (4—10) என்பது 4-வது அகவல், 10-வது வரி என்றும், 5 முதல் 51 வரையுள்ள பதிகங்களில் 5—10 என்று குறிப்பிட்டிருந்தால், அதனை 5-வது பதிகம் 10வது பாட்டென்றும் கொள்க; திருமந்திரம் சமாஜப்பதிப்பு எண்கள் உரையிற் குறிப் பிடப்பட்டிருக்கின்றன.

மாணிக்கவாசக அடிகளைப்பற்றிய வரலாறு ஒன்று ஆராய்ச்சி முறையில் விரிவாக எழுதி நூலுக்குமுன் சேர்க்கப்பட்டுள்ளது. அகவல்களும், பதிகங்களும் எந்த எந்த யிடங்களில் வைத்து பாடப் பட்டவை என்று வரலாற்றுஆசிரியர் கடவுண்மாமுனிவராற் கூறப் படுகின்றனவோ அந்தந்த இடங்களிற் கூறப்பட்டுள்ளன.

தேவார அருள்முறைத்திரட்டு நூல் உரையையும் திருவாசக அருள்முறைத்திரட்டு நூல் உரையையும் ஓதுகிற சிவஅன்பர்கள் சிவபெருமானுடைய தோத்திரப்பாடல்களை, அவற்றிலடங்கிய சித்தாந்த உண்மைகளை அறிந்து அன்போடோதி மனங்கசிந்துருகி நற்பயனடைதல் வேண்டுமென்பது எனது கருத்து.

சைவசமயம் செயல்முறைநெறி (Practical Religion) ஆத லால் சைவசித்தாந்த நூல்களைக் கற்றறிந்தவர்களுக்கு எனது தேவார அருள்முறைத் திரட்டு உரையும, திருவாசக அருள்முறைத் திரட்டு உரையும் அவ்வுண்மைகளை அனுபவத்தில் தெரிந்து பழகிக் கொண்டு நற்பயனடைதற்கு ஏதுக்களாயிருக்கும். இந்நூலுரைப் பதிப்பு முடிவாகப்போகுந் தருணத்தில் நான் நோய்வாய்பட்டு நான்கு திஙகள்களுக்கு மேலாக யாதொருபணியும் செய்யக்கூடாத நிலைமையிலிருந்தேன். அப்பொழுது இந்நூலுரைப்பதிப்பு முடியா மல் நின்றுவிடுமோஎன்ற ஐயப்பாடு எனதுள்ளத்தில் உண்டாயிற்று

## முகவுரை

சிவபெருமான் திருவருளினாலே எனக்கு வந்தநோய்முழுதும் நீங்கியதினாலே இந்நூலை இப்பொழுது வெளியிடுகின்றேன்.

எனது மூப்புப்பருவத்துக்குரிய கண்பார்வைக் குறைவினால் உரைகளை நன்றாகவெழுதியும் ஓதியும் அச்சுப்பிழைகளைத் திருத்தியும் நானாக பணிசெய்ய இயலாதிருக்கிறேன். நான் சொல்லிக் கொண்டுவந்த உரைகளை யெழுதினவர்களுக்கும், அச்சுப்பிழைகளைத் திருத்தின நண்பர்கள் திருவாளர் சு. முருகப்ப பிள்ளை அவர்களுக்கும், திருவாளர் இ. மு. சுப்பிரமணியபிள்ளை அவர்களுக்கும், திருவாளர் பரமசிவன் பிள்ளை அவர்களுக்கும் எனது வந்தனம் உரியது.

அச்சுப்பிழைகளின்றி இந்நூலை அச்சிடவேண்டுமென்று எத்துணை நான் முயன்றாலும் சில பிழைகள் நேர்ந்துவிட்டன. அவற்றிற்கு திருத்தங்கள் எழுதி அச்சிடப்பட்டிருக்கின்றன. குறியீடுகளிற் பிழையிருப்பின், அவற்றை ஓதுகிறவர்கள் திருத்திக்கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறேன்.

மாணிக்கவாசக அடிகள் யிருந்தகாலம் கி. பி. மூன்றாவது நூற்றாண்டு என்று சைவப்பெரியார்கள் சிலர் பலஏதுக்கள் காட்டி ஐயப்பாட்டுக்கிடமின்றி வரையறுத்துக் கூறியிருக்கின்றனர். அதனைப் பற்றி அறிய விரும்புகிறவர்கள் திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் எழுதி வெளிப்படுத்திய "மாணிக்கவாசகர் சரித்திரம்" என்ற நூலை ஓதியறிக.

நான் இந்நூலில் உரையெழுதியிருக்கிற திருவாசகப்பகுதிகள் தவிர, ஏனைய அகவல்வரிகளிலும், பதிகப்பாட்டுக்களிலும் விளங்காமலிருக்கிற பகுதிகளை விளக்கிக் குறிப்புரைகள் எழுதி வெளியிட எண்ணங்கொண்டு திருவாசகநூல் முழுதுங் கையெழுத்துப்படியாக எழுதிவைத்திருக்கிறேன். திருவருள் துணைசெய்யுமானால் அந்நூலை வெளியிடுவேன்.

## முகவுரை

இக்காலம் தாள்பஞ்சம் உடையதாதலால் 300 படிகளே அச்சிடுதற்கு என்னால் முடிந்தது. இந்நூல் அச்சிடுவதற்கு மிகுதியான பொருள் செலவிடப்பட்டிருக்கிறது.

இந்நூலை அச்சிட்டுஉதவிய திருநெல்வேலி மீரானியா அச்சுக்கூடத்தின் முன்உரிமையாளருக்கும், இந்நூல் அச்சிடும் இடையில் அவ்வச்சுக்கூடத்தை விலைக்கு வாங்கி அதனை நடத்திவருகிற உரிமையாளருக்கும் எனது வந்தனம் உரியது.

நான் திருவாசகநூல் முழுமைக்கும் எழுதிவைத்திருந்த சொல்லகராதியும், உவமை அகராதியும், சிவபெருமான் திருப்பெயரகராதியும் சென்னை சைவசித்தாந்த மகாசமாஜத்தார் வெளியிடக்கேட்டு நான் அவர்களிடங் கொடுத்து, அவர்கள் 1941-ம் வருஷத்தில் அச்சிட்ட திருவாசகப்பதிப்பு நூலுடன் முன்னமே சேர்க்கப்பட்டதினாலே நான் அவைகளை அச்சிட்டு இந்நூலுடன் சேர்க்கவில்லை.

இறைவனருள் எங்கும் விளங்குக.

திருச்சிற்றம்பலம்.

1118-ம் ஆண்டு<br>தைமீ 22-ம்உ<br>4—2—43.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

*

உ

# மாணிக்கவாசக அடிகள் வரலாறு.

அமிழ்தினுமினிய செந்தமிழ் வழங்கும் பாண்டி நன்னாட்டில் வைகையாற்று மருங்கில் உள்ள திருவாதவூரில் அமாத்திய அந்தண குலத்தில் மறையொழுக்கம் தலைநின்ற மாசில் பெருங்குணமுடைய ராய், சைவப்பற்று வழி ஒழுகும் சம்புபாதாசிருதர் என்ற திருப்பெய ருடைய ஒருவர் தமது மனையாள் சிவஞானவதி யென்பாருடன் இல்லறம் நடத்தி ஒழுகிவந்தார், சம்புபாதாசிருதர் தமது மனை வாழ்க்கைக்கு மகப்பேறு இல்லாத குறையை நினைந்து தமிழ் நாட் டில் புத்தசமயம் முதலிய புறச்சமயங்களின் குறும்பினை ஒழித்து வேதாகம நெறியாகிய சைவசமயத்தைத் தழைக்கச் செய்யவல்ல ஓர் ஆண்மகவைத் தமக்குத் தரவேண்டுமென்று சிவபெருமானைவேண் டித் தவஞ்செய்துகொண்டிருந்தார்.

அக்காலத்தில் தமிழ்நாடனைத்தும் சைவநெறியானது அருக, புத்த சமயம் வளர்ந்து ஓங்கி மக்களுக்கெல்லாம் பெருந்துயரம் இழைத்துக்கொண்டிருந்தது. அதனையறிந்த நான்முகன் நெடுமால் முதலிய தேவர்களும் முனிவர்களும் தாங்கரிய கவலையுற்றுத் திருக் கயிலைக்கு வந்து சீகண்ட பரமசிவனிடம் தமிழ்நாடனைத்தும் சைவ நெறி அருகிப் புத்தநெறி படர்ந்திருந்ததால் அருளொளி மழுங்கி மலவிருளடர்ந்திருந்ததை விண்ணப்பஞ் செய்து, அந்நெறியருகிச் சைவசமயம் வளர்ந்தோங்க அருள்செய்யுமாறு வேண்டிக்கொண்ட னர். சீகண்டபரமசிவன் புத்தநெறியைக்களைய மனங்கொண்டிருந்த காலத்தில் ஆயிரங்கணநாதர்களுந் திருக்கையிலைக்குக் கூட்டமாய்ச் சென்று சிவாகமங்களின் உண்மையைத் தங்களுக்கு அறிவுறுத்த வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனர். சீகண்ட பரமசிவன் அவர்களைப் பார்த்து "நீங்களெல்லாரும் உத்தரகோசமங்கைக்குப் போய் நம்மை நினைந்து பணிவிடைசெய்து கொண்டிருங்கள். நாம் அங்கே வந்து ஆகமங்களின் உண்மையை உரைப்போம்." என்று

கூறி அவர்களைப்போகும்படி விடைகொடுத்து அனுப்பினார்.ஆயிரங் கணநாதர்களும் சீகண்ட பரமசிவனை வணங்கி விடைபெற்றுப் பாண்டி நாட்டிலுள்ள உத்தரகோசமங்கைக்குப் போய், நாடோறும் கதிரவன் எழுமுன் தீர்த்தப்புனல் ஆடி வெண்ணீறணிந்து அஞ்செழுத்தை அன்போடு மனதில் நினைந்துருகிச் சிவபெருமானை இரவும் பகலும் தொழுது அருந்தவஞ்செய்து வந்தார்கள். திருக்கயிலையிலெழுந்தருளியிருக்கிற சீகண்டபரமசிவன் ஆயிரங்கணநாதர்களும் தம்மை நோக்கிச் செய்யும் மெய்த்தவமறிந்து அவர்களுக்கு ஆகம உண்மையை அறிவுறுத்தவேண்டுமென்று கருதி ஓர் மறையவர் வேடங்கொண்டு உத்தரகோசமங்கைக்குச் சென்றார். ஆயிரங்கணநாதர்களும் சீகண்டபரமசிவன் வரவைக்கண்டு அவரது திருவடியில் அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கினார்கள். சீகண்டபரமசிவன் ஆயிரங்கணநாதர்களுக்கும் ஓரிடத்திலிருந்து சிவாகம வுண்மையை அறிவுறுத்தத் தொடங்கும் காலத்தில், அங்கே வானவர்கோன் வெள்ளையானையின்மீது ஏறிக்கொண்டு தனக்குரிய பல்வகை ஆடம்பரத் தோற்றங்களுடன் வந்துகொண்டிருந்தான். அப்போது ஆயிரங்கணநாதர்களில் ஒருவர் வானவர் கோனுடைய ஆடம்பரங்களைக்கண்டு மயங்கினவராய் அவற்றில் மனம் வைத்து, தாம் ஆகம வுண்மையை கேட்கவந்த கருத்தை மறந்திருந்தனர். சீகண்டபரமசிவன் அதனையறிந்து அக்கணநாதரைப் பார்த்து, "நாம் ஆகமவுண்மையை அறிவுறுத்தத் தொடங்குங்கால் நீ வானவர் கோனுடைய ஆடம்பரத்தோற்றத்தில் மனம்பற்றி அதனில் மயக்கங்கொண்டாய். ஆதலின் நீ நம்மைவிட்டுப் பிரிந்து இந்நிலவுலகத்திலே பிறந்து உழன்று நம்மை வந்து மீண்டும் அடைவாய்" என்று ஆணைசெய்தனர். இச்செய்தியை மாணிக்கவாசகஅடிகள் திருவாசகம் 26-3வது பாட்டில் "நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து, நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து நுகமின்றி விளாக்கைத்துத், தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத் தெழுதரு சுடர்ச்சோதி, ஆக்கி யாண்டுதன் னடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே" என்று கூறியருளினார். அதனைக் கேட்டுக்

கணநாதர் அஞ்சி நடுநடுங்கி, "என்னைக் காத்தருளவேணும்" மென்று அழுது குறையிரந்தார். ஸ்ரீகண்ட பரமசிவன் அவரை நோக்கி, "அஞ்சற்க. நீ நிலவுலகிற் பிறந்தபின் உனக்குத் தக்கபருவம் வந்த பொழுது நாமே வலியவந்து உனது மலங்களை நீக்கி ஆட்கொள்ளுவோ" மென்று அருள் செய்தார்.

ஸ்ரீகண்ட பரமசிவன் ஆணைப்படியே மேலே கூறப்பட்ட சிவகணநாதர் திருவாதவூரில் சம்புபாதாசிருதர் மனைவியாகிய சிவஞானவதியார் திருவயிற்றில் திருவவதாரஞ் செய்தார். (இது திருப்பெருந்துறைப் புராணத்திற் கூறப்பட்டிருக்கின்றது. பரஞ்சோதி மாமுனிவர் திருவிளையாடற் புராணத்திலாவது, கடவுள் மாமுனிவர் திருவாதவூரடிகள் புராணத்திலாவது கூறப்படவில்லை.) சம்புபாதாசிருதர் சிவபெருமான் திருவருளினால் இது நிகழ்ந்ததென அளவிறந்த மகிழ்ச்சியடைந்து அவருக்குத் திருவாதவூரரென்று பெயரிட்டுச் செய்யத்தகும் மங்கலவினைகளெல்லாம் செய்து முடித்தார். தந்தையார் திருவாதவூரருக்குக் கல்வி பயில்வித்தார். திருவாதவூரர் பதினாறு ஆண்டில் வேதம் ஆகமம் முதலிய பல கலைகளும் பயின்று நுண்மாண்நுழை புலமையடைந்தார். அக்காலத்தில் பாண்டி நாட்டை ஆண்டுவந்த அரிமர்த்தன பாண்டியன் திருவாதவூரர் புலமைத்திறனையும் நற்பண்புகளையும் தக்கோர் சொல்லக் கேட்டபின்பு அவரைத் தன்னிடம் வரவழைத்து, தன்னுடைய அமைசசர்களுக்குள் முதல் அமைச்சராக்கி, தென்னவன் பிரமராயன் என்ற பட்டஞ்சூட்டி, அவர் பதவிக்குரிய பல வரிசைகளும் நல்கினான். திருவாதவூரர் அரசனுக்குக் கண்ணும் கவசமுமாக இருந்து அரசனுடைய ஆட்சித்தொழிலை நடுநிலையினின்று செங்கோல் நடத்திவந்தார். அவர் சிவனடியார்களுக்கு அன்பராகியும், ஏழைகளுக்கு அன்னையாகியும், எதிர்த்து நிற்கும் பகைவர்க்குத்துன்பஞ் செய்கிற பகைவராகியும், பணிந்து இரங்கி நிற்கும் அன்பருக்கு இன்பராகியும் ஒழுகித் தமது அமைச்சுத் தொழிலைச் செவ்வனே நடத்தி வந்தார்.

இங்ஙனம் திருவாதவூரர் அரசனுக்கு இனிய துணைவராயிருந்து தமது முதன்மை அமைச்சுரிமைத்தொழிலைச் செவ்வனே நடத்தி

வரும் காலத்தில், மெய்ம்மையாம் பொருள் இதுவென்றும், அதற்கு வேறுபாடாயுள்ள பொய்ம்மையாம் பொருள் இதுவென்றும் பிறித்தறியுமுணர்வானது தமது அறிவின் கண்ணே தோன்ற, திருவாதவூரர் இம்மை மறுமை அவாவை நீத்து வீட்டினை யடையவேண்டுமென்ற பற்றுடையவராய்ப் பிறவியறுப்பான்வேண்டி மெய்க்குரவனைத் தேடியடையும் வேட்கை மீதூரப் பெற்றார். இங்ஙனம் திருவாதவூரர் உலகத்தார் பார்வைக்கு அமைச்சுரிமைத் தொழில் பூண்டு அதற்குரிய வேடத்தோடு ஒழுகிவந்தாராயினும், உண்மையில் தமது உள்ளத்திற் சிவபெருமான் திருவடியை நினைந்துருகும் அன்புடையராய்த் தாமரை யிலையில் நீர் போலவும் புளியம் பழத்தின் ஓடு போலவும் அகப் பற்றுப் புறப்பற்றுக்களின்றி உண்மையில் ஒழுகி வருவாராயினர்.

திருவாதவூரர் திருமணஞ்செய்யப் பெறாதவராகவே வாழ்ந்து வந்தார். அவர் வரலாறு கூறும் புராணம் எதிலும் அவர் திருமணஞ் செய்ததாகக் காணப்பெறவில்லை. உண்மை இப்படியிருந்தும், திருவாளர் வேதாசலனார் அவர்கள் 'மாணிக்கவாசகர் காலம் என்ற நூலில் திருவாதவூரருக்குத் திருமணம் நடைபெற்றதாகக் கூறுகின்றார்கள். அவர்கள் தமக்கு ஆதரவாகப் பின்வரும் திருவாசகம் திருச்சதகம் 57-வது பாடலைக் காட்டுகிறார்கள்.

"முடித்தவாறும் என்றனக்கே தக்கதேமுன் அடியாரைப்
பிடித்தவாறும் சோராமற் சோரனேனிங் கொருத்திவாய்
துடித்தவாறும் துகிலிறையே சோர்ந்தவாறும் முகங்குறுவேர்
பொடித்தவாறு மிவையுணர்ந்து கேடென்றனக்கே சூழ்ந்தேனே"

இது பொதுவாக உலகத்தார் செயலினைக்கொண்டு அடிகள் உலகத்தார் நலங்கருதிப் பாடிய பாட்டாகும். திருவாசக உரையாசிரியர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் இப்பாட்டின் அடிக்குறிப்பாக "உலகவாதனை உயிரறிவைக் கவர்தல் கூடுமாதலின், பெண்ணின் மயல்வினை செய்கைகளின் வைத்து அதனை விளக்குவாராயினர். இவ்வாறு கொள்ளாது, ஒரு பெண்ணினைக் கண்டு

அடிகள் மோகமுற்றார் என்பது பொருந்தாமை யறிக." என விளக்கியுள்ளார். இளமையிலேயே துறவுபூண்டு அத்துறவொழுக்கத்தைச் சிறிதும் வழுவாது காத்த பெரியாராகிய சிவஞானமா பாடியம் வகுத்தருளிய சிவஞான முனிவர் கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதியில் 72-வது பாடலாக

"சுரிகுழன் மடவார் இளமுலைப் பணைப்பும்
துகிலிறை சோர்வதும் நகையும்
வரிவிழித் தொழிலும் சேயிதழ்த் துடிப்பும்
மனத்திடை எழுதிவைத் தழிவேன்
தெரிதமிழ்க் கலைசைச் சிவபிரான் வடிவும்
செய்கையுந் தன்னடி யார்க்குப்
பரிவுகூ ரருளும் மனத்தகத் தெழுதாப்
பாவியேற் கினிப்புக லென்னே" என அருளிச்

செய்திருக்கின்றார். இது மேலே காட்டிய திருவாசகப் பாடலை மனத்தகத்து எழுதிவைத்துப் பாடிய பாடலாக காணப்படுவது வெளிப்படை. இப்பாடலை மேற்கோளாகக் கொண்டு சிவஞான முனிவர் திருமண முடித்து வாழ்ந்தார் என்று கூறத்துணிவது சிறிதும் பொருந்தாவுரை யாவதோடு பெருங்குற்றமும் ஆகுமல்லவா? அங்ஙனமே திருவாதவூரடிகளை மனைவியோடு வாழ்ந்தார் என்று கூறுவதும் தகாத கருத்தாகும் என்பது தெளிக.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தமது பதினாறாவது வயதிலே திருமண நாளன்று மனையாளைக் கைப்பற்றிப் பேரொளியிலே கலந்தருளினார். அவர் தமது திருவலிவலப் பதிகத்திலே

"பெண்டிர் மக்கள் சுற்ற மென்னும் பேதைப் பெருங்கடலை, விண்டு பண்டே வாழ மாட்டேன்" என்று சொல்வதைக் கொண்டு அவர் மனைவிமக்களோடு வாழ்ந்து வந்தார் என்று சொல்லிவிடலாமா? சொன்னால் அது உண்மைக்கு மாறாகுமல்லவா? முற்றத் துறந்த முனிவராகிய திருநாவுக்கரசு நாயனார் திருக்கொண்டீச்சரப் பதிகத்திலே "சுற்ற முந்துணை நன்மடவாளொடு, பெற்ற மக்களும்

பேணவொ ழிந்தனர்" என மொழிவதை ஆதாரவாகக் காட்டி அவர் மனைவி மக்களோடு வாழ்ந்தவரே எனச் சொல்லலாமா? அவர்கள் இங்ஙனம் சொல்வதெல்லாம் நாம் அவைகளைப் படித்து நன்மதி பெற்று உய்யவேண்டும் என்ற முதன்மையான ஒரே கருத்துக் கொண்டுதான்.

மேலும் அமைச்சராயிருந்தபோதே நான்காஞ்சத்தினி பாத நிலையை யடைந்து இறைவன் தம்மை எப்போது ஆட்கொள்ளு வாரோ என ஏங்கியிருந்த மணிவாசகனார் மனைவியோடிருந்தார் என்பது சைவசமய உண்மைக்கு முற்றிலும் மாறுபட்ட முழுப் பொய்யுரையே யாகும். அக்கூற்று உய்தியில் குற்றமும் ஆகும் என்பதை உணர்க.

ஒரு நாள் அரிமர்த்தன பாண்டியன் தான் அரசுத்தொழில் புரியும் அத்தாணி மண்டபத்தில் வந்து வீற்றிருக்க, அவனுடைய குதிரைக்கூடத்துத் தலைவன் வந்து, குதிரைப் பந்தியிலிருந்த எண் ணில்லாத குதிரைகள் நோயால் இறந்து வீழ்ந்தன என்றும், எஞ்சி நின்ற குதிரைகளிற் பல கிழத்தன்மை அடைந்தன என்றும் கூறி, உடனே ஒரு நூறாயிரம் குதிரைகள் வாங்கி வரவேண்டுமென்று கூறினான். அரசன், "நமக்கு வேண்டும் குதிரைகளை எங்கே வாங் கலா"மென்று பக்கத்தில் நின்ற ஒற்றர்களை உசாவ, அவர்கள் "சோழநாட்டிலே உள்ள திருப்பெருந்துறையாகிய கடற்றுறைப் பட்டினத்தில் ஆரியர்கள் உயர்ந்த குதிரைகளைப் பெருந்திரளாய்க் கொண்டுவந்து இறக்கியிருக்கிறார்கள்" என்று சொன்னார்கள். அது கேட்ட அரசன் முதல் மந்திரியாகிய திருவாதவூரரைத் தருவித்து, "நீர் நமது கருவூலத்தைத் திறந்து வேண்டுமளவு பொற்குவைகளை எடுத்துக்கொண்டு குதிரைத் திரள்கள் இறங்கியிருக்கிற திருப்பெருந் துறைக்குப் போய் நமக்கு வேண்டிய மிகுதியான குதிரைகளை வாங்கிக்கொண்டு வாரும்!' என்று ஆணைசெய்தான். அரசனது ஆணையைக் கேட்ட திருவாதவூரர் கருவூலத்தைத் திறந்து வேண் டியபொருளை எடுத்துக்கொண்டு,தொகையைக் கணக்கிற் பதிவித்து, அப்பொருள்களை எடுப்பித்துக்கொண்டு பரிவாரங்களோடு மதுரை

யைவிட்டுத் திருப்பெருந்துறையை நோக்கிப் புறப்பட்டார். அங்ஙனம் புறப்பட்டுப் போகும் வழியில் அவர் திருவாலவாய்த் திருக்கோயிலுக்குள்ளே சென்று அங்கே எழுந்தருளியிருக்கிற சோமசுந்தரக் கடவுளையும் அங்கயற்கண்ணம்மையையும் வணங்கி, தாம் செல்லும் கருமம் தீதின்றி நடைபெறல் வேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அப்போது ஆதிசைவ அருச்சகர் ஒருவர் வந்து திருவாதவூரருக்குத் திருநீறு அளித்தனர். திருவாதவூரர் அதனை நன்னிமித்தமென அறிந்து திருநீற்றை வாங்கி நெற்றியிலே தரித்துக்கொண்டு பரிவாரங்களோடும் மதுரையை விட்டுப் புறப்பட்டு நெடுவழி கடந்து திருப்பெருந்துறைக்கு அருகிற் செல்வாராயினர்.

திருவாதவூரர் திருப்பெருந்துறைக்கு அருகில் வரவும், அன்பினாலே அனல்சேர் மெழுகுபோல் அவரது நெஞ்சம் கரைந்து உருகவும், அவரது அவ்வன்பினாலே இரண்டு கண்களிலிருந்தும் தாரை தாரையாக நீர் ஒழுகவும், தம்மையறியாமலே இரண்டு கைகளும் தலைமேலே குவிதல் செய்யவும் பெற்றார். இங்ஙனம் அவர் திருப்பெருந்துறையை அடைந்தபொழுது அங்கே ஒரு பூஞ்சோலையில் இருந்துகொண்டு பலர் சிவாகம நூல்களை ஓதுகிற ஒலியைக் கேட்டார். கேட்கவும் அவர் ஏவலாளர் சிலரை அழைத்து அவர்களை அச்சோலைக்குப் போய் அங்கே நிகழ்ந்ததை அறிந்து வரும்படி ஏவினார். அவ்வேவலாளர் அச்சோலைக்குப் போய் அங்கே பெரியார் ஒருவர் குருந்தமர நிழலில் இருப்ப, அவரைப் பல அடியார்கள் சூழ்ந்துகொண்டு சிவாகம நூல்களை ஓதக்கண்டார்கள். அவர்கள் தாங்கள் கண்டவற்றைத் திருவாதவூரரிடம் வந்து தெரிவித்தார்கள்; திருவாதவூரர் ஏவலாளர் சொன்னவற்றைக் கேட்டு அச்சோலைக்குப் போய் அங்கே அடியார் குழாங்களோடு குருந்தமர நிழலில் வீற்றிருந்த பெரியாரைக்கண்டு அவரைத் திருமன்றிலாடும் கூத்தப்பிரானே இவ்வந்தணர் கோலம்கொண்டு தம்மை ஆண்டருள வந்த மெய்க்குரவனென்று தமது உள்ளத்திலுணர்ந்து அடியற்ற மரம் போல நிலத்தின்மேலே விழுந்து எழுந்து நின்று, "என்னை இன்று அடிமைகொண்டு ஆண்டருளவேண்டு" மென்று கூறி, முகமெலாங்

கண்ணீர்வார நின்று வணங்கினர். அதைக்கேட்ட அந்தணர் கோலங்கொண்டு வந்த மெய்க்குரவனார் அவரை நோக்கி, "நீ முற்பிறப்பிலே செய்த தவத்தின் பயனாக உன்னை அடிமைகொண்டு ஆட்கொள்ளவேண்டி இத்தலத்தில் அடியார் குழாங்களோடு வந்து எழுந்தருளினோம். "நீ சித்தம் கலங்கவேண்டா" என்று திருவாய் மலர்ந்தருளினார். மெய்க்குரவனார் அடியார்களைப் பார்த்து "இவரை இன்று ஆட்கொள்ளுதற்கு வேண்டும் கருமங்களைச் செய்யுங்கள்." என்று ஏவ, அடியார்கள் அப்பூங்காவில் மலர் மாலைகளாலும் பட்டாடையினாலும் ஓர் பூங்கோயில்செய்து அதனுள்ளே ஓர் இருக்கையும் அமைத்தார்கள்.

அந்தணர் கோலத்தில் வந்த மெய்க்குரவனார் அன்று நடு இரவில் தொண்டரை ஆட்கொள்ளும் நற்சமயம் இது என்று அறிந்து நன்னீராடிச் செம்பட்டாடையுடுத்து மலர்மாலை சூடித் திருநீறும் கண்டிகையும் பூண்டு பூங்கோயிலினுள்ளே தெற்குநோக்கி அமர்ந்திருந்தார். திருவாதவூரராகிய தொண்டரும் நன்னீராடி வெண்டுகில் தரித்துத் திருநீறும் கண்டிகையும் பூண்டு, பூங்கோயிலுள்ளே அமர்ந்திருந்த அந்தணர் திருமுன்னே சென்று அவருடைய திருவடிகளை நன்னீரால் விளக்கி அதனைப் பருகி மலர்களால் அருச்சனை செய்து நறும் பனிநீர் தோய்ந்த சந்தனத்தை அவர் மெய்முழுதும் சாத்தி அழகிய வெண்மையான கழுநீர்மாலையை அவர் கழுத்தில் அணிந்து வணங்கி நின்றார். அந்தணர் கோலங்கொண்டு வந்த குரவனார் ஆறு அத்துவாக்களினாலுண்டாகும் மலக்கட்டு திருவாதவூரரை விட்டு நீங்கும்படி முடி முதல் அடி வரையும் திருக்கண்களால் நோக்கி அருட்பார்வை செய்து தூயராக்கி, அவர் செவியின்மேல் தம் திருமுடியைச் சாய்த்துக்கொண்டு அஞ்செழுத்துண்மையை அறிவுறுத்தருளினார். திருவாதவூரராகிய தொண்டர் தமது பசுகரணங்களெல்லாம் சிவகரணங்களாக மாறப்பெற்று உயிர் முனைப்பு நீங்கித் தூயராகி உவகைபூத்து இன்பவடிவு தம்முள் தோன்ற மெய்யறிவுடையவரானார். அப்பொழுது தொண்டரானவர் "எளியேனாகிய என்னை ஆண்டுகொண்டு அருளுதற்கு இத்தலத்துக்கு அந்

தணர் கோலம் கொண்டு எழுந்தருளிவந்த நின் பேரருள் என்னே" என்று வியந்து கூறி வணங்கி "என்றனுவியு முடலு முடைமையு நின்னதாக" வென்றுசொல்லிப் பாண்டியமன்னன் பரிவாங்கக் கொடுத்த பொருளையெல்லாம் அவர் திருமுன்பு வைத்து வணங்கி நின்றார். குரவனுர் தொண்டரைப் பார்த்து "நம்முன்பு வைத்த இந்தப் பொருளையெல்லாம் திருப்பணிக்கு அளிக்க, அருந்தவர்க்கு ஈக, அலந்தவர்க்குக் கொடுக்க" என்று கூறியருளினுர். குரவனுரால் ஆட்கொள்ளப் படுவதற்கு முன்பு பட்டாடை பூண்டு சாந்த மணிந்து முத்துமாலை முதலிய நற்கலங்கள் பூண்டு சிவிகைமேல் எழுந்தருளிவந்த திருவாதவூரர் குரவனுரால் ஆண்டருளப் பெற்ற பின்பு கோவண ஆடையுடன் திருநீறு தரித்தும் கண்டிகை பூண்டும் விளங்கிய சிவவேடம் கொண்டு அருட்பொலி வெய்தினுர். இங்ஙனம் தொண்டராகிய திருவாதவூரர் சிவபெருமானுல் ஆட்கொள்ளப்பெற்று அவரருட்பேறு அடைந்த பின்னர் முன்னை இயல்பு முழுதும் மாறித் தமது உள்ளமுழுதும் சிவபெருமான் அருள்வழிப் பட்டு இன்பவெள்ளம் தேக்கப்பெற்றுத் திகழ்ந்தமையின், கண்களில் நீர்வார்ந்திழியக் குறுவியர் பொடித்த மெய்யுடன் திருவாசகப் பாக்களைச் சிவபெருமான்மேலே பாடத்தொடங்கினுர். அவர் முதற்கண் இறைவன்மேல் சென்னிப் பத்தும் அச்சோப் பத்தும் பாடியருளினுர். பின்னர் அருட்குரவனுய் நின்ற இறைவன் அடிகளை "அடியார்குழாத்தினைக் காண்க" என்று ஆணைசெய்ய, அங்ஙனமே அவர் அவ்வடியார் கூட்டத்தை அடைந்து "அத்தன் ஆண்டு தன்னடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாமே" என்பதனை ஈருகவுடைய அதிசயப் பத்துப் பாட்டுகளைப் பாடினுர். அருட் குரவன் திருவாதவூரடிகளை 'மாணிக்கவாசக' என்றழைத்து "உலகம் உணர்ந்து உய்தற்பொருட்டுச் சொல்விழுப்பமும் பொருள் விழுப் பமும் உடைய செந்தமிழ்ப் பாடல்களைப்பாடி, இவ்வுலகில் சில காலம் இருந்தபின்பு, நம்மைத் தில்லையம்பலத்தின்கண்ணே வந்து காண், இப்போது இங்குநில்" என்று கட்டளையிட்டுத் தன் அடியார் கூட்டத்தோடு மறைந்தருளினுன்.

(இங்ஙனமாக நம்பியார் திருவிளையாடல் கூறுகின்றது. கடவுள் மாமுனிவர் பாடிய திருவாதவூரர் புராணமோ, அருட்குரவன் திருவாதவூரடிகளை ஆண்டருளி அஞ்செழுத்தை அறிவுறுத்தியபின் திருப்பெருந்துறைப் பூங்காவனத்தில் சிலகாலம் தங்கியிருந்ததாகவும் திருவாதவூரடிகளோடு வந்த ஏவலாளர் அவருக்கு அவர் தாம் மேற்கொண்டுவந்த பரித்திரள் வாங்குதலாகிய வினையை நினைப்பூட்ட, அதற்கு அவர் ஒன்றும் பேசாதிருப்பதைக் கண்டு, அவர்கள் திருப்பெருந்துறையை விட்டு மதுரைக்குச் சென்று பாண்டி மன்னனிடத்தில் நிகழ்ந்த செய்தியைத் தெரிவித்ததாகவும், பாண்டிமன்னன் வெகுண்டு திருவாதவூரடிகட்கு ஓலை எழுதி அவ்வேவலாளர் வசம் அனுப்பியதாகவும், அவ்வேவலாளர் திருப்பெருந்துறைக்குச் சென்று மன்னன் ஓலையைத் திருவாதவூரடிகளிடம் கொடுத்ததாகவும், திருவாதவூரடிகள் அவ்வோலையை வாங்கிப் பூங்காவனத்தில் வீற்றிருந்த அருட்குரவனிடம் கொடுத்து மன்னன் விடுத்த செய்தியை அறிவித்ததாகவும், அவ்வருட்குரவன் அடிகளுக்கு ஒரு மாணிக்கமணியை நல்கி மதுரைக்குப் போகும்படி கட்டளையிட்டு மன்னனிடம் பரித்திரள்கள் ஆவணி மூலநாளன்று வருமென்று கூறும்படி சொன்னதாகவும் அங்ஙனமே திருவாதவூரடிகள் மதுரைக்குச்சென்று மன்னனுக்கு மணிக்கலன்கள் நல்கி பரித்திரள்கள் ஆவணிமூல நாளன்று வருமென்று சொன்னதாகவும் கூறுகின்றது. மாணிக்கவாசக அடிகளை ஆட்கொண்டருளும் பொருட்டு திருப்பெருந்துறைக்கு மானுடவடிவில் அருட்குரவனாய் வந்த இறைவன் அவரை ஆட்கொண்டருளியபின் அங்குப் பூங்காவனத்திற் சிலகாலம் அம்மானுட வடிவிலே அமர்ந்திருந்தானென்று கூறுதல் பொருத்தமில்லையாதலின் நம்பியார திருவிளையாடல் உரையே இங்குப் பொருத்தமாயுள்ளதென அறிக)

மாணிக்கவாசக அடிகள் தம்மை விட்டு அருட்குரவன் பிரிந்தபின்பு அவனது பிரிவை ஆற்றாராய் மனம் வருந்தித் தம்மை ஆட்கொண்ட அருட்குரவனை நினைந்து நினைந்து அழுதார். இங்ஙனம பிரிவாற்றாமையை நினைந்து அடிகள் அழுதமை “ ஓய்வி லாதன

உவமனி லிறந்தன ஒண்மலர்த் தாள்தந்து, நாயி லாகிய குலத்தி னும் கடைப்படும் என்னை நன்னெறிகாட்டித், தாயிலாகிய இன்ன ருள் புரிந்த என் தலைவனை நனிகாணேன், தீயில் வீழ்கிலேன் திண் வரை யுருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே'' என்று அவர் தாமே பாடிய பாட்டால் நன்கு அறியப்படும். அடிகள் பாண்டிய னுக்காகப் பரித்திரள் வாங்கும்பொருட்டுக் கொண்டுவந்த பொருளை யெல்லாம் தம் அருட்குரவனுக்கு அளித்தலும் அவர் ஆணைப்படியே இறைவன் அடியார்கட்கும் இறைவன் திருக்கோயிலின் திருப்பணி களுக்கும் வறியாருக்கும் உவந்து வழங்கினர். இங்ஙனம் அடிகள் பாண்டிய அரசன் பொருளைத் தமது அருட்குரவன் ஆணையின் படியே திருக்கோயிற் பணி செய்தற்கும் அடியார்க்கும் வறியார்க்கும் வழங்குதலும், அடிகள்பால் நடுவுநிலைமையினின்று வழுவிய குற்ற மாகாதோவெனின், ஆகாது. அடிகள் அரசனுடைய அமைச்சராய் நின்ற நிலையில் தாம் பரித்திரள்களுக்காக கொண்டுவந்த பொருளில் எட்டுணையும் தம்பொருட்டுச் செலவு செய்தாரல்லர். மானுடவடி வில் அருட்குரவனுய் வந்த இறைவனால் ஆட்கொள்ளப்பெற்றபின் யான் பிறர் என்கிற பகுத்துணர்வும் எனது பொருள் பிறர்பொருள் என்கிற பகுத்துணர்வும் ஆகிய முன்னைநிலை முற்றும் மாறித் தம் மையும் தம்மோடு தம் வசமிருந்த பொருளையும் முற்றிலும் தம்மை ஆண்ட அருட்குரவனுகிய தலைவற்கு உரிமையாக்கி, பின்னர் அத் தலைவன் ஆணைசெய்தபடியே தம்பாலுள்ள பொருளையெல்லாம் நல்கினர். அடிகள் பேய்பிடியுண்டவர் போலத் தம்வயம் சிறிது மின்றி இறைவன் வயப்பட்டுத் தம்பாலுள்ள பொருளையெல்லாம் வழங்கினராதலின் அவர்பால் நடுவுநிலைமையினின்று வழுவிய குற்றம் எட்டுணையுஞ்சாராதெதன அறிக.

அடிகளோடு உடன் போந்த ஏவலாளர் அடிகள் அரசனுக்காகப் பரித்திரள் வாங்கும் வினையை மேற்கொண்டு வந்ததமையை மறந்து தவவடிவங்கொண்டு ஆடுதலும் பாடுதலும் செய்து பித்துப்பிடித் தவர் போலிருக்கக்கண்டு மதுரைக்குச் சென்று பாண்டிமன்னனி டம் அவனது அமைச்சர்பால் நிகழ்ந்த செய்திகளை அறிவித்தார்கள். ஏவலாளர் சொன்ன செய்திகளைக் கேட்ட அரசன் ஒற்றர்கள்

சிலரைத் திருப்பெருந்துறைக்கு அனுப்பி அவ்வொற்றர்களால் அடிகளுடைய உண்மை நிலையை அறிந்தான். பின்னர் அவர் அடிகளுக்கு, "பரித்திரள் வாங்குவதற்காக நம் பண்டாரத்திலிருந்து மிகுந்த பொற்றிரளை எடுத்துக்கொண்டுபோன நீர் அவ்வினையைச் செய்யாது வாளாவிருப்பது முதன் மந்திரியாகிய உமக்குத் தக்க தன்று. விரைவில் வலிமையும் அழகுமிக்க பரித்திரளை வாங்கி மதுரைக்கு வருதலே நீர் செய்யத் தக்கது" என்று திருமுகம் எழுதி அனுப்பினன். ஒற்றர்கள் மதுரையினின்றும் நீங்கித் திருப்பெருந்துறைக்கு வந்து அடிகளிடத்தில் மன்னன் விடுத்த திருமுகத்தைக் கொடுத்தனர். அடிகள் மன்னன் ஓலையை வாங்கிப் பார்த்தபொழுது சிறிது அகத்துணர்வு நீங்கிப் புறத்துணர்வு சிறிது கைவரப்பெற்று, தம்மை ஆட்கொண்ட அருட்குரவன் இருந்த குருந்தமரத்தடியிற் சென்று இறைவனை அகக்கண்ணாலே பார்த்து "பாண்டிமன்னனுக்காகப் பரித்திரள் வாங்க வந்த தமது வினை முற்றுப்பெறவில்லை" என்ற தமது குறையை அறிவித்தார். இறைவன் "உள்ளத்தில் அச்சங்கொள்ளேல்; பரித்திரள்கள் விரைவில் மதுரை வந்து சேரும் என்று ஒரு ஓலையை எழுதி மன்னனுக்கு அனுப்புக" என்று அடிகளுக்கு அவர் செவிக்கு மட்டும் புலனாகக் கட்டளையிட்டருளினார். அக்கட்டளையைக் கேட்ட அடிகள் பாண்டிமன்னனுக்கு "இன்னும் ஐந்தாறு நாட்களிற் பரித்திரள்கள் மதுரைக்கு வந்து சேரும். அவற்றைக் கட்டிவைப்பதற்குப் பந்தியும் அவை அருந்துவதற்குத் தண்ணீர்த்தடங்களும் அமைத்தல் வேண்டு" மென்று ஒரு ஓலை வரைந்து அவனுக்கு அனுப்பினார். பின்னர் அடிகள் குருந்தமரத்தடியிலே சிவபெருமானை நினைந்து தவஞ்செய்துகொண்டிருந்தனர், அப்பொழுது ஒருநாள் இறைவன் அவர் அகக்கண்ணுக்குத்தோன்றி, "நாம் குதிரைகளைக் கொண்டுவந்து பாண்டியற்குச் சேர்ப்பித்தல் திண்ணம். குதிரை வருமுன்னே நீர் பாண்டியனிடஞ்சென்று அவனிடத்தில் குதிரைகள் வருமென்று இனியவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிரும்" என்று புகன்று மறைந்தருளினன். அடிகள் அவ்வறிதுயினின்று விழித்தெழுந்து

குருந்தமரத்தடியை விட்டு நீங்கி மதுரைக்கு எழுந்தருளிப் பாண்டிய மன்னனிடஞ் சென்று "குதிரைகளெல்லாம் ஆவணி மூல நாளில் வரு"மென்று கூறினர். அந்நல்லுரையைக் கேட்ட பாண்டி மன்னன் மிகவும் அகமகிழ்ந்து திருவாதவூரருக்கு மணிக்கலன்கள் பட்டாடைகள் முதலிய வரிசைகள் நல்கித் தமது ஊராகிய திருவாதவூருக்குப் போகும்படி விடை கொடுத்தனன். அடிகள் திருவாதவூருக்குப்போய்த் தமது இல்லத்தில் அமர்ந்திருந்தனர்.

அடிகள் திருவாதவூரிலிருக்கும் காலத்தில் அவருடைய சுற்றத்தார்கள் எல்லாரும் வந்து "அரசனுடைய பெரும் பொருளை எடுத்துக்கொண்டு திருப்பெருந்துறைக்குப் போய் குதிரைகளை வாங்காமல் இருப்பது பெருங்குற்றமா" மென்று உரைத்தார்கள், அது கேட்ட அடிகள் "இது கேட்பதற்கு நீவிர் யாவர்? எமக்கு உறவினருமில்லை. பகைவருமில்லை. உமது வினையைச் செய்தற்குப் போமின்" என்றுகூற, அவர்களும் அடிகளைவிட்டுப் போயினர்.

மதுரையில் பாண்டிமன்னன் முன்னே அமைச்சர் ஒருவர் சென்று "பரித்திரளை வாங்கும்பொருட்டு உம்மிடமிருந்து மிக்க பொருளை எடுத்துக்கொண்டுபோன திருவாதவூரர் திருப்பெருந்துறையில் சிவனடியார்களுக்கு அப்பொருளையெல்லாம் வழங்கிச் செலவுசெய்தனர். நீர் சீற்றம்கொள்ளாதிருக்கும் பொருட்டுத் திருவாதவூரர் உம்மிடம் "குதிரைகள் ஆவணிமூல நாளில் வரும் என்று கூறினர்" எனப் புகன்றனர். அவ்வுரை கேட்ட பாண்டிமன்னன் வெகுண்டு ஒற்றர்கள் சிலரைத் திருப்பெருந்துறைக்குப் போய் அங்கே குதிரைகள் உள்ளனவா என்று பார்த்துவரும்படி ஆணை செய்தனன். அவ்வொற்றர்களும் மன்னன் ஆணையின்படி திருப்பெருந்துறைக்குப்போய் மீண்டும் மதுரைக்குவந்து தாங்கள் திருப்பெருந்துறையில் குதிரைகளைக் காணாமையை அறிவுறுத்தினர். ஒற்றர்களுரையைக்கேட்ட பாண்டிமன்னன் வெகுண்டு சில தண்டக்காரர்களைத் திருவாதவூருக்குப்போய்த் திருவாதவூரரைச் சிறை

யிலிட்டுத் துன்புறுத்தும்படி கட்டளையிட்டனன். தண்டக்காரர் அங்ஙனமே திருவாதவூருக்குப்போய் அடிகளைச் சிறையிலிட்டு வருத்தினர்.

அங்ஙனம் திருவாதவூரர் சிறையிலிருக்கும் காலத்தில் ஒருநாள் காட்டிலிருந்த நரிகளை யெல்லாம் குதிரைத் திரளாக்கி நடத்திக் கொண்டு வருகிற இறைவன் திருவாதவூருக்கு அருகில் வரும் பொழுது தனது காற்சிலம்பொலியை அடிகளுக்குக் கேட்பித்தரு ளினன். இங்ஙனம் கேட்பித்தருளிய நிகழ்ச்சியானது அடிகளே கீர்த்தித் திருவகவலில் "வாதவூரினில் வந்தினிதருளிப் — பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்" என்று கூறுமாற்றால் நன்கு புலனா கும். குதிரைத்திரள்கள் திருவாதவூருக்கு வந்தமையைக் கண்ட தண்டக்காரர்கள் அடிகளைச் சிறையினின்று விடுவித்தார்கள். அடிகள் திருவாதவூரிலிருந்து மதுரைக்குச் சென்று பாண்டியனிடம் குதி ரைத்திரள் வந்தமையைத் தெரிவித்து, அவன் தம்மேற்கொண்ட சீற்றத்தைத் தணிக்கும்படி வேண்டிக்கொண்டனர். பாண்டிமன்ன னும் குதிரைத்திரள்கள் வரும்வழியை எதிர்பார்த்து, அவை வரும் வழியிலுள்ள மண்டபம் ஒன்றில் அமர்ந்திருந்தனன். நெடுநேரம் குதிரைத்திரள்கள் வாராமையைக்கண்டு பாண்டிமன்னன் மறுபடி யும் வெகுண்டு திருவாதவூரரைப் புளியம்வளார்களால் அடித்துத் துன்புறுத்தும்படி தண்டக்காரர்களுக்குக் கட்டளையிட்டனன். தண் டக்காரர்கள் அங்ஙனமே அடிகளை அடித்துத்துன்புறுத்தினர். அப் பொழுது அடிகள் அடைக்கலப்பத்தும், குயிற்பத்தும் பாடினர். அப்பொழுது குதிரைத் திரள்கள் வருகிற புழுதிகள் வானத்தில் எழுவது காணப்பட்டன. குதிரைப்பாகர்கள் ஊதும் எக்காள ஓசை கேட்கப்பட்டது. குதிரைத்திரள்களும் மன்னன் கண்காண மதுரை யில் வந்து சேர்ந்தன. அப்பொழுது மன்னன் திருவாதவூரரைத் தம்மிடம் வரவழைத்து அவர் கண்ணீரைத்துடைத்து அவருக்குத் தாம் இழைத்த தீங்கைப் பொறுத்துக்கொள்ளும்படி வேண்டினன்.

(மானுடவடிவில் வந்த இறைவன் அடிகளைவிட்டு மறைந்த காலமுதல் இதுவரையும் இங்ஙனமாக நம்பியார் திருவிளையாடல் கூறுகின்றது.)

அக்காலத்தில் பெருந்தொகையினராகிய சாத்தவர்கள் தலையிற் பாகையும் உடம்பிற் குப்பாயமும் தரித்துக்கொண்டு, கையிற் சம்மட்டியும் உடையவர்களாய்க் குதிரைகளை நடத்திக்கொண்டு வந்தனர். அவர்களின் நடுவே அவர்களுக்குத் தலைவரான ஒருவர் ஓர் வெள்ளைக்குதிரையின்மேல் ஏறிக்கொண்டு குப்பாயம்அணிந்தவராய் ஒரு கையினாலே கடிவாளங்களை வலித்துப் பிடித்துக்கொண்டும் மற்றொரு கையிற் செண்டினை ஏந்திக்கொண்டும் குதிரையை வலமிடமாகச் செலுத்திக்கொண்டு அரசன் முன்னே அவன் காணும்படி வந்தனர். சாத்தவர்களெல்லாரும் உருவம், பருவம், அணி, படை முதலியவைகளில் ஒத்திருத்தலை அரசன் கண்டு வியப்படைந்து "இச்சாத்தவர்களில் தலைவர் யா"ரென்று பக்கத்திலிருந்த திருவாதவூரரைக் கேட்டனன். திருவாதவூரர் "இதோ எதிரில் வருபவர் தான் தலைவர்" என்று விடை பகர்ந்தனர். அப்பொழுது அத்தலைவரும் தம் இரண்டு கால்களால் தாம் ஏறிவந்த குதிரையை விலாப்புறத்தில் அதுக்கிக்கொண்டும் சவுக்குக்கோலால் அதன் புறத்தில் அடித்துக்கொண்டும் அரசர் முன்னே வந்தனர். பாண்டி மன்னன், தலைவர் அங்ஙனம் வருவதைக் காண்டலும், திருவாதவூரரை நோக்கி "தலைவரான குதிரைப்பாகரை வையாளிப் பெருந்தெருவின்கண் அவர் ஏறிய குதிரையைப் பலபடியான நடைகளை நடத்திக்காட்டும்படி அவருக்குச் சொல்லவேண்டு" மென்று கூறினார். அதனைக்கேட்ட திருவாதவூரர் குதிரைத்தலைவராய் வந்த சிவபெருமானைத் தாம் ஏவும்படி நேர்ந்ததே என்று உள்ளம் நைந்து அத்தலைவரருகிலே போய் அவரை மனதாற்றொழுது பாண்டியன் விருப்பத்தைப் பணிவுடன் தெரிவித்தார், குதிரைப்பாகராய் வந்த சிவபெருமான் அரசன் விருப்பத்துக்கிணங்கி, குதிரை ஏற்றத்தில் வல்லுநர் எவரும் இதுவரையும் காட்டியிராத குதிரை நடைகளையெல்லாம் திறமுற நடத்திக் காட்டினார். பாண்டியன் அதனைக்

கண்டு வியந்து பாராட்டி, குதிரை நடைகளை நடத்திக் காட்டின தலைவருக்கு ஒரு விலையுயர்ந்த பொற்பட்டாடையை ஈந்தனன். குதிரைத்தலைவர் அப்பொற்பட்டாடையைத்தம்கையிலிருந்த செண்டினால் வாங்கி நகைசெய்தார். பாண்டிமன்னன் தான் கொடுத்த பட்டாடையைக் குதிரைத் தலைவர் வாங்கித் தம்முடிமீது அணிந்திலர் என்று தந்நெஞ்சிலே சினங்கொண்டான். அதனையறிந்த திருவாதவூரர் பொற்பட்டாடையைக் கையில்வாங்காது செண்டினால் வாங்குதல் அவரது நாட்டின் இயற்கை என்று அமைதி சொன்னார். பின்னர், குதிரைத்தலைவர் தாம் கொண்டுவந்த குதிரைகளெல்லாம் யாதொரு குற்றமுமில்லாத நல்லிலக்கணங்களை யுடையன என்றுகூறி அவற்றையெல்லாம் அரசனிடத்தில் ஒப்படைத்தார். அரசனும் தான்விலையாகக்கொடுத்த தொகைமுழுதும் இக்குதிரைகளுக்குப் போதாது என்று மனமகிழ்ந்து அவற்றை ஒப்புக்கொண்டு கயிறுமாறி வாங்கினான். அரசன் அக்குதிரைகளையெல்லாம் பரித்துறைக் காவலாளரிடம் ஒப்புவித்து, அவற்றையெல்லாம் குதிரைப்பந்திக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி கட்டளையிட்டான். (இங்ஙனமாகப் பாண்டிமன்னன் தனக்குக் குதிரைத்தலைவர் குதிரை நடைவகைகளைக் காட்டியவுடனே அவருக்கு உவந்து பொற்பட்டாடை கொடுத்தாரென்று திருவாதவூரர் புராணம் கூறாநிற்க, நம்பியார் திருவிளையாடல் குதிரைத்தலைவர் தாம் கொண்டுவந்த குதிரைகளை யெல்லாம் பாண்டிமன்னனுக்கு ஒப்புவித்தபின் அவன் குதிரைத்தலைவருக்குப் பொற்பட்டாடை ஈந்தானெனக் கூறுகின்றது. ஆனால் பாண்டிமன்னன் குதிரைத் தலைவருக்கு ஈந்த பொற்பட்டாடையை அவர் தமது செண்டுக்கோலால் வாங்கினாரென்றும் அதற்காக மன்னன் சினங்கொண்டானென்றும் திருவாதவூரர் புராணமும் நம்பியார் திருவிளையாடலும் ஒத்துக்கூறாநிற்க, பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் அங்ஙனம் பாண்டிமன்னன் உவந்து நல்கிய பொற்பட்டாடையைக் குதிரைத்தலைவர் குதிரையினின்றும் இறங்கிப் பணிவுடன் வாங்கித் தன்தலைமேலே அணிந்துகொண்டனர் என்று கூறுகின்றது.) குதிரைத்தலைவராய்

வந்த சிவபெருமானைப் பாண்டிமன்னர் சிறிதும் அறிந்திலன் என்பது அடிகள் பாடிய "ஈண்டிய மாயா இருள்கெட எப்பொருளும் விளங்கத்—தூண்டிய சோதியை மீனவனுஞ் சொல்ல வல்லன் அல்லன்" என்ற திருவாசகப் பாடலால் (531) நன்கு பெறப்படும்.

பாண்டிமன்னன் திருவாதவூரருக்குப் பொற்கலன் முதலிய பரிசுகள் அளித்து அவரைத் தமது மனைக்குப் போகும்படி விடை கொடுத்துவிட்டுத் தானும் தன் அரண்மனைக்குச்சென்றான். குதிரைச் சேவகராய்வந்த சிவபெருமான் பாண்டிமன்னன்பால் விடைபெற்று ஏகத்துவங்குகையில் அடிகள் பிடித்த பத்துப் பாடியருளினரென்று நம்பியார் திருவிளையாடல் கூறுகின்றது. பாண்டிமன்னனும் திருவாதவூரரும் தத்தம் இருப்பிடம் போய்ச்சேர்ந்தபொழுது கதிரவன் மறைந்து இரவுக்காலம் வந்தது.

அன்று இரவு நடுயாமத்தில் குதிரைக் காவற்காரர் குதிரைப் பந்தியில் புதிதாகக்கட்டிய பரித்திரள்களெல்லாம் நரித்திரள்களாக உருமாறிப் பழைய குதிரைகளின் குடலைப்பிடுங்கியும் கழுத்தைக் கடித்தும் அதிலுள்ள குருதியைக் குடித்தும் ஊளையிடலாயின. நரித்திரள்கள் குதிரைப்பந்தியை விட்டு நீங்கித் தெருக்களிலும் வீடுகளின் முற்றங்களிலும் சென்று ஊளையிடுவனவாயின. மதுரைமாநகரிலுள்ள மாந்தர்கள் நரித்திரள்கள் ஊளையிடும் ஒலிகளைக் கேட்டு வெருண்டெழுந்து கூக்குரலிடுவாராயினர். பாண்டிமன்னனும் நரித்திரள்கள் ஊளையிடும் ஒலிகளையும் நகரமாந்தர் கூக்குரல்களையும் கேட்டு விழித்தெழுந்தார். அப்பொழுது குதிரைக்காவற்காரர் அவனிடஞ்சென்று புதிதாய் வாங்கிய பரித்திரள்களெல்லாம் நரிகளாக மாறி ஊளையிட்டுக்கொண்டு நகரெங்கும் சென்றன என்று அறிவித்தார்கள். "ஒருங்குதிரை யுலவுசடையுடையானே நரிகளெல்லாம், பெருங்குதிரை யாக்கியவாறன்றே உன் பேரருளே" என்றும் "நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெலாம் நிகழ்வித்துப், பெரிய தென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையான்" என்றும் திருவாதவூரர் பாடினமையால், தம்பொருட்டு இறைவன் நரிகளையெல்லாம் பரிகளாக்கினமையும் அவைகளை

திரும்ப நரிகளாக்கினமையும் நன்கு விளங்கும். பரிகளெல்லாம் நரிகளான செய்தியைப் பாண்டிமன்னன் கேட்டு வெகுண்டு தண்டக்காரர்களை ஏவித் திருவாதவூரரைத் தம்முன்னே கொண்டுவரும்படி சொன்னான். தண்டக்காரர்கள் திருவாதவூரரிடம் விரைந்து சென்று அவரைக் கூட்டிக்கொண்டுவந்து அரசன்முன்னே விட்டனர்.

அரசன் திருவாதவூரரைப் பார்த்து வெகுண்டுநோக்கி நீர் "நம்மிடத்திலிருந்து கொண்டுபோன பொருளெல்லாம் இரவலர்க்குக் கொடுத்துவிட்டு காட்டிலுள்ள நரிகளையெல்லாம் பரிகளாக்கிக் கொண்டுவந்த உமது மாயத்தை என்னென்று சொல்வேன்" என்று கூறினான். பின் அவன் தண்டம்செய் வன்கணாளரை நோக்கி, "திருவாதவூரரைக் கொண்டுபோய் அழல்போலும் வெதும்பச்செய்யும் வெயிலில் நிறுத்தித் துன்புறுத்தி நம்மிடத்திலிருந்து அவர் கொண்டுபோன பொருள்களையெல்லாம் அவரிடத்திலிருந்து வாங்குமி"னென மொழிந்தான்.

தண்டக்காரர்கள் திருவாதவூரரைக் கொண்டுபோய்க் கடுவெயிலில் நிறுத்தி அவரைச் சூழ்ந்துநின்றுகொண்டு துனபுறுத்தினர். அப்பொழுது திருவாதவூரர் சிவபெருமானைநோக்கி அழுதுபுலம்பித் துதிக்கின்றார். அப்பொழுது அவர் திருவேசறவுப் பதிகம் பாடினாரென நம்பியார் திருவிளையாடல் கூறுகின்றது. ஆனால் அப்பதிகம் 9-வது பாட்டில் "இடைமருதே யிடங்கொண்ட அம்மானே" என்று வருதலால் அது திருவிடைமருதூரில் வைத்துப் பாடப்பெற்றிருக்கலாமென்று தோன்றுகின்றது. அவர் சிறையிலிருந்த அக்காலத்தில் எண்ணப்பதிகமும் திருப்புலம்பலும் பாடியிருக்கலாமெனஎண்ண இடமுண்டு. சிவபெருமான் திருவாதவூரர் அழுதுபுலம்பிய வழுத்துரைகளைக் கேட்டு அவரைக் காக்கும்பொருட்டு முகிற்கூட்டங்கள் பெருமழை பெய்யும்படி தமது திருவுள்ளத்தில் எண்ணினார். எண்ணுதலும் பெருமழை பொழிந்து வைகையாற்றில் அளவுக்குமிஞ்சின வெள்ளம் வந்தது. அவ்வெள்ளமானது கரைபுரண்டு

மதுரைமாநகருக்குள்ளும் புகுவதாயிற்று. அந்நகர் மாந்தரெல்லாம் நகருட்புகுந்த வெள்ளத்திற்கஞ்சிக் கூக்குரலிடுவாராயினர். திருவாதவூரரைத் துன்புறுத்திய தண்டக்காரர்களும் வைகைவெள்ளம் வரக்கண்டு அவரைவிட்டு நீங்கினர். திருவாதவூரடிகளும் சிவபெருமான் தம்பொருட்டுச்செய்த அருட்செயலை நினைந்து சொக்கப்பெருமான் திருக்கோயிலுட்சென்று அவனைத் தொழுதபடியாய் அங்கேயிருந்தார். வைகையாற்றின் வெள்ளமானது கரைகளை உடைத்து மதுரைநகருக்குள் எங்கும் புகுந்து அதனை அழிப்பதுபோன்று எங்கும் பரவியது. அதனைககண்ட வேந்தன் மனநகலங்கி வைகையாற்றங்கரைக்கு வந்து வைகையைப்பார்த்து "உயிர்களுக்கெல்லாம் தாயாயிருககின்ற நின்னுடைய வெகுளியானது தணியவேண்டு" மென்று தொழுது நின்றான். வைகையாற்று வெள்ளம் தணியாது மேலும் மேலும் உயர்தலைக்கண்ட பாண்டிமன்னன் அஞ்சித் தன் மந்திரிகளை அழைத்து அவர்களை நோக்கி "இங்ஙனம் மதுரைமாநகரை அழிக்கும்படியாயுள்ள எப்பொழுதும் நாம் கண்டிராத இவ்வெள்ளம் வருதற்குக் காரணமென்னை" என்று வினவினான். மந்திரிகளெல்லாரும் முன்பின் நிகழ்ச்சிகளையெல்லாம் தங்கள் உள்ளத்தில் ஆய்ந்துபார்த்து வைகையாற்றிலுள்ள இப்பெருவெள்ளம் சிவபெருமானது மெய்யன்பராகிய திருவாதவூரரை நீர் கடுவெயிலில் நிறுத்தித் துன்புறுத்திய காரணத்தால் வந்திருத்தல்வேண்டும். அவரைக் கடுவெயிலில் நிறுத்திய துன்பத்தினின்றும் நீக்கி அவர் மகிழும்வண்ணம் தக்கனசெய்யின இவ்வெள்ளமானது தணியு" மென்று விடைகூறினார்கள். மந்திரிகளின் அறிவுரையைக்கேட்ட பாண்டிமன்னன் அவர்கள் கருத்துத் தனது கருத்தோடு ஒத்திருத்தலைக் கண்டு தான் திருவாதவூரடிகளைத் துன்புறுத்திய செயல்களெல்லாம் குற்றங்களெனத் தெளிந்து மதுரைப்பெருமான் கோயிலிலிருந்த திருவாதவூரடிகளைத் தன்னிடம் வரவழைத்து அவரை நோக்கி "நீர் என் பொருளைச் சிவனடியார்கள்பால் செலவிட்டது எனக்கு அறனாவதென்று தெளியாமல் உம்மை வீணே துன்புறுத்தினேன். நான் செய்த பிழைகளையெல்லாம் நீர் பொறுத்தருளல் வேண்டும். நீரே

இவ்வையைாற்று வெள்ளத்தைத் தணியும்படி செய்தல்வேண்டு" மென்று குறையிரந்து வேண்டினன். திருவாதவூரர் பரிமேல்வந்த சிவபெருமானது திருவுருவத்தை நினைந்து உளளம் உருகக்கரைந்து வெள்ளம் தணியும்படி வேண்டிச் சிவபெருமானை வழுத்தினர். வழுத்தவும் வையையாற்றுவெள்ளம் தணியத்தொடங்கியது. பாண்டிமன்னன் அவரை நோக்கி ஊரிலுள்ளாரைக்கொண்டு உடைபட்ட கரைகளை அடைத்தற்குத் தனது ஏவலாளர்களுக்கெல்லாம் தலைவராயிருந்து வேண்டுவன செய்தல்வேண்டுமென்று வேண்டிக் கொண்டான்.

திருவாதவூரடிகள் அங்ஙனமே மன்னன் ஏவலாளரோடு வையையாற்றங்கரைக்கு வந்துசேர்ந்து மதுரைமாநகரிலுள்ள ஒவ்வொரு வீட்டாரும் அடைக்கவேண்டிய கரையை அரசனுடைய பணியாளரைக் கொண்டு அளவுசெய்வித்து உடைப்புகளெல்லாம் அற்றைநாள் இரவு வருதற்குமுன்னே அடைக்கவேண்டுமென்று நகரிலெங்கும் பறையறைவித்தார். பறையறைவித்த செய்தியைக் கேட்ட நகரமாந்தரெல்லாரும் தத்தமக்கு அளவுசெய்துவிடப்பட்ட கரையுடைப்பை அடைக்கும்படி கூலியாட்களை நியமித்தும் பணி செய்ய ஏவினர். கூலியாட்களும் கரையுடைப்பை அடைக்கும்படி மண்வெட்டியும் கூடையும் எடுத்துக்கொண்டு வேலைசெய்ய வந்து நின்றனர்.

இங்ஙனமாக மதுரைநகர் மாந்தரெல்லாரும் தாங்களாகவாவது கூலியாட்களை ஏவியாவது தத்தமக்கு அளந்துவிடப்பட்ட வையை யாற்றங்கரை உடைப்பை அடைக்கும் பணியை மேற்கொண்டு நின்றார்கள். அந்நகரத்தின் தென்கிழக்கு மூலையிலுள்ள ஒரு வீட்டிற் குடியிருந்துவந்த வளைந்தமுதுகும் நரைத்தமயிரும் உடைய வந்தியென்னும் பெயருடைய கிழவியொருத்தி தமர் ஒருவருமின்றி பிட்டுச்செய்துவிற்று அதனால்வரும் சிறு ஊதியங்கொண்டு வாழ்ந்து வந்தாள். அவள் சொக்கப்பிரானை நினைந்து அவரிடத்தில் உண்மை யன்பு செய்துவந்தாள். அவள் தனக்குப் பாண்டிமன்னன் ஏவலா

ளரால் அளந்துவிடப்பட்ட கரையுடைப்பை அடைக்க கூலியாள் கிடைக்கப்பெருமையால் மனம்வருந்திச் சொக்கப்பிரான் கோவி லுக்குப் போய், "மன்னன் ஏவலாளர் எனக்கு அளந்துவிட்ட கரை யுடைப்பை அடைக்கும்படி கூறி அச்சுறுத்துகின்றார்களே, கூலி ஆள் கிடைக்கவில்லையே ஏழையாகிய தமியேன் இதற்கு என்செய் கேன்? ஏழைக்கிரங்கும் பேரருளுடைய நீயே என்னைக் காபாற்ற வேண்டு"மென்று அழுதுபுலம்பிக் குறையிரந்தாள். சொக்கப்பிரான் அவளுடைய அன்புக்கு எளியராய் தலையின்மேல் கவித்த கூடை யும் தோளின்மேலிட்ட மண்வெட்டியும் உடைய ஒரு கூலியாளாய் அவள்கண்ணெதிரே தெருவில்வந்து, "என்னைக் கூலிகொள்வா ருண்டோ" என்றுகூறினர். வந்தியானவள் அந்தக்கூலியாளை அழைத்துத் தனக்கு அளந்துவிடப்பட்ட கரையுடைப்பை அடைக் கவேண்டுமென்றும் அதற்குக்கூலியாகத் தான் பணமில்லாத ஏழை யாயிருப்பதால் தான்செய்யும் பிட்டினைத் தின்பதற்குக் கொடுப்ப தாகவும் சொன்னாள். கூலியாளாய்வந்த சொக்கப்பிரான் அதனைக் கேட்டு நீ செய்யும் பிட்டில் உதிர்ந்ததை மாத்திரம் எனக்குக் கொடுத் தாற் போதும். நான் அதனைத் தின்றுவிட்டு உனக்கு அளந்து விடப்பட்ட கரையுடைப்பை அடைத்துத்தருவேன்" என்று வந்தி யிடஞ்சொன்னான். வந்தி அங்ஙனம் பிட்டுக்கொடுக்க ஒப்புக் கொண்டாள்.

கூலியாளாய்வந்தவன் தான் மிகப்பசியா யிருப்பதால் பிட்டுக் கொடுக்கும்படி வந்தியைக் கேட்க, வந்தியும் அவ்வாறே அவனுக்குப் பிட்டுகொடுத்தாள். கூலியாள் அந்தப் பிட்டினைத் தன் அழுக்காடை யில் வாங்கித் தின்றுகொண்டு வந்தி தனக்குக் காட்டின வைகை யாற்றங் கரையுடைப்பை அடைக்கச் சென்றான். வந்தி தனது மனைக்கு வந்து பிட்டுச் செய்துகொண்டிருந்தாள். கூலியாள் வந்தி காட்டிய கரையுடைப் பிடத்திற்குப்போய் ஒழுங்காய் வேலைசெய்து உடைப்பை அடையாமல் அதனிடம் ஒருகூடை மண்போடுவதும் மடியிலுள்ள பிட்டினைத் தின்பதும் ஆடுவதும் பாடுவதுஞ் செய்து

கொண்டிருந்தான். அரசனுடைய ஏவலாளர் தன்னருகே வந்தால் ஒரு கூடை மண்ணைவெட்டி எடுத்துக்கொண்டுபோய்க் கரையிற் கொட்டிக் களைப்படைந்ததுபோல நின்றுகொண்டிருப்பான். வேலை செய்த களைப்புத் தீருவதற்காக அவன் நீரிற் குளித்து விளையாடிக் கொண்டிருந்து கரையேறுவான்; அதன்பின் அவன் வந்தியிடம் போய்த் தான் வேலைசெய்த களைப்புத்தீருவதற்காகப் பிட்டு இடும் படியாகக் கூறிச் சுடச்சுடச்செய்த உதிர்ந்த நறுஞ்சுவைப் பிட்டை வாங்கித் தின்றுகொண்டு கரையுடைப்பிடத்துக்கு மீண்டும் வந்து வேலைசெய்வான்போல் ஒருகூடை மண்ணை எடுத்து முன்போலக் கரையிற்கொட்டி ஆடிப்பாடி நகைத்துக்கொண்டு மற்றவேலைக்கார ரோடு பேசிக்கொண்டும் கண்டாரெல்லாம் "இவன் பித்தனோ" என்று கூறி நகைக்கும்படிக்கும் நடந்துகொள்வார். இங்ஙனமாகக் கூலியாளாகவந்த சிவபெருமான் சாயங்காலம் அணுகும்போது பக் கத்திலிருந்த கொன்றைமர நிழலுக்குப்போய் அதனடியில் மண் கூடையைத் தலையணையாக வைத்துககொண்டு படுத்துத் தூங்குவா னாயினன். கரையுடைப்பை அடைக்குந்தொழிலை மேற்கொண்ட ஊரார் பிறரெல்லாம் தத்தமக்கு அளந்துவிடப்பட்ட கரை யுடைப்பை அடைத்து முடித்துவிட்டார்கள். வந்தியினுடைய கரையுடைப்புப் பங்குமாத்திரம் அடைக்கப்படாமலிருந்தது.

பாண்டிமன்னன் திருவாதவூரடிகள் உள்ளிட்ட அமைச்சர் குழாத்தோடு கரையடைப்புவேலை முடிந்துவிட்டதா என்று பார்க்க வைகையாற்றங் கரைக்கு வந்து கரையுடைப்புக்களை யெல்லாம் பார்த்துக்கொண்டு வரும்பொழுது வந்தியின் கரையுடைப்புப்பங்கு மாத்திரம் அடைபடாமலிருந்ததைக் கண்டு சினங்கொண்டு, "இக் கரையுடைப்புயாருக்கு" அளந்துவிடப்பட்டது? இது என் அடைக் கப்படவில்லை? என்று தன் அருகில்நின்ற ஏவலாளரைக் கேட்டான் ஏவலாளருடைய தலைவன் இப்பங்கு வந்தியென்னும் நரை மூதாட்டியாம் பிட்டுவாணிச்சிக்கு அளந்துவிடப்பட்டது. அவளுக் குக் கூலியாளாய்வந்தவன் ஒழுங்காக வேலைசெய்து கரையையடை

யாமல் ஆடிப்பாடி விளையாடிக் காலங்கழித்துவந்தான். அவனை நான் ஒழுங்காக வேலைசெய்து கரையை அடைக்கும்படி உறுக்கிச்சொல்லி எவ்வளவோ முயன்றும் பயனில்லாமற் போய்விட்டது, என்று மன்னனுக்கு விடைகூறினன். அதனைக்கேட்ட மன்னன் சீற்றந் தலைக்கேற "அக்கொற்றாளைத் தேடிப்பிடித்து என் முன்னே கொண்டுவாருங்கள்" என்று ஏவலாளருக்குக்கூறினன். ஏவலாளர் கள் அங்குமிங்கும் தேடிப்பார்த்து, கொன்றைமரத்தடியிலே படுத் திருந்த கொற்றாளை மன்னன் முனனே கொண்டுவந்து விட்டார்கள். மன்னன் கொற்றாளைப்பார்த்து "ஏடா! நீ அடைக்க ஒப்புக்கொண்ட இந்தக் கரையுடைப்பை அடையாமல் விளையாடிக்கொண்டிருந் தாயோ"? என்று கேட்க, அக்கொற்றாள் பேசாமல் நின்றான். மன்னன் சினத்தால் மெய்மறந்தவனாய்த் தன் கையிலிருந்த பொற் பிரம்பினாலே அக்கொற்றாள் முதுகின்மேலே அடித்தான். அவ் வாறு அவன் அடித்த அடித்தழும்பானது மன்னன் முதுகின்மேலும் அவன் மனைவி முதுகின்மேலும் மந்திரிகள் முதுகின்மேலும் ஏவ லாளர்கள் முதுகின்மேலும் அங்குள்ள முனிவர் தேவர்கள் முதுகின் மேலும் பட்டது. மரம் செடி கொடிமேலெல்லாம் இந்த அடிபட் டுத் தழும்புண்டாயிற்று. அடிபட்ட கொற்றாள் உடனே ஒரு கூடை மண்ணைத் தண்ணீர் போய்க்கொண்டிருந்த கரையுடைப்பிற் போட்டுக் கதுமென மறைந்துபோய்விட்டான். வந்திக்கு அளந்து விட்ட கரையுடைப்பு முழுதும் அடைபட்டுவிட்டது. இதனாலே கூலியாளாய் வந்தவன் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர்வரையுள்ள எல்லா உயிர்களிடத்திலும் உயிர்க்குயிராய் வீற்றிருந்து அருள்செய் கின்ற தனித்தலைவனாகிய சிவபெருமான் என்பதும் அவன் பேரன் பினாய் வந்தியின் பொருட்டுக் கூலியாளாய்வந்து அடிபட்டு வேலைசெய்தானென்பதும் பெறப்பட்டன.

இங்ஙனமாகப் பரஞ்சோதிமுனிவர் தாம் இயற்றிய திருவிளை யாடற் புராணத்திற் பாண்டிமன்னனே வந்தியினுடைய கொற்றா ளாய்வந்த சிவபெருமானைப் பிரம்பினா லடித்ததாகக்கூற, திருவாதவூ

ரடிகள் புராணமும் நம்பியார் திருவிளையாடலும் பாண்டியன் ஏவலாளர்களில் ஒருவனே கூலியாளை அடித்ததாகக் கூறுகின்றன. திருவாதவூரடிகள் தாம் பாடிய திருவாசக நூலில், "கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை, மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு, புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காணம்மானாய்" (8-8) என்றும், "மண்பான் மதுரையிற் பிட்டமுது செய்தருளித் தண்டாலே பாண்டியன் றன்னைப் பணிகொண்ட, புண்பாடல் பாடி நாம் பூவல்லி கொய்யாமோ" (14-16) என்றும் பாடியிருக்கின்றமையால், பரஞ்சோதிமுனிவர் உரையே உண்மை நிகழ்ச்சிக்குப் பொருத்தமாயுள்ளது. இன்னும் சிவபெருமான் தன்னிடத்தில் பேரன்புள்ளவளாகிய வந்தியின் பொருட்டுக் கூலியாளாய் வந்து பிட்டுக்கு மண்சுமந்த நிகழ்ச்சியை, "ஆங்கது தன்னில் அடியவட்காக, பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்" (2-46,47) என்றும், "பிட்டு நேர்பட மண்சு மந்தபெ ருந்து றைப்பெரும் பித்தனே" (30-2) என்றும் அடிகள் பாடியருளினமை காண்க.

திருவாதவூரடிகள் பிட்டுவாணிச்சிக்குக் கூலியாளாய் வந்தவன் பாண்டிமன்னனால் அடிபட்டதையும், ஒரு கூடைமண் அவன்பங்கு உடைப்பின்மேலே போட்டு மறைந்ததையும், அப்பொழுது அக்கரையுடைப்பு முழுவதும் அடைபட்டதையும் அறிந்து, இங்ஙனம் வந்த கூலியாள் சிவபெருமானே எனத்தெளிந்து தம்பொருட்டு அவன் திருமேனிவருந்த மண்சுமந்து பாண்டிமன்னனால் அடிபட்ட பேரருட்டிறத்தை நினைந்து நினைந்து உருகிக் கீழேவிழுந்து புரண்டு புலம்பி அழுவாராயினர். இங்ஙனம் அழுதுகொண்டிருந்த திருவாதவூரடிகளைப் பாண்டிமன்னன் பார்த்து நெஞ்சம் நெக்குருகிக் கரைந்து, அவரைக் கீழேவிழுந்து வணங்கித், "தேவரீர் என்னிடம் அமைச்சராய் வந்து பணிசெய்ததனாலன்றோ சிவபெருமான் பரிமேல்வந்த திருக்கோலத்தை எனது ஊனக்கண்களினாலே காணும்படியான பேறுபெற்றேன். பரிமேல் வந்தவர் சிவபெருமானென்று உணராது பட்டாடை ஒன்றை அவருக்குப் பரிசாக அளித்தேனே.

தேவரீர்பொருட்டுப் பிட்டுவாணிச்சி வந்திக்குக் கூலியாளாய் வந்தவன் சிவபெருமானென்று உணராது அவரை ஒரு பொற் பிரம்பால் அடித்து என்ன கொடியவினை செய்தேன்: எனது பண் டாரத்திலிருந்து நீர் குதிரைவாங்கும்பொருட்டு எடுத்துக்கொண்டு போன பொற்றிரள்களெல்லாம் எனக்குச் சிவபெருமான் தந்தவை யென்று உணராது சிவனடியார் பொருட்டு அவற்றைச் செலவு செய்த உம்மைச் சிறையிலிட்டுத் துன்புருத்தி என்ன கொடுமை செய்தேன்! அடியேன்செய்த பிழைகளையெல்லாம் தேவரீர் பொறுத் தருளல் வேண்டும். நீர் எனது நிலத்தை ஆள நான் உமது ஏவற் பணிசெய்யும்படி அருள்செய்ய வேண்டும்." என்று அழுது குறை யிரந்து வேண்டினான். திருவாதவூரடிகள், "நான் உம்மிடத்தில் அமைச்சுரிமைப் பணிசெய்ய வந்ததனலன்றோ திருப்பெருந்துறை யில் வானவர்களும் காணவொண்ணாத சிவபெருமான் ஓர் மானுட வடிவில்வந்து என்னை ஆட்கொள்ளப்பெற்ற பேறும்பேறு பெற் றேன்! அங்ஙனம் ஆட்கொள்ளப்பெற்ற எனக்கு அரசவாழ்வு எதற்கு? நான் அதைக் கனவிலும் விரும்பேன். நீர் என்னை இப் பொழுது அமைச்சுரிமைப் பணியில்நின்று விடுவித்து மதுரையை விட்டுத் திருப்பெருந்துறை போவதற்கு ஆணைதந்தருளல் வேண் டும்" என்று விடைகூறினார். அடிகள் கூறியதைக்கேட்ட மன்னன் "தேவரீர் திருவுள்ளப்படியே செய்தருளுக" என்றுகூறி அடிகளை வணங்கி விடைபெற்றுக்கொண்டு தன் அரண்மனைக்குச்சென்றான்.

பாண்டிமன்னன் தம்மிடம் விடைபெற்றுக்கொண்டு போன பின் திருவாதவூரடிகள் அமைச்சர்க்குரிய பொய்த்தவக்கோலம் நீத்து மெய்த்தவக்கோலம் பூண்டு திருக்கோயிலுக்குச் சென்று திருவாலவாய்ச் சொக்கப்பெருமானை வணங்கி விடைபெற்றுக் கொண்டு மானுடவடிவில் குருவாய்வந்து தம்மை ஆண்டருளிய இடமாகிய திருப்பெருந்துறையை நோக்கி வழிகொண்டேகினார். இவ்வளவில் நம்பியார்திருவிளையாடல் அடிகள் வரலாற்றைக்கூறி இரண்டு செய்யுட்களால் முடிவுசெய்கின்றது. பரஞ்சோதிமுனிவர்

திருவிளையாடல் அடிகள் மதுரையைநீங்கிப் பல சிவத்தலங்களுக்குச் சென்று வணங்கிக்கொண்டு திருத்தில்லைக்குச் சென்று வணங்கிச் சிலகாலந் தவஞ்செய்துகொண்டிருந்து, பின் இறைவன் அருளால் புத்தரை வாதில்வென்று கூத்தப்பிரானுடைய திருவடிநிழலிற் கலந்து பேராவியற்கைப் பேரின்பம்நுகரும் வாழ்வை எய்திஞரென முடிக்கின்றது.

அடிகளது வரலாறு முழுவதும் கூறுகின்ற திருவாதவூரர் புராணமொன்றே அடிகள் மதுரையை நீங்கியபின் திருப்பெருந் துறைக்குப் போய் அங்கிருந்து திருவுத்தரகோசமங்கைக்குப் போய் அங்குநின்று புறப்பட்டுத் திருக்கழுக்குன்றம் திருவண்ணமலை முதலிய சிவத்தலங்களை வணங்கிக்கொண்டு முடிவில் திருத்தில்லைக் குப் போய் அங்குச் சிலகாலம் தவஞ்செய்துகொண்டிருந்ததையும் ஈழநாட்டிலிருந்துவந்த புத்தரை வாதில் வென்றதையும் கடைசி யாகத் திருத்தில்லைப் பொதுமன்றுட் சேர்ந்து கலந்ததையும் குறித்து விரிவாகக் கூறுகின்றது.

இங்கே திருவாதவூரர் புராணமும் நம்பியார் திருவிளையாட லும் சிறிது வேற்றுமைப்பட அடிகள் வரலாற்றைக் கூறுகின்றன. திருவாதவூரர் புராணம் சிவபெருமான் குருவடிவில் வந்து திரு வாதவூரடிகளை ஆண்டருளிய காலந்தொட்டுத் திருவாதவூரடிகள் அமைச்சுரிமைப்பணியை நீத்தபின் மதுரையைநீங்கித் திருப்பெருந் துறைக்குவந்த காலம்வரையும் திருப்பெருந்துறையில் அடியார் கூட்டத்தோடு இருந்ததாகக் கூறுகின்றது. நம்பியார் திருவிளை யாடலோ சிவபெருமான் குருவடிவில் திருப்பெருந்துறைக்குவந்து திருவாதவூரடிகளை ஆண்டருளியபின் மறைந்தனரென்று கூறு கின்றது. திருவாசகமும் நம்பியார் திருவிளையாடல் கூறுவன வற்றுக்கேற்ப, "மன்ன என்னையோர் வார்த்தையுட் படுத்துட் பற்றிஞய்" என, 23-2வது பாட்டிலும், "தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றிஞய், கண்டுங் கண்டிலேன் என்னகண்

மாயமே" என, 5-42வது பாட்டிலும், "அரத்தமேனியா யருள்செ யன்பரும் நீயும் அங்கெழுந் தருளி இங்கெனை இருத்தி னெய்முறை யோ என 5 - 93 வது பாட்டிலும் "காணு மாறு காணே னுன்னை அந்நாட் கண்டேனும்"என 5 - 84 வது பாட்டிலும் கூறுகின்றது. திருவாதவூரர் புராணம் அடியிற்கண்டவாறு மாணிக்கவாசகர் வரலாற்றைக் கூறுகின்றது.

திருவாதவூரடிகள் மதுரையை நீங்கி வழியிலுள்ள பல சிவத் தலங்களை வணங்கிக்கொண்டு திருப்பெருந்துறைக்குப்போய் அங்கு தம்மை ஆண்டருளிய அருட்குரவன் வீற்றிருந்தருளிய குருந்தமரத் தினடியில் இருந்துகொண்டு அவரை அன்பினால் நினைந்து கரைந்து உருகிஅழுது வணங்கித் தம்மைஅவரிடம் வருவித்துக்கொள்ளுமாறு வேண்டினர். அருட்குரவன் திருவாதவூரடிகள் கனவின்கண்ணே தோன்றி, "திருப்பெருந்துறையிலுள்ள ஓர் பொய்கையில் தழல் வடிவு ஒன்று தோன்றும், நம்முடன்வந்த அடியார்களெல்லாம் அதன்கண் மூழ்கி மறைவர். நீ மட்டும் அதன்கண் மூழ்காதிருக்க. நீ அதனைக்கண்டு வணங்கியபின் திருவுத்தரகோசமங்கைக்குச் செல் லுக. அங்கேயுள்ள ஓர் பொய்கையிலும் தோன்றும் தழல்வடிவைக் கண்டு வணங்குவாயாக. திருவுத்தரகோசமங்கையிலிருந்து புறப் பட்டு வழியிலுள்ள சிவத்தலங்களை வணங்கிக்கொண்டு திருக்கழுக் குன்றஞ்சென்று அங்கேயுள்ள ஓர் பொய்கையிலும் தழல்வடிவைக் கண்டு வணங்குவாயாக. திருக்கழுக்குன்றிலிருந்து புறப்பட்டுத் தில்லைச்சிற்றம்பலம் போதுவாயாக" என்று கட்டளையிட்டு மறைந் தருளினர்.

பின்பு திருவாதவூரடிகள் குருந்த மரத்தடியிலே சிலகாலம் சிவ பெருமானை நினைந்து தவஞ்செய்துகொண் டிருந்தார். அவர் தவஞ் செய்துகொண்டிருந்த காலத்தில் சிவபுராணம், அற்புதப்பத்து, அதிசயப்பத்து, குழைத்தபத்து, சென்னிப்பத்து, ஆசைப்பத்து, வாழாப்பத்து, அடைக்கலப்பத்து, செத்திலாப்பத்து, புணர்ச் சிப்பத்து, அருட்பத்து, திருவார்த்தை, எண்ணப்பதிகம், திரு வெண்பா, திருப்பள்ளியெழுச்சி, திருவேசறவு. ஆநந்தமாலை,

உயிருண்ணிப்பத்து, பிரார்த்தனைப்பத்து, திருப்பாண்டிப்பதிகம் இவ்வளவும் பாடியதாகத் திருவாதவூரர் புராணங் கூறுகின்றது. அருட்குரவன் கட்டளைப்படியே ஒருநாள் திருப்பெருந்துறையிலுள்ள பொய்கையில் ஓர் அனற்பிழம்பு தோன்றியது. அதின் கண் அடியார்களெல்லாரும் புகுந்து மறைந்தனர். அடிகள் மாத்திரம் அதன்கண் புகாமல் அவ்வனற்பிழம்பை வணங்கிகொண்டிருந்தனர். அப்புறம் அவ்வனற்பிழம்பும் மறைந்தது. இங்ஙனம் அனற்பிழம்புதோன்றியதை அடிகள் "எமக்கு வெளிப்படா யென்ன வியன்றழல் வெளிப்பட்ட எந்தாய்"என(29–4)வது பாட்டில் பாடியிருத்தலால் அறிக அடிகள் மட்டும் அவ்வனற்பிழம்பில் புகாது அடியார் கூட்டத்திலிருந்து பிரிந்து தனித்து நின்றதை "விச்சுக் கேடு பொய்க்காகா தென்றிங் கெனைவைத்தாய், இச்சைக்கானா ரெல்லாரும் வந்துன் தாள்சேர்ந்தார்," என 5-81வது பாட்டிலும், "அடியே னல்லேன் கொல்லோதான் எனையாட்கொண் டிலைகொல்லோ, அடியா ரானார் எல்லாரும் வந்துன் தாள்சேர்ந்தார்" என 5-83 வது பாட்டிலும், "சிவமாநகர்குறுகப், போனார் அடியார் யானும்பொய்யும் புறமே போந்தோமே" என 5-88 வது பாட்டிலும் "பேரா வுலகம புக்கா ரடியார் புறமே போந்தேன்யான்" என 5-87வது பாட்டிலும், "அழுகேன் நின்பால் அன்பாம் மனமாய் அழல்சேர்ந்த, மெழுகே யன்னார் மின்னார் பொன்னார் கழல்கண்டு தொழுதே யுன்னைத் தொடர்ந்தா ரோடுந் தொடராதே, பழுதே பிறந்தேன் என்கொண் டுன்னைப் பணிகேனே" என 5-58வது பாட்டிலும் அடிகளே திருவாசகத்தில் ஓதுமாற்றால் அறியப்படும். அடிகள் அனற்பிழம்பைத் தொழுது, அது மறைந்தபின் குருந்தமர நிழலுக்கு வந்து சிவபிரான் தம்மைக் குருவடிவில்வந்து ஆட்கொண்டு மறைந்ததையும், அடியார்கூட்டம் தன்னை நீங்கிப் பொய்கையில் தோன்றிய அனற்பிழம்பில் மறைந்ததையும் நினைந்து உருகி திருச்சதகம் 100 பாட்டுக்களும் பாடுவொராயினர். பின்பு திருவாதவூரடிகள் அருட்குரவன்ஆணைப்படியே திருவுத்தரகோசமங்கைக்குச் சென்று சிலகாலந் தவஞ்செய்துகொண்டிருந்தார். சிவபெருமான்

தமக்குக் கூறியபடி திருவுத்தரகோசமங்கையில் திருப்பெருந்துறைக்கு வந்து தம்மையாட்கொண்ட குருவடிவத்தைக் காணுதால் மயங்கி வெய்துயிர்த்து "விட்டிடுதிகண்டாய்" என்று கூறுகிற "நீத்தல் விண்ணப்பம்" பாடினர். பின்பு அங்கேயுள்ள பொய்கையொன்றில் ஓர் அனற்பிழம்பு தோன்றி விளங்கியது. அடிகள் அதனைக்கண்டு போற்றி வணங்கினர். இங்ஙனம் அனற்பிழம்பு தோன்றினமையைத் "தெங்குலவுசோலைத் திருவுத்தரகோசமங்கை, தங்குலவுசோதித் தனியுருவம் வந்தருளி—எங்கள்பிறப் பறுத்திட்டு" என்று அடிகள் 16-9வது பாட்டில் கூறிய வாற்றால் அறிக. ஐம்பது பாட்டுக்களடங்கிய நீத்தல் விண்ணப்பத்தில் முதல் இருபது பாட்டுக்களிலும் 48-வது பாட்டிலும் அடிகள் திருவுத்தரகோசமங்கையில் வீற்றிருக்கும் சிவபிரானைப் பாடியிருத்தலால் இந்த நீத்தல் விண்ணப்பத்தை அவர் அத்தலத்தில் வைத்துப் பாடியதாக நாம கூறலாம். திருப்பொன்னூசல் ஒன்பது பாட்டிலும் அடிகள் திருவுத்தரகோசமஙகையைக கூறுதலாலும் 9-வது பாட்டில் தாம் அங்குள்ளதோர் பொய்கையிற்கண்ட தழற்சோதி உருவத்தைக் கூறுதலாலும் இப்பொன்னூசற்பதிகத்தை அடிகள் திருவுத்தரகோசமங்கையில் வைத்துப் பாடினரென்பது திண்ணம். பதிகத்தலைப்பில் அது தில்லையில் அருளிச்செய்யப்பட்டது என்றிருப்பது வழுவுரையென அறிக.

பின்பு திருவாதவூரடிகள் திருவுத்தரகோசமங்கையை விட்டு நீங்கிப் பாண்டிநாட்டிலுள்ள பல சிவத்தலங்களை வணங்கிகொண்டு திருவாரூருக்குச் சென்று அங்கிருந்து திருவிடைமருதூருக்குச் சென்றார். ஆனல் திருவாதவூரர் புராணம் அடிகள் உத்தரகோசமங்கையிலிருந்து முதற்கண் திருவிடைமருதூருக்குச் சென்று பின் அங்கிருந்து திருவாரூருக்குப் போனதாகக் கூறுகின்றது. திருவாரூர் தெற்கேயும் திருவிடைமருதூர் அதற்கு வடக்கே ஏறக்குறைய முப்பது மைல் தூரத்திலுமாக இருத்தலின் அடிகள் முதற்கண் திருவாரூருக்குப் போய்ப் பின் திருவிடைமருதூருக்குப் போனதாக

நாம் ஊகித்து அறியலாம். அடிகள் திருவாரூரிலிருக்கும்போது திருப்புலம்பல் பாடியதாகத் திருவாதவூரர் புராணங் கூறுகின்றது. திருவாதவூரடிகள் திருவிடைமருதூரை நீங்கித் திருக்கழுமலத்துக் குச் சென்று ஆண்டுத் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் சிவபிரானை வணங்கிப் பிடித்தபத்துப் பாடியருளினார். அவர் அங் குச் சிலகாலம் வைகியபின் அதனைவிட்டு நீங்கித் திருத்தில்லையை நோக்கிச் செல்லும் வழியில் திருமுதுகுன்றத்தையும் திருவெண் ணெய்நல்லூரையும் வணங்கிக்கொண்டு திருவண்ணாமலை போய்ச் சேர்ந்தார்.

திருவாதவூரடிகள் திருவண்ணாமலையி லிருந்தகாலம் மார்கழித் திங்களாதலின் சிவபிரான் திருக்கோயிலில் தொண்டுசெய்யும் கன் னிப்பெண்கள் திருவாதிரைக்கு முன்னுள்ள பத்து நாட்களிலும் விடியற்காலம் துயிலெழுந்து சிவபிரானைப் பாடிக்கொண்டு, துயில் நீங்கித் தங்களோடு வந்துசேராத தங்கள் இனத்தவரை அவரவர் வீட் டுக்குச்சென்று அவர்களை எழுப்பி அவர்களுடனும் பாடிக்கொண்டு குளத்துக்குச்சென்று நீராடும் வழக்கத்தைக் கண்டார். அடிகள் அவ் வழக்கத்தை அடிப்படையாக வைத்து நவசத்திகளும் படைப்புத் தொழில் செய்தலைக் கூறுமுகத்தால் திருவெம்பாவைப் பதிகம் இருபது பாட்டுக்களும் பாடியருளினார். இப்பாட்டுக்கள் இருபது மாத்திரம் இக்காலத்திலும் மார்கழித்திருவிழா நாட்களில் திருக்கோ யில்களில் ஓதப்பட்டு வருகின்றன. அக்காலத்தில் ஏனைய தமிழ்த் திருமறைகள் பாடப்பெறுவனவல்ல. அடிகள் திருவண்ணாமலையி லிருந்தகாலத்தில் பெண்கள் விளையாடும் அம்மானைவிளையாட்டைக் குறியாகக்கொண்டு அவர்கள் பாடியபடியாக திருவம்மானை பாடியரு ளினார்.

பின் அடிகள் திருவண்ணாமலையை விட்டுநீங்கித் திருக்கச்சியே கம்பஞ்சென்று அங்கு அம்மை தழுவக்குழைந்த திருஏகம்பநாதர் பேரில் திருவுந்தியார் பாடியருளினார். அடிகள் இத்தலத்தில் வைத்து திருவுந்தியார் பாடினாரென்பதற்கு அதன் இரண்டாவது பாட்டில், "ஏரம்பு கண்டில மேகம்பர் தங்கையில், லோரம்பே முப்புர முந்தீபற"

என்று பாடியிருத்தலும் ஏனைய ஒன்பது பாட்டுக்களிலும் வேறு எந்தத்தலமும் குறிக்கப்படாதிருத்தலும் சான்றுகளாம்.

பின் அடிகள் திருக்கச்சியேகம்பத்தை (காஞ்சிபுரம்) நீங்கித் திருக்கழுக்குன்றத்துக்குப் போய் அங்கே திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் சிவபெருமானை வணங்கிக்கொண்டு தவஞ் செய்து வைகினார். அடிகள் அத்தலத்தி லிருந்தகாலத்தில் சிவபெருமான் அவருக்கு முன் பணித்தருளியவாறு ஒரு நாள் அத்தலத்தில் தனது அருளொளிவடிவினைக் காட்டி மறைந்தருளினார். அதனைக் கண்ட அடிகள் அகங்குழைந்து உருகி வணங்கி திருக்கழுக்குன்றப் பதிகம் பாடி ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் "திருக்கோலம் நீ வந்து காட்டினாய் கழுக்குன்றிலே", என்று தாம் கண்ட திருக்கோலத்தைக் கூறியருளினார். பின்னர் அடிகள் திருக்கழுக்குன்றத்தைவிட்டு நீங்கி முன்சிவபிரான் தமக்குக் கட்டளையிட்டருளியபடி தில்லைமூதூர் வந்துசேர்ந்தார்.

அங்கே அடிகள் கூத்தப்பிரானுடைய திருநடனத்தைக் கண்டு அகங்கரைந்து உருகி வழிபட்டுக் கண்டபத்துப் பாடியருளினார். அப்பதிகத்தில் அடிகள் சிவபெருமான் தம்முடைய பசு பாசத்தை அறுத்து ஆண்டருளிக் கோதிலா ஆநந்தம் தந்தருளியதைக் கூறுகின்றார். பின் அடிகள் திருத்தில்லையிலுள்ள திருப்புலீச்சுரம் என்னும் திருக்கோயிலுக்கும் திருநாகேச்சுரம் என்னும் திருக்கோயிலுக்கும் சென்று அங்கு எழுந்தருளியிருக்கிற கூத்தப்பிரானை அன்பால் உருகித் தொழுதுவணங்கினார்; தில்லைநகரிலே சிலகாலந்தங்கியிருந்து கூத்தப்பிரான் நடனஞ்செய்யும் திருமன்றுக்கு நாடோறும் போய் வணங்கிக்கொண்டுவந்தார். அவ்வாறு இருக்கும் நாட்களில் அடிகள் குலாப்பத்து, கோயிற்றிருப்பதிகம், கோயின்மூத்ததிருப்பதிகம், கீர்த்தித்திருவகவல், திருவண்டப்பகுதி, போற்றித்திருவகவல், திருப்பொற்சுண்ணம், திருத்தெள்ளேணம், திருத்தோணோக்கம், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல், அன்னைப்பத்து, திருக்கோத்தும்பி, குயிற்பத்து, திருத்தசாங்கம், அச்சப்பத்து ஆகிய

பதினாறு பதிகங்களையும் பாடியருளினர். பின் அடிகள் தில்லை நகரெல்லேக்கு வெளியே சென்று அங்கு ஒரு பன்னசாலைசெய்து அதில் தங்கியிருந்துகொண்டு அரிய தவஞ்செய்துகொண்டிருப்பாராயினர்.

இவ்வாறு திருவாதவூரடிகள் தவஞ்செய்து கொண்டிருக்கும் காலஇடையில் சோழநாட்டிலுள்ள சிவனடியார் ஒருவர் தில்லைப் பதிக்குவந்து கூத்தப்பிரானை வணங்கினபின் ஈழநாட்டிலுள்ள திருக்கேதீச்சரம், திருக்கோணமலை என்னும் சிவத்தலங்களை வணங்கவேண்டி ஈழநாட்டுக்குச் சென்றார். அவ்வடியார் அந்நாட்டில் சிலகாலம் ஐயம் ஏற்று உண்டு வதிந்திருந்தார். இங்ஙனம் அவர் அந்நாட்டில் வதிந்திருந்தகாலத்தில் தாம் செல்லுமிடங்களிலெல்லாம் "பொன்னம்பலம் பொன்னம்பலம்" என்று சொல்லிக்கொண்டே போவார். இருக்குமிடங்களிலும் அவர் "பொன்னம்பலம் பொன்னம்பலம்" என்று சொல்லிகொண்டே இருப்பார். அக்காலத்தில் ஈழநாடானது ஒரு பௌத்த மன்னருடைய ஆளுகைக குட்பட்டிருந்ததால் அதில் வாழுமமக்கள் பௌத்தசமயக கொள்கையையே மேற்கொண்டு ஒழுகிவநதார்கள். பௌத்தன் ஒருவன் அவ்வடியார் தமது உடம்பிலணிந்திருந்த திருநீற்றையும் அககமாலையையும் கண்டும் பொன்னம்பலம் பொன்னம்பல"மென்று கூறுகிற வாய்மொழியைக் கேட்டும் மனம்புழுங்கி அரசனிடஞ்சென்று அசசெய்தியை உரைத்தான். அவ்வரசன் அவ்வடியாரைத் தன்னிடம் கூட்டிக் கொணடுவரும்படி தனது தூதுவாகளுககுக் கட்டளையிட்டான். தூதுவர் அடியாரிடஞ்சென்று அவரை அரசன் கட்டளைப்படி அவன்முன்னே வரும்படி சொன்னார்கள். தூதுவர் சொன்னதைக் கேட்ட அடியார் "விருப்பும் வெறுப்பும் அற்றுச சிவனிடத்தில் அன்புபூண்டொழுகி ஐயம் ஏற்றுண்ணும் எனக்கு அரசனிடஞ் செல்லும் கருமமுளதோ" என்றுகூறி அரசனிடம்வர மறுத்தனர். "ஐயம் ஏற்றுண்டுகொண்டு வாழும் உமக்கு அரசனிடத்தில் யாதொரு கருமமு மில்லாதிருப்பினும் தன் நாட்டிலுள்ள மக்களெல்லாரையும் காப்பது அரசனுடைய கடனாதலின் நீர் அரசன் கட்ட

ளைப்படி அவனிடம் வருதல்வேண்டு"மென்று தூதுவர்சொல்ல, அடியாரும் அதற்கிசைந்து தூதுவரைத்தொடர்ந்து அத்தாணிமண்டபத்தில் பௌத்தகுருக்களுடன்வீற்றிருந்த அரசன்முன் சென்றார். சென்ற அடியாரும் அரசனருகிலே "பொன்னம்பலம்" என்று சொல்லி உட்கார்ந்தார்.

அடியார் சொன்னதைக் கேட்டமன்னன் "நீர் இப்பொழுது பொன்னம்பலம் என்றுகூறி உட்கார்ந்தது என்னை?" என்று வினவினன். "சோழநாட்டிலே தில்லையம்பலம் என்ற பெயருடைய ஓர் பழைய சிவத்தலம் உளது. அத்தலத்தின்கண் எல்லாக் கோயில்களுக்கும் மூலமாய் விளங்குகிற ஒரு திருக்கோயில் உள்ளது. அத்திருக்கோயில் நடுவில் "பொன்னம்பலம்"என்று கூறப்படும் பொற்றகட்டால் வேயப்பட்ட கூரையுடைய ஓர் திருமன்று உளது. அததிருமன்றில் உலகில் படைத்தல், காத்தல், அழித்தல் மறைத்தல், அருளல் எனனும் ஐந்தொழில்களும் நடைபெற்று உலகம் உய்யும்பொருட்டு எஙகள் கூத்தப்பிரான் சிவகாமியம்மையார் காண ஓவாது நடனஞ்செய்கின்றான. நாம் உயிர்களுக்கு அவைகள்படும் பிறவித்துன்பத்தை நீக்கி வீடுதந்தருளுவோம் என்பதற்கு அறிகுறியாகத் தம் கால்களில் பொற்கழல்களை அணிந்து அத்திருமன்றுக்கு மேலே ஆனேற்றுக்கொடியையும் கட்டிவைத்திருக்கின்றான். அநதத்திருமன்று ஞானாகாசமென்றும், சிற்றம்பலமென்றும் பொன்னம்பலமென்றும், சிதம்பரமென்றும், தூவெளியென்றும், வெட்டவெளியென்றும் கூறப்படும். அத்திருககோயிலிலுள்ள சிவகஙகையெனும் தீர்த்தததில் மூழுகிக கூத்தபிரானுடைய திருமன்று நடனங்கண்டு அன்பினாலே வழிபடுகிறவர்கள் இம்மை மறுமைத் துன்பஙகளினின்று நீஙகி அவருடைய திருவடிகளை அடைவர். இத்துணைப்பெருஞ்சிறப்புடைய தா யு ள் ள பொன்னம்பலத்தை ஒருகாற்கூறுகின்றவர் 'சிவ' என்னும் மந்திரத்தை இருபத்தோராயிரத்து அறுநூறு முறை ஓதினதினா லுண்டாகும் பயனைப்பெறுவர். ஆதலின் நானபோகும் இடங்களிலெல்லாம் 'பொன்னம்பலம்

பொன்னம்பலம்' என்று வழக்கமாய்ச் சொல்லிவருகிறேன்" என்று அடியார் அரசனுக்கு விடைகூறினார்.

அரசன் அருகிலிருந்த புத்தகுரு அடியார் கூறிய சொற்களைக் கேட்டு வெகுண்டு "பிடகநூல் மூன்றும் கூறிய எம் தலைவனாகிய சாக்கியமுனிவனல்லாது உலகிற்கு வேறொரு கடவுளுண்டோ? இப்பொழுதே நான் தில்லைநகருக்குப்போய் அங்கே பொன்னம் பலத்தில் நடனஞ்செய்கின்ற கூத்தப்பிரானுடைய கால்களில் தொடுத்த கழல்களையும மேலேகட்டியிருககிற ஆனேற்றின்கொடி யையும் அறுத்துச் சாக்கியமுனிவன் ஒருவனே உலகிற்கு முழு முதற்கடவுளென உரைசெய்து நிலைநாட்டிக் கூத்தபிரான் ஆடும் திருமன்றத்தைச் சாககியமுனிவன் பள்ளியாக மூன்று நாட்களிற் செய்வேன்" என்று வஞ்சினங்கூறினான். உடனே புத்தகுரு இலங் கையைவிட்டுப் புறப்பட்டுத் தில்லைநகருக்கு வந்து சேர்ந்தான். ஈழ நாட்டு அரசனும் ஊமையாயிருந்த தன்மகளோடு இலங்கையைவிட் டுப் புறப்பட்டுத் தில்லைநகரை அடைந்தான். தில்லைநகருககு வந்து சேர்ந்த புத்தகுருவும் அரசனும் கூததப்பிரான் திருககோயிலினுள் ளேசென்று மண்டபத்தில் அமர்ந்திருந்தார்கள. திருக்கோயிற் புறப் பணியாளர்கள் புத்தகுருவினிடம்வந்து "நீர் இங்கிருத்தல் ஆகாது. இதனைவிட்டகன்று அப்புறஞ் செல்லல்வேண்டு"மென்று கூறினார் கள். அவர்கள் கூறியதைக கேட்ட புத்தகுரு, "சோழவேந்தன் முன்னிலையில் அளவைநூற்படி சைவசமயக் கடவுள் முழுமுதற் கடவுள் அல்லரெனமறுத்து எங்கள் சாககியமுனிவரே முழுமுதற் கடவுளென நிலைநாட்டியபின்னல்லது இதனைவிட்டு யாம்செல்லு வதில்லை" என்று மறுமொழி கூறினான்.

புத்தகுருகூறிய செய்திகளைக் கேட்ட புறப்பணியாளர்கள் திருக்கோயில் அகம்படித்தொழில்பூண்ட அந்தணர்களிடம்சென்று கூறினார்கள். தில்லைவாழந்தணர்களும் சைவப்பெரியார்களும் திருக் கோயிலில் இருக்கும் புத்தகுருவிடம் வந்து "நீர் எங்கள் கோயிலுக்

குள் அச்சமின்றி வந்திருக்கவேண்டிய காரணமென்ன?'' என்றுகேட்டார்கள். புத்தகுரு, "சைவசமயிகளாகிய நீங்கள் உங்கள் சமயநூல் உண்மைப்படி சிவபெருமானே முழுமுதற்கடவுளென்று அளவை நூல்வழி கூறுவீராயின் யாம் அதனை மறுத்து எமது புத்தசமயப்படி சாக்கியமுனிவனே முதற்கடவுளென்று நிலைநாட்டுவோம். நீங்கள் எம்மோடு வழக்கிடுதற்குவம்மின'' என்று அறைகூவி அழைத்தான். தில்லைவாழந்தணர்,'' இப்புத்தகுருவை வெகுண்டு வெளியேபோகும்படிசெய்தல் முறையன்று, சோழ அரசன்முன்னிலையில் சைவசமயம் கற்றறிந்தார்சேரும் பேரவையொன்று கூட்டி அவர்கள்முன் இருதிறத்தாரும் தங்கள் வழக்குகளைச் சொல்ல அவர்கள்கேட்டுத் தகததிது தகாததிது என்றுகூறித் தீர்ப்புசெய்வார்கள். அங்ஙனம் செய்வதே முறைமை'' எனத்தீர்மானித்தார்கள.

அந்தணாகள், நடந்த செய்திகளையெல்லாம் விரிவாய் எழுதிச் சோழவேந்தனுக்கும் பெருந்தவாகளுக்கும் அருங்கலையுணர்ந்தோர்க்கும் சைவப்பெரியார்களுக்கும் திருமுகங்கள் விடுத்து, அன்றிரவு தத்தம் மனையகஞ்சென்றனர். அந்தணர்கள் இரவு துயிலுங்காலை கனவில் அவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் கூத்தப்பிரான் பொற்பிரம்பு தாங்கியகையுடன் சடைமுடியும் திருநீறுதரித்த திருமேனியுமாகிய கோலத்துடன்சென்று, "நீங்கள் அஞ்சிவருந்தவேண்டா, இவ்வூரெல்லையிலுள்ள ஓர் பனனசாலையில் நமது அன்பனுகிய திருவாதவூரன் தவஞ்செய்துகொண்டிருக்கிருன், அவனிடம் நீங்கள் போய் நிகழ்ந்தசெய்திகளைச சொல்லுவீர்களாயின, அவன் திருக்கோயிலுக்குவந்து புத்தாகளை வாதில்வெனறு சைவசமயத்தை நிலைநாட்டுவான்'' என்றுகூறி மறைந்தருளினுர். அந்தணர் ஒவ்வொருவரும் தாந்தாம் கனவிற்கணட செய்தியை அறிந்து வியப்படைந்து கூத்தப்பிரானை வணங்கிப்போற்றினுர்கள். அன்று இரவு விடிந்ததும் அந்தணர்கள் தங்கள் நாட்கடனை முடித்துக்கொண்டு திருக்கோயில்மண்டபத்துக்கு வந்துகூடி ஒவ்வொருவரும் தாந்தாம் கண்ட கனவின்செய்தியைப் பிறருக்கு அறிவித்து இறைவன்திரு

வருளை வாழ்த்தி வியப்படைந்து மாணிக்கவாசகர் இருக்கும் பன்னசாலையை நோக்கிச்சென்றார்கள்.

பன்னசாலையில் புறவுணர்ச்சியின்றிச் சிவபிரான்திருவடிகளையே நினைந்துகொண்டு அசைவற்ற நிலையிலிருந்த அடிகளை அந்தணர்கள் விளித்து அவர் தமது தவநிலையிலிருந்து பெயர்ந்தபின் கூத்தப்பிரான் முன்னைநாளிரவில் தங்கள் கனவில்வந்து கூறிய செய்தியைக் கூறினார்கள். அடிகள் அந்தணர்கள் தம்மிடத்தில் கூறிய கூத்தப்பிரான் கட்டளையைக் கேட்டு அதனைத் தலைமேற்கொண்டு அந்தணர்களுடன் கூத்தப்பிரான் திருக்கோயிலில்வந்து அங்கே புத்தகுருவும் அவர்குழுவினரும் கூடியிருந்த மண்டபத்திற் புகுந்து அந்தணர்களும் கற்றறிந்த பெரியார்களும் துறவிகளும் தம்மைச்சூழ்ந்திருப்ப ஆண்டு ஓர் இருக்கையின்மீது வீற்றிருந்தருளினார். தமக்கு அந்தணர்களால் விடுக்கப்பட்ட திருமுகத்தால் நிகழ்ந்தசெய்திகளை அறிந்த சோழமன்னன், சைவப்பெரியார், புராணிகர், கலைவல்லுநர், சான்றோர் முதலியவர்களுடன் திருக்கோயிலுக்குவந்து திருமன்றின்முன்பு விழுந்துவணங்கி மண்டபத்துக்கு வந்து மாணிக்கவாசகஅடிகளின் திருவடிகளில் வீழ்ந்துவணங்கி எழுந்து அங்கு இடப்பட்ட ஓர் இருக்கைமீது அமர்ந்திருந்தான். அம்மண்டபத்துக்கு முன்னமே வந்திருந்த ஈழமன்னன் சோழமன்னனை வணங்கி அவன் கட்டளைபெற்று அவன் ஆணையின்படி தன் இருக்கையில் இருந்தான். பின்பு சோழமன்னன் அடிகளை வணங்கி நின்று "சைவசமயவுண்மையை நிலைநாட்டுதல் உமது கடமை. அதன்பின புத்தர்களை உயிர்செகுத்தல் எனதுகடமை" என்று சொன்னான். சோழமன்னன் கூறியதைக் கேட்ட அடிகள் புத்தகுருவைப்பார்த்து நீர் இங்கு சைவசமயிகளாகிய எங்கள் திருக்கோயிலுக்கு வந்தகாரணமென்ன?" என்று கேட்டார். புத்தகுரு "எங்கள் கடவுளாகிய புத்தனல்லாமல் உலகிற்கு வேறுகடவுளில்லை என்ற புத்தசமயவுண்மையை இந்த இடத்திற்குவந்து எவருங்காண உங்கள்முன்னே அளவைநூல்முறைப்படி நிலைநாட்டி இந்தப்பொன்

னம்பலத்தே எங்கள் புத்தக்கடவுளை வைத்தல் வேண்டுமென்று விரும்பி நாங்கள் இங்கே வந்தோம்'' என்று கூறினான். அடிகள் அதனைக்கேட்டு புன்னகைசெய்து, முற்பிறப்பில் தவஞ்சிறிது மில்லாதவனே! உன்னுடைய கடவுளிலக்கணமும் அக்கடவுளையடையும் முத்தியின் வரலாறும் சொல்வாயாக'' என்றுகூற அதற்கு அந்தப் பௌத்தமதகுரு சினந்து ''நீ அந்தகன். உனக்குச் சூரியனொளியை என்னாற் காட்டமுடியுமா? எங்களுடைய இறைவன் புகழை யெடுத்துச்சொல்லப் பல்லாயிரம் நாக்களை யான் பெற்றேனில்லையே! ஆனாலும் ஒருவாறு சொல்கின்றேன் கேட்பாயாக. எம் குலதெய்வமாகிய அவன் அறவடிவாகிய பிடகநூலருளிப் பலயோனிகடோறும் போய்ப் பிறந்துபிறந்து, அந்தந்த உயிர்கட்கு உறுதிப்பாட்டைச்செய்து மறவடிவாகிய கொலை, களவு, கட்குடித்தல், காமம் இவைகளை நீத்து, மாட்சிமைதங்கிய அரசமரத்தினிழலில் எழுந்தருளியிருப்பான். அவன் உயிர்கள் பொருந்திய ஒவ்வொரு கருவிலும் நிறைந்துள்ளான். உருவம், வேதனை, குறிப்பு, பாவனை விஞ்ஞானம் ஆகிய பஞ்சகந்தங்களும் ஒன்றுகூடியமாத்திரமே கணந்தோறும் நீக்கமறும் உணர்ச்சியுண்டாகி கணந்தோறும் நீங்குவதே பிறவித்துன்பமாகும். அப்படிப் பஞ்சகந்தங்களுடன் உணர்ச்சியுங் கூடிய சரீரம் அழிவதே முத்தியாகும்''என்று மொழிந்தான்.

அதைக்கேட்ட திருவாதவூரடிகளும் காவிரிநாட்டு மன்னர்பிரானாகிய சோழனைப்பார்த்துப், ''பேதைமையோடும் மயக்கங்கொண்டவனாய்ப் பிதற்றும புத்தமதக் குருவுக்கு யான் என்ன சொல்வது?''என்று கூறிவிட்டு ''ஏ! புத்தகுருவே! உன்னிறைவன் தருமமொன்று உண்டென்று நூல் சொன்னானென்கின்றாய்! ஐந்து கந்தங்களுடன்கூடிய அறிவு கணப்போதிலழிந்துவிடு மென்கின்றாய். உன்னிறைவன் கூறியநூலைத்தேடிப் புக்குமுன்னரே அறிவு அழிந்துவிடுமென்கிறாய். அறிவு அழிந்தபின்பு உன் நூலைப் படித்து அறிவது எங்ஙனம்? ஆகையால் அறநூலே உனக்குக்கிடையாது. உன்னிறைவன் உயிர்கட்காக யோனிதோறும்போய்ப் பிறப்பா

னென்கிறாய் உயிரினுடைய பிறவிமயக்கத்தை நீக்கவல்ல இறைவன் மிகவும் மயங்கி மேலும் மேலும் பிறப்பானானால் எவ்வாறு பிறர் பிறவியைநீக்க அவன் வல்லமைபெறுவான்? கொலைத்தொழிலே கருதமாட்டான் எங்களிறைவன் என்கின்றாய். ஒவ்வொரு யோனியிலும்போய்ப் பூமியிற்றோன்றுங்காலத்து புலி நரி முதலிய பிராணிகளாக வருங்காலத்தும் வெம்பசிவந்தால் அவன் தின்பது என்ன? கல்லா, தழையா? இறைச்சியையல்லவா தின்னவேண்டும். இதுநிற்க; உனது நூலில் பஞ்சகந்தங்களோடு உருவமும் அழியுமென்கிறாய். உன்னிறைவனுக்கு உருவம் எங்கே? கலந்த யோனிகள்தோறும் அவ்வுயிர்கட்கு அருளவே வடிவங்கொண்டானென்று நீ சொல்வது என்னை? காரணமாகிய உருவத்திற் கூடுகிற காரியத்திற்கும் வடிவமில்லாவிட்டால் உன்னுடைய அரசமரநிழலிலிருக்கும் இறைவனுக்கு உருவம் இல்லையே; நிறைந்த அறிவில்லாதவனே! இறத்தலே முத்தியென்றுகூறும உணர்வற்ற அறிவற்ற இந்தப் பிடகநூலை யாவர் கூறினர்? இருபத்தொருவராக எண்ணப்படும் உன் புத்தவர்க்கமெல்லாம் தாயார்வயிற்றைக் கிழித்துக்கொண்டுவந்து தோன்றினார்கள் என்கிறாய். வருத்தப்பட்டுச் சுமந்து பெற்ற தாயார் அழியப் பழுதுசெய்து நரகத்தில் வீழ்பவர்களோ கடவுளாவர்? பிருதிவி. அப்பு, தேயு, வாயு ஆகிய நான்கு பூதக் கலப்பே வடிவம்; உயிர் என வேறுபொருளில்லை என்கிறாய்? இரவில் நீ தூங்கும்பொழுது உன் முகத்தில் உன்னையறியாது ஏறிப் போகிற பாம்பைப் பூதபேதமாகிய வடிவமா அறியும்? உயிரல்லவா அறியக்கூடியது? உருவமும் உயிருங்கூடுகிற அறிவு உங்கள் கடவுட்குக் கிடையாது. இந்த உருவம் அழிந்தபோதே உயிரும் அழிந்துவிடும். அப்படி உருவமும் உயிருங்கூடிப் பிறக்குங்காலத்தில் உருவம்வேறு உயிர்வேறு என்று உன்வாயால் தெளிவாகச் சொல்லுவாயாக. ஆகாயமில்லை, ஆகாயத்தில் ஓசையுமில்லை, அங்ஙனம் நிகழ்வதே வழக்கமென்கிறாய்; உன் பிடகநூலில் மண்ணாதி பூத நான்குங் கலப்பதற்கு இடமாகிய (உன்னால் சொல்லப்படும்) ஓசையே ஆகாயத்தில் நிகழ்கின்றதென்று நீ அறிவாயாக. இருக்குமிட

மாகிய திசையே இல்லையென்று இல் (பொய்) வழக்குரைக்கும்
நீயே வடதிசையிலுள்ள அரசமரத்தடிக்கு வணக்கஞ்செய்கின்றாய்.
நீ உரைக்கும் வார்த்தைகளை இப்பூமியில் அறிவிழந்தவரும் உன்மத்
தங்கொண்டவர்களும் பொய்யரும் நிறைந்துள்ள சபையிற்போய்ச்
சொல்லுவாயாக. அவர்களே ஒப்புவார்கள். தாவரங்களாகிய மரங்க
ளில் உயிரில்லை என்கிறாய். ஐம்பூதங்களாலாகிய வடிவத்தையு
டைய உயிர்கட்கு எங்ஙனம் நீருணவு அவசியமோ அப்படியே மரங்
கள் செடிகளிவைகளும் கொடிகளும் எல்லாம் நீருணவினாலே வாழ்
கின்றன. அவைகள் கிளைகள்விட்டுத் தளிர்த்து அரும்பி மலர்ந்து
காய்த்துப் பழுக்கும் என்பதை அறிவாயாக. இன்றேல் சருகாய்க்
காய்ந்து பட்டுப்போகும். இது நீ அறிந்ததுதானே. பிறப்புப் பே
தங்களாகிய மர முதலியவற்றைக் காக்கவே இறைவன் நீருணவை
அமைத்தனனென்று உணாவாயாக. உங்கள் கடவுள் கொல்லுதல்
செய்யான் என்று சொன்னாய். புலாலுண்ணும் பாவத்துக்குக் கார
ணம் கொலையல்லவா? பிறர் கொன்றாலும் கொலைக்குக் காரணம்
புலாலுண்பானேயாகும். ஏ, பௌத்தமதகுருவே, காரணமானது
இருக்கக காரியமாத்திரம் அழிவதே முத்தியென்று சிவபிரானரு
ளிய மறைகளும் ஆகமங்களும் சொல்லுகின்றன. ஒருங்கே உயிரழி
தல் முத்தியென்று உடலுக்கும் உயிருக்குமுள்ள வேறுபாடுணராது
பிதற்றுகிறாய். பஞ்சகந்தமும் அழிந்தால் முத்திசித்திக்குமென்று
கூறினாய். அந்தப் பஞ்சகந்தம் அழிந்து முத்திபெற்றார் யாரென்று
கேட்கும்பொழுது அவ்வைந்துடனிருந்த அறிவு என்று நீ கூறுவா
யேல் பஞ்சகந்தம் அழியவுமில்லை, முத்தியுமில்லை யென்பது
துணிபு.'' எனமொழிந்தார். இவ்வாறு திருவாதவூரடிகள் கூறிய
வைகளைகேட்ட புத்தகுருவும் கோபித்துச் சொல்கின்றான். ''எங்
கடவுளுமில்லை, எங்கட்கு முத்தியுமில்லையென்று சொன்னீர். உம்
முடைய கடவுள் யாவர்? அவரையடையும் முத்தியாது? என்று
கேட்டான். இதனைக் கேட்ட அடிகள் கூறுகின்றார் ''கல்லால்நீழ
லில் அமர்ந்தருளி அறவோர்களுககு ஞானோபதேசஞ்செய்யும்கோ
லத்தைத் தெரிசித்துச் சிவனடியார்களாகிய வியாக்கிரபாதர், பதஞ்

சலி முதலிய இருவரும்,தேவர்களும்,மெய்யடியார்கள் பலருங்காண திருச்சிற்றம்பலமாகிய இந்தத் திவ்விய பொன்னம்பலத்திலே நடனஞ்செய்யும் பெருமானுகிய திருநீற்றையணிந்த குருவும் மங்கை பாகனுமாகிய முழுமுதற்கடவுள் பெருமையை எடுத்துமொழிவது அவ்வளவு எளிதாகுமா? ஆனுலும் பொய்ச்சமயஞ்சார்ந்த உன்னை ஈடேற்றவேண்டுவதற்காகச் சொல்லுகினறேன் கேள். தில்லைப் பதியிலே திருப்பொன்னம்பலத்திலே அமர்ந்துள்ள எம்மிறைவன் புகழை எடுத்துரைப்பதற்கு எல்லையுமுண்டோ?''என்று மாணிக்க வாசக அடிகள் சொன்ஞா. இப்படிக்கூறிய அடிகளைப்பார்த்து அந்த பௌத்தமத குருவானவன் கேட்கின்றுன். "முதலாவது கல்லால் மரநீழலிலிருந்து உமது இறைவன் அறநூல்களை அருளிச் செய்கின்றுனென்று என் நேரிற் கூறினீர். செபமாலையைக் கையில் வைத்துககொண்டு தியானிப்பது வேறு எக்கடவுளை நினைந்து என்றுசொல்வீா? அன்றியும் நிலவுலகத்திலுள்ள மனிதா வணங்கிடத் தில்லைத்தலத்தில் பொதுவில்நின்று ஆடுகிறுன் எங்க ளிறைவனென்று நீர் மொழிந்தீர்; அஙஙனம் ஆடுவது என்பது பிறர் பார்ப்பதற்கும் கேட்பதற்கும் அல்லவா? தம்மிசலைசப்படி எஙகே யாவது யாரும் ஆடுவதில்லையே? அவ்விறைவன் மெய்முற்றும் நீறணிபவன் என்று மேன்மையோடுஞ் சொன்னீர்; தன் உடம் பின்மேலே உலகத்திலுள்ள நறுமணப்பொருள்களுள் தூய்மை யுடையதென்றோ நீற்றையணிந்தான்? அவன் மஙகைபாகனென் றுஞ் சொன்னிர். இப்பூமியின்கண் பாதியுடலைப்பெண்ணுககீய்ந் தான் இறைவனென்றும், துறவியாயிருந்து அறமுரைககின்றுன என்றுகூறியது இறைவன் செய்யவேணடிய தவந்தானே?''என்று இவ்வாறு மதியீனத்தால் புத்தகுரு மேலும் மேலும் பல பல கேட் டுக்கொண்டிருந்தான். அதற்கு அடிகள் ''நல்லுபதேசத்தை நற்புத் தியிழந்த உன்னெதிரிற் கூறுவது தகாது''என்று மேலுஞ்சொல் வார், "செபமாலையோடு எம்பெருமான் இருத்தலானது உலகத்தி லுள்ள அடியார்களும் இவ்வாறிருந்து தவஞ்செய்ய வேண்டுமென்ற நோக்கத்தோடெனபது நீ யறியாய். எங்கள் கடவுள் கையிலே

ஜெபமாலை வைத்திருத்தல் பிறர் பழகுதற்குரிய இயல்போடும் ஆசிரியர்கள் தங்கள் கையில் கைவாள் வைத்திருத்தல் போலாகும். எம்பெருமான் தில்லைத்திருப்பொன்னம்பலத்தில் நடனமாடுவது என்ன கருத்தென்று நீ கேட்பாயாயின், விறகினிடத்துத் தீ கலந்திருப்பதுபோல உடலினிடத்தில் உயிர்போல் தானுங் கலந்திருந்துகொண்டு (அத்துவிதமாய் நின்று) எல்லாவுயிர்களையும் ஆட்டுவிக்கும் நட்டுவனாகநின்று கூத்தாடுகிறவனே தில்லைப்பதியன் என்று நீ அறியாய்போலும். எங்கள் இறைவன் திருநீற்றினைத் திருவுருவெங்கும் பூசுவானென்பதற்கு என்ன என்னவோ பிதற்றினாய். அக்கருத்து உயிர்களிடத்துக் காணப்பெறும் பிறவிப்பிணியை நீக்குதலேயாகும். அது உலகத்தில் கொடிய பிணியால் வருந்தும் குழந்தைகளுக்காகத் தாய்மார் மருந்துண்பதுபோலாகுமென்று அறிவாயாக. திருநீற்றின் பெருமையை அவ்விறைவனருளிய ஆகமங்களே மொழிந்தாலொழிய வேறொருவரால் எடுத்துசசொல்ல முடியுமா? இடப்பாகத்தில் உமையை வைத்திருத்தல் இறைவனுக்குப் பழுதென்றாய். இது உலகமுழுவதும் போகங்களை அனுபவிப்பதற்கேயன்றி வேறில்லையாகும். போகிகட்கு போகியாயும் யோகிகட்கு யோகியாயும் இருந்து அன்பர் கருதியபடியே அருள்செய்துகொண்டிருப்பான் எஙகளுடைய கடவுள். எல்லாவுயிர்களிடத்தும் பூவில் மணம்போற் கலந்திருப்பானென்று கண்டறியமாட்டாய். இத்தில்லைப்பதியிலே கனகசபையினகண நின்று நடனம்புரியும் கூத்தப்பெருமானே முழுமுதற்கடவுள், அவனே பரம்பொருள், அவனே சிவயோகி, அவனே அருவமாகிய சோதிவடிவினன், பல வடிவமெடுப்பவனும் அவனே, நிறைந்தபொருளும் அவனே, பேரானந்தப் பெருவாழ்வுக் கடலாயிருப்பவனும் அவனே; முழுமுதலாகிய அப்பொருளை அடிமுடி காண்பார் ஒருவருமில்லை''என்று அடிகள் கூறி முடித்தார். பின்னர் அடிகள் கலைமகளைநோக்கி, "ஆடவர் பெண்கள் இவர்களுடைய வாக்கில் வாசஞ்செய்கின்ற கலைமகட்செல்வி! நீ இங்ஙனம் பொய்மொழிகளாகிய சிவநிந்தையை சொல்லிககொண்டிருக்கிற இந்தப் புத்தமதகுருக்கள் நாவிலிருந்தும் போகவேண்டு''மென

ஆணையிடவே உடனே யாவரும் ஊமைகளாய்விட்டார்கள். திருவாதவூரடிகள் மனவலிமையுடன் கட்டளையிட்டதும் ஈழமன்னன் நீங்கலாக புத்தமதக்குருவும் மற்றும் அவருடன் வந்தவர்களாயுள்ள பௌத்தமதத்தினர் யாவரும் தங்கள் நாக்குகளினின்றும் பேசுதற்குக்காரணமாயிருக்கும் வாக்கிறைவியாகிய கலைமகள் விலகிவிடவே ஊமையர்களாகிவிட்டார்கள்.

அதனையறிந்த ஈழநாட்டு மன்னன் பயந்து அடிகளையண்மி அவர்திருவடிகளில் வீழ்ந்து இறைஞ்சிநின்று கூறினன். "பௌத்த மதத்தை நிலைநாட்டவந்தவர்கள் யாவரும் ஊமையானார்கள். அடியேனுடைய குமாரி ஒருத்தி பிறவியிலிருந்தே ஊமையாயிருக்கின்றாள். அவள் வாய்திறந்து பேசத் தொடங்குவாளேயானல் உமக்கு அடியேன் பெருந்தொண்டனாகிறேன்" என்று விண்ணப்பித்துக் கொண்டான். அடிகள் "அப்பெண்ணை இச்சபையின்கண் அழைத்துவா" என்று கட்டளையிட்டார். அந்தப்பெண்ணும் சபைக்கு வந்து சேர்ந்தாள். அவளை அடிகள் திருக்கண்ணுற்பார்த்து அருள்செய்து தம்முன்னிருக்கவைத்து "புத்தகுருமார்கள் மயங்கிக்கேட்ட கேள்விகளுக்கெல்லாம் விடைசொல்வாயாக" என்று பணித்தருளினர். உடனே ஊமைகளாகுமுன்னர்ப் புத்தகுருக்களும் மற்றும் புத்தர்களுங்கேட்ட தருக்கவினாக்களுக்கெல்லாம் கற்றுணர்ந்தவள்போல ஈழநாட்டு மன்னன் மகளாகிய பிறவி ஊமையாயிருந்த கன்னிப்பெண்ணானவள் மறுமொழிகூறினாள். அவைகளையெல்லாம் பெண்களின் சாழல்விளையாட்டில் நிகழ்ந்த வினாவிடைகளாக நம் அடிகள் திருச்சாழல் பாடியருளினர்.

உடனே ஈழநாட்டு மன்னன் ஐந்தெழுத்தோதி திருநீறணிந்து கொண்டு சைவனாய்விட்டான். இவற்றை உடனிருந்து பார்த்துக் கொண்டிருந்த சோழநாட்டு மன்னனும் மற்றும் திருவுடையந்தணர்களும் யாவரும் "பொன்னம்பலம் வாழ்க, வாழ்க" என்று துதித்து வாதவூரடிகளைப் போற்றினார்கள், வாழ்த்தினார்கள், புகழ்ந்தார்கள்.

## மாணிக்கவாசக அடிகள் வரலாறு.

ஈழநாட்டரசன் திருநீறணிந்து அக்கமாலைதரித்துத் தொண்டனை பின் "அடிகளே இந்தப் பௌத்தமூடர்களுடைய ஊமையை நீக்கி யருளவேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்தனன். அங்ஙனமே செய்வது தக்கதென்று சோழநாட்டு மன்னனும் தில்லைவாழந்தணர் களும் கேட்டுக்கொள்ளவே, வாதவூரடிகள் மகிழ்வோடும் திருப் பார்வை செய்தார் உடனே புத்தவாதிகள் ஊமைநீங்கி அடிகளைத் தரையில் வீழ்ந்து வணங்கி இவ்வாறு கூறினார்கள். "குற்றமற்ற மனத்தையுடைய பெரியீர்! நாங்கள் முற்பிறப்பிற்செய்த தீவினை வயப்பட்டு தூயவெண்ணீறணியாமலும் ஐந்தெழுத்தை ஓதாமலும் இருந்தோம். ஆதலால் தேவரீரே இப்பொழுது ஐந்தெழுத்துடன் திருநீறருளி அக்கமாலையும் அளிக்கவேண்டு"மென்று விண்ணப் பித்துக்கொண்டார்கள்.

மனக்கோட்டமற்றுத் தூய்மையோடிருக்கும் திருவாதவூரடிகள் புன்முறுவல்செய்த முகத்தையுடையவராய், "இவர்கள் முற்பிறப் பிற்செய்ததவ"மென்று தமது திருவுளத்திலெண்ணித் திருநீறும், உருத்திராகக வடங்களும் அணியக்கொடுத்தருளினர். பின்னர் வாதவூரடிகளும், தில்லையம்பதிவாணர்களும்,மயக்கவேடத்தினின்று நீங்கி மெய்யடியார்களானவர்களும், சோழமன்னனும், ஈழமன்ன னும் திருப்பொற்சபைககு முனபுசென்று வணங்கினார்கள்.

பின் திருவாதவூரடிகள் திருப்புலீச்சுரத்துக்குச் சென்று வணங்கி அங்கே தங்கியிருந்தார். தில்லையம்பதிவாணர்கள் யாவரும், பௌத்தமதத்தினின்றும் நீங்கிச சைவராகிய ஈழநாட்டினர் யாவரும் தங்கள் தங்கள உறைவிடங்கட்குச் சென்றார்கள். ஈழநாட்டரசனும் சோழநாட்டரசனும் பொற்சபையை வணங்கி அடிகளிடத்து விடை பெற்றுக்கொண்டு தத்தம் உறைவிடஞ் சென்றார்கள். தாழ்வுடைய பௌத்தவேடத்தைத் தொலைத்துவிட்டுத் திருநீறணிந்துகொண்ட வர்களெல்லாரும் ஈழநாட்டுமன்னனும் இனிமேல் தில்லையம்பதியை விட்டகலக்கூடாதென்று திருவாதவூரடியாரையும் பொற்சபை வாணரையும் துதித்துக்கொண்டு திருத்தில்லையம்பதியில் வாழ்ந் திருந்தார்கள்.

## மாணிக்கவாசக அடிகள் வரலாறு.

பொய்ச்சமயங்களை வெல்ல வல்ல திருவாதவூரடிகள் தம் முடைய தவவலியினால் சைவசித்தாந்தப் பெருஞானக்கடலை மெய் யடியார்கள் யாவரும் கற்றறிந்து கடைத்தேறுவான் திருவாய்மலர்ந் தருளிய மாசற்ற மாணிக்கம்போன்ற அருட்பெரும் வாசகங்களை விடாமழைபோற் பொழிந்துவருதலால் மாணிக்கவாசகசுவாமிகள் என்ற திருநாமம்பெற்று இறைவனருளால் விளங்கிவருவாராயினார். அடிகள் பௌத்தமதத்தையொழித்துச் சைவசமயத்தை நிலைநிறுத் தியபின் தமது அருமைவாய்ந்த திருவாசகப்பகுதியில் "திருப்படை யாட்சி", "படையெழுச்சி", "அச்சோப்பதிகம்", "யாத்திரைப் பத்து" என்னும் பாடல்களை திருவாய்மலர்ந்தருளிப் பேரானந்தப் பெருவாழ்வில் வேறொன்றை நாடலும் திகைத்தலும் திகைத்தல் மாறித்தெளிதலும் அயர்ந்துவாடலும் அற்பக்களிப்புமற்று நிரதிச யானந்தபரவசராய் விளங்குவாராயினர். சிவனடியார்களாற் போற் றப்படும் திருவைந்தெழுத்தும் முத்தித்திருநீறும் இப்பூமியின்கண ஒளிரப் பிறவித்துன்பத்தை வேரறககளையும் சிவஞானநிறைவாகிய திருவாசகத்தை நமக்கருளவே அவதரித்துவந்த அடிகள் பொன் மன்றில் இரவும் பகலும எப்போதும் திருநடனம்புரியும் பெரு மான் எழுந்தருளியிருக்கின்ற திருத்தில்லையம்பதியே மேலைச்சிவ லோகமென்பதைத் தலங்கக்கண்டு தெரிசித்து மகிழ்வுள்ளத்தோடு உறையுநாள் சிற்சபையிற் கூத்தாடுமிறைவன் ஓரந்தணன்வடிவ மெடுத்து முப்புரிநூல் மார்பிற்றிகழ எழுதுதற்குரிய திருவேடும் எழுத்தாணியும் கையிற்கொண்டு திருவடிகள் கன்றும்படி நடந்து வந்து அடிகளெதிரில் நின்றார். அங்ஙனம் நிற்கின்ற மறையவரைத் திருமுகநோக்கித் தெரிசித்து அடிகள் " சுவாமீ தேவரீர் எழுந்தருள வேண்டு"மென்று வேண்ட அந்தணராய் வந்த இறைவன் அங்கே உட்கார்ந்தருளினன். பின்னர் "மறைவல்லீர்! நீர் எவ்விடமிருப் பது? கூறு" மென்ன "நாம் இருப்பது வளப்பம் நிறைந்துள்ள திருப்பாண்டி நன்னாடாகும்" என்றான். அவ்வாறு கூறிய திரு வார்த்தைக்கு அன்புமிகுதிவைத்து வாதவூரடிகள் "தேவரீர் இவ் விடம் வந்த காரியம் யாது? உரைத்தருளவேண்டும்" என்றார்.

உடனே அம்மறையவர் "நம்மைப்பார்த்தலே முக்கிய காரியமாகும், ஆயினும் ஒன்றுண்டு, நான்முகன் மால் இவர்களால் தேடியறியப்படாத புனிதப்பிரானைப் பரிமேலழகராக வரும்படி செய்த உம்முடைய பெருமையினாலே பாண்டிநாடு நல்வாழ்வடைந்தது. இவ்வாறு செய்தற்குக் காரணமாயிருக்கும் நீர் அழகிய திருப்பெருந்துறையில் குருமூர்த்தியின் திருவடியைச்சேவித்துப் பிறவிப்பிணியகற்றித் திருக்கழுக்குன்றேகி திருக்கோலங்கண்டு இப்புலியூருக்கு வந்து பௌத்தமதத்தை வாதில்வென்று பேரானந்தவாழ்வில் வாழ்கிறீரென்று கேட்டலும் பாண்டிநாட்டிலுள்ளார் யாவரும் பெரியமகிழ்ச்சி யடைந்தார்கள். இன்னும் ஒரு காரியமாகவும் யாம் இங்கே வந்துள்ளோம். ஆதலின் நீர் உம்முடைய திருவாசகப்பாக்களை விளங்கச் சொல்லுவீரேயானால் நாம் கொண்டுவந்திருக்கும் இவ்வேட்டில் எழுதிக்கொள்வேன்" என்றருளினார். இங்ஙனம் மறையவர் அருளியவுடன் வாதவூரடிகள் தாம் பாடிய மெஞ்ஞான வாசகத்தை மனக்களிப்புடன் மொழிந்தனர். அடிகள் கூறிய திருவாசகப் பாடல்களை மறையவர் ஏட்டில் தெளிவாக எழுதிக்கொண்டபின்னர் மாணிக்கவாசகரைப் பார்த்து 'உலகத்தில் கற்றோரும் மற்றோரும் எளிதிலுணர்ந்துகொண்டு பிறவிப்பிணியை நீக்கிக்கொள்ள நீர் விருப்பங்கொண்டு மாதொருபாகனார்மேல் கோவை பாடித்தரல் வேண்டு'மென சொல்லியருளினார். அதற்கு மனமகிழ்ந்து நானூறு துறைகளடங்கிய பாக்கள் நானூறுகொண்ட திருக்கோவையாரைப் பாடவே அவைகளையும் அம்மறையவர் அடிகள் முன்னிருந்து எழுதி முடித்தபின் அவ்விரண்டையும் கையில் வைத்துக்கொண்டு மறைந்தருளினார். உடனே அடிகள் மனம் அயர்வுகொண்டு எழுந்து எங்கும் ஓடித்தேடினார். மறையவரைக்காணாது வருந்தியவராய் "இங்ஙனம் எழுந்தருளி வந்தவர் திருப்பொன்னம்பலத்தில் ஆடும் பெருமானே" யென்று தெரிந்தபின்னர் கண்களில் ஆனந்த நீர்பொழிய நின்று "எங்கே யொளித்தீர்?" என்று கதறினார். அத்தருணம் இங்ஙனம் இத்திருவாசகத்தையும், திருக்கோவையாரையும் எழுதிய செந்தமிழன்புமிக்க சிற்சபைநாதன் தனது பொன்னம்

பலத்தையடைந்து தேவர்களையும் திருமாலையும் பிரமனையும் பார்த்தருளி "நமக்கே யடிமைபூண்டு நயந்து ஒருவன் நம்மேற்பாடிய பாடல்களைக் கேளுங்கள்" என்று அவைகளையெல்லாம் திருவாய் மலர்ந்தருளி "இப்பாடல்களை திருவாதவூரன் சொல்ல நாம் நமது திருக்கரததால் வரைந்துள்ளோம் என்று கையெழுத்துமிட்டுப்பின கோவையுமெழுதி முடித்து மைக்காப்புஞ்சாத்தியிருக்கின்றோம்" என்று கூறியருளினன். இங்ஙனமாக எம்பெருமான் உலகத்தில் உள்ள யாவருககும் வாதவூரருடைய தவவிளக்கத்தை யறிவிகக வெண்ணி அளவுகடந்த முனிவர்களும் தேவர்களும் வணங்க நின்ற பொன்னம்பலத்தில் சந்நிதியிலுள்ள திருக்களிற்றுப் படியென்னும் திருவைந்தெழுத்துப்படியில் அத்திருவேட்டை வைத்தருளினர். வைத்த மாத்திரத்தில் மன்றவாணருக்குப் பூசைசெய்யும் தில்லைவாழந்தணர் ஒருவர் வந்து பார்த்து இப்புத்தகம் இப்படியின்கண் வந்திருத்தல் என்ன புதுமையெனறு ஆச்சரியப்பட்டார். இது இத்தில்லையிறைவனருளால் வந்திருக்கலாமென்று மனங்கசிந்துருகி நின்று இவ்வேட்டை தில்லையம்பதிவாணாக்கெல்லாம் கூறவேண்டுமென்று வெளியில் வந்து சிவனடியார்கள் குழுமியிருக்கும் அவைக்குவந்து கூற, யாவரும் வந்து பார்த்து அப்புத்தகத்தைக் கண்டு மகிழ்வடைந்தார்கள்.

தில்லைவாழந்தணர்களும், மற்றுந் தில்லையம்பதியிலுள்ள சிவனடியார்களும் தங்களுககுள் ஆய்ந்து எம்மிறைவன எழுந்தருளியிருக்கும் பொற்சபையின் மேனமையோ தேவர்களும் புகலமுடியாது. அவ்வாறு இருக்க இப்புத்தகம் தெய்வத்திருவருளால் வந்ததே யென்றெண்ணி இத்திருமறை அம்பலவாணனருளிய சைவநூலோ அல்லது செந்தமிழ்நூலோ என்று பார்ப்பதே தக்கதாகுமென வுணர்ந்து யாரைக்கொண்டு இப்புத்தகத்தைப் பார்க்கச்சொல்லலா மென்று சிந்திக்கும்போது அருளும் அன்புஞ்சிறந்த சொல்வன்மை நிறைந்த ஒருவர் வந்து எம்பெருமான் வைத்தருளிய புத்தகத்தை எடுத்துப் பாதுகாப்பைநீககி விரித்து முதல் நான்கு அகவலுஞ்

சொன்னார். பின்னர் திருச்சதகமுதல் சிறப்புற்றமைந்த கூாநிசு பாடல்களையும் அப்பால் திருக்கோவை நானூறு செய்யுள்களையும் வாசித்தார். இறுதியில் வாதவூரன் மொழிந்தவற்றை ஏற்றருளி விளக்கமாக எழுதிமுடித்தேன் என்றும் கையெழுத்து "அழகிய திருச்சிற்றம்பலமுடையார்" என்று இருப்பதையும் யாவருமறியச் சொன்னார்.

கேட்டவர்கள் எல்லாரும் மயிர்சிலிர்ப ஆனந்தநீர் கண்களிற் பொழியக் கசிந்தமனத்துடன் நாஞ்செய்த தவப்பயனாக எழுந்தருளி வந்து திருவாய்மலர்ந்தருளிய இசசெந்தமிழ்வாசக நூலே முத்தி நெறிக்கு வழிநூலெனை மகிழ்ந்தார்கள். பின் அரவாபரணன் திருப் புகழ் நிறைந்துள்ள ஞானநூலுக்குப் பொருள்கூற நாமெல்லாரும் கேட்டு உய்வோமென்று நினைத்து புத்தரை வாதில்வென்று பேரா னந்தவாழ்வில் அமர்ந்திருக்கின்ற பெரியோரிடஞ்சென்று அவர் திருமுன்னர் அப்புத்தகத்தை வைத்து நடந்த வரலாற்றை யெடுத் துரைத்தார்கள். அப்பொழுது "அடியேனுடைய எளியபாடல்களை மகிழ்ந்து இறைவன்செய்ததிருவிளையாடலுக்கு யான் முன்னென்ன தவஞ்செய்தேனோ? அறியேன்" என்று அன்புவடிவினராகிய மாணிக்கவாசக அடிகள் ஆனந்தநீர் தமது கண்களிற்பொழிய நின்று ஆடினார். புண்ணியவுடலோடும் இவ்வாறு புலம்பிய அடிகளை பேரன்பாளர் யாவரும் பார்த்து அஞ்சலிசெய்து, இன்னிசைமய மாய்த் தேன்மணங்கமழும் இந்தச சிவஞானப்பாடல்களை இப்புத்த கத்தில் பொன்னம்பலவனே யெழுந்தருளிவந்து எழுதும்படி நேர்ந்த காரணம் உரைத்தருளவேண்டுமென்று விண்ணப்பித்துக் கொள்ள, நடந்த வரலாற்றையெல்லாம் விளக்கமாக வாதவூரடிகள் எடுத்துரைத்தார் உரைத்தமாத்திரத்தில் யாவரும் வணங்கி மனங் களிகூர்ந்து, தில்லைமன்றில் வீற்றிருக்கும் பேரிறைவனை சிறப் பித்துப் பாடியருளிய தங்களுடைய இன்னிசைச் செந்தமிழ்ப் பாக்களுக்குப் பொருள் அருளவேண்டுமென்று கேட்டுக்கொண் டார்கள். அதற்கிசைந்த அடிகள் சிவஞானப்பெருக்குடன்

களிகூர்ந்து பொற்சபைக்கெதிரேபோய்ப் புகல்கின்றேனென்று ஒத்துக்கொண்டு தாம் உடனே பொன்னம்பலத்தைநோக்கிச்செல்ல எல்லாரும் பின்தொடர்ந்து சென்றார்கள்.

அங்கு சென்று வாதவூரடிகள் சபையார்களைப் பார்த்து "அடியேன் கூறிய செந்தமிழ்ப் பாக்களாலாகிய திருவாசகத்துக்கும் திருக்கோவையாருக்கும் பொருள் இந்தப் பொன்மன்றிலாடுமிறைவனே" யென்றருளி அம்மன்றிற் கடிதுசென்று யாவருங் காண மறைந்தருளினார்.

இங்ஙனம் பொற்சபைவாணரே பொருளென்று தமது திருக் கரத்தாற் காட்டித் தம்முருவத்தைக் காட்டாமல் மறைந்தருளிய மாணிக்கவாசக அடிகளைக் காணாது திகைத்து அவர் உப்பொடு சேர்ந்த நீர்போல இறைவனோடு இரண்டற (அத்துவிதமாய்)க் கலந்தருளிய பெருமையை யெடுத்து வியந்து அப்பெரியார்கள் பாடினார்கள், ஆடினார்கள்.

"அழுக்கு நிறைந்துள்ள தோலும் என்பும் நரம்புஞ் சேர்ந்த சீழ்வடிவமான ஊனவுடலே நாமெல்லாருங்காணச் சிவரூபமாயிற்றென்று தெளியாமல் இவ்வூனவுடலுக்கு இரைதேடி யுழன்று உலகிற்றடுமாறி மாயைவலைப்பட்டு அழுந்துகிற மககளைப் பார்கக மனம் பதைக்கின்றதே" என்று நூலாசிரியர் கடவுண்மாமுனிவர் தமது கூற்றாகக் கூறினார்.

தேவதேவனைத் திருவாதவூரர் அன்புருவத்தோடு கலந்தருளியதைக் கண்டவர்கள் கைகுவிதது வணங்கி மகிழ்ந்தார்கள். இவ்வற்புதம் நடந்ததும் பூதங்கள்நடித்தன கணநாதர்கள் புகழ்ந்தார்கள். தும்புருநாரதர் இன்னிசை பாடினார்கள். நான்கு வேதங்களுந் தாமே முழங்கின. தேவதுந்துபி யொலித்தன; தேவர்கள் பூமாரி பொழிந்தனர். எம்பெருமானுடைய ஞானநடனத்தைத் தெரிசித்துக்

கொண்டு எப்போதுஞ் சிவபூசைசெய்துகொண்டு புலியூரில் வசிக்குஞ்சிவனடியார்களெல்லாருந் திருவாசகத்தேனமுதருந்திக் களித்தனர். இத்திருவாதவூரடிகளுடைய திருவாசகங்களைப் படித்தவர்களும் கேட்டு மகிழ்ந்தவர்களும் புகழோடுஞ் சிவபோகத்தையடைவர்; பிறவிப்பிணியை வேறறக்களைந்து சிவலோகத்தை யெய்துவர்.

வாழ்க! வாழ்க!

## வாழ்த்து.

பூதலமாதும் வாழ்க பொன்மழை பொழிந்துவாழ்க<br>
வேதாகமமும் வாழ்க வேந்தர்செங்கோலும் வாழ்க<br>
நீதிலங்கெழுத்துநீறுஞ் சிவனடியாரும் வாழ்க<br>
வாதவூரிறை புராணம் படித்தவர் கேட்டோர் வாழ்க.

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாசகச் சிறப்புப் பாயிரம்.

[நேரிசை வெண்பா]

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

[பதவுரை] எல்லை மருவா - முடிவு பெறாத; நெறி அளிக்கும் - வீட்டின்ப நெறியைத் தருகின்ற; வாதவூர் எங்கோன் - திருவாதவூரின் கண்ணே பிறந்த எங்கள் தலைவனாகிய மாணிக்கவாசக அடிகள்; திருவாசகம் என்னுந் தேன் - (பாடியருளிய) திருவாசகம் என்று கூறப்பட்டதேன்; தொல்லை இரும்பிறவிச் சூழுந்தளை-உயிர்களுக்குத் தொன்று தொட்டு நிகழ்கின்ற எண்ணிறந்த பிறப்பு (இறப்புக்களை)ச் சேர்ந்து வருகின்ற மும்மலக்கட்டுகளையும்; நீக்கி-ஒழித்து; அல்லல் அறுத்து - உலகிலே பிறத்தற்கு ஏதுவாகிய ஐம்பலன் அந்தக்கரணங்களாலுண்டாகும் அறிவு அறியாமைகளை முற்றிலும் களைந்து (மெய்யுணர்வினைத்தந்து); ஆனந்தம் ஆக்கியது-பேரின்பத்தை உண்டாக்கியது.

[விளக்கவுரை] எல்லை மருவா நெறி என்பது நுகருந்தோறும் புதிது புதிதாய் விளைகின்ற முடிவில்லாத வீட்டின்ப நெறியை உணர்த்துகின்றது. பேரின்பம் ஒரெல்லைக்குளமையாது புதிது புதிதாய் விளைதலின் எல்லைமருவா நெறி என்றார்.

## திருவாசகச் சிறப்புப் பாயிரம்.

எம்கோன் - இச சிறப்புப் பாயிரப்பாட்டை இயற்றிய பெரி யார் தம்மோடு தம்மைப்போன்ற அடியார்களையும் உளப்படுத்தி, மாணிக்கவாசக அடிகள் சிவபெருமானால் அடிமையாக ஆட்கொள் ளப்பட்டுப் பேரின்ப மருளப்பெற்ற பெரியார் ஆதலின் அங்ஙனம் ஆட்கொள்ளப் பெறாத அடியார்கள் யாவரும் தாஙகள் சிவபெரு மானுககு அடிமைப் பொருளாயிருக்குமியல்பினை உணர்ந்து மாணிக்கவாசக அடிகளைத தஙகள் தலைவனாகக் கொண்டு வணஙகு தல் அவ்வடிகள் அடைந்த வீட்டின்ப நெறியை அடைதற்கு வழியா யிருத்தலைக் கருததில் வைத்து வாதவூர் "என்கோன்" என்று கூறாது வாதவூா "எம்கோன்" என்று கூறினார் இனிவரும் அடி யார்கள் யாவரும் உலகில் என்றும் நின்று மாணிககவாசக அடிகள் அருளிச செய்த திருவாசகததை ஓதி உய்வார்கள், ஆதலின் அளித்த வாதவூர் எஙகோன் திருவாசகம் என்று வருங்காலப் பொருள்படக்கூறினார். சிவபெருமானுக்கு ஆளாகாதவர்கள் ஆளா னாரை வழிபட்டு வீட்டின்பமடைதல் சைவசித்தாந்த மரபு. இந்த மரபைத் திருநாவுக்கரசு அடிகள் தமது தனிக் குறுந்தொகைத் தேவாரம் 3-வது பாட்டில் "ஆளாகார் ஆளானாரை அடைந்து உய் யார்" என்று இரங்கிக கூறியது காண்க. எல்லை மருவா நெறி யளிக்கும் வாதவூர் எங்கோன் திருவாசகம் என்றதனால், நூலை ஆக்கியோனுடைய பெயரும் நூற் சிறப்புங் கூறப்பட்டன. இத் துணைச் சிறப்புவாய்ந்த அடிகளாற் கூறப்பட்ட திருவாசக நூலா னது அதனை ஓதியுணரும் பக்குவாகளுக்கு தொல்லையிரும் பிறவிச் சூழுந்தளை நீக்கி அல்லலறுத்து ஆனந்தமாக்குதல் ஒருதலை என்பது வற்புறுத்திக் கூறப்பட்டது.

திருவாசகம் என்னுந் தேன் - திரு என்பது அருள்; அஃதா வது தன்னைச சேர்ந்தாரைப் பிணிக்குந் தகைமையுடையது. திரு வாசகம் என்பது அருள் விளஙகுஞ் சொற்களாலமைந்த நூலைக் குறிககிறது. அன்மொழித் தொகை. தேன் அதனை உணபவர் நாவிற்கு இனியசுவை தருவதாயும் அவரிடத்திலுள்ள நோய்ககு மருந்தாயும் உதவுதல் போலத திருவாசக நூலானது அதனை உள்ள வாறுணர்ந்து ஓதுபவற்கும், கேட்பவற்கும் இன்பம் தருவதாயும்,

அவர் பிறவிப் பிணிக்கு மருந்தாயும் இருத்தலால் திருவாசகம் தேனோடு உருவகஞ் செய்யப்பட்டது.

தொல்லை இரும் பிறவி - மும்மலங்கள் அநாதியா யுளவாதல் போல அவற்றைப் பற்றி உயிர்களுக்கு வரும் பிறவிகளும் தொன்று தொட்டு நிகழ்தலால் தொல்லைப் பிறவி என்றும், கடத்தற்கு அரிய தாயும் எண்ணிறந்ததாயு மிருத்தலால் இரும் பிறவி என்றுங் கூறினர்.

சூழுந்தளை - தளை என்பது கட்டு. அது இங்கே ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலக் கட்டுக்களையுங் குறிக்கிறது. பிறவி உள்ளவரையும் மும்மலக்கட்டுக்களும் உளவாதலின் பிறவி சூழுந்தளை என்றார். இந்தத் தளை, பிறப்பையும், இறப்பையும் சேர்ந்து வருதலால் பிறப்பினோடு இறப்பினையுஞ் சேர்த்து உரை கூறப்பட்டது.

அல்லல் அறுத்து - அல்லல் என்பது இங்கே ஆகுபெயராய் ஐம்புலன் அந்தக கரணங்களாலுண்டாகும் அறிவறியாமைகளைக் குறிக்கின்றது. இந்த அறிவு, அறியாமைகள் ஒருவனுக்குப் பிறவி களைக் கொடுத்தற்கு ஏதுக்களாயிருத்தலின் பேரின்ப மடைதற்கு அவை முற்றிலும் நீங்குதல் இன்றியமையாததாகும். மெய்ப் பொருளைச் சாராத அறிவு, அறியாமைகளை அறுத்தல் நிகழவே மெய்யுணர்வு உண்டாகும் என்பது போதரும். ஆதலால் அறிவு அறியாமைகளைக் களைந்து மெய்யுணர்வினைத்தந்து என்று பதவுரை செய்யப்பட்டது.

ஆனந்தம் ஆக்கியது - ஈற்றிலுள்ள ஏ, தேற்றப் பொருளில் வந்தது. இவ்வருள் நூல் அதன் பொருள் உணர்ந்து ஓதுபவர் களை ஆனந்தம் ஆக்குதல் இயல்பு ஆதலின் நிகழ்காலத்தாற் கூறற் பாலது, ஆனந்தம் ஆக்கியது என இறந்த காலத்தாற் கூறப்பட் டது. தொல்லையிரும் பிறவிச் சூழுந்தளை நீக்கலும், அல்லல் அறுத்தலும், ஆனந்தமாக்குதலும் ஒன்றுக்கொன்று முறையே ஏது வும் பயன்களுமாகக் கூறப்பட்டன.

## திருவாசகச் சிறப்புப் பாயிரம்.

இந்தச் சிறப்புப்பாயிரப் பாட்டில் எல்லை மருவா நெறியளிக் கும் வாதவூர் எங்கோன் என்றதனால் நூலை ஆக்கியோன் பெயரும், சிறப்பும், திருவாசகம் என்றதனால் நூலின் பெயரும், தொல்லை இரும்பிறவிச் சூழுந்தளை நீக்கி அல்லல் அறுத்து ஆனந்தமாக்கியதே என்றதனால் நூலை அதன் பொருளுணர்ந்தோதுதலினாலுண்டாகும் பயனும், வெளிப்படையாகக் கூறப்பட்டன. நூல் வழங்கும் நிலம் தமிழ் மொழிவழங்கும் நிலம் என்பதும் உலக இன்பத்தைக கான்ற சோறெனக் கழித்து வீட்டின்பம் அடைதலில் அவாமிக குடையாரே இந்த நூலை ஓதி முழுப்பயனை அடைதற்கு அதிகாரி கள் ஆவார் என்ற யாப்பும், வீட்டின்பம் முதலிய பொருள் என்ப தும் குறிப்பாற் பெறப்பட்டனவாகும். "அறிவறியாமை இரண்டு மகற்றிச, செறிவறிவாய் எங்கும் நின்ற சிவனைப், பிறிவறியாது பிரா னென்று பேணுங் குறியறியாதவர் கொள்ளறியாரே," என்று திரு மூலர் 2580-வது பாட்டில் இவ்வுண்மையைக் கூறியிருத்தல் காண்க. இந்தச சிறப்புப்பாயிரம் பாடியது யாவர் என்பது தெரிய வில்லை.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருசசிற்றம்பலம்.

திருப்பெருந்துறையில் அருளிய

# க. சிவபுராணம்.

---

சிவபுராணம் என்பது இருமொழிகளாலாகிய ஒரு சொற் றொடர். சிவம் என்ற தமிழ்ச்சொல் புராணம் என்ற வடமொழிச் சொல்லோடு புணர்ந்து, வடமொழி இலக்கண முடிபாகச் சிவபுரா ணம் என்றாயிற்று. சிவபுராணம் என்பது சிவனது அனாதி முறை மையான பழமை; அதாவது சிவபெருமான் உயிர்களை உய்வித்

தற் பொருட்டு பண்டைக்காலந் தொட்டு பேரருளால் இயற்றி வரும் செயல் முறைமை. இது இன்னிசைக் கலிவெண்பாவில் பாடப்பெற்றது.

[கலிவெண்பா]

திருச்சிற்றம்பலம்.

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க (1)
இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க (2)
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க. (3)

[ப-ரை] நமசசிவாய வாழ்க - நமச்சிவாய என்னும் இறைவனுடைய திருநாமம் உலகில் மக்களால் ஓதப்பட்டு அவர்கள் பேரின்ப நிலையடையும்படி என்றும் விளங்குக; நாதன்றாள் வாழ்க- எல்லா உயிர்களுக்கும் தலைவனுயிருக்கிற இறைவனது அருளாற்றல் அவற்றின் பிறவித்துன்பங் கெடும்படி உலகில் என்றும் விளங்குக; இமைப்பொழுதும் - கண்ணிமையானது மூடிவிழிக்கிற சிறிய நேரத்திலும்; என்னெஞ்சில் நீங்காது - என்னெஞ்சினை விட்டு நீங்காது எப்பொழுதும் ஒளியாய் விளஙகுகிற இறைவனது; தாள் வாழ்க - அருளாற்றல் உலகில் என்றும் விளங்குக; கோகழியாண்ட குருமணி - திருப்பெருந்துறைக்கு வந்து என்னை அடிமையாகக் கொண்டு ஆண்டருளிய மேலான அருட்குரவனது; தாள்வாழ்க- அருளாற்றல் உலகில் என்றும் விளங்குக.

[வி-ரை] நமச்சிவாய வாழ்க - நமசசிவாய என்பது இஙகே இறைவனுடைய திருநாமத்தைக் குறிககிறதல்லாமல், அதனை ஓதும் முறையில் நிற்கு முறைமை குறிககவில்லை. நமச்சிவாய என்பது நாமத்தைக் குறிக்கிற தென்பது திருஞான சம்பந்த அடிகள் தாம்பாடிய நமசசிவாயப் பதிகத்தில் "நாதன் நாமம்" என்றும், "நம்பன் நாமம்" என்றும், "நக்கன் நாமம்" என்றும், "நெற்றி நயனன் நாமம்" என்றும், "நந்தி நாமம்" என்றும், "வரதன் நாமம்" என்றும், கூறியிருத்தலாலும், திருநாவுக்கரசு அடிகள்" எந்தையார் திருநாமம் நமச்சிவாய என்று (6—93—10) பாட்டிற் கூறியிருத்தலாலும், அறிக. நமசிவாய வென்பதன்றி நமச்சிவாய என்பது

ஓது முறையாக தமிழ் மறை நூல்களில் கூறப்படவில்லை. ஓது முறையில் தூல அஞ்செழுத்து, சூக்கும அஞ்செழுத்து, அதி சூக்கும அஞ்செழுத்து என்று மூவகையாக திருமூலருடைய திருமந்திர நூலிற் கூறப்படுகின்றது. அஞ்செழுத்துக்களில் ஒவ்வொரு எழுத்தும் பொருள் குறிக்கும் சொல்லாகக் கருதப்படுகின்றதாகலின், நம:,சிவாய என்ற இரண்டு வடமொழிப் பதங்களாகப்பிரித்து அவை புணருங்கால் நமசிவாய என்றுகிறது என்பது பொருத்தமில்லை. அதனைத் தூல பஞ்சாக்கரம் என்று கொண்டாலும் சமயாசாரியார் மூவருடைய நமசிவாயப் பதிகங்களில், சூக்கும பஞ்சாக்கரத்தையும் ஓதுதலினால் உண்டாகும் பயனைக்கூறவில்லையென்று நாம் சொல்லவேண்டும். அவ்வாறு கூறுதல் நமசிவாயப்பாட்டுக்களின் பொருளுக்குச சிறிதும் பொருந்தாது. சிவஞான சுவாமிகள் காஞ்சிப்புராணத்தில் தம்மை ஆட்கொண்ட அருட்குரவர் வேலப்ப தேசிகருக்குத் தோத்திரமாக "எவ்வெவர் கோட்படு பொருளுமஞ்செழுத்தினடக் கியவற்றியல்பு காட்டி, மெய்வகை யஞ்சவத்தையினு நிற்கு முறையோதுமுறை விளங்கத்தேற்றி, யவ்வெழுத்தினுள்ளீடு மறிவித்துச் சிவபோகத் தழுத்தி நாயேன், செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப தேசிகன்றாள் சென்னிவைப்பாம்" என்று பாடிய பாட்டில் அஞ்செழுத்து, அஞ்சவத்தையில் நிற்கு முறையும், ஓதுமுறையும் அவை ஒவ்வொன்றின் உட்பொருளும் தெரித்துக் கூறப்பட்டிருத்தல் காணக. நமசிவாய என்பது இறைவனுடைய திருநாமம் ஆக சைவமக்களுககுப் பெயராக வழங்கப் படுகின்றது. திருவாவடுதுறை பஞ்சாக்கரதேசிகர்,நமசிவாய தேசிகர் தோத்திரப் பாட்டில் "குரு நமசிவாய தேவனை" என்று மேலே கூறிய வழக்கைப் பின்பற்றி, சிவஞான சுவாமிகள் கூறியிருத்தல் காணக. போற்றி ஓம் நமச்சிவாய என்னும் முதற் குறிப்புடைய (5 - 66) பாட்டின் நான்கு அடிகளிலும் வருகிற நமசிவாய எனபதை, நமசிவாய மூர்த்தி என்னும் பொருளில் சிவபெருமான் நாமமாக அடிகள் கூறியிருத்தல் காண்க. கூத்தப்பிரான் வலது திருவடியை நகரமாகவும், உதரம மகரமாகவும், தோள சிகரமாகவும், முகம் வகரமாகவும், யகரம் முடியாகவுங் கொணடு நடனஞ் செய்கின்றானென்று உண்மை விளக்கம் 32-வது பாட்டுக் கூறுகின்றது. அஞ்

செழுத்துக்களும் இறைவனுடைய திருவுருவமாக அமைதலால் அவை இறைவனுடைய திருநாமமாகக் கூறப்பட்டன. திருஞானசம்பந்த அடிகள் திருமுகப்பாசுரம் க-வது பாட்டில் உலகம் துயரினின்றும் நீங்குதற்காக அரனுமமே சூழ்க என்று பின் கூறிய பொருளேயே அடிகள் நமச்சிவாய வாழ்க என்று முன் கூறினர்.

திருஞான சம்பந்த அடிகளுக்கு அந்தணர் உபநயனச் சடங்கு செய்யும் பொழுது பஞ்சாக்கரப்பதிகம் அவராலே பாடப்பெற்றது. நமசிவாயப் பதிகமானது அவருடைய திருமண முடிவில் பேரொளி தோன்றி அதனுள் தமது மனைவியோடும், அடியார்களோடும், பிறரோடும் அவர் புகும்போது அவரால் பாடப்பெற்றது. சேக்கிழார் அடிகள், அவர் பஞ்சாக்கரப்பதிகம் பாடியதைப் பற்றி, திருஞானசம்பந்தர் புராணம் 266-வது பாட்டில் "முந்தை முதல் மந்திரங்கள் எல்லாந் தோன்றும் முதலாகும் முதல்வனுர் எழுத்தஞ்சென்பார் அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே" என்று பஞ்சாக்கரப்பதிகம் இரண்டாவது பாட்டைக் குறித்து, அஞ்செழுத்தை மந்திரங்களுக்கெல்லாம் தலைமையான மந்திரம் என்று கூறுகின்றார்கள். இந்தப் பஞ்சாக்கரப் பதிகத்தில் மூவகைப் பஞ்சாக்கரத்தையும் விதந்துகூறி ஓது முறை கூறவில்லை யென்றாலும், மூவ்வகைப் பஞ்சாக்கரமும் அஞ்செழுத்தாலாயது என்பது பொதுவாய் இருத்தலால் அதனை அவர் மந்திரமெனக் கூறினர். இந்த அஞ்செழுத்தில் சித்தாந்தங்கூறுகிற, பதி, பசு, பாச முப்பொருள்களின் உண்மையும், அம் முப்பொருள்கள் ஒன்றுக்கொன்று இயைந்து நிற்கும் தொடர்பும், பாசத் தொடர்பினுல் உயிருக்குப் பதியை யடைதற்குறுந்தடையும், பதித் தொடர்பினுல் உயிருக்கு உண்டாகும் பாசநீக்கமும், முத்திப்பேறுமாகிய உண்மைகளெல்லாம் அடங்கியிருக்கின்றன. சைவசமயத்திற்போல உலகிலுள்ள எந்தச் சமயத்திலாவது அஞ்செழுத்தில் அடங்கும்படியாக, அச்சமய உண்மைகளெல்லாம் கூறப்பட்டிருத்தலை நாம் காணமுடியாது. ஆனுல் சேக்கிழார் அடிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் கூறிய நமச்சிவாயப் பதிகத்தைக்கூறும் பொழுது அவர் புராணம் 1248-

வது பாட்டில் "ஞானமெய்நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம் என்ற சீர் நமச்சிவாயத் திருப்பதிகத்தை அங்கண் வானமும் நிலமுங்கேட்க அருள்செய்து" என நமச்சிவாயச் சொல் என்று கூறினரே யன்றி, நமச்சிவாய மந்திரமென்று கூறவில்லை. நமசிவாய என்று தூலபஞ்சாக்கரத்தைச் சொல்லலாமே யன்றி நமச சிவாய என்று சொல்லக்கூடாது. ஏனெனில் சகர வொற்றை இடையிலே சேர்ப்பதினாலே மந்திரத்தை ஓதுதலினால் உடலில் உண்டாகும் அசைவுகள் (Vibrations) வேறுபட்டு அவ்வேறு பாட்டாற் பயனும் வேறுபடும்.

இறைவனுக்கு; உலகர் பொருட்டு பொது இயல்பு நிலையும், சத்திநிபாதர் பொருட்டு சிறப்பியல்பு நிலையுமுள்ளன. பக்குவம் நோக்கி உயிர்களுக்கு அருள் செய்யும் இறைவனது நாமம் இரு பகுதிப் படுதலால் அவனுடைய திருநாமமும், பொது இயல்பு நிலையைக் குறிக்கும் "நம" என்னும் பகுதியாகவும், சிறப்பியல்பு நிலையைக் குறிகும் "சிவாய" என்னும் பகுதியாகவும் பிரித்து ஆன்றோர்களாற் பேசப்படுகின்றது. நம என்னும் பகுதி, சிவாய என்னும் பகுதியோடு சேரும்பொழுது தமிழ் இலக்கண விதிப்படி நமச்சிவாய என்றாகியது. போற்றி ஓம் நமசிவாய (5-66) பாட்டில் மாணிக்கவாசக அடிகள், பிரணவ மூர்த்தி யென்றும், நமசிவாய மூர்த்தி யென்றும் பொருள்படும், ஓம் நமசிவாய என்று இறைவனை விளித்துக் கூறுதலையும்,(38-10)பாட்டில் நான் உன்னுடைய சூக்கும பஞ்சாக்கர மந்திரத்தை ஓதப்பெற்றதினாலே தவஞ்செய்தவனானேன் என்று பொருள்படும்படி "நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்" என்று கூறி ஓதுமுறையைக் குறித்தலையும் நோக்குக. பஞ்சாக்கரப் பதிகத்தையும், நமசிவாயப் பதிகத்தையும் பாடிய திருஞான சம்பந்த அடிகள் நமச்சிவாயப் பதிகத்தில் "இறைவன் நாமம் நமச்சிவாயவே" என்று பத்து இடங்களிற் கூறியிருக்கின்றாரே யன்றி, நமச்சிவாய மந்திரம் என்று ஓரிடத்திலாவது கூறவில்லை. அவர் பஞ்சாக்கரப்பதிகத்தில் இறைவன் நாமம் அஞ்செழுத்து என்று கூறாமல் இரண்டாவது பாட்டில்

"செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே" என்று கூறியிருத்தலையும் நோக்குக.

நாதன்தாள் வாழ்க - நாதன் என்பது இறைவன் நாதமாகிய சிவதத்துவத்தில் ஒளியாயும், ஒலியாயும் விளங்குதலைக் குறிக்கின்றது. இந்த நாததத்துவம், விந்துவாகிய சத்திதத்துவத்துடன், பிறதத்துவங்களிலெல்லாம் நிறைந்து அவற்றை இயக்குதலால் நாதனென்ற சொல் தலைவனென்ற பொருளில் வந்தது. தாள் என்பது இறைவனது திருவடி; அது அருட்சத்தியைக் குறிக்கிறது. "தொலையா அரனடி தோன்று மஞ்சத்தி" என்று திருமூலர், திருமந்திரம் 2321-வது பாட்டில் கூறியிருத்தல் காணக.

இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க- இது மும்மல இருள் முற்றிலும் நீங்கி அருளொளி மயமாய் விளங்கும் அடிகளுடைய சிவமாஞ் சிந்தையைக்குறிக்கிறது. இந்தச சிந்தை எப்பொழுதும் நினைப்பும், மறப்பும் இன்றி, சிவனையே சிந்தித்துக் கொண்டிருக்குஞ் சிந்தை. கோகழியாண்ட குருமணி தன்தாள் வாழ்க - கோ-பெரிய, கழி-துறை, அதாவது திருப்பெருந் துறையைக் குறிககிறது. குருமணி என்பது குரவாகளுக்கெல்லாம் சிறப்பான குரவனென்பதைக குறிக்கின்றது.

திருச்சிற்றம்பலம்.

---

தில்லையில் அருளிய

# உ. கீர்த்தித் திருவகவல்.

கீர்ததித் திருவகவல் என்ற சொற்றொடர் திரு, கீர்த்தி, அகவல், என்ற மூன்று சொற்களாலாகிய ஒரு சொற்றொடர். கீர்த்தியென்பது சிவபெருமான் உயிர்களுய்யும் பொருட்டு இடையறாது நிகழ்த்தி வரும் அருட்செயலைப் பற்றிய புகழாகும். அகவல், என்பது நான்கு பாவினுள்ளொன்று. இது நிலைமண்டில வாசிரியப்பா.

இது முதலிலிருந்து முடிவு வரை ஒவ்வொரு அடியும் நான்கு சீரோடு நடப்பது. திருக்கீர்த்தி அகவல் என்று வரும் சொற்றொடர் ஒலியினிமைக்காகக் கீர்த்தித் திருவகவல் என வைத்துக் கூறப் பட்டது. திருக்கீர்த்தி அகவல் அருள் விளங்கு பாடலானதினால் திரு, என்று முன்னர் சேர்க்கப்பட்டது.

[நிலைமண்டில ஆசிரியப்பா]
திருச்சிற்றம்பலம்.

எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத் (95)
தானே யாகிய தயாபர னெம்மிறை (96)

[ப-ரை] எவ்வெவர் தன்மையும்-உலகில் வாழும் மக்கள் கட்டு நிலையில், யார்யார், எந்த எந்தக் குணங்களின் வயப்பட்டுத் தன் கருத் துக்கு மாறாக ஒழுகும் பொழுது தானும் அவர்களேயாய் அவர்க ளோடு ஒற்றுமைப்பட்டு இயக்கி அறிவித்த போதிலும் (அவர்களை யெல்லாம் அவ்வவர்களுக்குத் தக்கவாறு ஒறுத்துத் திருத்தி); தன்வயிற்படுத்து - முடிவின் கண்ணுள்ள வீட்டு நிலையில் அவர்களை யெல்லாம் வீட்டின்பம் அடைவிக்கும் தன் கருத்துக்கு இணங்க ஒழுகும்படி செய்யும்; தானேயாகிய - அவர்களின் வேறாகிய தன் னியல்புடையவனாகவல்ல பேராற்றலை யுடையவனாகிய; தயாபரன்- மேலான பேரருட் குணமுடைய வனாயுள்ள; எம்மிறை - அடியார் களாகிய எங்களுடைய தலைவன்.

[வி-ரை] தயாபரன் - மேலான அருளையுடையவன். இந்த இரண்டுவரிகளும் மக்கள் தங்கள் கட்டு நிலைமைக்குரிய உலக வாழ் வில் தாங்கள் படிமுறையில் இன்ப நலமடையும்படியாக அமைக் கப் பட்டிருக்கிற இறைவன் அமைப்பை யறிந்து, அதன் வழியில் ஒழுகி, அதனால், தஙகள வேட்கை, அறிவு, செயல்கள் மலமறைப்பு நீங்கப்பெற்று திருந்தாதிருக்கும் படியாகத தீவினைகளைச செய்து ஒழுகும்பொழுது, அவர்களோடு தானும் இணங்கி அவர்களே யாயிருந்து பின் அத்தீவினைகளைத்தக வொறுத்து அறிவித்து,

அவ்வொறுப்பின் பயனாக அவர்கள் திருந்தித் தன் வழியில் ஒழு கும்படி செய்தபின், அவர்கள் தன்னைத்தொடர்ந்து தன் வழியில் ஒழுக வீட்டுநிலையில் பேரின்பத்தை யடையச் செய்ய வல்ல பேராற்றலுடைய பேரருளாளனாய் எங்கள் தலைவனாகிய சிவபெரு மான் இருக்கின்றானென்னும் சைவசித்தாந்த உண்மையை உணர்த்துகின்றன. இந்த சைவசித்தாந்தக் கருத்தை இருபா இரு பஃது 18-வது பாட்டில் எட்டாவது அடிமுதல் முடிவு வரையிலுங் கூறியிருத்தல் காண்க.

திருச்சிற்றம்பலம்.

---

தில்லையில் அருளிய

# ங. திருவண்டப் பகுதி.

---

திருவண்டப் பகுதி என்ற சொற்றொடர் திரு, அண்டம், பகுதி என்ற மூன்று சொற்களாலாகிய ஒரு சொற்றொடர். அண் டப்பகுதி என்பது அண்டத்தினது பகுதி என்று விரியும். அண் டம் என்பது உலகம், பகுதி என்பது பகுக்கப்பட்ட பிரிவுகள். இந்தப் பாட்டு அண்டப் பகுதி என்று தொடங்குதலால் அச்சொற் றொடரோடு திரு என்பதைச் சேர்த்து திருவண்டப் பகுதி என்ற பெயரால் வழங்கப்படுகின்றது. இது தமிழ் நூல் வழக்கு. எல்லாம் வல்ல சிவபெருமான் மக்களாகிய நாம் காணும் பெரிய பொருள்கள் எல்லாவற்றிலும் எண்ணில் மடங்கு மிகப் பெரியதாயும் சிறிய பொருள்கள் எல்லாவற்றிலும் எண்ணில் மடங்கு சிறியதாயும் விளங் கும் பேராற்றலை இப்பாட்டு வியந்து கூறுகின்றது. இந்தப் பாட்டு இணைக் குறளாசிரியப்பாவாலாயது. இணைக்குறளாசிரியப்பா வென் பது முதலடியும், கடையடியும் நான்கு சீர்களாலும் மற்றைய அடி கள் நான்கிற்கு மேற்பட்ட ஐந்து சீர்களாலும், நான்கிற்குக் கீழ்ப் பட்ட மற்றைய சீர்களாலும் நடக்குந் திறமை பெற்றது.

[இணைக்குற ளாசிரியப்பா]
திருச்சிற்றம்பலம்.

சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க (40)
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க (41)
பத்தி வலையிற் படுவோன் காண்க (42)
ஒருவ னென்னு மொருவன் காண்க (43)

[ப-ரை] சொற் பதங் கடந்த - [இறைவன்] சொல்லுலகத்துக்கும் பொருளுலகத்துக்கும் எட்டாதிருக்கின்ற; தொல்லோன் காண்க - பழமையா யிருக்கிறவ னென்று அறிக; சித்தமுஞ் செல்லா சேட்சியன் காண்க - மனத்தால் நினைத்தற்கு மெட்டாத தூரத்திற்கப்பாற் பட்டவனென்று அறிக; பத்தி வலையிற் படுவோன் காண்க - [அங்ஙனம் சொற்பதங் கடந்தவனாகவும் மனத்திற் கெட்டாதவனாயு மிருப்பினும்] உண்மையன்பர்களுக்கு அவர்கள் தாங்கள் நினைத்தவாறு எளிதிற் றோன்றி அருள் செய்கிறவனென்று அறிக; ஒருவன் என்னும் - உலகிற்கெல்லாம் ஒரு முழுமுதற் கடவுள் என்று சொல்லப்படும்; ஒருவன் காண்க - ஒப்பற்றவனென்று அறிக.

[வி-ரை] சொற்பதங் கடந்த தொல்லோன் - சொல்லும் பதமும் உம்மைத் தொகை. சொல்லென்பது சொல்லுலகத்தையும் பதம் என்பது பொருளுலகத்தையும் உணர்த்துகின்றன. என்றும் உள்ள இயல்பு பற்றிக் கடக்கின்ற என்னற்பாலது, கடந்த என இறந்த காலத்தாற் கூறப்பட்டது. முன்னைப் பழம் பொருட்கும் பழம் பொருளோனாதலின் தொல்லோன் என்றார். அவனுக்கு முற்பட்டவர் ஒருவரும் இல்லை யென்பது கருத்து. சொல்லுலகமும் பொருளுலகமுஞ் சேர்ந்து பாச ஞானம் [கருவியறிவு] ஆதலின் இறைவன் பாச ஞானத்தா லறியப்படாதவ னென்பது இதனாற் கூறப் பெற்றது. சொல்லும் பொருளுமிறந்த சுடரை என்று அடிகள் கூறுதல் காண்க (27–4). சித்தமுஞ் செல்லாச சேட்சியன் காண்க - இதனாலே இறைவன் பசு ஞானத்தா லறியப்படாதவன் என்பது கூறப்பெற்றது. சேட்சி என்பது சேய்மை=தூரம். பத்தி

வலையிற் படுவோன் காண்க - இது ஏகதேச உருவகம். வேடர்கள் கையினுற் பிடிப்பதற்கு அகப்படாமல் ஓடித்திரிகின்ற மானை, அது ஓடுகின்ற வழியில் ஓர் வலையை விரித்து அதனுள் அகப்படுத்தி எளிமையிற் பிடிப்பதுபோல, மெய்யன்பர்கள் பாச ஞானத்துக்கும் பசு ஞானத்துக்கும் எட்டாதிருக்கின்ற இறைவனைத் தாங்கள் செய்யும் மெய்யன்பினுள் அகப்படுத்தி உள்ளத்தில் உணர்வினுலறியும் எளிமையை யுடையவன் என்று இவ்வுருவகத்திலுள்ள உவமையும், உவமப் பொருளும் விரியும். இதனுலே இறைவன் பதி ஞானத்தினுலே மட்டும் அறியப்படுவ னென்பது கூறப்பட்டது. ஒருவன் என்னும் ஒருவன் காண்க - இதில் முதலாவது ஒருவன் என்பது அவன் இவ்வுலகிலுள்ள எல்லாச் சமயங்களுக்கும் ஒரே கடவுளாய் இருக்கின்றுனென்பதைக் குறிக்கிறது. இரண்டாவது ஒருவன் என்பது இறைவனது தனிமையான முழுமுதற் றன்மையைக் குறிக்கிறது. "உலகிற் கொருவனுய் நின்றுய் நீயே" என்று (6—38—1) பாட்டில் கூறியிருத்தல் காண்க. என்னும் என்பது செயப்பாட்டு வினையில் வந்தது. இந்நான்கு வரிகளாலும் சிவபெருமான் உலகிலுள்ள சமயங்களுக் கெல்லாம் தலைவனு யிருக்கின்ற முழுமுதற் றன்மையையுடைய ஒருவன் என்பதும், அவன் பாசஞானம், பசு ஞானங்களா லறியப்படாதவ னென்பதும் உயிர் அவனோடு அத்துவிதமாய் ஒற்றித்து நின்று உணரும் பதி ஞானத்தினுல் மட்டும் அறியப்படுகிற வனென்பதுங் கூறப்பட்டன.

திருச்சிற்றம்பலம்.

---

தில்லையில் அருளிய

## ௪. போற்றித் திருவகவல்.

---

போற்றித் திருவகவல் என்ற சொற்றொடர் திரு, போற்றி, அகவல் என்ற மூன்று சொற்களாலாகிய ஒரு சொற்றொடர். திரு என்பது அடை மொழி. போற்றி என்பது வணக்கம் என்று பொருள்

தருகிற தொழிற் பெயர். அகவல் என்பது அகவற்பா. இது நிலை மண்டில வாசிரியப்பாவைச் சேர்ந்தது. போற்றி யகவல் என்ற சொற்றொடர் சிவபெருமானுக்கு வணக்கம் சொல்லி யேத்துகிற அகவற்பா என்று பொருள்படும்.

[நிலை மண்டில ஆசிரியப்பா]

திருச்சிற்றம்பலம்.

தென்னா டுடைய சிவனே போற்றி (164)
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி (165)

[ப-ரை] தென்னாடுடைய சிவனே போற்றி - தென்தமிழ் நாடாகிய பாண்டிய நாட்டில் (மலையத்துவசபாண்டிய மன்னன் மகளை மணம் புரிந்து சோமசுந்தர பாண்டியனாக) அரசுரிமை பூண்ட சிவனே உனக்கு வணக்கம்; எந்நாட்டவர்க்கும் - பாண்டிய நாட்டிலுள்ள சைவசமயத்தார்க்கும், பிறசமயத்தார்க்கும் மட்டுமல்லாமல் பிறநாடுகளிலுள்ள எல்லாச் சமயத்தார்க்கும்; இறைவாபோற்றி-முழு முதற்றலைவனாயுள்ள கடவுளா யிருப்பவனே உனக்கு வணக்கம்.

[வி-ரை] தென்னாடென்ப திங்கே தமிழ்நாட்டின் தெற்கேயுள்ள பாண்டிய நாட்டைக் குறிக்கிறது. பாண்டிய நாடு தென் தமிழ் நாடென்றும், சேரநாடு மேற்றமிழ் நாடென்றும், சோழநாடு வட தமிழ் நாடென்றும் கூறப்படும். உடைய என்பதனாலே சிவ பெருமான் மலையத்துவசபாண்டியன் மகளாகிய தடாதகைப் பிராட்டியாரை மணந்து பாண்டிய நாட்டரசுரிமை பூண்டது குறிக்கப்படுகிறது. சிவன் என்பதற்கு செம்மையன் என்பது பொருள். "செம்மையாகுஞ் சிவன்" என்று திருஞான சம்பந்த சுவாமிகள் (2–86–9) தேவாரப்பாட்டில் கூறியருளியதைக் காண்க. செம்மை என்பது சிவப்பு, நேர்மை, இயல்பு, நடுவு நிலைமை முதலிய பல பொருள்கள் குறிக்கும் ஒரு சொல். செவ்வான் என்று கூறப்படுகிற திருச்சிற்றம்பலமாகிய ஞானாகாசம் சிவப்பு நிறமாயிருத்தலால் செம்மை நிறமானது நேர்மை யென்ற பொருளிலும், சிவப்பு என்ற

பொருளிலும் வந்தது. "ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடிடும் செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம்" என்று திருமூலர் திருமந்திரம் 130-வது பாட்டில் கூறுதலினாலே தூவெளியான ஞானாகாசமானது சிவப்புநிறமாயிருக்கிறதென்பதை நாமறிகிறோம். இந்தச் செவ்வானாகிய ஞானாகாசமானது 36 தத்துவங்களாலாகிய உலகில், எங்கும் ஊடுருவி நிறைந்திருப்பதினாலே தான் உலகில் இறைவனுடைய சத்தி இயற்கையாக எங்கும் விளங்குகிறது. திருநாவுக்கரசு அடிகள் சிவன் செம்மையனா யிருக்கிறானென்று பொருள்பட " சிந்தையுட் சிவமாய் நின்ற செம்மையோடு" என்று (5–48-5) பாட்டில் கூறியருளினர். செம்மையென்றும், செவ்வை என்றும் தமிழ் மறை நூல்கள் கூறுகின்றன. மகரமானது மேலுதடும் கீழுதடும் பொருந்தப் பிறத்தலாலும், வகரமானது மேல்வாய்ப் பல்லும் கீழுதடும் பொருந்தப் பிறத்தலாலும் ஒலிக்கும் முறை பற்றி இரண்டு எழுத்துக்களும் பெரும்பான்மையும் ஒற்றுமையுடையது. ஆதலின் செம்மை என்ற சொல் செவ்வை என்றும் தமிழ் நூல்களில் வேற்றுமையின்றிக் கூறப்படுகின்றது. அவ்வாறே அம்மை, மீசை, மிஞ்சு என்ற சொற்களும் முறையே அவ்வை, வீசை, விஞ்சு என்று வேற்றுமையின்றிக் கூறப்படுகின்றன. மகரமும், வகரமும் செய்யுள் மோனைக்கு இனவெழுத்துக்களாய் வருகின்றன. இகரமும், எகரமும் ஒலிக்கும் முறைபற்றி பெரும்பான்மையும் ஒற்றுமையுடையது. நியமனம் - நேமனம் என்றும், சிவப்பு-செவப்பு என்றும், வியர்வை- வேர்வை என்றும், திசை-தெசை என்றும் வேற்றுமை யின்றிக் கூறப்படுகின்றன. செம்மை என்னும் பண்புப் பெயரில் 'மை' ஈறு கெட்டு செம் என நின்று மேலேகூறிய முறைப்படி செம் என்றது சிவ் என்றாகி அதனோடு அன் விகுதி சேர்ந்து சிவன் என்று ஆயது. சிவபெருமான் என்ற கடவுட் பெயர் செம்பெருமான் என்றும் திருவாசகத்தில் (19 - 1), (28 - 2) பாட்டுக்களிலும், சிவபிரான் என்பது செம்பிரான் என்று திருவாசகம் (5 - 71) பாட்டிலும், திருமந்திரம் 2094 பாட்டிலும் வருதலால் அறிந்து கொள்க. இந்தச் சிவனெனும் திருநாமம் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானுக்கே உரியதாதலின்

திருநாவுக்கரசு அடிகள் "சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம் மேனி யெம்மான்" என்று (4 - 113 - 9) பாட்டில் கூறியருளி யதைக்காண்க. பண்டைத் தமிழர் செம்மை என்னும் அடை மொழியோடு தாம் வழிபடும் கடவுளுக்கும, தாம் வாழும் நாட்டுக் கும், தாம் பேசும் மொழிக்கும், தாம் அனுட்டித்த சமயத்திற்கும் முறையே செம்பெருமான் அல்லது சிவபெருமான் என்றும், செந் தமிழ் நாடென்றும், செந்தமிழ் என்றும், செந்நெறி என்றும் பெய ரிட்டு வழங்கி வந்தனர். ஒருவன் தான் இன்பமடைதல் போல பிற உயிர்களையும் இன்பமடைய விரும்பியும், எண்ணியும், செய் தும் ஒழுகும் செம்மையே அன்பாதலின் செம்மை என்ற சொல் அன்பு என்ற பொருளிலும் வழங்கப்பட்டு வருகிறது. அன்பினில் விளைவது இன்பமாதலின் செம்மை என்ற சொல் இன்பம் என்ற பொருளிலும் வழங்கப்பட்டு வருகிறது. ஆகவே செம்மையன் என்று பொருள் படும் சிவன் என்ற சொல்லை உயிர்களிடத்தில் அன்புடையவனென்ற பொருளில் அன்பனும். உயிர்களுககு இன் பம் அருளுகின்றவன் என்ற பொருளில் இன்பனும் ஆகின்றான். சைவசமயக்கடவுள் எந்நாட்டு மக்களிடத்தும் அன்புடையவனும் இன்பஞ்செய்கின்றவனுதலின் அவனை அடிகள் சிவனே என்றார். அத்தகைய சிவன் உலகில் உள்ள உயிர்களெல்லாம் இன்பம் அடை யும் பொருட்டு இந்தியாவின்வடபாகத்திலுள்ள இமயமலையில் உள்ள கயிலையில் பிரளயாகலரில் மேலான பககுவம் அடைந்த சீகண்ட பரமசிவனை அதிட்டித்து நின்று ஆட்சிசெய்து வருகின்றார். ஆத லால் உலகிலுள்ள எல்லா நாடுகளிலும் இந்திய நாடு சிறந்தது. சிவ னுடைய அருள்பெற்று மும்மலப் பிணிப்பினின்றும் நீங்கிய பல அருட் பெரியார்கள் இருத்தலாலும் இந்தியா நாடு சிறந்தது. எச் சமயத்துடனும் பிணககு செய்யாது எந்தெந்தச் சமயம் எந்தெந்த அறிவு நிலையிலுள்ள கடவுளரை வழிபடும் தெய்வமாகக் கொள் ளுமோ, அந்தந்தத் தெய்வத்தை யதிட்டித்து நின்று, அவ்வச் சமயத் தார்க்கு அருள் புரியும் சிவனை முழுமுதற கடவுளாகக் கொள்ளுகிற சைவசமயத்திற்கு, இரண்டாயிர மாண்டுகளுக் குட்பட்ட காலத் துக்குள் ஆசிரியராகத் தோன்றிய நாடு,சேர,சோழ, பாண்டியநாடுகள்

அடங்கிய தென்தமிழ் நாடாதலின் அத்தென் தமிழ்நாடு இந்தியா வின் சிறந்த பகுதி ஆகிறது. சைவ சமயாசாரியர் உள்பட நாயன் மார்களும், திருமால் அருள்பெற்ற ஆழ்வார்களும் பிறந்த இடம் அதுவே. பஞ்சபூதத்தலங்களும் கூத்தப்பெருமான் நடனமிடுகிற ஐந்து சபைகளும் அங்கே இருக்கின்றன. உலகெலாமீன்றவளா கிய உமாதேவியாரே மலையத்துவசன் மகளாக மதுரையில் யாக குண்டத்திற் பிறந்து சீகண்ட பரமசிவமாகிய சோமசுந்தரக்கட வுளைத் திருமணஞ் செய்து அரசாண்ட நாடு பாண்டி நாடாதலால் அப்பாண்டி நாடு தென் தமிழ் நாட்டிற் சிறந்த இடமாகும். அவ் வாறு இறைவனே மக்களுக்குள் ஒருவனாய் வந்து ஒரு காலத்தில் பாண்டிய நாட்டை ஆண்டு அரசுசெய்தலால் இறைவனை அடிகள் (36–3, 4, 5, 9) பாட்டுக்களில் முறையே, பரிமேற்கொண்ட பாண் டியனார் என்றும், தென்னன் நன்னாட்டிறைவன் என்றும், பாண் டிப்பிரான் என்றும், பரம்பாண்டியனார் என்றும் முறையே கூறி யிருத்தல் காண்க. முற்காலத்தில் கி பி. 2-வது நூற்றாண்டு வரை கடைச்சங்மாகிய மூன்றாவது தமிழ்ச்சங்கத்தில் தமிழ்ப் புலவர்க ளிருந்து திருக்குறள் முதலிய சிறப்பான தமிழ் நூல்களை ஆராய்ந்து அரங்கேற்றிய இடம் பாண்டி நாட்டின் தலைநகரமான மதுரை நகர மாகும். இறைவனது அருள்விளக்க நிகழ்ச்சிகளாகிய 64 திருவிளை யாடல்களையும் காணப்பெற்றது அந்நகரமே. கடைத்தமிழ்ச்சங்கம் இருந்த இடம் மதுரையாகும். தலைவனாவான், தான தலைவனாயி ருக்கும் எல்லா வுயிர்களுக்கும் இயல்பாகவே இன்பஞ்செய்கின்ற வனாதலாலும், சைவ சமயக் கடவுளாகிய சிவன் மேலேகூறியபடி அவரவர் அறிவுக்குத் தக்கவாறு எந்நாட்டிலுள்ள எச்சமயத்தினுள் ளார்க்கும், பிறவுயிர்களுக்கும் இனபஞ் செய்கின்றவன். பொதிய மலையில் அகத்திய முனிவர் தங்கியிருத்தலாலும் பாண்டிய நாடு சிறந்தது. இத்தகைய அருட்சிறப்புடையதாய் விளங்கும் நாடு பாண் டியநாடு ஆதலால் அடிகள் 'தென்னாடுடைய சிவனே போற்றி'என று ஏத்தியபின,'எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' யென்று வியந்து கூறியருளினார். அடிகளே இப்பாண்டி நாட்டைப் பிற இடங்களிலும் (2—118) "பாண்டி நாடே பழம்பதியாகவும்" என்றும், (8—10)

'தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டானை' என்றும், (8-11) 'தென்பாண்டி நாட்டைச் சிவலோகம்ஆக்குவித்த' என்றும் பாண்டி நாட்டைச் சிறப்பித்துப் பாடியருளினர்.

மேலே கூறப்பட்ட நான்கு அகவலுள் முதலாவது அகவலாகிய சிவபுராணம் என்பது அதன்கீழ்க் குறிக்கப்பட்ட ஞானப்பொருளாகிய சிவனது அனாதி முறைமையான பழமை என்பதையும், இரண்டாவது அகவலாகிய கீர்த்தித் திருவகவல் அதன்கீழ்க் குறிக்கப்பட்ட ஞானப் பொருளாகிய சிவனது திருவருட் புகழ்ச்சி முறைமையையும், மூன்றாவது அகவலாகிய திருவண்டப் பகுதி அதன கீழ்க் குறிக்கப்பட்ட ஞானப்பொருளாகிய சிவனது தூல சூக்குமத்தை வியந்தது என்பதையும் நேரே குறிக்கின்றன. ஆதலின் மூன்று தலைப்புக்களுக்கும் எழுதப்பட்டிருக்கிற விளக்கவுரை அவற்றின்கீழே யுள்ள ஞானப் பொருள்களுக்கும் பொருந்தும் உரையாகக் கொள்க. (அங்கே எழுதப்படாமல் விட்டுப்போன நானகாவது அகவலின ஞானப்பொருளாகிய சகத்தின் உற்பத்தி எனபதற்கு விளக்கவுரை இங்கே கூறப்பட்டிருக்கிறது). சகத்தின் உற்பத்தி என்ற சொற்றொடர் சகம் என்ற வடமொழிச சொல்லோடு உற்பத்தி என்ற வடமொழிச்சொல் புணரும்பொழுது அவற்றிற்கிடையிலே அத்து, இன் சாரியைகள் தோன்றி சகத்தின் உற்பத்தி என்றாகியது. சகம் என்பது உயிரில் உலகத்தையும், உயிர் உலகத்தையும் குறிக்கும். சகத்தின உற்பத்தி என்பது சகத்தினது உற்பததி என விரியும். உற்பத்தி என்பது படைப்பு (creation). இனம் பற்றி இறைவனுடைய ஐந்தொழில்களில் எஞ்சி நிற்பனவாகிய காப்பு, அழிப்பு, மறைப்பு, அருளலாகிய நான்கு தொழில்களும் உடன்கொள்ளப்படும். படைப்பு, காப்பு, அழிப்பு மூனறும் இறைவனால் மாயையிற் செய்யப்படும் தொழில்கள். மறைப்பும், அருளலும் இறைவனால் உயிரினிடம் செய்யப்படும் தொழில்கள். மறைப்பைக் காப்பிலும் அருளலை அழிப்பிலும் அடக்கி மூன்று தொழில்களாகக் கூறப்படுதலுமுண்டு ஆகவே இறைவன் ஓரறிவு முதல் ஆறறிவுவரையுள்ள எல்லா உயிர்களையும் எண்ணில்லாத பிறவிகளிற்பிறந்தி

றந்து உழன்று வாழும்படி செய்து அவ்வாழ்வின் அனுபவப்பய னாக முடிவில் பேரின்பமடைவித்தல் சகத்தின் உற்பத்தி என்ற தனூற்போந்த பொருளாகும். இது பொருளென்பது இவ்வகவல் 11-வது வரிமுதல் 87-வது வரிவரை கூறப்பட்ட கருத்துக்களால் விளங்கும். இங்ஙனம் உயிர்கள் உலகவாழ்வில் எண்ணில்லாத பல துன்பங்களை யடைதலால் அத்துன்பங்களினின்றும் காக்கும்படி அடிகள் தம் பொருட்டும், பிறவுயிர்கள் பொருட்டும் 87-வது வரி முதல் இறுதி வரையிலும் 'போற்றி போற்றி' என்று கூறி இறை வனை வணங்குகின்றார். இவ்வாறு இவ்வகவலில் மிகுதியான பகுதி இறைவனுக்குப் போற்றி என்று கூறப்படுதலால் இவ்வகவல் போற்றித் திருவகவல் என்று கூறப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# ரு. திருச்சதகம்.

---

சதகம் என்ற வடமொழிச்சொல் நூறு என்று பொருள்படும் சதம் என்ற சொல்லிலிருந்து உண்டாகியது. சதகம் என்ற சொல் நூறு பாட்டுக்களாலாகிய தொகுதியைக் குறிக்கிறது. சதகம் என்ற சொல்லின்முன், அருள் என்று பொருள்படும் திரு என்ற தமிழ்ச் சொல்லைச்சேர்த்து அருள் விளங்கும் பாடல்கள் என்பதை உணர் த்தத்திருச்சதகம் எனப்பட்டது. இவ்வாறே இந்நூலிலுள்ள வேறு பல அருட்பாடல்களுக்கும், திரு என்ற சொல்லை முன்னே வைத்து திருத்தெள்ளேணம், திருச்சாழல் முதலிய பல அருட்பாடல்களும் கூறப்பட்டிருக்கின்றன. சதகம் 96 பிரபந்தங்களிலொன்று கடவுள் மாமுனிவர் இயற்றிய திருவாதவூரடிகள் புராணம் 369வது பாட்டு கூறுகிறபடி "மன்னிய நிலத்திலுள்ளார் வல்வினைப்பிறவி மாள" அடிகள் இந்த நூறு பாட்டுக்களையும் பாடியருளினார்.

## பத்திவைராக்கிய விசித்திரம்.

பத்திவைராக்கிய விசித்திரம் என்ற கூட்டுச்சொல் பத்தி, வைராக்கியம், விசித்திரம் என்னும் மூன்று வடமொழிச் சொற்களாலாகியது. பத்தி என்பது இங்கே இறைவனிடத்தில் மக்கள் வைக்கும் மெய்யன்பு அல்லது பேரன்பையும், வைராக்கியம் என்பது உலக வாழ்வில் வெறுப்பையும், விசித்திரம் என்பது பலவகை நிறத்தையும் (Variegated Colours) குறிக்கும். பலவகை நிறம் என்பது இங்கே மக்கள் இறைவனிடத்தில் வைக்கும் மெய்யன்பு காரணமாக அவர்களிடத்தில் விளங்குகிற பலவகை அருட்குணங்களை உணர்த்தும். மக்களுயிர்களுக்கு இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் ஆகிய இவை அவர்களறிவிலுண்டாகிற பக்குவம் வந்தபொழுது என்றும் மாறாத நிலையான பேரின்பத்தை அருளுகின்ற இறைவனிடத்தில் பற்றுதலாகிய மெய்யன்புண்டாகும். மெய்யன்புண்டாகவே அவர்களுக்குப் பற்றின்மையாகிய வெறுப்புண்டாகும். அவர்களுக்கு உலக வாழ்வில் பற்றில்லாது போகவே இறைவனுடைய அருட்குணங்கள் உயிர்களிடத்திலே பதியும். பத்திவைராக்கிய விசித்திரம என்ற சொற்றொடர் பத்தி காரணமாக வைராக்கியத்தினுலுண்டாகிற விசித்திரம் என விரியும். ஆகவே அச்சொற்றொடர் பக்குவப்பட்ட அடியார்களால் இறைவனிடத்து வைக்கப்பட்டுள்ள மெய்யன்பு காரணமாக அவர்களுக்கு உலக விடயங்களிலுண்டாகும் வெறுப்புப்பற்றி அவ்வடியார்களிடம் விளங்குவதாகிய பலவகை அருட்குணங்களென்று பொருள்படும். இந்த அருட்குணங்கள் மெய்யுணர்தல் முதல் ஆனந்தாதீதமீருகப்பத்து வகை என்று திருச்சதகம் என்ற தலைப்பின்கீழ்க்கூறப்பட்டிருக்கின்றன. இப்பத்து அருட்குணங்களில் முதலாவது அருட்குணமாகிய மெய்யுணர்தலின்கீழ் பத்துப்பாட்டுக்கள் கூறப்பட்டிருக்கின்றன. மெய்யுணர்தல் என்ற தமிழ்சசொற்றொடர் மெய்யையுணர்தல் என விரியும். மெய்யென்பது மெய்ப்பொருள்களாகிய முப்பொருள்களில் இறைவன் ஒருவனே பற்றலாவதோர் பற்றில்லா பரம்பொருளாதலின, அவனைச்சிறப்பாக மெய்யென லும், மெய்ப்பொ

ருள் என்றும் தமிழ்மறை நூல்கள் கூறுகின்றன. உணர்தல் என்பது அழுந்தி அறிதலாகிய உயிர்களினது பேரின்பவனுபவத்தன்மையைக் குறிக்கிறது. மெய்யுணர்தல் என்பது சிவகரணமாக மாறப்பெற்ற ஒருவருடைய தூய உள்ளத்தினுள்ளே மெய்ப்பொருளை அழுந்தியறியும் பேரின்பவனுபவத் தன்மையை உணர்த்தும். திருப்பெருந்துறையில் சிவபெருமானால் அடிகள் ஆட்கொள்ளப்பெற்ற பின் மெய்யுணர்தலினாலே சீவன்முத்தநிலையை யடைந்த அடியார்களுக்கு, அவர்களை ஒரோவழி பிராரத்துவவினை மலவாசனை தாக்கும் பொழுது அம்மெய்யுணர்தலினின்று நழுவாமல் நிலைபெறுதற்கு வேண்டப்படும் வழிகளை அறிவுரையாகத்தம்மேல்வைத்து அடிகள் இத்தலைப்பின்கீழ் வரும் பாட்டுக்களைக்கூறுகின்றார். இந்நூலை ஓதுகிற ஏனையோர்க்கும், வீடுபேற்றின் அவாவுடைய யாவர்க்கும் இவை அறிவுறுக்கும் அறிவுரையாகும்.

திருச்சிற்றம்பலம்.

---

## க. மெய்யுணர்தல்.

[கட்டளைக் கலித்துறை]

திருச்சிற்றம்பலம்.

5. மெய்தா னரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற்கென், கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம், பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றி யென்னுங், கைதா னெகிழ விடேனுடை யாயென்னைக் கண்டுகொள்ளே. க.

[ப-ரை] உள்ளம் பொய்தவிர்ந்து வெதும்பி (உம்) - எனதுள்ளம் நிலையில்லாத உலக வாழ்வை வெறுத்து விலக்கி (உன்னை

யடைதற்கு) வாடிக்கொண்டும்; மெய் அரும்பி விதிர்விதிர்த்து (உம்) உன்னிடத்தில் எனக்குள்ள (மெய்யன்பினாலே) உடலானது மயிர்க்குச்செறிந்து நடுநடுங்கியும்; என் கை தலைவைத்து (உம்) என்னுடைய இரண்டு கைகளையும் தலைமேலே அஞ்சலியாக வைத்துக்கொண்டும்; கண்ணீர் ததும்பி - இரண்டு கண்களிலிருந்தும் நீர் (நிரம்பி) வழியும்படி; உன் விரையார் கழற்கு — நினது மணம் பொருந்திய திருவடிகளுக்கு; உன்னைப் போற்றி - நின்னை அன்பு மேலீட்டினால் வணங்கி; சயசய போற்றி என்னும் கை - வெற்றி வெற்றி உனக்கு வணக்கம் என்று (வாயாலே) சொல்லும் செயலை; நெகிழ விடேன் — தளரவிடமாட்டேன்; அதாவது எப்பொழுதும் செய்துகொண்டே யிருப்பேன்; உடையாய்-என்னை (அடிமையாக வுடைய) ஆண்டவனே; என்னைக் கண்டுகொள்-எனது நிலைமைப் பார்த்து என்னை ஏற்றுக்கொண்டு அருள் செய்வாயாக.

[விரை] உள்ளம் பொய் தவிர்ந்து வெதும்பி - பொய் என்பது நிலையில்லாமை; அதாவது நிலையில்லாத உலகவாழ்வு. உலக வாழ்வை நிலையில்லாதது எனவறிந்து வெறுத்தன்றி அதனை விலக்குதல் கூடாமையின் தவிர்ந்து என்பதற்கு வெறுத்து விலககி என உரைசெய்யப்பட்டது. உலக வாழ்க்கையை நிலையில்லாதது எனக்கண்டு வெறுத்து விலக்கி மெய்ப் பொருளிடத்து அன்புண்டாகிய பொழுது ஒருவருக்கு இறைவனிடத்தில் நாட்டம் உணடாய் அவனையடைதற்கு ஆர்வம் உண்டாகின்றது. இவ்வாறுண்டாகும் ஆர்வத்தினாலே உள்ளம் வெதும்புகின்றது. ஆதலின உள்ளம் பொய்தவிர்ந்து வெதும்பி என்றார்

மெய் அரும்பி விதிர் விதிர்த்தும் - அரும்புதல = தோன்றல்; அதாவது மயிர்க்கூச்செறிதல். உள்ளம் வெதும்பவே விதிர் விதிர்த்து என்றார். இப்பாட்டில் வருகிற தான் நானகும் அசை நிலைகள். கைதலை வைத்து - இரண்டு கைகளையும் சேர்த்து தலையின் மேல் அஞ்சலியாகக்குவித்து வைத்தல், உன்னையல்லாமல் எனக்கு வேறு துணை இல்லை என்று வணஙகுதலைக் குறிக்கிறது.

கண்ணீர் ததும்பி - ததும்புதல் = வழிதல். கண்களில் நீர் நிரம்பி யன்றி கீழே வழிதல் கூடாமையின் ததும்பி என்பதற்கு நிரம்பி வழிந்து என்று உரை செய்யப்பட்டது. உன் விரையார் கழற்கு - கழல் என்பது வீரத்தைக் குறிப்பதற்காக அணிந்து கொள்ளப்படு கின்ற காலணி. அது இங்கே இரண்டு திருவடிகளையுங் குறிக்கிறது. உன்னைப்போற்றி சயசய போற்றி என் கை - முதலாவது போற்றி வினையெச்சம், இரண்டாவது போற்றி தொழிற் பெயர். சயம் = வெற்றி. சயசய என்பன வடமொழி பற்றி வந்த அடுக்குச் சொற் கள். ஒருவன் இறைவனுக்கு அன்பினாலே செய்கிற வணக்கத்தி னாலே அருளுண்டாகி, மலம் வெல்லப்படுதலின் 'போற்றி' என்ப தற்குப்பின் சய என்று கூறினார். கை = செயல்; அதாவது வாயி னாலே சொல்லும் செயல், உள்ளம் பொய்தவிர்தல் என்னும் மெய் யறிவு நிகழ்ச்சி பற்றி இறைவனிடத்திலுண்டாகும் மெய்யன்பு காரணமாக உடல் மயிர்க்குச்செறிந்து விதிர் விதிர்த்தல், கை தலை மேலே வைத்து வணங்குதல், கண்களிலிருந்து நீர் வழிதல், போற்றி சயசய என்று வாயாற் சொல்லுதல் ஆகிய இந்நான்கும் உடலின் கண்ணும், வாயின் கண்ணும் வெளிப்படும் செயல்கள். முன்னைய மூன்றும் உடலினிடத்தும் பின்னைய ஒன்றும் வாயினிடத்தும் நிகழ்வன. உடையாய் என்னைக் கண்டுகொள் - அடிகள், சிவபெரு மான் தன்னை ஏற்றுக் கொள்ளுதற்கு அவனிடத்திலுள்ள மெய் யன்பு பற்றி தம்முள்ளத்தின் கண்ணும், உடலின் கண்ணும் வெளிப்படும் செயல்களைக் கூறிய பின் உடையாய் என்று கூறியது, அவன் ஆண்டவன், தான் அடிமை என்னும் இயைபு பற்றி அவன் தன்னை ஏற்றுக்கொண்டு காக்கக்கடமைப்பட்டிருக்கிறானென் பதைக் குறிப்பித்தார். "தன் கடன் அடியேனையுந் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் திருநாவுக்கரசு அடிகள் தேவாரக்கூற்றை ஒப்பிட்டு நோக்குக. உள்ளத்தின் நிகழ்ச்சிக்குப் பின் உடலில் நிகழும் செயல்கள் நிகழ்தலால் உள்ளம் பொய்தான் தவிர்ந்து வெதும்பி என்பதை முதலாவது வைத்து உரைநடை செய்து, பொருளுரைக்கப்பட்டது. வெதும்பி, விதிர் விதிர்த்து, வைத்து, ததும்பி என்னும் நான்கு வினையெச்சங்களுக்குப் பின்னும்

தொக்கி நிற்கின்ற 'உம்'களை விரித்துப் பொருள் செய்யப்பட்டது. வெதும்பியும், விதிர் விதிர்த்தும், வைத்தும், ததும்பியும், சயசய போற்றி என்னும் கை நெகிழ விடேன் என்று இயைத்துப் பொருள் முடிவு செய்க. நான் — தோன்று எழுவாய். நெகிழ விடேன் - பயனிலை. நீ - தோன்ற எழுவாய். கண்டுகொள் - பயனிலை.

---

6. கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளே னினதடி யாரொடல் லானர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே யிருக்கப் பெறினிறைவா
உள்ளேன் பிறதெய்வ முன்னையல் லாதெங்க
ளுத்தமனே. உ.

[ப-ரை] இறைவா - தலைவனே; புரந்தரன், மால், அயன் வாழ்வு கொள்ளேன் - மேல் உலகங்களிலுள்ள வானவர்கோன், திருமால், நான்முகன் ஆகிய இவர்கள் செல்வவாழ்வை (நீ தரினும்) நான் விரும்பி ஏற்றுககொள்ள மாட்டேன்; நினது அடியாரொடு அல்லால் குடிகெடினும் நள்ளேன் - எனது உடல் வாழ்வுக்கு முடிவு வரினும் நின்னிடத்தில் அன்புசெய்யும் அடியார்களோடல் லாமல் வேறொருவரோடும் நட்புக்கொள்ள மாட்டேன்; திருவரு ளாலே இருக்கப்பெறின் நரகம் புகினும் எள்ளேன் - நினது திருவ ருளாணையால் நான் துன்பவாழ்வுக் கிடமாகிய நரகம் புகுவதாயிருப் பினும் அந்த நரகம் புகுந்திருப்பதைச சிறிதும் இகழமாட்டேன்; எங்கள் உத்தமனே - அடியார்களாகிய எங்களுக்கு இன்பநலம் அரு ளும் சிறந்தவனே; உன்னையல்லாது பிறதெய்வம் உள்ளேன் - முழு முதற் கடவுளாகிய உன்னையன்றி (உனது ஆணைவழி நின்று ஏவற் பணி செய்யும்) பிறகடவுளரை வணஙகுதற்கு உள்ளத்தில் ஒரு சிறிதும் நினைக்கமாட்டேன்.

[வி-ரை] புரந்தரன், மால், அயன் வாழ்வு கொள்ளேன் - இவர்கள் வாழ்வு உலக வாழ்வினை நோக்க மிகச் சிறந்த வாழ்வாக

இருப்பினும் பேரின்ப வாழ்வு போல நிலையுள்ளதாயிராது, கால வெல்லைக்குட்பட்டு அழிவுபாடுடையதாயிருத்தல் பற்றி அடிகள் கொள்ளேன் என்றார். நினது அடியாரோடு அல்லால் குடிகெடினும் நள்ளேன்-சிவஞானபோதம் கஉ-வது சூத்திரம் உ-வது அதிகரணத்தில் சிவபத்தர்களோடு இணங்குக என்று கூறப்பட்ட உண்மையை அடிகள் இங்கே குறித்தருளியது நோக்கற்பாலது. குடி-உலகவாழ்வு. திருவருளாலே இருக்கப் பெறின் நரகம் புகினும் எள்ளேன் - அழிவு பாடுடைய திருமால் முதலிய கடவுளர்களின் உலக இன்ப வாழ்வை நான் விரும்பேனாயினும், துன்பவாழ்விற்கிடமாகிய நரகம் புகுந்திருத்தல் வேண்டும் என்று நினது திருவருளானை எனக்குக் கிடைக்குமாயின், நான் நரகத்தில் மகிழ்வுடன் புகுந்திருப்பேன் என்பது கருத்து. தலைவனாகிய நீ எனக்கு வேண்டுவதென்று எதனை நினைப்பாயோ அதனையே நான் வேண்டுவதன்றி வேறொன்றையும் வேண்டேன் என்பதைக் குறிப்பிட அடிகள் இங்கே இறைவா என்று விளித்தார். அடிகள் பணிவுடன் தாம் சிவபெருமானுடைய திருவுள்ளக் குறிப்பின்படி நடப்பதன்றி அதற்கு மாறாகத் தமக்குத் தனியே உள்ளக்குறிப்பில்லை என்று கூறுகின்றார். உன்னையலலாது பிறதெய்வம் உள்ளேன் - "வம்பறாவரி வண்டு மணநாற மலருமது மலர் நற்கொன்றை யானடியலார் பேணுவெம்பிரான் சம்பந்தன்" என்று சுந்தரமூர்த்தி அடிகள் திருஞானசம்பந்த அடிகளைப்பற்றி திருத்தொண்டத் தொகையில் கூறியதை நோக்குக. எங்கள் உத்தமனே - அடிகள், பிற அடியார்களையும் தம்மோடு உளப்படுத்தி எங்கள் உத்தமனே என்றார்; சிவபெருமான் தன்னைப்போல எல்லாவுயிர்களும் இன்பநலமடைதல் வேண்டுமென்னும் கருத்துடன் இடைவிடாது ஐந்தொழில் செய்து வருதலால் அவனை அடிகள் உத்தமன் என்று விளித்தார். உத்தமன்=யாவர்க்கும் மேலானவன், சிறந்தவன். எவ்வகை முத்தியினும் மேலான பரமுத்தி அளிப்பவன் சிவபெருமான் ஒருவனே யாதலின் அவனை அடிகள் எங்கள் உத்தமனே எனவிளித்து உன்னையல்லால் பிறதெய்வம் உள்ளேன் எனக்கூறியருளினார். மெய்யுணர்வுடைய அடியார்கள் சிவபெருமானையும், அவன் திருவருளையும் ஒருமை மனத்தோடு

எப்பொழுதும் எந்த நிலையிலும் நினைத்துக் கொண்டிருப்பரென்பது இப்பாட்டின் கருத்து.

---

7. உத்தம னத்த னுடையா னடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவ னென்ன மனநினைவில்
ஒத்தன வொத்தன சொல்லிட வூரூர் திரிந்தெவருந்
தத்தம னத்தன பேசவெஞ் ஞான்றுகொல்
சாவதுவே. ௭.

[ப-ரை] உத்தமன் - எல்லா உயிர்களுக்கும் தலைவனும்; அத்தன் - தந்தையும்; உடையான் - என்னை (திருப்பெருந்துறையில்) அடிமையாக ஆண்டருளியவனும் ஆகிய சிவபெருமானுடைய; அடியே நினைந்து உருகி - இரண்டு திருவடிகளையே எனது மனத்தில் நினைந்து நினைந்து உருகி; மத்தமனத்தொடு - மயக்கம் பொருந்திய மனத்தோடு கூடிய; மால் இவன் என்ன - பித்துடையவன் இவன் என்று; மனநினைவில் ஒத்தன ஒத்தன சொல்லிட (உம்) - (உள்ளூரிலுள்ளவர் என்னைக் கண்டபொழுது) தங்கள் தங்கள் மனத்துக்கு இணங்கின கருத்துக்களை சொல்லவும்; ஊர் ஊர் திரிந்து-நான் பல ஊர்களிலுஞ் செல்லுங்காலத்தில்; எவரும் தத்தம் மனத்தனபேச (உம்) - (அவ்வூர்களிலுள்ளவர்கள் என்னைக் கண்டபொழுது) தங்கள் தங்கள் மனத்தில் அப்பொழுது தோன்றிய கருத்துக்களைப் பேசவும்; சாவது எஞ்ஞான்று கொல் - (அக்கருத்துக்களையெல்லாம் கேட்ட நான்) சிறிதும் தன் முனைப்பு உணர்ச்சியின்றி மனம் செத்து என்னுள்ளடங்கியிருத்தல் எந்தக்காலம் நிகழுமோ அறியேன்.

[வி-ரை] உத்தமன் - எல்லா உயிர்களுடைய இன்பநலத்தையும் நாடி ஐந்தொழில் செய்கின்றவன் ஆதலின் அடிகள் சிவபெருமானை உத்தமன் என்று கூறினார்; அடியே நினைந்து உருகி - ஏ, பிரிநிலை குறித்து நின்றது, தேற்றமெனினும் பொருந்தும். நினைந்து காரணப்பொருள் குறிக்கும் வினையெச்சம்; நினைந்த காரணத்தாலுருகி; மத்தம் - மயக்கம்; மால் - பித்து. இங்கே ஆகுபெயராய் பித்

துடையவனைக் குறிக்கிறது. பாண்டியனுடைய அமைச்சர் நிலையி லிருந்த அடிகள் அச்செல்வ நிலையைவிட்டு ஏழையொருவன் கோலங்கொண்டிருத்தலைக் கண்டவர்கள் தம்மைப் பித்துடையவனெனக்கூறுதல் இங்கே கூறப்பட்டது. உலகப்பற்றுடையவர்கள் உண்மைத் துறவிகளை கடவுட் பித்தனென்று கூறுவதும், உண்மைத் துறவிகள் உலகப்பற்றுடையவர்களை உலகப்பித்தரென்று கருதுவதும் இயல்பு. உலகப் பற்றுடையவர்கள் துறவிகளின் நிலையை அறியமாட்டார்கள்; மனநினைவில் ஒத்தன ஒத்தன சொல்லிட - தம்மைக்கண்ட மக்கள் ஒன்றுபடக் கூறாமல் தங்கள் தங்கள் மன நிலைக்குத் தக்கபடி வேற்றுமைப்படக் கூறுவர் என்று அடிகள் கூறினார். கீழே வருகிற தத்தமனத்தன என்பதற்கும் இதுவே கருத்து. சொல்லிட என்பதற்கு பின் 'உம்' தொக்கி நின்றது. பின்வருகிற பேச என்பதற்குப் பின்னும் 'உம்' தொக்கி நிற்கிறது. ஊர் ஊர் திரிந்து - பல ஊர்களிலுந் திரிந்து; திரிய என்பது திரிந்து என நின்றது. என்ஞான்று கொல் - கொல் என்பது ஐயங்குறித்து நிற்கிறது. சாவது - தன்முனைப்பின்றி சிவபெருமானுடைய திருவடிகளிலடங்கித் தன் செயலற்றிருத்தல். ஏ - அசை.

இந்தப் பாட்டில் அடிகள், உலகினர் தம்மைப்பற்றிச் சொல்லுவதை சிறிதும் உணராமல் 'யான், எனது' என்னும் செருக்கு அற்று சிவபெருமானுடைய திருவடிகளிலேயே அடங்கியிருத்தல் தமது விருப்பமென்று கூறுகின்றார். இந்த விருப்பத்திற்கு மாறாக உலகர் கூறும் புகழ்மொழியையும், இகழ்மொழியையும் பொருட்படுத்துதல் மெய்யுணர்தலில் நிலைபெறாது அதனின்று நழுவுதல் ஆதலின் இது மெய்யுணர்தலின்கீழ் வைக்கப்பட்டது.

---

8. சாவமுன் னாள்தக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சமஞ்சி, ஆவஎந் தாயென் றவிதா விடுநம் மவரவரே, மூவரென் றேயெம் பிரானொடு மெண்ணிவிண் ணாண்டு மண்மேல், தேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதவரே. ௮.

[ப-ரை] முன்னாள் - முன் ஒரு காலத்திலே; தக்கன் வேள்வித் தகர்தின்று - தக்கனாற் செய்யப்பட்ட யாக ஆட்டின் ஊனை அவிசாகத்தின்று; சாவ (அஞ்சி உம்) - (வீரபத்திரக் கடவுள்) தக்கனை ஒறுக்கவந்த பொழுது சாவ அஞ்சியும்; நஞ்சம் அஞ்சி (உம்)- (பாற்கடலை அசுரரும் தேவரும் கடைந்த பொழுது அதினின்றும் எழுந்த) நஞ்சினைக் கண்டு அஞ்சியும்; ஆவ எந்தாய் என்று - ஐயோ எமக்குத் தாயே தந்தையே (காப்பாற்று) என்று; அவிதா இடும் — முறையீடு செய்த; நம்மவரே - நம் இனத்தவர்களாகிய நான்முகனும் மாலுமாயுள்ள இவர்களா?; மூவர் என்று எம்பிரானோடும் எண்ணி - எங்கள் முழுமுதற் றலைவனாகிய சிவபெருமானோடு தங்களிருவரையும் சேர்த்து மும்மூர்த்திகள் என்று கணக்கிட்டு; விண் ஆண்டு - தத்தமக்குரிய சத்திய உலகையும், வைகுந்த உலகையும் முறையே ஆளுகை செய்தலுமன்றி; மண்மேல் - இந்நில உலகத்திலும்; தேவர் என்று இறுமாந்து திரிதவர் - சில சமயமக்களால் வணங்கப்பட்ட கடவுளர் என்று தருக்கித் திரிகின்ற தவமுடையவர்?; அவர் என்ன பாவம் (செய்தனர்) - இங்ஙனம் நான்முகனும் மாலும் என்ன கொடியபாவம் செய்தனர்.

[வி-ரை] தக்கன் வேள்வித் தகர்தின்று - தகர் - ஆடு; வேள்வித் தகர் என்றதனால் வேள்வி ஆட்டின் ஊன் என்று நாம் கொள்ளல் வேண்டும்; சாவ (அஞ்சி உம்) - நஞ்சம் என்ற சொல்லோடு சேர்ந்து வருகிற அஞ்சி என்ற வினையெச்சத்தை சாவ என்ற சொல்லோடும் சேர்க்க; தொக்கி நிற்கிற உம் என்பதனை சாவ அஞ்சியும், நஞ்சம் அஞ்சியும் என விரித்துரைக்க. ஆவ எந்தாய் - ஆவா (ஆ ஆ) என்பது ஆவ எனக்குறுகி நின்றது. இது இரக்கக் குறிப்பு. இறைவன் அம்மையப்பனாய்த் தேவர்களையும், மக்களையும் காப்பாற்றுவதால் அம்மையப்பனென்ற இருபொருளுணர்த்தும் எந்தாய் என்ற சொல்லை அடிகள் இங்கே கூறுகிறார். எந்தாய் என்ற சொற்றொடர் எம் தாய் என விரிந்து தாயையும், எந்தை + ஆய் என விரிந்து தந்தையையும் உணர்த்தும். (ஆய்-விளியுருபு). அவிதா இடும் நம்மவரே - அவிதா என்ற சொல் ஒருவர் தமக்கு

ஒரு ஆபத்து நேர்ந்த காலத்தில், அதனைத் தீர்க்க வல்ல பிறரொருவரை நோக்கிச் செய்யும் முறையீடு. நம்மவரே - நம்மவர் என்பது நான்முகன், மால் இருவரையுங் குறிக்கின்றது. அவர்கள் நிலவுலக மக்களாகிய நம்மைப்போல சகல வர்க்க ஆன்மாக்கள் ஆதலின் அடிகள் அவரை நம்மவர் என்றார். இங்கே கூறப்பட்ட நான்முகனும், மாலும் பிரகிருதிமாயையில் வைகுவோர் சுத்தமாயையில் வைகும் பிரமன், மால்கள் அன்று. நம்மவரவரே என்ற தொடரை நம்மவர் அவர் எனப்பிரித்து ஈற்றில் வரும் ஏகாரத்தை நம்மவர் என்பதனோடு சேர்க்க. அந்த ஏகாரம் வினாப்பொருளில் வந்தது. அவிதா இடும் நம்மவர் என்பது, முதல்வரியிலுள்ள முன்னாள் என்ற சொற்களைத் தழுவுதலால் அவிதா இட்ட நம்மவர் என்று இறந்த காலத்தில் பொருளுரைக்கப்பட்டது.

"தேவா அரனே சரணென்றிமையோர் திசைதோறும்
காவா யென்று வந்தடையக் கார்விட முண்டு"

என்று திருஞானசம்பந்த அடிகள் திருப்புறவம் தேவாரம் (1-97-5) பாட்டிற் கூறுதல் காண்க.

மூவர் என்று எம்பிரானொடும் எண்ணி - "தேவரி லொருவனென்பர் திருவுருச் சிவனைத் தேவர், மூவராய் நின்ற தோரார்" என்று சிவஞான சித்தியாரில் கூறப்பட்டிருத்தலை நோக்குக. நான்முகன், மால், உருத்திரன் ஆகிய மூன்று மூர்த்திகளும் சிவபெருமானது அருளைத் துணைக்கொண்டு அவனால் அதிட்டிக்கப் பெற்று, முறையே படைப்பு, காப்பு, அழிப்புத் தொழில்களைச் செய்வோர். பரமசிவன் எல்லா உலகங்களையும் மகா சங்காரகாலத்தில் அழித்தல் செய்யும் மகா சங்கார ருத்திரர். பரமசிவனை உலகிலிப்பொழுதும் பலர், அறியாமையால் உருத்திரன் என்ற பெயரினால் மயங்கி, குணருத்திரனோடு ஒற்றுமைப்படுத்தி மும்மூர்த்திகளி லொருவன் என்று கூறுகின்றனர். மண்மேல் தேவர் என்று இறுமாந்து திரிதவர் - தவர் என்பது தவமுடையவர்; பிரமன், மால்களாகிய சகல வர்க்க ஆன்மாக்கள் தாங்கள் செய்த தவத்தின் பயனாக படைப்புத்

தொழிலையும், காப்புத் தொழிலையும் முறையே செய்துவருவதால் அடிகள் அவர்களைத் தவர் என்றார். அவர்கள் தம்மை மாறுபட மயங்கி அறிதலால் திரிதவர் என்றார்; அவர் என்ன பாவம் செய் தனர் - நம்மவரவரே என்பதின் ஈற்றிலுள்ள, அவர் என்பதை என்ன பாவம் என்ற தொடரோடு சேர்த்துப் பொருளுரைக்க. அவர் - நம்மவர் ஆகிய நான்முகன், மால்களைக் குறிக்கிறது. செய் தனர் என்ற வினைமுற்றுச்சொல், சொல்லெச்சமாக என்ன பாவம் என்பதின் பின் தொக்கி நிற்கிறது. நான்முகன், மால்கள் தாங் கள் பரமசிவனால் அதிட்டிக்கப் பெற்று அவனது அருளால் தங்கள் தொழில்களைச் செய்தலைத் தங்கள் அகங்காரத்தால் மறந்து முழு முதற் கடவுளாகிய பரமசிவனோடு ஒப்பவைத்துத் தங்களை மதித் தலை அடிகள் என்ன பாவம் செய்தனர் என்று கூறினர். "காண்பா னொளி யிருளிற் காட்டிடவுந் தான் கண்ட - வீண் பாவமெந்நாள் விழும்" என்று உமாபதி சிவாசாரியார் திருவருட் பயன் அ-வது அதிகாரம் ௩-வது பாட்டிற் கூறிய கருத்தை நோக்குக.

இப்பாட்டில் இரண்டு எழுவாய்களும், இரண்டு பயனிலைகளு முள. நம்மவரே - எழுவாய். தவர் - பயனிலை. அவர் - எழுவாய். செய்தனர் - தோன்றாப் பயனிலை. மெய்யுணர்தல் என்ற தலைப் பின் கீழ் பிரமனும், மாலும் தங்களைச் சிவபெருமானோடு சேர்த்து மூவராக எண்ணுதல், இந்தப் பாட்டிற் கூறுதல் எவ்வாறு பொருத்த மெனின் பேரின்பத்துக்கு ஏதுவாயுள்ள மெய்யுணர்தலாகிய அருட் குணத்தை அடைய விரும்புகிற அடியார்கள் தங்கள் மனத்தில் சிறி தும் யான், எனது என்னும் செருக்கு வருவதற்கு இடங்கொடுக்கக் கூடாது என்று அவர்களை எச்சரித்து, அவர்கள் தன்முனைப் பின்றி அருளிலடங்கி இருத்தலை வலியுறுத்தலினால் பொருத்த முடையது. பிரமனுக்கும் மாலுக்குமே ஒருகால் செருக்கு வருமா னால் அடியார்களாகிய நம்மிடத்தில் செருக்கு நம்மை அறியாமலே நமது உள்ளத்தில் வருதல் எவ்வளவு எளிது என்று எண்ணி அதனைத் தங்கள் உள்ளத்தில் வரவிடாதிருக்க மிக்க விழிப்புட னிருத்தல் வேண்டும் என்பது கருத்து.

12. உழிதரு காலுங் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும், இழிதரு காலமெக் காலம் வருவது வந்ததற்பின், உழிதரு காலத்த வுன்னடி யேன்செய்த வல்வினையைக், கழி தரு காலமு மாயவை காத்தெமமைக் காப்பவனே. ௫.

[ப-ரை] உழிதரு காலும் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும் - (அடியார்களாகிய எங்களுக்கு) பரந்து சுழல்கின்ற காற்றும், தீயும், நீரும், மண்ணும், வெளியும் ஆகிய ஐம்பூதங்களும்; இழிதரு காலம் - (செயற்படும் தத்தம் நிலையினின்று நீங்கி) ஒடுங்குங்காலம்; எக்காலம் வருவது - எப்பொழுது வரும்? வந்ததன்பின் - அந்த ஒடுங்குகிற காலம் வந்த பின்னும்; உழிதருகால் அத்த - என்றும் நிலையாயுள்ள காலத்தையுடையவனே (எக்காலமும் தோற்றமும், அழிவுமில்லாமலிருக்கிறவனே என்றபடி); உன் அடியேன் செய்த வல்வினையை - உனது அடிமையாகிய நான் செய்த பிராரத்துவ வினைப்பயன்களை; கழிதரு காலமும் ஆய் - கழியச்செய்கின்ற கால தத்துவமுமாய்; அவை காத்து - அவ்வினைப் பயன்கள் எங்களை வந்து தாக்காமல் தடுத்து, உடலூழாய்க் கழியுமாறு செய்து; எம்மைக் காப்பவனே - அடியார்களாகிய எங்களை, எங்கள் உடல் நீங் கும்பொழுது வீட்டின்பத்தை அடைகிறதற்குத் தகுதியுடையவர்க ளாகச் செய்து காத்து அருளுகின்றவனே.

[வி-ரை] உழிதரு - உழிதரு என்பது உழிதர என்னும் பகுதி யடியாகப் பிறந்த பெயரெச்சம். உழிதரல்-சுழலல்; அதாவது நிலை யில்லாது மாறி மாறி வருதல். இந்த அடைமொழி பின்னே வரு கிற ஐந்து பூதங்களையுந் தழுவுகிறது. இங்கே ஐந்து பூதங்களென் பன, நிவிர்த்திகலைக்குச் சேர்ந்த மண்ணையும், பிரதிட்டாகலைக்குச் சேர்ந்த நீரையும், வித்தியாகலைக்குச்சேர்ந்த தீயையும், சாந்திகலைக் குச்சேர்ந்த காற்றையும், சாந்தியாதீத கலைக்குச்சேர்ந்த வெளியை யும் (ஆகாயத்தையும்) குறிக்கின்றன. இந்த ஐந்து பூதங்களும் உல கம் தோன்றும்போது விரிந்தும், அழியும்போது ஒடுங்கியும், மாறி மாறி வருதலால், உழிதருகாலும் கனலும் புனலொடு மண்ணும்

விண்ணும் என்றார். இழிதரு காலம் - இழிகின்ற காலம். இழிதல்- இறங்குதல். அது இங்கே ஐந்து பூதங்களும் செயற்படும் நிலையி னின்றும் நீங்கி ஒடுங்குதலைக் குறிக்கிறது. இங்கே ஐந்து பூதங்கள் ஒடுங்குதல் என்பது நிவிர்த்திகலைமுதல் சாந்தியாதீதகலை ஈறாக உள்ள நிலைகளும், அவற்றிலடங்குவனவாயுள்ள 36 தத்துவங் களும், 224 புவனங்களும் ஒடுங்குதல். ஒருவர் முதற்கண் இந்த ஐந்து பூதங்களுடைய கட்டுகளிலிருந்து நீங்கிப்பின தன்முனைப்பி னின்றும் நீங்கி, அருளிலொடுங்கினாலொழிய அவருக்கு வீடுபேறு உண்டாகாதாதலின் உழிதருகாலம் எக்காலம் என்றார். இழிதரு காலம் என்றதனாலும், முடிவில் எம்மைக்காப்பவன் என்றதனாலும் இங்கே அடிகள் தமக்கும், தம்மைப்போன்ற அடியார்களுக்கும் பிற விக்கட்டு நீங்கி வீடுபேறு அடைகிற காலத்தைக்குறிக்கிறார். அடிகள் பெரும்பாலும் திருவாசகப்பாட்டில் தம்மை பிறஅடியார்களோடு சேர்த்தே கூறுகின்ற முறைபோல, இக்தப்பாட்டிலும் கூறுகின்றார். இங்கே காலம் என்பது எல்லா உயிர்களுக்கும் பொதுவாக நிகழ்கிற உலக ஒடுக்கத்தை குறிக்குமென்றல், 3, 4 வரிகளிற் கூறப்படுவதனை நோக்குமிடத்து பொருந்தாததாகும். அதனை அடிகள் இங்கே கூறு தற்குக் காரணமும் இல்லை. வந்ததன்பின் - இழிதருகாலம் அடியார் களுக்கு வந்தபின் உள்ளகாலம், அவர்கள் பிராரத்துவவினையினாலே எடுத்த உடம்பு நீங்கும்வரை உலகில் சீவன்முத்தர்களாயிருக்கிற காலம். உழிதருகால் அத்த - உழிதரு என்பது இங்கே இரண்டு சொற்களாலாகிய ஒரு சொற்றொடர் உழி—இடம். உழிதருகால் அத்த - மேலேகூறப்பட்ட ஐந்து பூதங்களும்தோன்றி ஒடுங்குதற்கு இடமாயிருக்கிற நிலையாயுள்ள காலப்பொருளாயிருப்பவனே. ஐந்து பூதங்களும் தோன்றுதலும், ஒடுங்குதலும் நிகழ்தல்போலல்லாமல் சிவபெருமான் அவை தோனறுதலும், ஒடுங்குதலும் செய்தற்கு இடம்தந்து, எப்பொழுதும் இருந்து, ஐம்பூதங்களும் நீங்கின அடி யார்களுக்கு வீடுபேற்றை அளித்தலால் அடிகள் அவனை உழிதரு கால் அத்த என்று இவ்விடத்துக்கேற்ப விளித்தார். உன் அடியேன் செய்த வல்வினையை - வல்வினை என்பது இங்கே கட்டுநீங்கிய சீவன்முத்தர்களுக்கு அவர்கள் உடல்நீங்கும்வரை உடனூழாயிருந்து

கழிவதாயுள்ள பிராரத்துவவினைப்பயன்கள். எம்மைக் காப்பவனே என்று அடிகள் தம்மோடு பிற அடியார்களையும் சேர்த்துச்சொன்னது, அடியேன் செய்த வல்வினை என்று, இங்கே தமக்கு மாத்திரம் கூறுதல் பிற அடியார்களுக்கு அதனைச்சொல்லப்படாதென்ற மரியாதைபற்றி. அவை கழிதரு காலமும் ஆய் காத்து-அவை-பிராரத்துவவினைப்பயன்கள். பலவாயிருத்தலின் அவை என்று பன்மையிற் கூறினார். கழிதரு காலமும் ஆய் - காலம் என்பது இங்கே படைப்புக்காலத்தில் தோன்றி, அழிப்புக்காலத்தில் ஒடுங்குவதாகிய காலதத்துவத்தைக் குறிக்கிறது. மெய்யுணர்வு பெற்ற சீவன் முத்தர்களுக்கு அவர்கள் உடல் நீங்கும் வரையுள்ளகாலம், அவர்களுடைய பிராரத்துவ வினைப்பயன்கள் உடல் நீங்குகிறவரை யிருத்தலாலும், அக்காலதத்துவத்தைத் தோற்றினவன் சிவபெருமானாயிருத்தலாலும் கழிதருகாலமுமாய் என்று சிவபெருமானைக் கூறினார். காத்தல் - அப்பிராரத்துவவினைப்பயன் வந்து தாக்காமல் தடுத்தல். கழிதருகாலமும் என்பதிலுள்ள உம் உழிதருகாலமுமல்லாது என்று பொருள்படும் இறந்தது தழீஇய எச்சம். கழிதருகாலமும் என்றதனாலே மேலே உழிதருகாலத்த என்பதற்கு, என்றும் நிலையாயுள்ள காலத்தையுடையவனே என்று பொருள் கூறியிருத்தல் பொருத்தமாயிருத்தலை அறிக. எம்மைக்காப்பவனே - எம்மை என்பது அடிகளையும் பிற அடியார்களையுங் குறிக்கிறது. எம்மை என்று இங்கே சொன்னதனால் 2-வது வரியில் இழிதருகாலம் என்பது அடியார்களுக்கு பொருந்துமாறு உரைக்கப்பட்டது. காததலாவது சிவஞானபோதம் 10-வது சூத்திரம் "சார்ந்தாரைக்காத்தல் தலைவர் கடனாதல்" என்ற முதற்குறிப்பு வெண்பாவில் கூறியிருக்கிறபடி "சார்ந்தடியார்தான் தானாச்செய்து பிறர்தமகள் வினை தான்கொடுத்தல்" ஆகும். அடிகள் இந்தப்பாட்டில் மெய்யுணர்வு பெற்ற தமக்கும், தம்மைப்போன்ற சீவன்முத்த அடியார்களுக்கும், அவர்கள் உடல் நீங்குங்காலம்வரை சிவபெருமான், பிராரத்துவவினைப்பயன்கள் அவர்களைத் தாக்கவொட்டாமற் தடுத்து உடல் நீங்கும் காலத்து வீடுபேறு அளிக்கின்றான் என்பதைக் கூறுகின்றார். அடிகள் தாம்

சிவபெருமானாலாட்கொள்ளப்பெற்று மெய்யுணர்வு அடைந்தபின் சீவன் முத்தராயிருக்கிற காலத்தில் தம்மைப் பிராரத்துவவினைமல வாசனை தாக்காது காத்தருளல் வேண்டுமென்று வேண்டுதலால் இந்தப்பாட்டு மெய்யுணர்தலின் கீழ்வைக்கப்பட்டது.

---

13. பவனெம் பிரான்பனி மாமதிக் கண்ணிவிண்
ணோர்பெருமான், சிவனெம் பிரானென்னை யாண்டு
கொண்டானென் சிறுமைகண்டும், அவனெம் பிரா
னென்ன நானடி யேனென்ன இப்பரிசே, புவனெம்
பிரான்றெரி யும்பரி சாவ தியம்புகவே. சா.

[ப-ரை.] பவன்எம்பிரான் - உலகத்தைத் தோற்றுவித்தலால் எங்களுக்குத் தலைவனாயிருக்கிறவனும்; பனிமாமதிக்கண்ணி - குளிர்ந்த இளம்பிறைத்திங்களை, தன்தலைமேலே பூக்கட்டாகத் தரித்திருக்கிறவனும்; விண்ணோர் பெருமான் - தேவர்களுக்குத் தலைவனும்; புவன்எம்பிரான் - ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டு அறிவிக்கப்படாமல் தானேதோன்றி எல்லாமறிகிறவனாகிய எங்கள் தலைவனும்; சிவனஎம்பிரான் - எல்லாவுயிர்கட்கும் இன்பஞ்செய்கிற எங்கள் தலைவனுமாகிய சிவபெருமான்; என்சிறுமை கண்டும் - (ஒன்றனைச் சாராது தனித்து நிற்கமாட்டாமையும், அறிவிக்கப்பட்டாலன்றி அறியமாட்டாமையுமுடைய) எனது சிறுமையை அறிந்திருந்தும்; அவன் எம்பிரான் என்ன - அவன் எங்களுக்கு ஆண்டவனாகவும்; நான் அடியேன் என்ன - நான் அவனுடைய அடிமையாகவுமுள்ள; இப்பரிசு - இந்த அத்துவிதநிலையில்; என்னை ஆண்டுகொண்டான் - (என்னைத் திருப்பெருந்துறைக்குக் குருவடிவில் வந்து) தீக்கை செய்து ஆண்டருளினான்; தெரியும் பரிசாவது இயம்புக-இங்ஙனம் அவன் ஆண்டவனாகவும், நானடிமையாகவும், என்னையவன் ஆண்

டுகொண்ட அத்துவிதக் கலப்பின்தன்மை, இன்னதென்றவுண்மையை என்னுள்ளே எனக்கு உணர்த்துவானாக.

[வி-ரை] பவன்எம்பிரான் - பவன் என்ற வடமொழிச் சொல், (உலகத்தை)த் தோற்றுவித்தவன் என்று பொருள்படும். சிவபெருமான் பாசமாகிய நித்தியப்பொருளிலிருந்து உலகத்தைத் தோற்றுவித்தலால், பவன் என்றசொல் அவனுடைய (சத்துத் தன்மை) உண்மைத் தன்மையைக்குறிக்கிறது. "ஆதிபகவன் முதற்றேயுலகு" என்று திருவள்ளுவர் கூறுகிறபடி அவன், தான் தலைவன் என்ற நிலைமையில் உலகைப்படைத்தலால், பவன் எம்பிரான் என்றார். தம்மோடு பிற அடியார்களையும் உளப்படுத்தி எம்பிரான் என்றார். பனிமாமதிக்கண்ணி - கண்ணி என்பது பூவினால் தொடுக்கப்படும் மாலைவகையிலொன்று. அது ஆண்பாலாரால் தலைமேற்சூடப்படுவது. பனிமாமதிக்கண்ணி என்றதனால், தனனிடம் அடைக்கலம் புகுந்தவர்களைச் சிவபெருமான் துன்பத்தினின்று நீக்கிக்காத்தருளுவன் என்பது குறிப்பிடப்பட்டது. விண்ணோர் பெருமான் என்றதனால் கடலினின்றெழுந்த நஞ்சையுண்டு சிவபெருமான் தேவர்களைக் காத்தருளினனென்பது குறிப்பிடப்பட்டது. புவன் எம்பிரான் - புவன் = தான்தோன்றி (சுயம்பு). இதனாலே சிவபெருமான் தனக்குமேல் ஓர் தலைவன இல்லாதவனென்பதும் பிறரொருவராலறிவிக்கப்படாமல் எல்லாவற்றையும் தானே ஒருங்கே அறிகிறவனென்பதுங் கூறப்பட்டன. இதனாலே அவனது அறிவுத்தன்மை (சித்துத்தன்மை) கூறப்பட்டது. சிவன் எம்பிரான் - சிவபெருமானுடைய இன்பத்தன்மை கூறப்பட்டது. சிவபெருமான் உண்மை, அறிவு, இன்பம் என்னும் மூவகைச் சொரூப நிலைகளையும், தம்மை யடையும்படிசெய்து தமக்குப் பேரின்பமளிக்குந் தலைவனாதலின் அடிகள் அவனை, பவனெம்பிரான், புவனெம்பிரான், சிவனெம்பிரான் என்று மூவகைச் சொரூப நிலைகளிலுமுள்ள தலைமைக்குணத்தைச சிறப்பித்துக்கூறினார். அவனெம்பிரானென்ன நானடியேனென்ன - இதனாலே

சிவபெருமானுக்குந் தமக்குமுள்ள ஆண்டானடிமைத்தொடர் பாகிய அத்துவித நிலையைக்கூறினார். தாம் சிவபெருமானாலாட் கொள்ளப்பெற்றபின் அங்ஙனம் முன்னேயாட்கொள்ளப்பெற்ற அடியார் கூட்டத்தோடு சேர்தலால், அவன் எம்பிரானென்னப் பன்மையிலும், திருப்பெருந்துறையில் தம்மைத் தனியாகவைத்துச் சிவபெருமானாட்கொண்டதால் நானடியேனென ஒருமையிலுங் கூறினார். பரிசு-(அத்துவித) நிலைமை. இயம்புதல் - சொல்லுதல்; அது கூறவொண்ணாத மெய்யுணர்தலை, உணர்த்துதலென்னும் பிறவினைப்பொருளில் வந்தது. சிவபெருமான், வீட்டுநிலையடைந்த சீவன் முத்தர்களும் பேரின்பமுணர்தற்கு அவர்களோடு உடனாய் நின்று அதனையுணர்த்துதல் முறைமையாதலின் இயம்புக என்றார். அடிகள் தாம் மெய்யுணர்தலுக்கு இறைவன் தம்மை உள்நின்று உணர்த்துதல் வேண்டப்படுதலின் இயம்புக எனறு கூறினார். ஏ — அசை. சிவபெருமானாலாட்கொள்ளப்பெற்றபின் மெய்யுணர்தலை யடைந்த அடிகள், ஒரோவழி எழும் பிராரத்துவவினைமலவாசனை பற்றித் தாம் அம்மெய்யுணர்தலினின்று நழுவாமல் நிலைபெறுதற் குச் சிவபெருமான் உள்நின்று தமக்கு உணர்த்தும்படி அடிகள் அவரை வேண்டிக்கொள்ளுதலால் இப்பாட்டு மெய்யுணர்தலின் கீழ் வைக்கப்பட்டது.

---

## உ. அறிவுறுத்தல்.

சிவபெருமானாலாட்கொள்ளப்பெற்று மெய்யுணர்தல் அடைந்த அடிகள் தாம் சிவபெருமானது ஆணையின்படி எடுத்த உடலோடு உலகில் வாழும்பொழுது, ஞானநிட்டையிலிருந்து நீங் கும் தருணத்தில், தம்மை ஒரோவழி உடலூழாய்க் கழியவிருக்கிற பிராரத்துவவினைமலவாசனை தாக்குதலால் விருப்பு வெறுப்புக்க ளுண்டாகி, நிலமுதல் அசுத்தமாயையில் கலக்கப்பட்ட மாயை ஈறுகவுள்ள 31 தத்துவங்களும் ஏகதேசமாய்க் காட்சிப்படும் என்

றும், அவை காட்சிப்படவே அவற்றைச் சுட்டியறிதலாகிய மயக்க அறிவு மேற்பட்டு, மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்து, பிறவிக்கு வித்தாகும் என்றும் அஞ்சி, அவை நிகழாது தம்மைக்காக்கும்படி சிவபெருமானுக்கு முறையீடு செய்கின்றார். தமக்காகவும், தம்மைப்போலொத்த சீவன் முத்தர்களுக்காகவும் செய்யும் இந்த முறையீட்டினாலே அடிகள் சிவபெருமானுக்கு அறிவித்தலானது இங்கே அறிவுறுத்தல் என்று கூறப்பட்டது. அறிவுறுத்தலின கீழ்வரும் 10 பாட்டுக்களிலுள்ள முதல் 8 பாட்டுக்களில், அடிகள் சிவபெருமானிடத்தில் முறையிடுகின்றார். சிவபெருமான், தம்மை பிராரத்துவ வினை மலவாசனை தாக்காமல் பாதுகாப்பதற்கு, தமது நெஞ்சு தம் வயப்பட்டுத் தம்மோடு இணங்கியிருக்கவேண்டுமாதலின் கடைசியிலுள்ள இரண்டு பாட்டுக்களும் தமது நெஞ்சுக்கு அறிவுறுத்தலாக அடிகள் கூறுகின்றார்.

[தரவு கொச்சகக் கலிப்பா]

திருச்சிற்றம்பலம்.

15. நாடகத்தா லுன்னடியார் போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே யிடையறா அன்புனக்கென்
ஊடகத்தே நின்றுருகத் தந்தருளெம் முடையானே. எ.

[ப-ரை] எம் உடையானே – அடியார்களாகிய எங்களை அடிமைகளாக உடைய ஆண்டவனே; நாடு அகத்து உன அடியார் போல் - (தமிழ்) நாட்டிலுள்ள உன்னுடைய உண்மை அடியார்கள் போல; நான் நடித்து - நான் (பிறரறிய) தோற்றம் (பாவனை) செய்துகாட்டி; நடுவே வீடு அகத்தே புகுந்திடுவான - அவ்வடியார்கள் நடுவில் ஒருவனாய்ப் பேரின்ப வீட்டை அடைதற்பொருட்டு; மிகப்பெரிதும் விரைகின்றேன்-மிகப் பரபரப்புடையவனாய்ச்செல்லுகின்றேன். (அவ்வாறு செல்வதற்கு எனக்குத் தகுதியில்லை யாதலால்) சீர் ஆடகக்(குன்றே) - சிறப்புப்பொருந்திய பொனமலையே;

மணிக்குன்றே - சிறப்புப்பொருந்திய மாணிக்க மலையே; உனக்கு என் அகத்து ஊடே நின்று உருக - உன்னை எனது மனத்திலே எப்பொழுதும் நினைந்து நிலையாக உருகும்படியாய்; இடையறா அன்பு தந்தருள் - (ஆற்று நீர்போல) இடைவிடாது ஒழுகும் மெய்யன்பை நல்கி அருள்செய்வாயாக.

[வி-ரை] நாடு அகத்தால் - ஆல் - அசை. நாட்டகத்து என்பது எதுகை நோக்கி நாடகத்து எனக்குறுகிநின்றது. நடித்து-நடித்தல் என்பது உண்மையிலில்லாமல் பிறரறியும்படி பாவனைசெய்தல். வீடு அகத்தே - ஏ - அசை. வீட்டகத்தே என்பது வீடகத்தே என எதுகை நோக்கிக் குறுகிநின்றது. ஆடகச்சீர் மணிக்குன்றே என்பதைச் சீர் ஆடகக்குன்று என்றும், சீர் மணிக்குன்று என்றும் இயைத்து உரைநடைசெய்க. சீர் ஆடகம் என்பது நால்வகைப் பொன்களில், சிறப்பான ஆடகப்பொன்னைக் குறிக்கிறது சீர் மணிக்குன்று என்பது ஒன்பது மணிகளிற் சிறப்பான மாணிக்கத்தைக் குறிக்கிறது. பொன் ஆனது சிவபெருமானுடைய நிறத்தையும், மணியானது, அவன் பெறுதற்கு அரியபொருளென்பதையும் குறிக்கின்றன. குன்று என்பது சிவபெருமானுடைய என்றும் மாறாத ஒரு தன்மைத்தான நிலையைக்குறிக்கிறது. இடையறா அன்பு - பிறிதொரு பொருளிலும் பற்றுவையாது சிவபெருமான் ஒருவனிடத்திலேயே நிலையான பற்றுவைத்திருக்கும் மெய்யன்பு. இத்தகைய மெய்யன்பானது, அதனையுடையவரைப் பேரின்ப வீட்டினிடத்துத் தப்பாது சேர்ப்பிக்குமாதலால் இடையறா அன்புனக்கென் ஊடகத்தே நின்றுருகத்தந்தருள் என்று சிவபெருமானுக்கு அறிவுறுத்தல் செய்தருளினர். என் ஊடகத்தே - ஏ - அசை. இதனை என் அகத்தூடே என மாற்றுக.

---

18. ஆமாறுன் றிருவடிக்கே யகங்குழையே னன்புருகேன், பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்

***தேளிர், கோமானின் றிருக்கோயில் தூகேன்மெழு கேன் கூத்தாடேன், சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே.*** ***அ.***

[ப-ரை] புத்தேளிர் கோமான் - தேவர்களுக்கெல்லாம் தலைவனாகிய மாதேவனே; உன் திருவடிக்கே ஆமாறு - உன் திருவடிப் பேற்றுக்கு ஆளாகுந் தகுதியுடையனாகும்படி; அகங்குழையேன் - (நின்திருவடிப்பேற்றை யடையும்படி நீ எனக்குச்செய்த பேரருட் செயலை நினைந்து) நான் மனம் நெகிழமாட்டேன்; அன்புருகேன் - (மனம் நெகிழ்தல்பற்றி) அன்பினாலே கசிந்துருகமாட்டேன்; புகழ்ந்துரையேன - (அவ்வன்புபற்றி நினதருட்செயலை)ப் புகழ்ந்து பேசமாட்டேன்; பூமாலை புனைந்தேத்தேன் - பூமாலைதொடுத்துச் சாத்தி வழிபடமாட்டேன்; தூகேன் மெழுகேன் - நீ எழுந்தருளியிருக்குந் திருக்கோயிலை அலகிட்டு மெழுகமாட்டேன்; கூத்தாடேன் - (நின்திருவடிப்பேற்றை யடைதற்குரிய களிப்பினாலே) கூத்தாடமாட்டேன்; சதுராலே சார்வானே - (மேலே கூறப்பட்ட சரியைப்பணிகளை அன்பினாலே செய்யுந் தொண்டர்களுக்கு) நினது செயல் ஆற்றலை உதவி அவர்களிடஞ் சேர்ந்திருப்பவனே; சாமாறே விரைகின்றேன் - (சரியைப்பணிசெய்து நினது செயலாற்றலை யடைந்து மீளப்பிறவியில் வீழ்த்தும் மலவாசனையை நீக்கி, இந்த உடல் நீங்கும்பொழுது நின்திருவடிப் பேற்றையும், சீவன் முத்தத்தன்மையையும் அடையாத மக்கள் இவ்வுலகில் இறத்தல் போல) நானும் இறக்கும்படி விரைந்து செல்லுகின்றேன். நான் நினது சரியைப்பணிகளைச் செய்யும்படி எனக்கு ஆற்றலையுதவி அருள்செய்ய வேண்டுமென்பது குறிப்பெச்சம்.

[வி·ரை] சீவன் முத்தர்கள் ஞானநிட்டையினின்று நீங்கி இருக்குந்தருணத்தில், அவர்களைத் தாக்குதற்குரிய பிராரத்துவவினை மலவாசனை தம்மைத் தாக்காதிருக்கும்படி, தாம் திருக்கோயிலில் செய்யத்தகும் சரியைப்பணிகளைச செய்யவில்லையென்றும், அங

ஙனம் அச்சரியைப் பணிகளைச் செய்யாதிருத்தல் நிகழாதிருக்கும் படி அருள்செய்தல் வேண்டுமென்றும் அடிகள் இப்பாட்டில் இறைவனுக்கு முறையீடு செய்கின்றார். சரியைப்பணிகள் புறவுலகத்திலே நிகழ்ந்து சீவன் முத்தர்களுக்கு புறவுலகக்காட்சி தென்படாதிருக்கும்படித் தடுத்தற்குப் பொருத்தமான பணிகளாயிருப்பதால் சிவஞானபோதம் 12-வது சூத்திரத்தில் மேலான மெஞ்ஞானமடைந்த சீவன் முத்தர்களுக்கும் திருக்கோயிலிற் செய்யும் பணிகளாகக் கூறப்பட்டிருக்கின்றன. செயல் மிகுதியாய் விளங்குதலுடைய இச்சரியைப்பணிகள் செய்தற்கும், வேட்கையும், அறிவும் துணைகளாக உடன் நிகழ்கின்றன. ஆதலாலே சரியைப்பணிகள் வேட்கை, அறிவு, செயல்கள் மூன்றும் இறைவன்பால் சீவன முத்தர்கள் நிகழ்த்துதற்குத் தக்கபணிகள். இப்பாட்டில் அகங்குழைதல், அன்புருகுதல், அறிவு பற்றி மனத்தாற்செய்யப்படும் பணிகளாகவும்; புகழ்ந்துரைத்தல் வேட்கைபற்றி நாவாற்செய்யப்படும் பணிகளாகவும், திருக்கோயிலில் அலகிடல், மெழுக்கிடல், பூமாலை புனைதல், கூத்தாடல், செயல்பற்றி உடலாற் செய்யப்படும் பணிகளாகவுங் கூறப்படுகின்றன. சதுர் என்பது சதுரப்பாடு, திறமை; அதாவது செயலாற்றல். அடியாரொருவர் தன் முனைப்பு உணர்வு சிறிதுமின்றி சரியைப் பணிசெய்யும்பொழுது அவர் பணிசெய்தற்கு வேண்டப்படும் அறிவு, வேட்கை, செயல் மூன்றும் ஒன்றுபட்டுச் சேர்ந்திருக்கும் வண்ணம் இறைவன் அவரோடு பிரிப்பின்றி அத்துவிதமாய்ச் சேர்ந்திருத்தலால் "சதுராலே சார்வானே" என்றார். அங்ஙனம் இறைவன் சேர்ந்திருத்தலால் சீவன் முத்த அடியாரைத் தாக்குதற்குரிய மலவாசனை அவரைத்தாக்குதற்கு வலியில்லாமற் போகின்றது. சாமாறே விரைகின்றேன் - சாதல் உலகில் மீளப் பிறத்தற்கும் காரணமாயிருத்தலால், தாம் சரியைப்பணிகளை செய்து மலவாசனை தாக்குதலை ஒழியாமலிருப்பது பற்றி அடிகள் "சாமாறே" என்றும், அச்சாவு விரைவில் நிகழ்தலால் விரைகின்றேன் என்றுங்கூறினார்.

---

19. வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே. ௯.

[ப-ரை] வான் ஆகி (உம்) - வெளி ஆகியும்; மண் ஆகி (உம்)- மண்ணாகியும்; வளி ஆகி (உம்) - காற்றாகியும்; (நீர் ஆகி உம்) - (நீராகியும்); ஒளி ஆகி (உம்) - ஒளியுடைப் பொருளாகிய தீ, ஞாயிறு, திங்கள் ஆகிய இவைகளாகியும்; ஊன் ஆகி (உம்) - (உயிர் களுக்கு) உடல்களாகியும்; உயிர் ஆகி (உம்) - எண்பத்திநான்கு நூறாயிரயோனி பேத உயிர்களாகியும்; உண்மையும் ஆய் (உம்) - மெய்யறிவுடையவர்க்கு மேலே கூறப்பட்ட உயிரில் பொருள்களி லும், உயிர்ப்பொருள்களிலும் உண்டு என்று உணரும்படி விளங்கு கின்றவனாகியும்; இன்மையும் ஆய் (உம்) - மெய்யறிவு இல்லாத வர்க்கு உயிரில் பொருள்களாலும், உயிர்ப்பொருள்களாலும் அவர்க ளறியாதபடி மறைபட்டு இல்லையெனும்படி, விளங்காமலிருக்கின்ற வனாகியும்; கோன் ஆகி (உம்) - அவ்வுயிரில் பொருளை இயக்கு கின்ற தலைவனாகியும், உயிர்ப்பொருளை இயக்குதலும், அறிவித்தலும் செய்கின்ற தலைவனாகியும்; யான், எனது என்று அவர் அவரை கூத்தாட்டுவான் ஆகி (உம்) - அங்ஙனம் நீ, உண்மையில் உயிர்ப் பொருள்களுக்கெல்லாம் தலைவனாயிருப்பினும் ஒவ்வோருயிரும் தனது அறியாமை நிலையில் யானே தலைவன் என்றும், தான் நுக ரும் பொருளைத் தன்னுடையதென்றும் மயங்கி யறிந்து உலகில் நடிக்கும்படி செய்கின்றவனாகியும்; நின்றாயை - நிற்கின்றவனாகிய உன்னை; என்சொல்லி வாழ்த்துவன் - எங்ஙனம் நான் உனது புகழை நா உரையிலடங்கும்படியாகக் கூறி வாழ்த்துவேன் (வாழ்த்த முடியாதென்றபடி).

[வி-ரை] வான் ஆகி, மண் ஆகி, வளி ஆகி, ஒளி ஆகி - ஒளி யென்பது பதவுரையில் கூறியபடி மூன்று ஒளிப்பொருள்களையும்

குறிக்கின்றது. இனம்பற்றி இங்கே கூறப்படாத நீரையும் சேர்த்துப் பொருளுரைக்கப்பட்டது. இதனால் சிவபெருமானுடைய எட்டு வடிவப்பொருள்களும கூறப்பட்டன. ஊன் ஆகி - ஊன்-உடல்; ஆகுபெயர். உண்மையும் ஆய் இன்மையும் ஆய்-இதனாலே மெய்யறிவுடையவர்களுக்கு எல்லாப்பொருள்களும் சிவமாகத்தோன்றுதலும், மெய்யறிவு இல்லாதவர்களுக்கு அவை மேலீடாகக்காணப்படும் பூதங்களாகத் தோன்றுதலுங் கூறப்பட்டன. "பரத்தை மறைத்தது பார் முதற் பூதம் — பரத்தின் மறைந்தது பார் முதற் பூதம்" என்று திருமூலர், திருமந்திரம் 2290-வது பாட்டில் கூறியிருத்தல் காண்க. கோன் ஆகி - சிவபெருமான் உயிரில் பொருள்களை இயங்கச் செய்தலால் தலைவன்; உயிர்ப்பொருள்களை இயக்குதலும், அறிவித்தலும் செய்தலால் தலைவன். இங்ஙனம் தலைமைத்தொழில் செய்வதற்காகவே மேலே கூறப்பட்ட எட்டுவடிவங்களிலும் அவன் அமர்ந்திருக்கின்றான். "ஆதிபகவன் முதற்றே உலகு" என்று திருவள்ளுவர் கூறியருளினார். யான், எனது என்று அவர் அவரை கூத்தாட்டுவான் ஆகி - இது உயர்திணை உயிர்ப்பொருள்களுக்கும், அஃறிணை உயிர்ப்பொருள்களுக்கும் பொருந்தும். அவர் அவரை என்பதை அஃறிணைப்பொருள்களுக்கும் கொள்ளுக. யான்யென்பது ஒவ்வோருயிரும் சிவபெருமான் தனக்குத் தலைவனாயிருப்பதை அறியாது தானே தலைவனென்று மயங்கியறிதலையும்; எனது என்பது ஒவ்வோருயிரும் தான் உலகில் நுகரும் பொருளை சிவபெருமானால் கொடுக்கப்பட்டதென்றதை யறியாது தானே தேடிப்பெற்ற பொருள் என்று மயங்கியறிதலையுங் குறிக்கின்றன. இங்ஙனம் மயங்கி அறிதல், உயிர்களுடைய கட்டு நிலையில் அவற்றின் அறியாமையினாலுண்டாகின்றது. இம்மயக்க அறிவிலிருந்து நீங்கிய உயிர் வீட்டின்பமடைய வல்லது. "யான், எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்குயர்ந்த உலகம்புகும்" என்றார் திருவள்ளுவர் (346-வது பாட்டு). கூத்தாட்டுதல் என்பது நாடக அரங்கிற்போல பொய்யாக நடிக்கும்படிசெய்தல். என் சொல்லி வாழ்த்துவன்? - ஓர் எல்லைக்குட்படாது எங்கும் நிறைந்து எல்லாம் வல்லவனாயிருக்கும்

சிவபெருமானை எல்லைக்குட்பட்ட நா உரைகளால் வாழ்த்த முடியாது என்பது கருத்து. திருநாவுக்கரசு அடிகள் (6-95-7) பாட்டில், "பூமிமேற் புகழ்தக்க பொருளே உன்னை - யென்னுனை யென்னுனை யென்னினல்லாலேழையே னென்சொல்லி யேத்துகேனே" என்று கூறியிருத்தல் காண்க. வான் முதலிய ஒவ்வொரு சொற்களுக்குப்பின்னும் உம் தொக்கி நிற்கிறது. தொகுத்தல் விகாரம். இந்தப்பாட்டில் அடிகள் சிவபெருமானுடைய பொது இயல்பைக் கூறினார். சிவபெருமானுடைய சிறப்பியல்பை ஒருவரறிந்தாலன்றி அவர் மெய்யுணர்தலை அறியமுடியாதென்று அடிகள் உலகிற்கு அறிவுறுத்தல் செய்தருளினார்.

---

## ௩. சுட்டறுத்தல்.

சுட்டறுத்தல் என்பது இது குடம், இது படம், இது மனை என்று உலகப்பொருள்களைப் பகுத்தும், சுட்டியும் கருவிகரணங்களாலறியும் ஒருபுடை அறிவை ஒழித்தல். இங்ஙனம் சுட்டியறிதலால் சிவக்காட்சி மறைந்து உலகங்காட்சிப்பட்டு மயக்கவறிவு தோன்றிப் பிறவிக்கு வித்தாதலால் சுட்டறுத்தல், அறிவுறுத்தலின் கீழ் வைக்கப்பட்டது.

[எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.]
திருச்சிற்றம்பலம்.

25. வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
    பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
    பதைத்துருகு மவர்நிற்க என்னை யாண்டாய்க்கு
உள்ளந்தா ணின்றுச்சி யளவு நெஞ்சாய்
    உருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
    கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே. ௧௦.

[ப-ரை] அண்ணா - எனது தந்தையே; வெள்ளம்தாழ் விரி சடையாய் - வானிலிருந்து இழிந்த கங்கை ஆற்றுப்பெருக்கின் வேகத்தை அடக்கிவைத்திருக்கிற விரிந்த சடையை யுடையவனே என்றும்; விடையாய் - எருதை ஊர்தியாக உடையவனே என்றும்; விண்ணோர் பெருமானே எனக்கேட்டு - தேவர்களுக்கு முழுமுதற் றலைவனே என்றும் பிறர் கூறிய சிவபெருமானது புகழைக்கேட்டு; வேட்ட நெஞ்சாய் - அக்கேள்வி மாத்திரையானே சிவபெருமானிடத்தில் அன்புடைய நெஞ்சினராய்; பள்ளம்தாழ் உறுபுனலில் - பள்ளத்தை நோக்கி இயல்பாக விரைந்துசெல்கின்ற நீரைப்போல; கீழ்மேலாக - உடம்பின் உள்ளும்புறமும்; பதைத்து உருகும் அவர் நிற்க - உடல் நடுங்கி அன்பினாலே நினைந்து உருகுகின்ற அன்பர்கள் நின்றால் ஆண்டருளப்படாமல் எப்பொழுது தங்களை ஆண்டருள்வான் என்று காத்துக்கொண்டிருப்ப; என்னை ஆண்டாய்க்கு- (திருப்பெருந்துறையில் அடியார் கூட்டத்தோடுவந்து) என்னை ஆண்டருள் செய்தவனாகிய உனக்கு; உள்ளம்தாள் நின்று உச்சி அளவும் நெஞ்சாய் உருகாது - எனது அடியிலிருந்து தலை உச்சி வரையும் உள்ள, உடம்புமுழுதும் நெஞ்சாயமைந்து உருகுதல் போல என்நெஞ்சு உன்னை நினைந்து உருகாது; தீவினையினேற்கு- (அதனால்) தீவினைப்பயனையுடைய எனக்கு; நெஞ்சம் கல்லாம் - நெஞ்சமானது கல்லைப்போல் கடினமாயிருக்கிறது; உடம்பு எல்லாம் கண்ணாவெள்ளம் தான்பாயாது - எனது உடம்பு முழுவதும் கண்களாக இருந்து அக்கண்களிலிருந்து அன்பினாலழுத கண்ணீர், வெள்ளம் போல வடிந்து கீழேபாயாது (அதனாலே); கண் இணையும் மரம் ஆம் - இரண்டு கண்களும் மரம்போல வலியன ஆகும்.

[வி-ரை] வெள்ளம்தாழ் விரிசடையாய் - இது இறைவனுடைய பேராற்றலைக் குறிக்கிறது. விண்ணோர் பெருமானே - இது இறைவனுடைய முழுமுதற்றலைமையைக் குறிக்கிறது. வேட்ட நெஞ்சாய்ப் பதைத்துருகும் அவர் - பதைத்துருகுதல் அன்

பின் பெருககைக்குறிக்கிறது. அவர் - அறிசுட்டுப்பெயராய் அடி யாரைக் குறிக்கிறது. உள்ளம் தாள்நின்று உச்சி அளவும் நெஞ் சாய் உருகாது - நினைந்து உருகும் நெஞ்சானது இப்பொழுது உடம்பிலுள்ளபடி சிறிய இட அளவினை யுடையதாயிராமல், உள்ள மானது தாளிலிருந்து, உச்சிவரையும் விரிந்திருக்க வேண்டுமென் பது கருத்து. ஆல்-அசை. உடம்பு எல்லாம் கண்ணுவெள்ளம் தான் பாயாது - நினைந்து உருகுதலின் பயனுக கண்ணீர் வடிவதற்கு முகத்திலிருககிற கண்களிரண்டும் உடம்பு முழுவதும் பரந்திருக்க வேண்டும் என்பது கருத்து. ஆல் - அசை. நெஞ்சம் கல்லாம் கண் இணையும் மரம் ஆம் - நெஞ்சம் கல்லாம் என்பதற்கு உள்ளம், தாள் நின்று உச்சி அளவும் உருகாது என்பதைக்காரணமாகவும், கண் இணையும் மரம் ஆம் என்பதற்கு உடம்பு எல்லாம் கண்ணுவெள்ளம் தான் பாயாது என்பதைக் காரணமாகவும் நிரனிறையாகக் கொள்க. தீவினையினேற்கே - தீவினையினேன் + கு + ஏ. கு - நான்காம் வேற் றுமை உருபு. தாம் முன்செய்த தீவினை காரணமாக, தமது நெஞ் சம் நினைந்து உருகி அதனுலே கண்களிலிருந்து நீர்ப்பெருக்கு கீழே வடியவில்லை என்று அடிகள் கூறுகின்ருர். இந்தப்பாட்டில் 3, 4, அடிகளில் சீவன் முத்தர்களாகிய அடியார்களுக்கு ஒரோவழி மல வாசனை காரணமாக மெய்யுணர்வு நீங்கச் சுட்டறிவுண்டாகும் பொழுது, சிவக்காட்சி மறைந்து உலகம் காட்சிப்படுவது அன் பின்மையாலுண்டாகும் உடல் வெளிப்பாடுகள். இதனுல் சீவன் முத்தர்கள் தங்களிடம் மலவாசனை தோன்றுதற்கிடங்கொடாமல் விழிப்பாயிருக்கவேண்டுமென்று அவர்களுக்கு அறிவுரையாக அடி கள் தம்மேல் வைத்து இது கூறியவாருயிற்று.

---

26. வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான வினைக்கேடனென்பாய் போல
இனையனு னெனறுன்னை யறிவித் தென்னை
யாட்கொண்டெம் பிரானுனுய்க் கிரும்பின் பாவை

அனையநான் பாடேனின் றாடே னந்தோ
அலறிடே னுலறிடே னாவி சோரேன்
முனைவனே முறையோநா னான வாறு
முடிவறியேன் முதலந்த மாயி னானே. கக.

[ப-ரை] முதல் அந்தம் ஆயினானே - தோற்றத்திற்கும், முடிவுக்கும் காரணமாயிருப்பவனே; வினையிலே கிடந்தேனை - நல்வினை தீவினைகளில் உழன்று அவற்றைக் கடக்கமுடியாதவாளாவிருக்கின்றவனாகிய என்னிடம்; புகுந்து நின்று - (திருப்பெருந்துறையில் வலிய அந்தணனுருவில்) எதிர்ப்பட்டு வந்து நின்று; போது - நீ என்னிடம் வா; நான் வினைக்கேடன் என்பாய் போல- "நான் உன்னுடைய வினையை ஒழிக்க வல்லேன் என்று சொல்பவன் போன்று"; நான் இனையன் என்று உன்னை அறிவித்து - "நான் இத்தன்மையன் என்று" கூறி உன்னை நான் அறியும்படி செய்து; என்னை ஆட்கொண்டு - என்னை அடிமையாக ஆண்டருள் செய்து; எம்பிரான் ஆனாய்க்கு - எனக்கும் பிற அடியார்களுக்கும் ஆண்டவனாகிய உன் பொருட்டு; இரும்பின்பாவை அனைய நான் - இரும்பினாற் செய்த பதுமைபோல உருகாத மனமுடைய நான்; பாடேன் — அன்பினாலே பாடமாட்டேன்; ஆடேன் - நின்று கூத்தாடமாட்டேன்; அந்தோ - ஐயோ; அலறிடேன் - கதறமாட்டேன்; உலறிடேன் - உரை தடுமாறமாட்டேன்; ஆவிசோரேன் - உயிர் தளரமாட்டேன்; முனைவனே - தலைவனே; நான் ஆனவாறு முறையோ - இங்ஙனம் உன்னிடத்தில் அன்பிற்குரிய செயல்களில்லாதிருப்பவனாய் நானானவகை முறைமையாகுமா? முடிவறியேன் - இதனால் எனக்கு வரும் விளைவுயாதென்று நான் அறியமாட்டேன்.

[வி-ரை] வினையிலே கிடந்தேனை - வினையென்பது நல்வினை தீவினைகள். கிடந்தேனை - கிடந்தேனிடம்; ஏழாம் வேற்றுமை உருபுமயக்கம் தெளிவுபற்றி கிடக்கின்றேன் என நிகழ்காலத்

தாற் கூறற்பாலது இறந்த காலத்தாற் கூறப்பட்டது. இருவினைகளிலும் உழலுதல் ஞானசாரியனால் ஆளப்படுதலுக்குத் தடையாயிருத்தலின் வினையிலே கிடந்தேனை என்றார். வினைக்கேடன் - வினைக்குக் கேடுசெய்கின்றவன்; அதாவது வினையை ஒழிக்கவல்லவன். என்பாய்போல - என்று சொல்பவன்போல. நான் இனையன் என்று உன்னை அறிவித்து - "நான் என்பது இங்கே சிவபெருமானைக் குறிக்கிறது." இதனால் சிவபெருமான் அடிகளை ஆளுதற்குரிய ஆண்டவனென்றும், அடிகள் ஆளப்படுதற்குரிய அடிமை என்றும் அடிகளுக்கு அறிவித்தல் கூறப்பட்டது. இங்ஙனம் சிவபெருமான் அடிகளை ஆளவந்த ஆண்டவனென்று கூறுதலிலேயே அவ்வாளுகைக்கு முன், சிவபெருமான் அடிகளுடைய வினையை ஒழிக்கவல்லவனென்பது தானே போதருதலால் நான் வினைக்கேடன் என்பாய் போல என்றார். இதனாலே சிவஞானபோதம் 8-வது சூத்திரத்தில் கூறியபடி ஐம்புலவேடரில் வளர்ந்து இருவினையிலே கிடந்து தன்னை மறந்த உயிருக்குப் பக்குவகாலத்தில் சிவபெருமான் குருவாய் மானுடவடிவில் வந்து தன்னை இன்னானென்று அறிவித்து ஆண்டருளும் முறைமை கூறப்பட்டது. பாடேன், ஆடேன், அலறிடேன், உலறிடேன், ஆவிசோரேன் - பாடுதல், ஆடுதல், அலறுதல், உலறுதல் இவை நான்கும் அன்பு காரணமாக உடலில் வெளிப்படுஞ் செயல்களையும், ஆவிசோருதல், அன்புகாரணமாக உயிருக்குண்டாகும் விளைவையுங் கூறுகின்றன. அடிகள் தம்மை ஆண்டு அருள்செய்த ஆண்டவனிடம் மெய்யன்பு இல்லாததனாலே அம்மெய்யன்பு காரணமாக உண்டாகுஞ் செயல்கள் தம்மிடத்தில் உண்டாகவில்லையென்று மனம் வருந்திக்கூறுகின்றார். இதனால் சுட்டறிவை ஒழித்தலுக்கு சிவபெருமானிடம் மெய்யன்பானது இன்றியமையாது வேண்டப்படுமென்ற உண்மையை அடிகள் தம்மேல்வைத்துக் கூறியருளினார் என்பது ஆயிற்று. முதலந்தமாயினானே என்ற விளிச்சொல்லும், முனைவனே என்ற விளிச்சொல்லுஞ் சிவபெருமான் அடிகளை அடிமையாக ஆண்டருளுதற்கு உரிமையுடையவனென்பதைக் குறிப்பாலுணர்த்துகின்றன.

30 சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
  கண்ணிணைநின் றிருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையு மம்மலர்க்கே யாக்கி வாக்குன்
  மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
  மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
  தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே. கஉ.

[ப-ரை] செந்தாமரைக்கா டனையமேனித் தனிச்சுடரே - மிகுதியான சிவந்த தாமரை மலர்கள் போன்று சிவந்த நிறமுடைய திருமேனியையுடைய ஒப்பற்ற பேரொளிப்பொருளே; நாயினேன் தன் - நாய்போன்ற இழிவான என்னுடைய; கண் இணைநின் திருப் பாதப்போதுக்கு ஆக்கி (உம்) - இரண்டு கண்களின் ஒளியையும் இணைப்பதாயுள்ள நெற்றிக்கண்ணாகிய அகக்கண்ணைது உன்வயப் பட்டு உன்னையே அறியும்படி செய்வித்தும்; சிந்தனைநின் தனக்கு ஆக்கி (உம்) — உள்ளமானது உன்வயப்பட்டு உன்னையே நினைந்து அன்பினால் உருகும்படி செய்வித்தும்; வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி (உம்) - அவ்வுள்ளம் இன்புறும்படி உன்னுடைய திருவடி களையே சார்ந்து வழிபடும்படி செய்வித்தும்; வாக்கு உன்மணி வார்த்தைக்கு ஆக்கி (உம்) - இங்ஙனம் உணர்வின்கண் வரும் இன் பத்திற்கேதுவாகிய உனது ஒளிபொருந்திய புகழை நாக்கினாலே புகழும்படி செய்வித்தும்; ஐம்புலன்கள் ஆரவந்தனை - உடலின் கண்ணுள்ள மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளா லும் நான் உன்னை நேரே அறிந்து அனுபவிக்கும்படி (திருப்பெருந் துறையில் அந்தணனுருவில்) நீ எனக்கு முன்னே வலியவந்தாய்; உள்ளே புகுந்து - எனது உள்ளத்தினுள்ளே புகுந்து (மலமறுத்துச சிவமாக்கி); ஆட்கொண்ட-(என்னுடைய தலைமேலே உன்னுடைய திருவடிகளை வைத்துத் தீக்கைசெய்து) ஆண்டருளிய; பெரும் விச்சை மால்அமுதம் கடலே - பேரறிவு, பேரன்பு, பேரின்பம் வடி

ங்களாயுள்ளகடலே; மலையே - மலைபோல எதனாலும் மாறுதலடை பாது என்றும் ஒருதன்மைத்தான நிலையிலிருக்கின்றவனே; இரண் மெ இலித்தனியனேற்கே - சத்துத் தன்மையாவது, அசத்துத்தன் மையாவது தனியே உரியதல்லதாய் உள்ள எனக்கு; உன்னைத் தந் தனை - உனக்குரியனவாகிய எண்குணங்களையும் என்னிடத்திலே பதியும்படி செய்தருளினாய்.

[வி-ரை] செந்தாமரைக் காடனையமேனி - காடு என்பது மிகு தியைக் குறிக்கிறது. சிவபெருமானைச் "செந்தாமரை வண்ணன்" என்று திருமந்திரம் 405-வது பாட்டிலும், "செவ்வானிற்செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம்" என்று 130-வது பாட்டிலும் திருமூலர் கூறுதல் காண்க. தனிச்சுடரே - சிவபெருமான் ஞாயிறு, திங்கள், தீ முதலிய ஒளிப்பொருள்களை எல்லாம் ஒளிரும்படிசெய்து தான் பிறிதொரு பொருளாலும் ஒளிரப்படாத பொருளாதலின் தனிச் சுடரே என்றார். இதற்குச்சரியான வடமொழிச் சொற்றொடர் "சுயஞ்சோதி" என்பது. அடிகளுக்குத் தீக்கைசெய்து வீடுபேறு அளித்தலுக்கு இச்சிறப்பியல் உருவமே தக்கதாதலின் அடிகள் தனிச்சுடரே என்று விளித்தார். "தானந்தமாமென நின்ற தனிச் சுடர்" என்று திருமூலர் திருமந்திரம் 2081-வது பாட்டில் கூறி யிருத்தல் காண்க. இதனானே அடிகளுக்கு அந்தணர் கோலத்தில் வந்த சிவபெருமான் பேரொளியாய் விளங்கினாரென்பது குறிக்கப் படுகின்றது. அடிகள் (5-95)-வது பாட்டில் "ஒளிசெய்மானுட மாக நோக்கியும்" என்று சிவபெருமானது ஒளி உருவத்தைக் கூறி யிருத்தல் காண்க. கண் இணைநின் திருப்பாதப்போதுக்கு ஆக்கி (உம்) - கண் இணை என்பது இரண்டு கண்களிலுள்ள ஒளியும் வந்து ஒன்றுசேர்கின்ற சுழுமுனை நாடியிலுள்ள நெற்றிக்கணாகிய அகக் கண்ணைக் குறிக்கிறது. இது உலகப்பற்றுடைய மக்களுக்கு விளங் கித்தோன்றாத மூன்றாவது கண் என்றும் அருட்கண் என்றும், அககண் என்றும், ஞானக்கண் என்றும் சொல்லப்படும். "அருட் கண்ணுளோர்க்கெதிர் தோன்றும் அரனே........தெருட்கண்ணி

ஞோர்க்கெங்குஞ் சிரொளியாமே" என்று திருமந்திரம் 1808-வது பாட்டிலும், "அருட்கண் விழிப்பித்து" என்று 114-வது பாட்டிலும் திருமூலர் கூறுதலால் இங்கே கூறப்பட்ட 'கண்இணை' அருட்கண்ணைக்குறிக்கிறதெனை அறிக. மேலும் பின்னே வருகிற ஐம்புலன்களிலே புறக்கண்கள் இரண்டும் அடங்குதலால் இங்கேயும் புறக்கண்களைக் கூறவேண்டுவதற்குக் காரணமில்லை. இந்த அகக்கண் மெய்யறிவுக்குக் காரணமாயிருக்கிறது. ஏனைய நான்கு பொறிகளின் அறிவும் இந்த அகக்கண்ணில் அடங்கியுள்ளது. சேக்கிழார் அடிகள் பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம், 109-வது பாட்டில் "ஐந்து பேரறிவுங் கண்களேகொள்ள," என்று சொன்னது இக்கருத்துப்பற்றி கண்இணை நின திருப்பாதப்போதுக்கு ஆக்கி என்பது அடிகள் சிவபெருமான் திருவடிகளையே அறிந்து கொண்டிருத்தலைக் குறிக்கிறது. சிந்தனைநின தனக்கு ஆக்கி (உம்)- சிந்தனை என்பது அன்பினாலே சிவபெருமானையே நினைந்துகொண்டிருக்கும் உள்ளத்தின் நினைவைக்குறிக்கிறது. மேலே கூறப்பட்ட பெரியபுராணப்பாட்டில் " அளப்பருங்கரணங்கள் நான்குஞ் சிந்தையேஆக," என்று கூறப்பட்டிருத்தல் காண்க. வந்தனையும் அம் மலர்க்கே ஆக்கி(உம்)-இது, சிந்தனைசெய்த உள்ளத்தினாலே திருவடிகளைச்சார்ந்து இன்புறுஞ் செயலைக்குறிக்கிறது. கட்டுநிலையிலுள்ளவர்களுக்குப் புறத்தே உலகபோகப் பொருள்களைச்சார்ந்து இன்புறுதல் அறிவினாலும், இச்சை அல்லது அன்பினாலும் வெளிப்படுகிற செயலாயிருத்தல்போல வீட்டுநிலையிலுள்ளவர்களுக்கு அகத்தே அவர்கள் சிவபெருமானுடைய திருவடிகளின கண்வைத்த அறிவாலும், அன்பாலும் உண்டாகி, அவனுடைய திருவடிகளைச்சார்ந்து இனபுறுதல் செயலாகின்றது. "அயராவன்பினரன் கழல் செலுமே," என்று சிவஞானபோதம் 11-வது சூத்திரம் கூறுதலை நோக்குக. இந்தச்செயல், செயலற்ற தன்மையாகும். "சேவடி சேரல் செயலறல்தானே" என்று திருமந்திரம் 1849-வது பாட்டுக் கூறுதல் காண்க. வாகரு உன் மணிவார்த்தைக்கு ஆகக்கி (உம்) மணி என்பது இங்கே மணியின் கண்ணுள்ள ஒளியைகுறிக்கிறது;

ஆகுபெயர். வார்த்தை - புகழ். சிவபெருமானுடைய மெய்ப்புக ழானது எங்கும் நிறைந்திருக்கிற ஒளியோடுகூடியதாதலின் 'மணி வார்த்தை' என்றார். தேவாரம் (1 - 17 - 2) பாட்டில் "நிலையார்தரு நிமலன்வலிநிலவும் புகழொளி" என்று கூறியது காண்க. தேவாரம் (6 - 15 - 1 ) பாட்டில் சிவபெருமானை, "உண்ணின்ற நாவிற் குரையாடியாம்," என்று கூறியிருக்கின்றார். அடிகள் சிவபெரு மானது புகழைப்பற்றித் திருவாசகத்தில் கூறியதை இங்கே குறிப்பா லுணர்த்துகிறார். அடிகள் (48 - 7) பாட்டில் "பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த—மாசின்மணியின் மணிவார்த்தை" என்று இதனைக்கூறியிருத்தலும் காண்க. அடிகள், சிவபெருமானைத் 'தனிச்சுடரே' என்று விளித்துப் பின் அவன் வயப்பட்ட தம் முடைய அறிவு, அன்பு, செயல், நாவுரைகளாகிய இவற்றைக் கூறு தலால் சிவபெருமானுடைய வியாபகமான ஒளியில் தன் ஆன்ம ஒளி வியாப்பியமாய் அடங்கி அறிவு, அன்பு, செயல்களும், நாவுரை களும் நிகழ்ந்தன என்பதைக் குறிப்பிடுகின்றார். ஆக்கி எனவரும் நான்கு இடங்களுக்குப் பின் உம்மைகள் தொக்கி நின்றன. ஐம் புலன்கள் ஆரவந்தனை — ஐம்புலன் என்பது ஐம்பொறிகளைக் குறிக்கிறது; ஆகு பெயர். ஆர்தல் — நுகர்தல், அநுபவித்தல். ஐம்புலன்கள் ஆர என்றதனாலே உடல், பொறிகள், கரணங்கள் எல் லாம் ஒளிமயமாகிச் சிவகரணம் ஆயின என்பது குறிப்பிடப்பட்டது. தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்—கள்ளப்புலனைந்துங் காளாமணிவிளக்கே" என்று திருமூலர் திருமந்திரம் 1823-வது பாட்டில் கூறியிருத்தல் காண்க. இக்கருத்தை சேக்கிழார் அடிகள் திருஞானசம்பந்த அடிகள் புராணம் 161-வது பாட்டில் "உணர் வினேர்பெற வருஞ் சிவபோகத்தை யொழிவின்றியுருவின்க— ணணையுமைம்பொறியளவினு மெளிவரவருளினை யெனப்போற்றி" என்று கூறியருளினார். உள்ளே புகுந்தபின் ஆட்கொள்ளுதல் நிகழ்தலின் ஆட்கொண்டு உள்ளே புகுந்த என்பதனை உள்ளே புகுந்து ஆட்கொண்ட எனமாற்றி உரைகூறப்பட்டது. உள் — உள்ளம். உள்ளேபுகுதல் என்பது உள்ளத்திலே ஒளிமயமாய்

நிறைந்து மலமறுத்துச் சிவத்தன்மையுடைய தாக்குதல் "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன்",என்று அடிகள்(51-1) பாட்டில் கூறியிருத்தல் காண்க. பெரும்விச்சை மால் அமுதம் கடலே — இது, முறையே சிவபெருமானுடைய சிறப்பிலக்கணங் களாகிய சத்து, சித்து, ஆனந்தத்தைக் குறிக்கிறது. இவை அளவு படாதாதலின் அவற்றிற்கு அடிகள் "பெரும்"முன் அடைகொடுத் துக்கூறியதனோடு கடலே என்றும் அவற்றின்பின் சேர்த்துக்கூறி ஞர். மலையே — மலையே என்பது சிவபெருமான் எல்லாப் பொருள்களுக்கும் பற்றுக்கோடாயிருந்தும், சிறிதும் விகாரம் அடையாதிருததலைக் குறிககிறது. இரண்டும் இலித்தனியனேற்கு - ஆன்மா சத்தாயாவது, அசத்தாயாவது தனியே நில்லாத பொரு ளாய், சத்தைச்சார்ந்து சத்தாயும், அசத்தைச்சார்ந்து அசத்தாயும் உள்ள சதசத்துப்பொருளாதலின், அடிகள் தம்மை இரண்டு மிலித் தனியன் என்றார். தனியன் + ஏன் + கு = தனியனேற்கு. ஏன்- ஒருமைத்தன்மை ஆண்பால் விகுதி. கு - நான்காம் வேற்றுமை உருபு. ஏ - ஈற்றசை. உன்னைத்தந்தனை - அடிகள் சிவபெரு மானை பெரும்விச்சை, மால், அமுதம், கடலே என்று விளித்தபின் உன்னைத்தந்தனை, என்று கூறுதலால் உனக்குரியனவான சத்து, சித்து, ஆனந்தத்தையும் எனக்குத்தந்தருளினாய் என்று பொருள் உரைக்கப்பட்டது. எணகுணங்களும் சத்து, சித்து, ஆனந்தம் என்ற மூன்றிலுமடங்கும். எங்ஙனம் எண்குணங்களும் சத்து, சித்து, ஆனந்தத்திலடங்கும் என்பது (6 - 98 - 10) பாட்டில் "எண்குணத்துளோமே" என்று கூறியிருத்தலாலறிக. உன்னைத் தருதல் என்பது சீவபோதத்தைப்போக்கி சிவபோதத்தைக்கொடுத் தல்; அதாவது சிவமாம் பேரின்பவாழ்வு அடையும்படி செய்தல் இந்த உண்மையை அடிகள் "தந்ததுன்றன்னைகொண்ட தென் றன்னை" என்று (22-10) பாட்டிலுங் கூறியருளினார். "தன்னையே தந்தானென்றுந்தீபற" என்று திருவுந்தியார் 6-வது பாட்டு இந்த உண்மையைக்கூறுகிறது. இந்தப்பாட்டு திருவாசகத்தில் நடுநாய கமாயுள்ள பாட்டு. அடிகள் இந்தப்பாட்டில் சிவபெருமான் திருப்

பெருந்துறைக்கு அந்தணர்கோலத்தில் அடியார்களோடு வந்து தமது சித்தமலமறுத்துச் சுட்டறிவொழித்துச் சிவமாக்கி ஆண்டருளியதை நிகழ்ந்தவாறே உலகரறிந்து உய்யும்படி கூறுகின்றார்.

---

32. கேட்டாரு மறியாதான் கேடொன் றில்லான்
 கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
 நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னும்
 கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
 எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே. கஉ.

[ப-ரை] ஆருங்கேட்டு அறியாதான் - (எவராயினும் தானே இறைவனோடு அத்துவிதமாய்க் கலந்து நின்று அவனை உணர்ந்து அறிதலன்றிப்) பிறரிடம்கேட்டு அறியப்படாதவனும்; கேடு ஒன்று இல்லான் - அழிவு சிறிதும் இல்லாதவனும்; கிளையிலான் - தாய், தந்தை முதலிய உறவினர் ஒருவருமில்லாதவனும்; கேளாதே எல்லாங்கேட்டான் - பிறரிடங்கேளாதே தானாகவே எங்கும் நிகழ்வனவற்றை அறிந்துகொள்ளுகிறவனும்; ஞாலத்துள்ளே நாட்டார்கள் விழித்திருப்ப - உலகிலுள்ள நாட்டுமக்கள் பார்த்துக்கொண்டிருக்கவும்; நாயினுக்குத் தவிசிட்டு - நாயைப்போன்ற கீழ்மையுள்ளவனாகிய என்னை ஓர் இருக்கையில் இருக்கும்படிசெய்து; நாயினேற்கே காட்டாதன வெல்லாங்காட்டி - நாயைப்போன்ற கீழ்மையுள்ளவனாகிய எனக்கு கண்ணினாற்கண்டு அறியக்கூடாதனவற்றை மெய்யறிவால் நான் நேரே அறியும்படி அறிவித்து; பின்னும் கேளாதனவெல்லாங் கேட்பித்தும் - அதற்குப்பின் நான், காதினாலேகேட்டு அறியக்கூடாதனவற்றையெல்லாம் நானே நேரே மெய்யறிவினா

லறியும்படிசெய்தும்; என்னை மீட்டேயும் பிறவாமற்காத்து ஆட்கொண்டான்; என்னை இனி (உலகில்)வந்து பிறவாமல் தடுத்து ஆட்கொண்டு அருளினன்; எம்பெருமான் செய்திட்ட விச்சையே - இது எங்களுடைய தலைவனாகிய இறைவன் (தனது கருணையினால்) எனக்குச்செய்த வல்லமைத் தொழிலேயாகும்.

[வி-ரை] ஆருங்கேட்டு அறியாதான் - இறைவனுடைய சிறப்பியல்பை அவனோடு ஒருவர் அத்துவிதமாய்க்கலந்து நின்று தம் மெய்யுணர்வினால் உணர்தலன்றி காதினாலே பிறரிடம்கேட்டு அறிய மாட்டாமையின் கேட்டாரும் அறியாதான் என்றார். கேடு ஒன்று இல்லான் - ஒன்று என்பதில் உம்தொக்கி நிற்கிறது. ஒன்றும் = சிறிதும். இது என்றும் ஒரு நிலைத்தாயுள்ள இறைவனுடைய சத்துத்தன்மையை(உண்மைத்தன்மையை)க்குறிக்கிறது. கிளையிலான்- இது இறைவனுடைய தான்தோன்றி (சுயம்பு)த்தன்மையைக்குறிக்கிறது. கேளாதே எல்லாங்கேட்டான் - இது இறைவனுடைய முற்றுணர்வைக்குறிக்கிறது. நாயினேற்கே - ஏ-பிரிநிலைப்பொருள். காட்டாதனவெல்லாங் காட்டிப்பின்னும் கேளாதனவெல்லாம் கேட்பித்து - இவை இறைவன் ஞானசாரியனாகத் திருப்பெருந்துறைக்கு வந்து அடிகளுடைய மனத்தினுள்ளே மெய்யறிவுதோன்றும்படி அறிவுறுத்தியதைக குறிக்கின்றன. விச்சை-வித்தையென்ற சொல்லின் போலி; வல்லமைத்தொழில். தானே - தான் - அசை; ஏ - தேற்றம். இப்பாட்டில் அடிகள் சிவபெருமானது அருட்பேராற்றலையும், அதனால் அவன தமக்குச்செய்த அருட்செயலையும் கூறுகின்றார். இவ்வருட்செயலால் சுட்டறிவு முற்றிலும் ஒழிதலால் இப்பாட்டு சுட்டறுத்தலின் கீழ் வைக்கப்பட்டது.

---

34. தேவர்கோ அறியாத தேவ தேவன்
  செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கும் மற்றை

மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோம்
மேவினோம் அவனடியா ரடியா ரோடும்
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே. கச.

[ப-ரை] தேவர்கோ - தேவர்களுக்கெல்லாம் அரசனாகிய தேவேந்திரன்; அறியாத தேவதேவன் - அறியமுடியாத மகாதேவனும்; மற்றை செழும் பொழில்கள் பயந்து காத்தழிக்கும் மூவர் கோனாய் நின்ற முதல்வன் — தேவேந்திரனுக்கு வேறாய், வளப்பமுடைய ஏழுலகங்களையும் முறையே படைத்து, காத்து, அழிக்கின்ற நானமுகன், மால், ருத்திரன் ஆகிய மூவர்களுக்கும் தலைவனாய் என்றும் நிலைபெற்றுள்ள முழுமுதற்கடவுளும்; மூர்த்தி - எல்லாவுலகங்களையும் தனது வடிவமாகவுடையவனும்; மூதாதை - பாட்டனும்; மாதாளும் பாகத்தெந்தை - உமாதேவியாரை இடது பாகத்தில் வைத்திருக்கும் எங்கள் தந்தையும்; யாவர்கோன் - தேவர் மனிதர்களுக்குத் தலைவனுமாகிய சிவபெருமான்; என்னையும் - எளியேனாகிய அடியேனையும்; வந்து ஆண்டுகொண்டான் - (மானுடவடிவில் குருவாய் திருப்பெருந்துறைக்கு) வந்து தீக்கைசெய்து ஆண்டருள்செய்தான்; யாம் ஆர்க்கும் குடியல்லோம் - (நாங்கள் சிவபெருமானாலாட்கொள்ளப் பெற்றமையால்) வேறே எவர்க்கும் அடிமையாயிருக்கமாட்டோம்; யாதும் அஞ்சோம் - எவர்செய்யும் எந்த இடையூறுக்கும் அஞ்சமாட்டோம்; அவனடியாரடியாரோடுமேவினோம் - சிவபெருமானுடைய அடியார்களுக்கும் அடியார்களோடு சேரப்பெற்றோம்; மேனமேலும் குடைந்தாடி யாடுவோமே-மேலும் மேலும் பேரின்பத்தில் மூழ்கித்திளைத்துக் களிப்பினாலே கூத்தாடுவோம்.

[வி-ரை] நான்முகன், மால், ருத்திரன மூவர்களும் தேவேந்திரனுக்கு வேறாய் அவனுக்குமேலான தேவர்களாதலின் மற்றை

மூவர் என்றார். நான்முகன், மால், ருத்திரன் மூவர்களும் பிறப் பிறப்புள்ளவர்கள், சிவபெருமான் அநாதியே பிறப்பிறப்பில்லாதவ னாதலின் சிவபெருமானை மூவர்கோனாய் நின்ற முதல்வன் என்றார். உலகமெல்லாம் சிவபெருமானுடைய திருமேனியாகவமைதலின் அவனை மூர்த்தி எனறார். எல்லாவுயிர்களுக்கும் பிதாவாகிய மும் மூர்த்திகளுக்கும் சிவபெருமான் பிதாவாதலின் அவனை மூதாதை என்றார். சிவபெருமான் தனது பொதுவியல்புநிலையில் அருட்சத்தி யாகிய உமாதேவியாரோடுகூடி எலலாவுயிர்களுக்கும் அவைகளின் தந்தைபோல கருணைசெய்தலின அவனை மாதாளும் பாகத்தெந்தை என்றார். யாவர்கோன் என்றதனாலே தேவர்களுக்கும், மனிதர் களுக்கும் முழுமுதற்றலைவன் எனபது கூறப்பட்டது. ஆண்டா னாகிய சிவபெருமான் அடிமையாக ஆட்கொள்ளப்பெற்றபின் அடி களுக்கு உலகம் காட்சிப்படாது சிவமே காட்சிப்படுதலின் யாமார்க் கும் குடியல்லோம் யாதுமஞ்சோம் என்றார். திருநாவுக்கரசு அடி கள் தாம் "தாமார்க்கும் குடியல்லாத்தன்மையான சங்கரனுக்கு மீளா வாளாய்" அவன திருவடியைக் குறுகியதால் 'நாமார்க்கும் குடியல் லோம் நமனையஞ்சோம்' என்று கூறியதை நோக்குக. மேவுதல் = விரும்பிசசேர்தல். சிவபெருமான் தன்னை ஆட்கொண்டபின், அவ்வாறு முன்னே ஆட்கொள்ளப்பெற்ற அடியார்கூட்டத்தோடு அன்பினாலே உருகிவிரும்பிச் சேர்தலின் மேவினோம் அவனடியா ரடியாரோடும் என்றார். அடிகள் தம்மைச் சிவபெருமான் ஆண் டருளியபின் அடியார் கூட்டத்தில் சேர்த்தருளியதை அதிசயப் பத்தில் கூறியிருத்தல காணக. பேரின்பத்தில் திளைக்குமடியார் களுக்குப் பெரும் போகம (infinite bliss) புதிது புதிதாய் விளைந்து வருவதால் மேன்மேலும் குடைந்தாடி என்றார். முதலாவது வரும் ஆடுதல் முழுகுதலையும், இரண்டாவதுவரும் ஆடுதல் கூத்தாடுதலை யும் உணர்த்தும். ஈற்றிலுள்ள ஏ அசை. அடிகள் இப்பாட்டில் தாம் சிவபெருமானாலாட்கொள்ளப்பெற்றபின் அடைந்த பேரின்ப வனுபத்தைக் கூறுகினறார். இந்தப்பேரின்ப அனுபவம் சுட்டறிவு முற்றிலும் ஒழிந்தபின் உண்டாதலால் இந்தப்பாட்டு சுட்டறுத் தலின் கீழ்வைக்கப்பட்டது.

## ௪. ஆத்துமசுத்தி.

ஆத்துமசுத்தி, ஆன்மசுத்தி என்றுங் கூறப்படும். ஆத்துமசுத்தி, ஆன்மாவினது சுத்தி எனவிரியும். இது தத்துவரூபம் முதல் சிவபோகமீறாகவுள்ள தசகாரியங்களில் ஆறாவது நிலையாக அருள் நூல்களிற் கூறப்பெற்றிருக்கின்றது. மும்மலமும் நீங்கி சீவன்முத்தி நிலையையடைந்த அடிகள் முன்னமே ஆன்மசுத்தியடைந்தவராதலின் இங்கே ஆன்மசுத்தி என்பது எடுத்தவுடல் நீங்குமளவும் அவ்வுடலில் ஒரோவழி தாக்கும் மலவாசனையினின்று நீங்கி ஆன்மா தூய்மையடைதல். தூய்மையடைதலாவது ஆன்மா எனது, யான் ஆகிய உலகப்பற்றில் நழுவாது அருள்வயப்பட்டுச் சிவகாட்சியில் நிலைத்து நிற்றல். சுட்டறுத்தலின் பயனாக அதன்பின் ஆன்மசுத்தி நிகழுதலால் ஆன்மசுத்தி சுட்டறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.]

திருச்சிற்றம்பலம்.

38. கிற்ற வாமன மேகெடு வாயுடை யானடி நாயேனை, விற்றெ லாமிக ஆள்வதற் குரியவன் விரைமலர்த் திருப்பாதம், முற்றி லாவிளந் தளிர்பிரிந் திருந்துநீ யுண்டனை வெல்லாமுன், அற்ற வாறுநின் னறிவுநின் பெருமையு மளவறுக் கில்லேனே. கக.

[ப-ரை] அடிநாயேனை - அடிமையாகிய நாய்போன்ற இழிவுடைய என்னை; எலாம்விற்று - என்னிடத்தில் உள்ளனவாகிய உடல், பொருள், ஆவி மூன்றையும் என்னிடமிருந்து விலையாக வாங்கிக்கொண்டு; மிகஆள்வதற்கு உரியவன் உடையான் - (வாங்கிக்கொண்டதற்கு மிகுதியாகத் தன்னிடத்திலுள்ள சிவபோதத்தைக் கொடுத்து) தன் அடிமையாகக்கொண்டு என்னை ஆள்வதற்குரிமை

யுடையவனும், என்னை அடிமையாகவுடைய ஆண்டவனுமாகிய சிவபெருமானுடைய; முற்றிலா இளந்தளிர் விரைமலர்த்திருப் பாதம் பிரிந்திருந்தும் - மிக்க இளந்தளிர்களைப்போலவும், மண முடைய பூக்களைப்போலவும் மெதுவான திருவடிகளை விட்டுப்பிரிந் திருந்தாலும்; கல் தவா மனமே கெடுவாய் - (அங்ஙனம் சிவபெரு மான் என்னைத் திருப்பெருந்துறையில் விட்டுப்பிரிந்ததற்கு உலகப் பற்றை முற்றிலும் விடாதிருத்தல் காரணமென்பதை யறியாமல்) உலகவாழ்வைப்பற்றிக் கொண்டிருத்தலில் ஆற்றல் கெடாதிருக்கிற மனமேகெடுவாய்; முன் நீ உண்டன எல்லாம் அற்ற ஆறும் - நீ முன் உலகவாழ்க்கையில் வினைப்பயன்களை நுகர்ந்த அநுபவங்களை யெல்லாம் நீ சிறிதும் அறியாதபடி அவைகெட்டொழிந்த தன்மை யையும்; நின் அறிவும் - அவ்வநுபவப்பயன்களை அறியாதிருக்கிற நினது போலி அறிவும்; நின்பெருமையும் - நினது போலிப்பெரு மையும்; அளவறுக்கில்லேனே - இன்னதென என்று நான் அளவு படுத்திச் சொல்லமுடியாமலிருக்கிறேன்.

[வி-ரை] எலாம்விற்று - எலாம் என்பது உடல், பொருள், ஆவி மூன்றையும் குறிக்கிறது. விற்று என்பது - விலையாகவாங்கிக் கொண்டு; அதாவது சிவபோதத்துக்கு விலையாகவாங்கிக்கொண்டு உடல், பொருள், ஆவி மூன்றிலும் சீவனுடைய உடைமைகள் அடங்குதலின் எலாம் என்றார். உடல், பொருள்களில் 'எனது என் பதும்', ஆவி என்பதில் 'யான்' என்பதும் அடங்கும். இந்த யான் என்பதும், எனது என்பதும் சீவபோதமாகும். சிவபெருமான் ஓர் உயிரை ஆண்டு தனது சிவபோதத்தைக்கொடுத்தற்கு முன் சீவ போதத்தை உயிரினிடத்திலிருந்து தான்வாங்கிக்கொள்ளுதல் முறைமையாதலின், எலாம்விற்று என்றார். மிக ஆள்வதற்கு உரி யவன் உடையான் - துன்பத்திற்கேதுவாகிய சீவபோதத்தை வாங் கிக்கொண்டு, பேரின்பத்துக்கேதுவாகிய சிவபோதத்தைக்கொடுத் தல் இணையில்லாதது ஆதலின் மிக ஆள்வதற்குரியவன் என்றார். "தந்ததுன்றன்னைக் கொண்டதென்றன்னைச்சங்கரா யார்கொலோ

சதுரர் — அந்தமொன்றிலா ஆனந்தம் பெற்றேன் யாதுநீ பெற்ற தொன் றென்பால்" என்று அடிகள் (22 - 10) பாட்டில் கூறுதல் காண்க. கட்டுநிலையிலும், வீட்டுநிலையிலும் சிவபெருமான் உயிரை ஆளுதற்குரிய ஆண்டவனும், உயிர் சிவபெருமானால் ஆளப்படுதற் குரிய அடிமையாயும் இருத்தலின் ஆள்வதற்குரியவன், உடையான் என்றார். உடையான் - அடிமையாக உடையவன். முற்றிலா இளந் தளிர் விரைமலர்த்திருப்பாதம் - முற்றிலா இளந்தளிர்=சிறிதும் முற் றாத இளந்தளிர். தளிரும், மலரும் எல்லா உயிர்களுக்கும் இன்ப நலஞ்செய்யும் சிவபெருமானுடைய திருவடிகளின் மென்மைத் தன்மையைக்குறிக்கின்றன. பிரிந்திருந்தும் கிற்றவாமனமே — அடி கள் தான் திருப்பெருந்துறையில் சிவபெருமானைவிட்டுப் பிரிந் திருத்தலுக்குக்காரணம் உலகவாழ்வுப்பற்றினை முற்றும் விடா திருத்தலென்பது கருதி இங்ஙனம் கூறுகின்றார். "அருள் செயன் பரும் நீயுமங்கெழுந்தருளியிங்கெனை — இருத்தினாய் முறையோ வெனெம்பிரான் வம்பனேன்வினைகிறுதி இல்லையே" என்று அடி கள் (5 - 97) பாட்டில் இதனைப்பற்றிக் கூறினதை நோக்குக. இப் படியன்றி, இப்பிறப்புக்கு முந்தின பிறப்பில் அடிகள் சிவபெருமா னுடைய ஆயிரங்கணநாதர்களில் ஒருவராயிருந்து உத்தரகோச மங்கையில் சிவபெருமான் கணநாதர்களுக்கு ஆகம உண்மையை அறிவுறுத்தத்தொடங்கும் பொழுது அங்குவந்த வானவர்கோனு டைய ஆடம்பரத் தோற்றத்தில் அடிகள் மனம் பற்றினதினாலே சிவபெருமான் தம்மை மானுடராக வாதவூரில் வந்து பிறக்கும்படி செய்த ஆணையை நினைந்து கூறினாரென்று சொல்லினும் பொருந் தும். அதனைப்பற்றி அடிகள் (26 - 8) பாட்டில் கூறியிருத்தல் காண்க. கில் = ஆற்றல் அல்லது வலிமை. தவா = கெடாத; அதாவது உலக வாழ்வில் பற்றுவைத்தலில் வலிமைகெடாத. கெடு வாய் - இகழ்ச்சிக் குறிப்புச்சொல்; அடாபாவி யென்பதுபோல. பிரிந்திருத்தலுக்கு உலகவாழ்வுப்பற்று காரணமாயிருத்தலை மனம் நினைந்து, அப்பற்றினை நீக்கவில்லை என்பார் பிரிந்திருந்தும் கிற்றவா மனமே கெடுவாய் என்றார். முன் நீ உண்டன எல்லாம் அற்ற

ஆறும் - உண்டன = முன் நுகர்ந்தனவான வினைப்பயன்கள். படர்க்கைப் பன்மைத்தெரிநிலை வினையாலணையும் பெயர். அறுதல் = நினைப்பில் நில்லாது கெடுதல். ஆறு = தன்மை. முன்னே, அடிகள் தாம் கணநாதர்களில் ஒருவராயிருந்தபொழுது வானவர்கோன் ஆடம்பரத்தில் பற்றுவைத்தலானது உலகில் வந்து பிறத்தலுக்குக் காரணமாயிருத்தலை அறிந்திருந்தும் அக்காரணத்தை இப்பொழுதும் மனம் நினைந்து ஒழுகாதிருத்தலைக் குறித்து முன் நீ உண்டன எல்லாம் அற்றவாறும் என்றார். நின் அறிவும் நின்பெருமையும் - அறிவு என்பது இங்கே அறிவுபோலத்தோன்றும் அறியாமையையும், பெருமை என்பது பெருமைபோலத்தோன்றும் சிறுமையையும் குறிக்கிறது. அளவறுக்கில்லேனே - அளவறுத்தல் = இவ்வளவின என்று வரையறுத்தல். கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை. ஏன் - தன்மை ஒருமைத்தெரிநிலை வினைமுற்றுவிகுதி. ஏ - அசை. அடிகள் இப்பாட்டில் ஆத்துமசுத்தி அடைதலுக்கு உலகவாழ்வுப் பற்று முற்றிலும் நீங்குதல் இன்றி அமையாது வேண்டப்படும் என்ற உண்மையைத் தன்மேல்வைத்து எதிர்மறையில் உலகர்க்குக்கூறுகின்றார்.

---

## ரு. கைம்மாறு கொடுத்தல்.

---

கைம்மாறு என்பது அடிகள், இறைவன் தமக்குத்திருப்பெருந்துறையில் குருவாகவந்து தீக்கைசெய்து ஆண்டருளிச் சிவபோதந் தந்து பேரின்பமளித்த பேருதவியை நினைந்து அவ்வுதவிக்கு மாறாகத்தமது சிவபோதத்தைக்கொடுத்தலாகும். "அன்றே யென்றனுவியு முடலுமுடைமை யெல்லாமுங், குன்றேயனையா யென்னையாட் கொண்டபோதே கொண்டிலையோ" என்று அடிகள் தாமே கூறுகிறபடி சிவபெருமானால் தமக்கு சகல நிலையில் முன் கடனாகக் கொடுக்கப்பெற்ற உடல், பொருள், ஆவி மூன்றையும், தம்மை

அவன் ஆட்கொண்டபொழுது, அவனிடந்திரும்பக்கொடுத்துவிட்டபடியினாலே, இங்கே கைம்மாறாக அடிகள் அவனுக்குக்கொடுப்பது, மலவாசனையால், எடுத்தவுடலில், ஒரோவழி நிகழப்பெறுவதாகிய சிவபோதமேயாகும். (தன்முனைப்புணர்வு). "தந்ததுன் றன்னைக் கொண்ட தென்றன்னைச்சங்கரா" என்று அடிகள் தாமே இதனைப் பற்றிக்கூறியிருத்தல் காண்க. "சும்மாவிருத்திச் சுகங்கொடுத்த மோனநின்பாற், கைம்மாறு நானொழிதல் காண்" என்று தாயுமான அடிகளும் (539) வது பாட்டிற்கூறியிருத்தல் காண்க. இது ஆத்துமசுத்தியினாலே, நிகழ்வதால், அதனையடுத்துக்கூறப்பட்டது. கைம்மாறுகொடுத்தலால் உயிர் சிவபோகத்திலிருந்து தன் முனைப்பில் நழுவுதலின்றி நிலைபெறுதலுண்டாகின்றது.

[கலி விருத்தம்.]

திருச்சிற்றம்பலம்.

---

48. காண லாம்பர மேகட் கிறந்ததோர்
வாணி லாப்பொரு ளேயிங்கொர் பார்ப்பெனப்
பாண னேன்படிற் றாக்கையை விட்டுனைப்
பூணு மாறறி யேன்புலன் போற்றியே. கசு.

[ப-ரை] காணலாம்பரமே - மெய்யுணர்வுடைய மெய்யடியார்கள் நினைேடு இரண்டறக்கலந்து உணர்ந்து அகக்கண்ணால் அறியத்தக்க மேலானபொருளே; கட்கு இறந்தது ஓர் வாள்நிலாப் பொருளே - மெய்யடியாரல்லாத மலக்கலப்புள்ள ஏனையோருடைய புறக்கண்களுக்கு எட்டாதிருப்பவனாகிய பேரொளிப்பொருளே; இங்கு - இவ்வுலகிலே; ஓர் பார்ப்பு என - ஒரு பறவைக்குஞ்சு (தான் இருக்கிற கூட்டைவிட்டுப் புறம்போக அறியாதிருத்தல்) போல; பாணனேன் - ஒன்றுக்கும் பயன்படாதவனாகிய நான்; புலன்போற்றி - ஐம்பொறிகளைப்பேணி அவற்றின் வழியே ஒழுகி;

படிறு ஆக்கையை விட்டு - நிலையில்லாத இவ்வுடற்பற்றையும் (அதற்கு இனங்களாயுள்ள பொருட்பற்றையும், உயிர்ப்பற்றையும்) நீக்கி; உனைப்புகுமாறு அறியேன் - நின்னோடு அத்துவிதமாய்க் கலந்து இன்பம் அடையும் வழியை அறியாதவனாயிருக்கின்றேன்.

[வி-ரை] காணலாம் பரமே - இங்கே காணுதல் என்பது அகக்கண்ணால் காணுதல். பரம் - மேலானபொருள். காணலாம் பரமே - மெய்யடியார்களால் காணத்தகுந்த மேலான பொருளே. சிவபெருமானுக்கு ஒப்பாயும், மேலாயும் உள்ளபொருள் ஒன்று இன்மையால், அவனை அடிகள் பரமே என்று விளித்தார். கட்கு இறந்தது ஓர்வாள் நிலாப்பொருளே - கண் + கு + இறந்தது = கட்கிறந்தது; கு - நான்காம் வேற்றுமை உருபு. கண் என்பது இங்கே புறக்கண்களைக் குறிக்கிறது. இறத்தல் - கடந்து நிற்றல், எட்டாது நிற்றல். வாள் நிலாப்பொருள் - வாள் + நிலாவு = வாணிலாவு. நிலாவு என்பது நிலாஎனக் கடைகுறைந்து நின்றது. வாள் - ஒளி. நிலாவுதல் — விளங்குதல். சிவபெருமான் தனது சிறப்பியல் நிலையில் உருவம், உரு அருவம், அருவம் ஆகிய இவற்றைக் கடந்த பேரொளிப்பொருள் ஆதலாலும், அப்பேரொளிப்பொருளை மெய்யுணர்வு இல்லாதவர்கள் தங்கள் புறக்கண்ணால் வேறாகநின்று பார்க்கமுடியாது ஆதலாலும் கட்கு இறந்ததோர்வாணிலாப்பொருளே என்றார். "அருக்கனேர் நிற்பினு மல்லிருளேகாணார்க் - கிருட்கண்ணே பாசத்தார்க்கீசன்" என்று இக்கருத்து சிவஞானபோதம் 11-வது சூத்திரவெண்பாவில் கூறப்பட்டிருத்தல் காண்க. ஓர் பார்ப்பு என - பார்ப்பு - பறவைக்குஞ்சு. என - போல; அதாவது ஓர் பறவைக்குஞ்சு பருவகாலத்துக்கு முன் தான் இருக்கிற கூட்டை விட்டு வெளியேபோதற்கு அறியாதிருத்தல்போல. பாணனேன் - பாழ் + நன் = பாணன். வாழ் + நன் = வாணன் என வந்தாற்போல. பாழாகியவன் - ஒன்றுக்கும் பயன்படாதவன். ஏன் — தன்மை ஒருமைத் தெரிநிலை வினைமுற்று

விகுதி. புலன்போற்றி - புலன் என்பது இங்கே மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளைக்குறிக்கிறது. போற்று தல் - பேணுதல்; அதாவது உயிர் மனத்துடன் சேர்ந்த ஐம்பொறி களின் வழியே ஒழுகி உலகவிடயங்களை நுகர்தல். படிற்று ஆக் கையைவிட்டு – படிறு + ஆக்கை = படிற்றாக்கை. படிறு - வஞ் சம், பொய்; அதாவது தோன்றியும் மறைந்தும் நிலையில்லாமலிருத் தல். ஆக்கைவிடுதல் என்பது உயிரானது சிவபெருமானிடமிருந்து தன் உலகவாழ்வின் பொருட்டுப் பெற்றுக்கொண்ட உடலையும், அதற்கு இனமாகிய பொருளையும் தன்னோடு சேர்த்து, அவற்றில் தனக்குள்ள பற்றினை ஒழித்து அவனிடம் ஒப்புவித்தல். இங்கே உடல்மட்டும் கூறப்படினும் இனம்பற்றிப் பொருளும் உடன் கொள்ளப்பட்டது. உனைப்பூணுமாறு அறியேன் - பூணுதல் - விரும்பி அடைதல். ஆறு - வழி. அடிகள், இந்தப்பாட்டில் கூறப் படுவதாகிய கைம்மாறுகொடுத்தல் நிலையை அடைதற்கு உலக விட யங்களை நுகரும் புலனெறி ஒழுக்கத்தை முற்றிலும் விட்டுச் சிவமே பெறும் சிவநெறி ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து ஒழுகல்வேண்டு மென்று, தம்மேல்வைத்து எதிர்மறையில் உலகர்க்குக் கூறுகின்றார். அடிகளுடைய வரலாற்றில் அவர் புலனெறி ஒழுக்கில் ஒழுகினதாக நாம் அறியவில்லை. அவர் உலகவாழ்வு தமக்கு வேண்டாமென்றும், சிவப்பேறுவாழ்வே தமக்கு வேண்டுமென்றும் இந்நூலில் பல இடங்களில் கூறியிருக்கின்றார். இவ்வாறு இருக்க அவர் இப்பாட் டில் தாம் நேரே அறியக்கூடிய, தமது முற்பிறப்புக்களிலுள்ள அநு பவ நிகழ்ச்சியை உலகர் அறிந்து நலமடையும்படியாகக் கூறியிருக் கின்றாரென்று நாம் அறியலாம். உலகப்பற்றுக்களை விடாதிருத் தல் கைம்மாறு கொடுத்தலில் நிலைபெறாது அதனின்று நழுவுதலாத லின் கைம்மாறு கொடுத்தலின் கீழ் இப்பாட்டு வைக்கப் பட்டது.

---

51. எந்தை யாயெம் பிரான்மற் றும் யாவர்க்குந்
 தந்தை தாய்தம்பி ரான்றனக் கஃதிலான்

முந்தி யென்னுள் புகுந்தனன் யாவருஞ்
சிந்தை யாலு மறிவருஞ் செல்வனே. கஎ.

[ப-ரை] எம்பிரான் - அடியார்களாகிய எங்கள் தலைவனுகிய சிவபெருமான்; எந்தை (தாய்ஆய்) - எங்களுக்குத் தந்தையுந் தாயுமா யிருக்கிறவனும்; மற்றும்யாவர்க்கும் - அடியாரல்லாத பிறமக்களெல் லார்க்கும்; தந்தைதாய் (ஆய்) - தந்தையுந் தாயுமாயிருக்கிறவனும்; தம்பிரான் (ஆய்) - எல்லாவுயிர்களுக்குந் தலைவனுமாயிருக்கிற வனும்; தனக்கஃதிலான் - தனக்குத்தந்தை, தாய் தலைவனில்லாத வன்; யாவரும் - மக்கள் தேவரெல்லாரும்; சிந்தையால் - தங்கள் மனத்தினுலும்; அறிவருஞ்செல்வன் - அறியமுடியாத அருட்செல் வனுமாயிருக்கிற சிவபெருமான்; முந்தி - என்னைத் திருப்பெருந் துறையில் ஆண்டருளியகாலத்து; என்னுள் புகுந்தனன் - எனது உள்ளத்தில் சிவமாய்க்காட்சிப்பட்டு விளங்கினன்.

[வி-ரை] அடியாரும் அடியாரல்லாதாரும் உலகிலே தோன் றும்படி சிவபெருமான், சிவமும், சக்தியுமாயிருத்தலின் எம்பிரான், எந்தையாய், தந்தைதாய் என்முர். சிவபெருமான் எல்லார்க்கும் தாய்தந்தையாயினும் அதனை அடியார் உணர்வாராதலாலும், அடியா ரல்லாதார் உணரமாட்டாராதலாலும் மக்களை இருவகையினராகப் பிரித்துக்கூறினர். தம்பிரான் - சிவபெருமான் எல்லாவுயிர்களுக் குந் தந்தைதாயாயிருத்தலுமன்றி தலைவனுகவுமிருத்தலினல் தந்தை தாய் என்று கூறியதற்குப்பின் தம்பிரான் என்று கூறினர். தனக் கஃதிலான் - அஃது என்ற சுட்டுப்பெயர் தந்தை, தாய், தம் பிரானைக் குறிக்கிறது. அஃது என்பது ஒருமைப்பன்மை வழுவ மைதி. சிவபெருமானைத் தோற்றுவிக்குந் தந்தையுந்தாயும், தலை வனுமில்லாமையால், அங்ஙனங்கூறினர். "கருவன்றியே நின்று தான் கருவாகும்," என்று திருமூலர், திருமந்திரம் 2840-வது பாட் டிற் கூறுகின்றது காண்க. சிந்தையாலு மறிவருஞ்செல்வன் - இதிலருமை யென்பது இன்மையை உணர்த்துகின்றது. செல்வ

னென்பது முற்றுணர்தல் முதலிய எட்டருட்குணங்களையுடையவ னென்பதைக் குறிக்கின்றது. இதனால் சிவபெருமான் பசு ஞானத் தினலறியப்படாதவனென்பது கூறப்பட்டது. இனம் பற்றிப் பாசஞானத்தினாலுமறியப்படாதவ னென்பது பெறப்படும். பதி ஞானத்தினால் மட்டும் உணரப்படுவானென்பது கருத்து. முந்தி - முந்தியென்பது திருச்சதகம் பாடியகாலத்திற்கு முந்தித் திருப் பெருந்துறையிலாண்டருளிய காலத்தைக் குறிக்கிறது. என்னுட் புகுந்தனன் என்பது ஆன்மா தன்முனைப்பின்றி அருளிலடங்கும் பொழுது அவ்வருளுருவில் சிவங்காட்சிப் படுதலைக்குறிக்கிறது. (இது சிவதரிசனம்). சிவபெருமான் போக்கும், வரவும், புணர்வு மில்லாதவனாதலின் புகுந்தனன் என்பதற்குச் சிவமாய்க் காட்சிப் பட்டு விளங்கினன் என்று பொருள் கூறப்பட்டது.

> சிந்தை யுட்சிவ மாய்நின்ற செம்மையோ
> டந்தி யாயன லாய்ப்புனல் வானமாய்ப்
> புந்தி யாய்ப்புகுந் துள்ள நிறைந்தவெம்
> எந்தை யேகம்பம் ஏத்தித் தொழுமினே.

என்று திருநாவுக்கரசு அடிகள் (5 - 48 - 5) இவ்வுண்மை யைக் கூறியருளினார். இதனால் 'நான்' என்னும் தன் முனைப்பில் நழுவாமல், சிவக்காட்சியில் நிலைபெறுதல் வேண்டுமென்பது கூறப் பட்டது.

---

## ௬. அனுபோகசுத்தி.

---

அனுபோகமென்பது சிவானுபவம்; அதாவது ஆன்மா சிவத் தோடு இரண்டறக்கலந்ததினால் நுகரும் இன்பநுகர்வு. இவ்வனு போக சுத்தியென்பது, இவ்வின்பநுகர்வில் நிகழும் தூய்மையின் மையை நீக்குதல். அத்தூய்மையின்மை யாதெனில் அருளோடு

சிவத்திலொடுங்காதிருத்தல். சிவத்தைவிட்டுப்பிரியாது பிரிந்திருக்கிற அருளாகிய தாயுடன்கூடிப் பின்தாயைமறந்து அதன்பின் தந்தையைக்கூடுதல் ஞானநிட்டையாதலின் அருளாகிய தாயை மறவாதிருத்தல் தூய்மையின்மையாயிற்று. ஆன்மா மலவாசனையால் அருளில் நழுவாது சிவத்தில் நிலைபெற்றிருத்தல், இதனால் கூறப்பட்டிருக்கிறது. சிவத்தோடு ஆன்மா இரண்டறக்கலந்து நிலைத்து நிற்றலால் மட்டுமே சிவானுபவம் சுவானுபவமாகின்றது.

---

[அறு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.]

திருச்சிற்றம்பலம்.

62. தேனைப்பாலைக் கன்னலின்றெளியை யொளியைத் தெளிந்தார்தம், ஊனை யுருக்கு முடையானை யும்ப ரானை வம்பனேன், நானின் னடியே னீயென்னை யாண்டாயென்றா லடியேற்குத், தானுஞ் சிரித்தே யருளலாந் தன்மை யாமென் தன்மையே. கஅ.

[ப-ரை] தேனைப்பாலைக் கன்னலின் தெளியை - தேனையும், பாலையும், தெளிந்த கருப்பஞ்சாற்றையும்போல இனிமையாயிருப்பவனும்; ஒளியை - ஒளிப்பொருளாயிருப்பவனும்; தெளிந்தார்தம் ஊனை உருக்கும் உடையானை - உலகம் பொய்ப்பொருளென்றும், சிவமே மெய்ப்பொருளென்றும் தெளிந்த அறிவர்களுடைய உயிரையன்றி, உடலையும் உருகச்செய்யும்படியான அருட்செயலையுடைய ஆண்டவனும்; உம்பரானை - சிவலோகத்திலிருப்பவனும் ஆகிய சிவபெருமானை; வம்பனே நான் - ஒரு பயனுமில்லாதவனாகிய நான்; நின் அடியேன் - உன்னால் ஆளப்பட்ட அடிமை; நீ என்னை ஆண்டாய் - நீ, என்னை அடிமையாக (திருப்பெருந்துறையில் வைத்து) ஆண்டுகொண்டாய்; என்றால் - என்று நான் உன்னிடம் சொன்னால்; என்தன்மை - நான் அதற்குத் தகுதியுள்ளவனாயிருக்கும் தன்மையானது; தானும் - எவரினும் மேலோனாகிய நீ;

*அடியேற்கு - எவரினும் கீழோனாகிய அடியேனுக்கு; சிரித்தே அருளல் ஆம் தன்மை ஆம்-எங்ஙனம் இவன் என்றால் ஆளப்படுதற்குத் தகுதியுடையவனென்று சிரித்துக்கொண்டு அருள் செய்யும்படியான தன்மையாயிருக்கிறது.*

[வி-ரை] தேனைப்பாலைக் கன்னலின்தெளிவை - தேனும், பாலும், கருப்பஞ்சாறும் அவற்றைப்பருகும் நாவிற்கு இனியசுவை பயத்தல்போல சிவபெருமான் தன்னை அடைகிறவர்களுக்கு இன்பங்கொடுக்கின்றான் என்பது கருத்து; "சார்ந்தவர்க்கின் பங்கொடுக்குந் தழல்வண்ணன்" என்றார், திருமூலர் (திருமந்திரம் 2114-வது பாட்டு). ஒளியை - எல்லா உயிர்களுக்கும் உள்ளொளியான உயிராயிருந்து, அவையெல்லாம் தன்னை அடைந்து இன்புறுதற்கு அவற்றை இயக்கிக்கொண்டும், அறிவித்துக்கொண்டும் இருக்கிறவன் சிவபெருமானென்பார், ஒளியை என்றார். தெளிந்தார் தம் ஊனை உருக்கும் உடையானை - தெளிந்தார் - தமக்கு இன்பநலம் கொடுப்பவன் சிவபெருமானே என்று ஐயந்திரிபின்றித் தமது சிந்தையிலே தெளிந்த அறிவினையுடையவர். ஊன் - உடல்; ஆகுபெயர். ஊனையும் - உம் - விகாரத்தாற் றொக்கது; உயிரையன்றி உடலையுமென்பது பொருள். உடையான் - எல்லா உயிர்களையும் அடிமைகளாக ஆண்டருளும் உடையவன். தனது அடிமையாகிய ஒவ்வோருயிர்க்கும் அது இன்பநலமடைதற்கு வேண்டுவன சிவபெருமான் ஒழிவின்றிச் செய்துகொண்டிருக்கும் அருட்செயலானது, அதனை அறியும் தெளிந்த அறிவினருடைய உடலையும், உயிரையும் அவருக்கு உளதாகிய மெய்யன்பு காரணமாக, உருக்குந் தன்மையது. ஆதலின் தெளிந்தார்தம் ஊனையுருக்கும் உடையான் என்றார். உம்பரானை - உம்பர் = மேலுலகம். அது இங்கே சிவலோகத்தைக்குறிக்கிறது. உம்பரான் - சிவலோகத்திலிருப்பவன். வம்பனேன் - வம்பன் = பயனில்லாத செயல்களைச்செய்கின்றவன்; அதாவது வீடுபேறு அடைதற்கேதுவாகிய பயனுடையசெயலைச்செய்யாதவன். 3, 4 அடிகளில் தாம் சிவபெருமானுடைய அடி

மையாக அவனால் ஆளப்படுவதற்குத்தகுதியில்லாதவனென்று கூறு கின்றார். இங்ஙனம் தமது தகுதியின்மையை (5 - 18) பாட்டி லும் வேறு பலபாட்டுக்களிலும் கூறியிருக்கின்றார். சிலபாட்டுக் களில் தமது தகுதி உடைமையையும் கூறியிருக்கின்றார். திருவாத வூரர் வரலாறும் அவர் சுலாஞ்சத்திநிபாதம் அடைந்து சிவபெரு மானால் ஆளப்படுவதற்குத் தகுதியுடையவரானாரென்று கூறுகின் றது. (திருவாதவூரடிகள் புராணம் 30, 85 பாட்டுக்கள், பரஞ்சோதி மாமுனிவர் திருவிளையாடற் புராணம், வாதவூரடிகளுக்குபதே சித்த படலம் 31-வது பாட்டு, திருப்பெருந்துறைப்புராணம் திருப் பெருந்துறையடைந்த படலம் 3-வது பாட்டு). இந்தப்பாட்டு 1, 2 அடிகளில் 'தேனைமுதல் உம்பரானை' வரையிலும் அடிகள் தாமடைந்த சிவானுபவத்தை உலகரறியும்படி அவர்களறியக்கூடிய அனுபவத்தில்வைத்துக் கூறுகின்றார். இந்தச்சிவானுபவத்திலிருந்து மலவாசனையால் நழுவுதல் காரணமாகத் தமக்கு உண்டாகும் அனு பவச்செய்தியை உலகரறியும்படி, 'வம்பனேன்' முதல்'பாட்டு முடிவு வரையில்' கூறுகின்றார். இந்தப்பாட்டில் இங்ஙனம் அனுபோக சுத்தியும், அனுபோகசுத்தியினின்று நழுவுதலும் கூறப்படுதலால் இப்பாட்டு அனுபோகசுத்தியின் கீழ்வைக்கப்பட்டது.

---

## எ. காருணியத்திரங்கல்.

---

காருணியத்திரங்கல் என்னும் சொற்றொடர் காருணியம், இரங்கல் என்னும் இரண்டு சொற்களாலாகியது. காருணியம் என்ற நிலைமொழி, இரங்கல் என்ற வருமொழியோடு சேரும்பொழுது அவற்றினிடையில் அத்து என்னும் சாரியைதோன்றி நிலைமொழி யீற்றிலுள்ள மகரவொற்றுக்கெட்டும், சாரியையிலுள்ள முத லெழுத்துக்கெட்டும் இலக்கணவிதிப்படி காருணியத்திரங்கல் என வாயிற்று. காருணியத்திரங்கல் என்பது காருணியத்திற்கிரங்கல் என விரியும்; அதாவது மேலே அநுபோகசுத்தியில் கூறியபடி

சிவத்தினோடு இரண்டறக்கலத்தலால் உண்டாகும் வியாபக அறிவை யடைந்த சீவன் முத்தர்கள், தாங்களும், பிறவுயிர்களும் பேரின்ப நிலையடைவதற்குச் சிவமாகிய மெய்ப்பொருள் அருட்சத்தியோ டியைந்து நின்று இடையறாதுசெய்துவரும் பேரட்செயலை யுணர்ந்து, மனமுருகி அழுது மேலும் மேலும் அன்புமீக்கூர்தல். மும்மலப்பிணிப்பிலிருந்து முன்னமே நீங்கிய சீவன் முத்தர்களுக்கு மட்டும் கூறுகிற காருணியத்திரங்கல் என்பது அவர்கள் தங்களைப் பிராரத்துவவினைமலவாசனை தாக்காதபடி சிவபெருமான் செய்யும் பேரருட்செயலை நினைந்திரங்குதலாகும். இங்ஙனம் சீவன்முத்தர் கள் இரங்குதலால் அவர்களுக்குப் பேரின்பமளிக்குஞ் சிவபெருமா னிடந் தூய்மையான அன்பு மேலும் மேலும் மீக்கூர்ந்து அதனால் அவர்களுக்குத் தூயபேரின்ப வுணர்வுண்டாகும். இத்தூயபேரின்ப வுணர்வு பின்வருகிற மூன்று தலைப்புகளிலுங் கூறப்படுகின்றது.

---

[அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.]

திருச்சிற்றம்பலம்.

74. போற்றியிப் புவனை நீர்தீக் காலொடு வான மானாய்,
போற்றியெவ் வுயிர்க்குந் தோற்ற மாகிநீ தோற்ற மில்லாய்,
போற்றியெல் லாவு யிர்க்கு மீறாயீ றின்மை யானாய், போற்றி
யைம்புலன் கணின்னைப் புணர்கிலாப் புணர்க்கையானே. கக.

[ப-ரை] எவ்வுயிர்க்கும் தோற்றமாகி - எல்லாவுயிர்களும் உலகில் தோன்றுதற்கு நீ காரணமாயிருந்து; நீ தோற்றமில்லாய் போற்றி - நின்னைத் தோற்றுவிப்பதற்கு நினக்குமேலே ஒருவரு மில்லாதவனே உனக்கு வணக்கம்; இப்புவனம் நீர் தீ காலொடு வானமானாய் போற்றி - இவ்வுலகிலுள்ள மண், நீர், தீ, காற்று, வான் (ஞாயிறு, திங்கள், உயிர்) ஆகிய இவற்றோடுகூடி எட்டுருவமா யிருப்பவனே உனக்கு வணக்கம்; ஐம்புலன்கள் நின்னைபுணர்கிலாப்

புணர்க்கையானே போற்றி - செவி, மெய், கண், வாய், மூக்கு ஆகிய ஐம்பொறிகளும் மனத்தோடுகூடி நின்னைத்தொடக்குறுதற்கு ஆற்றலில்லாதபடி அவற்றோடு (உயிர்களின் பொருட்டுச்) சேர்ந்திருப்பவனே உனக்கு வணக்கம்; எல்லாவுயிர்க்கும் ஈறாய் - எல்லாவுயிர்களும் ஒடுங்குவதற்கு நீ இடமாயிருந்து; ஈறின்மையானாய் போற்றி - உன்னை ஒடுக்குதற்கு உனக்குமேலான ஒருவருமில்லாதவனே உனக்கு வணக்கம்.

[வி-ரை] எவ்வுயிர்க்கும் தோற்றமாகி நீ தோற்றமில்லாய் - இதனாலே சிவபெருமான் தான் தோன்றி (சுயம்பு மூர்த்தி) என பது கூறப்பட்டது. இப்புவனம் நீர் தீ காலொடு வானமானாய் - ஐம்பூதங்களோடு சேர்த்து இனம்பற்றி ஞாயிறு, திங்கள், உயிர் மூன்றும் கூறப்பட்டன. இதனால் சிவபெருமான் உலகில் உயிர்களை சகல நிலையில் தோற்றுவித்த பிற்பாடு அவை உலகில் இயங்கி அறிந்து உலகவின்பம் நுகர்ந்து வாழ்தற்கு அவற்றோடு அத்துவிதமாய்க் கலந்திருக்கும் பொதுவியல்பு கூறப்பட்டது. ஐம்புலன்கள் நின்னைப்புணர்கிலாப் புணர்க்கையானே - இறைவன் அருளையே திருமேனியாகக்கொண்ட நின்மலன் ஆதலின் இங்ஙனம் கூறினார். உயிர்கள் உலகநுகர்வுநுகர்தற்கு இறைவன் உயிர்களின் கருவியாகிய மனம், ஐம்பொறி முதலியவற்றோடு சேர்ந்திருத்தலும், சிவநுகர்வுநுகர்தற்கு பக்குவமடைந்தபின் உயிர்கள் அக்கருவிகளினின்று நீங்குதலும் வேண்டப்படுதலால், இறைவன் கருவிகளைச் சேர்ந்திருப்பினும் அவற்றால் தொடக்குறாதிருத்தல் வேண்டப்படுவதாயிற்று. எல்லாஉயிர்க்கும் ஈறாய் ஈறின்மையானாய் - இதனால் உலகம் முற்றிலும் மகாசங்காரகாலத்தில் அழிந்து இறைவனிடத்தில் ஒடுங்கும்நிலைகூறப்பட்டது. தனக்குமேல் ஒரு சங்காரகர்த்தா இலன் ஆதலின் அவனை ஈறின்மையான் எனக்கூறினார். இந்தப்பாட்டில், சிவபெருமான் உயிர்களின் ஆணவமல நீக்கத்தின்பொருட்டு உலகத்தைப்படைத்து, நிறுத்தி, ஒடுக்குதலாகிய பேரருட்செயல் கூறப்பட்டது. இறைவனது திருவடி நிறைவில் அடங்கியிருக்கும்

பேரின்பநிலைபெற்ற அடிகளும், அடிகளைப்போலொத்த சீவன் முத்தர்களும், தங்களுக்காகவும், பிறவுயிர்களுக்காகவும் இறைவன் அருட்சத்தியோடு இயைந்து நின்று இடைவிடாது செய்துவரும் பேரருட்செயலைத் தங்கள் மனத்தில் அன்பினால் நினைந்து உருகியுருகி இரங்குவாராதலின் காருணியத்திரங்கலின்கீழ் இப்பாட்டு வைக்கப்பட்டது.

---

## அ. ஆனந்தத்தழுந்தல்.

---

ஆனந்தத்தழுந்தல் என்ற சொற்றொடர் ஆனந்தம், அழுந்தல் என்ற இரண்டு சொற்களாலாகியது. ஆனந்தம் என்ற நிலைமொழியோடு, அழுந்தல் என்னும் வருமொழி சேரும்பொழுது அவற்றினிடையில் அத்துசாரியை தோன்றி நிலைமொழியீற்றிலுள்ள மகரவொற்றுக்கெட்டும், சாரியையிலுள்ள முதலெழுத்துக்கெட்டும் இலக்கண விதிப்படி ஆனந்தத்தழுந்தல் என்றாயிற்று. ஆனந்தத்தழுந்தல் என்பது ஆனந்தத்தில் அழுந்துதல் என்று ஏழாம்வேற்றுமைத்தொகைப்பொருளாய் விரியும். ஆனந்தம் = பேரின்பம். அழுந்தல் என்பது ஆன்மா வேறொன்றையும் நோக்காது இன்ப நுகர்வில் தோய்ந்து நிற்றல். ஆனந்தத்தழுந்தும் நிலையிலிருந்து சீவன்முத்தர்கள் நழுவாதிருத்தல் வேண்டுமென்று இதன் கீழ் உள்ளபாட்டுக்கள் கூறுகின்றன.

---

[எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.]

திருச்சிற்றம்பலம்.

75. புணர்ப்ப தொக்க எந்தை யென்னை யாண்டு பூணநோக்கினாய், புணர்ப்பதன்றி தென்றபோது நின்னொ

டென்றென்னிதாம், புணர்ப்ப தாக வன்றி தாக அன்பு நின்க ழற்கணே, புணர்ப்ப தாக அங்க ணாள புங்க மான போகமே. உ0.

[ப-ரை] எந்தை - எனது தந்தையே; புணர்ப்பது ஒக்க — அடிமையாகிய நான் ஆண்டவனாகிய நின்னோடு இரண்டறக்கலந்து சேர்வதாகிய பருவம் எனக்கு நேர; பூணநோக்கி என்னை ஆண்டாய் - (எனது மும்மலப்பிணிப்பு முழுவதும் நீங்கும்படி) நினதருட்பார்வை எனதுள்ளத்தில் அழுந்த நயனதீக்கைசெய்தும் (நினது திருவடிகளை என் தலைமேல்வைத்தும்) என்னை அடிமையாக ஆண்டருளினாய்; இது புணர்ப்பதன்று என்றபோது - நீ இங்ஙனம் என்னை ஆண்டருளியது என்னை நின்னோடும் (நின்னடியாரோடும்) கூட்டுவதாகாதென்று நீ சொன்னபொழுது; நின்னோடு இது - ஆண்டவனாகிய நினக்கும், அடிமையாகிய எனக்குமுள்ள இந்த அத்துவிதக்கலப்பு; என் - எதற்காக? இது புணர்ப்பதாக அன்று ஆக-இந்த அத்துவிதக்கலப்பு (நின்னோடும் நின்னடியாரோடும்) கூட்டுவதாயினும் சரி, கூட்டுவதன்றாயினும் சரி; அங்கணாள - (உயிர்களிடத்திலே) தண்ணளியுடையவனே; புங்கமான போகமே - உயர்ந்த பேரின்பப்பொருளே; நின்கழற்கணே - நின்னுடைய இரண்டு திருவடிகளினிடத்திலேயே; அன்பு - எனக்குள்ளதாகிய மெய்யன்பானது; புணர்ப்பதாக - இடையறாது நிகழுமாறு) என்னிடம் சேர்ந்திருக்கும்படி (அருள்செய்வாயாக).

[வி-ரை] எநதை - அண்மைவிளிப்பெயர்; சிவபெருமான், தம்மைத் தந்தை என்ற முறையில் தீக்கை செய்தாண்டருளியதால் அடிகள் எந்தையெனவிளித்தார். புணர்ப்பது ஒக்க — புணர்ப்பது-தொழிற்பெயர், சேர்தல்; அதாவது சேர்வதாகிய பருவம். பூணநோக்கி என்னை ஆண்டாய் - நோக்குதல் ஆளுதலுக்கு முன்னிகழ்தலின் இங்ஙனம் உரைநடை செய்யப்பட்டது. அருட்பார்வையால் நோக்கியதும் மனத்திலுள்ள மலவிருள் முழுவதும் நீங்குதலால்

பூணநோக்கி என்றார். இது புணர்ப்பதன்று என்றபோது - அடிகள் தம்மை, சிவபெருமான் ஆண்டருளியபின், அவரைத்தன்னோடும், அடியார் கூட்டத்தோடும் கயிலைக்கு வராமல், சிலகாலம் நிலவுலகத்திலே இருத்தல் வேண்டுமென்று தமக்கு ஆணையிட்டதை இங்கே கூறுகின்றார். "நாயினேனை நலமலிதில்லையுள் கோலமார் தருபொதுவினில் வருகென ஏலவென்னை இங்கொழித்தருளி," என்று அடிகள் தாமே கீர்த்தித்திருவகவலில் கூறியிருத்தல் காண்க. நின்னோடு என்னோடு இது - ஒடு இரண்டும் நான்காம் வேற்றுமையுருபுமயக்கம்; இது என்னும் சுட்டுப்பெயர் ஆண்டருளுதலாலுண்டாகும் அத்துவிதக்கலப்பைக குறிககிறது. இரண்டு ஒடு உருபுகளுககுப்பின்னும் உம்தொக்கது. என் - எவன் என்னும் வினைப்பெயர், என் எனக்குறைந்தது. என்னும் என்பதிலுள்ள ஆம் அசை. சிவபெருமான் தம்மை ஆண்டு தம்மோடத்துவிதமாய்க் கலத்தலால் அவனோடு கயிலைக்குப்போகும் உரிமை தமக்குண்டாகியதென்பது அடிகள் கருத்து. இது புணர்ப்பதாக அன்று ஆக - இது என்னும் சுட்டுப்பெயர் அத்துவிதக் கலப்பைககுறிககிறது; ஈரிடத்திலும், ஆகுக என்னும் வியஙகோள்வினைமுற்று, ஆக எனக்குறுகியது. அங்கணா - கண்என்பது இங்கே ஞானககண்ணாகிய நெற்றிக்கண்ணைக் குறிககிறது; அடியார்களுடைய பக்குவத்திற்குத்தக்கபடி தண்ணளி செய்யும் கண்ணுதலால் அங்கணாவென்றார். புங்கமானபோகமே என்றதனால் உலகபோகத்தின வேறாகிய உயர்ந்த சிவபோகமென்பது கூறப்பட்டது. நின்கழற்கணே அன்பு புணர்ப்பதாக - கழல் என்பது இங்கே ஆகுபெயராய் இரண்டு திருவடிகளையுங்குறிக்கிறது. "ஆனந்தவெள்ளத்தழுத்துவித்த திருவடிகள்," என்று (12 - 10) பாட்டுக் கூறுகிறபடி, திருவடிகள் தாம் அடையவிரும்பும் பேரின்பப் பேற்றினை அளிக்குமாதலாலும், மெய்யன்பே, பேரின்பத்திற்குக் காரணமாதலாலும் நின்கழற்கணே அனபு புணர்ப்பதாக வென்றார். புணர்ப்பதாக என்பது புணரும்படி அருள்செய்வாயாக என்னும் பிறவினைப்பொருளில் வந்தது. அன்பு நின்கழற்கண் இடையறாது நிகழுமாயின், பேரின்பம் பெறுவது உறுதியாதலின் இது புணர்ப்ப

தாக அன்று ஆக நின்கழற்கண் புணர்ப்பதாகவென்றார். இக்கருத்தோடு 'காடகத்தாலுன்னடியார் போனடித்து' என்ற (5 - 15) பாட்டுக்கருத்தையும் ஒத்துநோக்குக. கழற்கணே எனபதிலுள்ள 'ஏ' தேற்றம். இறைவனுடைய திருவடிகளிடம் பேரன்புசெய்தலானது ஆனந்தவெள்ளத்தில் அழுத்துவித்தலால் இப்பாட்டு ஆனந்தத்தழுந்தலின் கீழ்வைக்கப்பட்டது.

---

76. போகம் வேண்டி வேண்டி லேன்பு ரந்த ராதி யின்பமும், ஏக நின்க ழலிணைய லாதி லேனெ னெம்பி ரான், ஆகம் விண்டு கம்பம் வந்து குஞ்சி யஞ்ச லிக்கணே, ஆக வென்கை கண்கள் தாரை யாற தாக வையனே. உக.

[ப-ரை] என் எம்பிரான் - எனது தலைவனே; போகம் வேண்டி - சிவபோகமல்லாத பிறபோகங்களை விரும்பி; புரந்தராதி இன்பமும் வேண்டிலேன் - வானவர்கோன், நான்முகன், மால், ஆகியதேவர்களுடைய உலகபோக இன்பங்களையும், வேண்டிலேன் (உன்னிடம் வேண்டுமென்று இரக்கமாட்டேன்); ஏக - செல்லுதற்கு; நின்கழலிணை அலாது இலேன் - உன்னுடைய இரண்டு திருவடிகளல்லாது வேறுபுகலிடம் உடையேனல்லேன் (நின்னுடைய திருவடிகளே புகலிடம் என்றபடி); ஐயனே-தலைவனே; ஆகம் விண்டு (உம்) - (நின் சண் என்னிடத்திலுள்ள மெய்யன்பினாலே) உடலிலே வியர்வைதோன்றவும்; கம்பம் வந்து (உம்) - நடுக்கம் உண்டாகவும்; என்கை அஞ்சலி குஞ்சிக்கணே ஆக(உம்) - எனனுடைய இரண்டு கைகளையுஞ் சேர்த்துச்செய்யும் அஞ்சலி வணக்கம் தலைமேலே ஆகவும்; கண்கள் தாரை ஆறதாக (உம்) - கண்களிலிருந்து வடியுங்கண்ணீர் ஆற்றுநீர்போலப் பெருகுவதாகவும்; (வேண்டும்) - நீ செய்தல் வேண்டும்.

[வி-ரை] போகம் - சிவபோகமல்லாத ஏனைய போகங்கள்,

நிலவுலகபோகம், விண்ணுலகபோகம், நான்முகனுலகபோகம், மாலு லகபோகம் ஆகிய போகங்களைக்குறிக்கின்றன. இவை முறையே ஒன்றினுக்கொன்று உயர்ந்தன. போகம் - சாதி ஒருமைப் பெயர். வேண்டி - விரும்பி. வேண்டிலேன் - உன்னிடத்தில் இரக்கமாட் டேன். புரந்தராதி - புரந்தரன் + ஆதி = புரந்தராதி. வடமொழிச் சொல். வானவர்கோன் (தேவேந்திரன்) முதலிய தேவர்கள்; அதாவது வானவர்கோன், நான்முகன், திருமால் ஆகியதேவர்கள். ஏக நின்கழலிணை அலாது இலேன் - திருவடிப்பேறாகிய பேரின்பமே எனக்கு வேண்டுமென்றது கருத்து. திருவடிகள் எவ்வகையின் பங்களுக்கும் மேலான பேரின்பந்தருதலால் அடிகள் ஏக நின்கழ லிணையலாதிலே னென்றார். "அயராவன்பினரன கழல்செலுமே" என்று சிவஞானபோதம் 11-வது சூத்திரம் பேரின்பப் பேற்றைக் கூறுதலை அறிக. அலாது என்ற சொல்லுக்கும் இலேன் என்ற சொல்லுக்கும் இடையில் வேறு என்பது தொக்கி நிற்கிறது; சொல் லெச்சம். அல்லாது என்றது அலாது என்றும், இல்லேன் என்றது இலேன்என்றும் குறுகிநின்றன. பின் இரண்டு அடிகள்முன இரண்டு அடிகளில் கூறப்பட்ட திருவடிப்பேறாகிய பேரின்பத்துக்கு வேண் டப்படுவதாகிய அயராவன் பிற்குரிய அடையாளங்களைக் கூறுகின் றன. ஆகம்விள்ளுதலும், கம்பம் வருதலும், கைஅஞ்சலி குஞ்சிக் கணே ஆதலும், கண்கள் தாரைஆறுதலும் ஆகிய இவை உடலிலுண் டாகும் அடையாளங்கள். இந்த நான்கு அடையாளங்களும் (5 - 1) பாட்டில் கூறப்பட்டிருத்தல் காண்க. ஆகம்விண்டு - உடலில் வியர்வைதோன்றி. விண்டு - விள் என்னும் பகுதியடியாகப் பிறந்த வினையெச்சம். விள்ளுதல் - தோன்றல். அது இங்கே வியர்வை தோன்றலைக் குறிக்கிறது. விள்ள என்பது விண்டு எனத்திரிந்து நின்றது. கம்பம் வந்து - உடலில் நடுக்கமுண்டாகி. வர என்பது வந்து எனத்திரிந்து நின்றது. குஞ்சி அஞ்சலிக்கணே ஆக என்கை என்பதை என்கை அஞ்சலி குஞ்சிக்கண்ணதாக எனமாறுக. கை அஞ்சலி - இரண்டு கைகளையுங்குவித்துத் தலைமேல்வைத்துச் செய் யும் வணக்கம். குஞ்சி - குடுமி. இங்கே தலையைக்குறிக்கிறது;

ஆகுபெயர். விண்டு, வந்து, ஆக, ஆக இவற்றுக்குப்பின், உம்மை கள் தொக்கி நிற்கின்றன. ஆறதாக என்பதற்குப்பின் வேண்டும் என்பது சொல்லெச்சம். ஆகம்விள்ளவும், கம்பம்வரவும், அஞ்சலி குஞ்சிக்கண்ணே ஆகவும், கண்கள் தாரை ஆறதாகவும், நீ செய்ய வேண்டும் என்றதனல் தன்வயமின்றி இச்செயல்கள் நிகழ்தல் வேண்டுமென்பது கூறப்பட்டது. இப்பாட்டில் கூறப்பட்ட ஆகம்விள்ளுதல் முதலிய நான்கும் அன்பின் வெளிப்பாடுகள். இவை ஆனந்தத்தழுந்துதலுக்குக் காரணங்களாயுள்ளன.

---

80. நினைப்ப தாக சிந்தை செல்லு மெல்லை யேய வாக்கினல், நினைத்த லேயு மாவ தில்லை சொல்ல லாவ கேட்பவே, அனைத் துலகு மாய நின்னை ஐம்பு லன்கள் காண்கிலா, எனைத் தெனைத்த தெப்புறத்த தெந்தை பாத மெய்தவே. உ௨.

[ப-ரை] எந்தைபாதம் எய்த - (ஆனந்தத்தழுந்தலுக்காக) எனது தந்தையாகிய சிவபெருமானுடைய (எல்லையில்லாத) திருவடியைச்சேருதற்கு; சிந்தை - (எனது) மனம்; நினைப்பது ஆக செல்லும் (நினைத்தலையும் ஆவதில்லை) - அத்திருவடியை நினைப்பதற்காக முயலும், (ஆனல் அங்ஙனஞ்செய்ய அதற்குச் சிறிதும முடியவில்லை;) எல்லை ஏயவாககினல் – அளவு பொருந்திய வாக்கினல்; நினைத்தலையும் ஆவதில்லை - (அத்திருவடியைப்புகழ்ந்து சொல்ல) சிறிதளவும் முடியவில்லை; சொல்லல் ஆவகேட்பவே - (ஏனென்றல்) சொல்லத்தகுந்த பொருள்களெல்லாம் காதினல் கேட்கத்தகுந்த அளவுக்குட்பட்ட பொருள்களே (ஆதலால் கேட்டு அறியப்படுவனும் அல்லன்); அனைத்து உலகும் ஆய நின்னை - உலகம் முழுதும் எள்ளுக்கெண்ணெய்போலக் கலந்திருக்கிற (அந்தரியாமியாயிருககிற) உன்னுடைய திருவடியை; ஐம்புலன்கள் காண்கிலா - அறிவுக்கருவிகள் (ஞானேந்திரியங்கள்) ஐந்தும் அறிதற்கு ஆற்றலுடையனவல்ல; அது - அத்திருவடி; எனைத்து

எனைத்து - எந்த அளவினது, எந்த அளவினது (அளவிற்குட் படாதது என்றபடி); எப்புறத்தது - எந்த இடத்திலுள்ளது (ஓரிடத்திலன்றி எங்கும் நிறைந்திருப்பது என்றபடி).

[வி-ரை] பாதம் - இரண்டு திருவடிகள். எய்த என்பது வருங்காலவினையெச்சப்பொருளில் வந்தது. செல்லும் - எழும், முயலும். தினைத்தனையும் ஆவதில்லை என்ற சொற்றொடரை, செல்லும் என்பதன் பின்னும் சேர்த்துப் பொருள் உரைகக. கேட் பவே என்பதிலும் எய்தவே என்பதிலும் உள்ள ஏ - அசைகள். இதனாலே ஒருவர் தானாகச் சொல்லியும், பிறர் சொல்லக்கேட்டும் சிவபெருமான் அறியப்படமாட்டான் என்பது பெறப்படும். தினைத் தனையும் ஆவதில்லை - தினை - ஒரு சிறு தானியம். சிறிய அளவைக் குறிக்கிறது. தனை - அளவு. 'உரையாலுணரப்படாத அடி' என்று தேவாரம் (6 - 6 - 7) பாட்டில் கூறியிருத்தல் காண்க. ஐம்புலன் கள் காண்கிலா - ஐம்புலன்கள் இங்கே ஐம்பொறிகளைக் குறிக்கிறது. காணுதல் இங்கே கண்ணாற்கண்டும், செவியாற்கேட்டும், நாவாலுண் டும், மூக்கால் மோந்தும், மெய்யாற்றீண்டியும் அறிதலைக்குறிக் கிறது. கில் - ஆற்றலுணர்த்தும் இடை நிலை. எனைத்து எனைத்து - அடுக்குச்சொல். "அகலம் அளககிற்பாரில்லா அடி" என்று தேவா ரம் (6 - 6 - 7) வது பாட்டில் கூறியிருத்தல் காண்க. எப் புறத்தது — திருநாவுக்கரசு அடிகள் "வானைக்கடந்தண்டத்து அப்பால் மதிப்பன...... . ஐயாறனடித்தலமே" யென்று தேவாரம் (4 - 92 - 14) வது பாட்டிலும, "எழுவாயிறு வாயிலாதன...... ஐயாறனடித்தலமே" என்று தேவாரம் (4-92-5) வது பாட்டிலும் இக்கருத்தைக்கூறியிருத்தல் காண்க. சிவபெருமானுடைய திரு வடியை மனம் ஐம்பொறிகளாகிய கருவிகள் அறியமுடியாதென்றும், நாஉரைக்கமுடியாதென்றும் இப்பாட்டுக்கூறுகின்றது. ஆனந்தத் தழுந்தலுக்கு ஆன்மா சிவபெருமானோடொன்றுபட்டு அத்துவித மாய்க் கலந்து நின்று அவனுடைய திருவடியை உணரவேண்டு மெனபது கருத்து.

81. எய்த லாவ தென்று நின்னை யெம்பி ரானிவ் வஞ்சனேற், குய்த லாவ துன்க ணன்றி மற்றொ ருண்மை யின்மையிற், பைத லாவ தென்று பாது காத்தி ரங்கு பாவி யேற், கீத லாது நின்க ணொன்று மொன்று வண்ண மில்லை யீசனே. உரு.

எம்பிரான் நின்னை எய்தலாவது என்று, இவ்வஞ்சனேற்கு உய்தலாவது உன் கணன்றிமற்றொருண்மையின்மையின், ஈசனே பாவியேற்குப்பைதலாவது என்று பாதுகாத்திரங்கு, ஈதலாது நின்க ணொன்றும் வண்ணமில்லை என்று உரைநடைசெய்து பொருளுரைத்துக்கொள்க.

[ப-ரை] எம்பிரான் - அடியார்களுக்குத் தலைவனே; நின்னை எய்தல் ஆவது - நான் நின்னோடத்துவிதமாய்க் கலந்தின்புறுவது, (ஆனந்தத்தழுந்தல் உண்டாவது); என்று - எந்தக்காலம்? இவ்வஞ்சனேற்கு - உலக வாழ்வில் பற்றுவைத்துக்கொண்டு உழல்கின்றவனாகிய எனக்கு; உய்தல் ஆவது - இவ்வுலகவாழ்வுப்பற்றிலிருந்து தப்பிப்பிழைத்தல் உண்டாவது; உன்கண் அன்றி - எவ்வாற்றானும் மெய்ப்பொருளாகிய (சத்துப்பொருளாகிய) உன்னிடத்தில் அத்துவிதமாய்க்கலந்து நின்னைச்சேர்தல்லாமல்; மற்றோர் உண்மை இன்மையின் - மற்றும் ஓர் மெய்ப்பொருள் இல்லாத ஏதுவால்; ஈசனே - என்னை ஆளுகின்றவனே; பாவியேற்கு - உலகப்பற்றுடைய பாவியேனாகிய எனக்கு; பைதல் ஆவது என்று - (நீ இரங்கி அருள்செய்யாவிட்டால்) பிறவித்துன்பம் உண்டாருமென்று நினைத்து; பாதுகாத்து இரங்கு - நீ என்னைக்காப்பாற்றும் பொருட்டு என்மேல் இரக்கம்வைத்து அருள்செய்வாயாக; ஈது அலாது - இங்ஙனம் நீ என்மேல் இரக்கம் வைத்து அருள்செய்தாலன்றி; நின்கண் ஒன்றும் வண்ணம் இல்லை - நான் நின்னிடத்தில் அத்துவிதமாய்க் கலந்து நின்னைச்சேர்ந்து இன்புறும்வகை மற்றொன்றில்லை.

[வி-ரை] வஞ்சனேற்கு-வஞ்சனேன் + கு; (நான்காம்வேற்றுமை உருபு). பினவருகிற பாவியேற்கு என்றதும் இவ்வாறே வந்தது. வஞ்சனேன் என்பதும், பாவியேன என்பதும் ஒரு பொருளன. மெய்ப்பொருளாகிய சிவபெருமானிடத்தில் பற்றுவையாது பொய் யான உலக வாழ்வில் பற்றுவைப்பதை வஞ்சமென்றும், பாவமென் றும் அடிகள்கூறுகின்ருர். மற்ருேர் உணமை இன்மையின்-உண்மை என்பது இங்கே உண்மைப்பொருளைக் குறிக்கிறது; ஆகுபெயர். பதி, பசு, பாசம் முப்பொருள்களில் பதிப்பொருளாகிய சிவபெருமானே எவ்வாற்ருனும், என்றும் மெய்ப்பொருளாயிருத்தலினுலும், சத்துப் பொருளாகிய உயிர், சத்தாகிய மெய்ப்பொருளைச் சேர்ந்தாலன்றி அசத்தைக கடந்து இன்புறுதல் கூடாமையினுலும, உய்தலாவதுன கணன்றி மற்றெருண்மையின்மையின் என்ருர். பைதல் ஆவது என்று - பைதல் - துன்பம்; அதாவது ஈண்டுப் பிறவித்துனபம். ஆவது - உண்டாவது. என்று - பிறவித்துன்பம் உண்டாகு மென்று (எண்ணி). ஈது - இது; அதாவது மேலே சொன்ன பாதுகாத்திரங்குதலாகிய இது. ஒன்றும் வண்ணம் - அத்துவித மாய்க்கலந்து இன்புறும்வகை. உலகத்தைச்சார்ந்து பொய்ப்பொரு ளாயும் (அசத்துப்பொருளாயும்) சிவனைசசார்ந்து மெய்ப்பொருளா யும் (சத்துப்பொருளாயும்) இருக்கும் இயல்புடைய உயிருக்கு என் றும் ஒரு நிலைமைத்தான மெய்ப்பொருளாயிருக்கிற சிவனைசசார்ந் தன்றி, பிறவித்துன்பம் நீங்கிப் பேரின்பமடைதல் கூடாதெனப தும், அங்ஙனம் உயிர் பேரின்பமடைதற்கு அதனிடத்தில் சிவன் பேரிரக்கங்கொண்டு அருள்செய்தல்வேண்டும் என்பதும் இப்பாட் டின் கருத்து. அடிகள் இப்பாட்டிற்கு முன்னுள்ள 6 பாட்டுக்களி லும் இக்கருத்தை உடன் பாட்டுவகையிற்கூறி, இப்பாட்டில் உலக வாழ்வில் பற்றுவைத்துழலும நமமனோர் அறியும்பொருட்டுத் தம் மேல்வைத்து எதிர்மறையில் கூறுகின்ருர். சிவபெருமானுடைய திருவடியை யெய்துதல் ஆனந்தத்தழுந்துதலாதலின் இப்பாட்டு ஆனந்தத்தழுந்துதலைக் கூறுகினறது.

---

## க. ஆனந்த பரவசம்.

ஆனந்தபரவசமென்பது ஆனந்தம் என்ற நிலைமொழியோடு பரவசம் என்ற வருமொழிசேர்ந்து ஆனந்த பரவசம் என்றாகியது. ஆனந்தமென்பது பேரின்பம். பரவசமென்பது உயிர்பேரின்பநுகர்தலில் தன்வயம் அழிந்து நிற்றல். சீவன் முத்தர்களுக்குப் பிராரத்துவவினைமலவாசனை ஓரோவழிதாக்குதலால் ஆனந்தபரவச உணர்வின்றுந் நழுவுதலை இதன் கீழ்வரும் பத்துப்பாட்டுக்கள் கூறுகின்றன.

[கலி நிலைத்துறை]

திருச்சிற்றம்பலம்.

---

௭௬. பேசப் பட்டேன் நின்னடி யாரிற் றிருநீறே
பூசப் பட்டேன் பூதல ராலுன் னடியானென்
றேசப் பட்டே னினிப்படு கின்ற தமையாதால்
ஆசைப் பட்டே னாட்பட் டேனுன் னடியேனே. ௨௪.

[ப-ரை] திருநீறு பூசப்பட்டேன் - (திருப்பெருந்துறையில் என்னை நீ தீக்கைசெய்து ஆட்கொண்டருளியபொழுது உன்னருள் பெற்றதற்கறிகுறியாக) உன்னாலே திருநீறு பூசப்பெற்றேன்; நின்னடியாரில் பேசப்பட்டேன்- (உன்னால் ஆட்கொள்ளப்பெற்றபின்) நின்னடியாரால் அவர்களில் ஒருவனாகப் பேசப்பெற்றேன்; பூதலராலுன்னடியான் என்று ஏசப்பட்டேன்; உனது அருளை அறியாத பூமியிலுள்ள மக்களால் உனக்கு ஆட்பட்ட அடியானென்று இகழ்ந்து ஏசப்பட்டேன்; உன் அடியேன் ஆசைப்பட்டேன் - உனக்கு அடிமையாகிய நான் உலகப்பற்றைவிட்டு உன்னிடத்திலே முற்றும் அன்புடையவனாகி; ஆட்பட்டேன் - திருப்பெருந்துறையில் அந்தணர் கோலத்தில் வந்த உன்னாலே அடிமையாகக்கொண்டு ஆண்டருளப்பெற்றேன்; இனிப்படுகின்றது - இங்ஙனஞ் செய்திகள்

நிகழ்ந்திருத்தலால் இனி உலகில் நான் பொருந்திவாழ்வது; அமையாது - தகுதியுடையதாகாது.

[வி-ரை] திருநீறு பூசப்பட்டேன் - திருநீறானது இறைவனது அருளுக்குக் குறியீடாக விருத்தலின் இறைவன் அடிகளை ஆட்கொண்டருளியபோது அவருக்குத் திருநீறுபூசினார். நின் அடியாரில் பேசப்பட்டேன் — அடியாரில் என்பதற்குப்பின் ஒருவனாக என்றசொல் தொக்கிநிற்கிறது. இது சொல்லெச்சம். பூதலரால் உன் அடியான் என்று ஏசப்பட்டேன் — இது அடிகள் பாண்டி மன்னனுடைய அமைச்சர் வேலையைவிட்டு நீங்கி சிவவேடப் பொலிவுகொண்டு விளங்கினபொழுது உலகத்தார் தம்மை நிந்தித் தலைக்குறிக்கின்றது. இங்ஙனம் தம்மைச்சுற்றத்தாரும், பிறரும் நிந்தித்தலை அடிகள் சிலவிடங்களிற் கூறியுள்ளார். இதை (21-6) பார்க்க. திருவருளை யறியாத உலகர் அருட்கோலங் கொண்டிருப்பவர்களை இகழ்தல் இயல்பு. உன் அடியேன் ஆசைப்பட்டேன் - ஆசைப்பட்டேன் என்ற வினைமுற்று இங்கே வினையெச்சப்பொருளில் வந்தது. இனிப்படுகின்றது - படுகின்றது என்பதன் முன் துன்பம் என்ற சொல்லெச்சம் வருவித்துப் பொருளுரைக்கப்பட்டது. இனிப்படுவது அமையாது என்றதனாலே பிராரத்துவவினை மலவாசனைதாக்குதலால் ஆனந்தபரவச நிலையிலிருந்து நழுவுதல் தகாதென்று அடிகள் கூறினார். இனிப்படுவது என்ற வினைத் தொடர் இனிப்படுகின்றது எனக் காலவழுவமைதி காட்டி நின்றது.

---

## ௧௦ ஆனந்தாதீதம்.

---

ஆனந்தாதீதம் என்பது ஆனந்தம், அதீதம் என்ற இரண்டு சொற்களாலாகியது. ஆனந்தம் — பேரின்பம். அதீதம் — கடந்தது. ஆனந்தாதீதம் என்பது இறவாப் பேரின்பநிலை. இது காண்பான், காட்சி, காட்சிப்பொருள் என்ற பாகுபாட்டுணர்வு கடந்தநிலை.

இதனை வடநூலார் நிரதிசயானந்தம் என்பர். இந்த ஆனந்தாதீத நிலையிலிருந்து சீவன்முத்தர் நழுவாதிருத்தல் வேண்டுமென்று இதன்கீழ் உள்ள பாட்டுக்கள் கூறுகின்றன. ஆனந்தம், அதீதம் என்ற சொல்லோடு சேரும்பொழுது வடமொழித் தீர்க்கசந்திப்படி ஆனந்தாதீதம் என்றாகியது.

---

[எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.]

திருச்சிற்றம்பலம்.

---

95. மாறி லாதமாக் கருணை வெள்ளமே
வந்து முந்திநின் மலர்கொள் தாளிணை
வேறி லாப்பதப் பரிசு பெற்றநின்
மெய்மை யன்பருன் மெய்மை மேவினார்
ஈறி லாதநீ யெளியை யாகிவந்
தொளிசெய் மானுட மாக நோக்கியுங்
கீறி லாதநெஞ் சுடைய நாயினேன
கடைய னாயினேன் பட்ட கீழ்மையே. உரு.

[ப-ரை] மாறிலாதமாக்கருணை வெள்ளமே — என்றும் ஒரு தன்மைத்தான நிலையையுடைய பேரருட்கடலே; முந்தி — எனக்கு நீ அருள் செய்ததற்குமுன்; நின்மலர் கொள்தாள்இணை—பூவினது மெல்லிய தன்மையுடைய உன்னுடைய இரண்டு திருவடிகளுக்கு; வேறிலாப் பதப்பரிசுபெற்ற—பொருளால் வேறாயிருப்பினும் கலப்பினால் வேறல்லாத நிலைமையுடைய தன்மையையடைந்த; நின் மெய்மையன்பர் — மற்றொன்றிலும் பற்றுவையாது உன்னிடத்திலேயே அன்புசெய்யும் உண்மையடியார்கள்; வந்து — உன்னைச் சார்ந்து; உன்மெய்மை மேவினார் — நினது நிலையான மெய்த்தன்மையையடைந்தார்கள்; ஈறு இலாத நீ—(முதலும்) முடிவுமில்லாத பெருமையையுடைய நீ; எளியையாகி — என்பொருட்டு நீ எளி

மையையுடையனுகி; ஒளிசெய்மானுடமாக வந்து — (திருப்பெருந் துறையில்) அருளொளி ஒளிரும் ஓர்மானுட அந்தணவடிவில் வந்து; நோக்கியும் — (எனது மலம் நீங்கும்படி நின்னுடைய அருட்கண்ணுலே) என்னைப்பார்த்தும் (அதாவது பார்வைத் தீக்கைசெய்தும்); கீழ்மைப்பட்ட நாயினேன் — இழிந்ததன்மைபொருந்திய நாய் போன்றவனுகிய யான்; கீறு இலாத நெஞ்சு உடைய — (நினது அருட்செயலைக்கண்டு) அன்பினுலே உருகி இளகாத மனத்தினனுய்; கடையன் ஆயினேன் — (மக்கள் யாவரினும்) கீழான நிலையையுடையவனுயினேன்.

[வி-ரை] மாறிலாத மாக்கருணை வெள்ளமே — மாறு - மாறுதல். முதனிலைத் தொழிற்பெயர். உயிர்கள் தன்னைப்போல இன்பநலமடைதற்கு இறைவன் எப்பொழுதும் ஒரேநிலையான பேரருட்செயலைச் சலிப்பின்றிச்செய்துவருவதால் அவனை அடிகள் மாறிலாத மாக்கருணை வெள்ளமே என்று விளித்தார். நின் மலர்கொள்தாள் இணை — இறைவன் தன்னுடைய திருவடிகளைச் சேர்ந்தவர்களுக்கு மென்மைத்தன்மையையுடைய இன்பப்பேற்றை அளித்தலால், தன்னைச்சார்ந்தவர்களுக்கு மென்மையான இன்பத்தைக்கொடுக்கும் பூக்களுக்கு, அடிகள் ஒப்பிட்டுக்கூறினுர். மலர்கொள்தாளிணை என்பதற்கு பூக்களைத் தரித்திருக்கிற திருவடிகளென்று பொருள் கூறினும் பொருந்தும். தாள்இணை வேறு இலாப்பதப்பரிசு — பதப்பரிசு — பதமாகியபரிசு. இருபெயரொட்டுப் பண்புத்தொகை. நிலையாகிய பெருமை அல்லது சிறப்பு. தாள்இணை பதப்பரிசு என்பது இரண்டு திருவடிகளுக்கும் வேறல்லாத நிலையாகிய சிறப்பு; அதாவது இரண்டு திருவடிகளோடு கலப்பினுல் ஒன்றுபட்ட நிலையான சிறப்பு; அதாவது மாறுதலின்றி உனது திருவடிகளையே தங்கள் உள்ளத்தில் எப்பொழுதும் நினைந்துகொண்டிருக்கிற சிறப்புத் தன்மை வேறலா என்றதனுலே பொருளால் வேருயிருப்பினும் கலப்பினுல் வேறலர் என்பது குறிப்பிடப்பட்டது. உன்மெய்மை மேவினுர் — தங்களுடைய பொய்த்தன்மையை (அசத்துத்தன்மை

மை) விட்டு உன்னுடைய மெய்த்தன்மையை (சத்துத்தன்மையை) அடைந்தார்கள். உயிர்கள் சார்ந்தவண்ணமாகும் இயல்புடைய சத சத்து ஆதலின் மெய்மையன்பர் உன்மெய்மை மேவினார் என்றார். மேவுதல் — நின்னோடு அத்துவிதமாய்க்கலந்து இன்புறுதல். ஈறு இலாத நீ — இனம்பற்றி 'முதலும்' எனபது சேர்த்துப்பொரு ளுரைக்கப்பட்டது. ஒளிசெய் மானுடமாகவந்து — அருளையே திருமேனியாகவுடைய சிவபெருமான் மாணிக்கவாசகருக்கு அருள் செய்யும்பொருட்டுக்கொண்ட அந்தணர் உருவில் அருள்ஒளி வீசு தலால் ஒளிசெய்மானுடமாக என்றார். நோக்கி — மலம் நீங்கும்படி அருட்பார்வையால் நயனதீக்கைசெய்து இந்த அருட்பார்வையை கடவுள் மாமுனிவர் வாதவூரடிகள் புராணம் 103-வது பாட்டில் கூறியிருத்தல் காண்க. நோக்கியும் என்பதில் உம் உயர்வுசிறப்பு. கீழ்மைப்பட்ட நாயினேன் — கீழ்மை = இழிந்தகுணம். நான்கா வது அடியை 'கீழ்மைப்பட்ட நாயினேன் கீறிலாதநெஞ்சுடைய கடையன் ஆயினேன்' என்று உரைநடைசெய்து பதவுரையில் பொருளுரைக்கப்பட்டது. கீறுஇலாத நெஞ்சு உடையகடையன் ஆயினேன் — கீறுதல் - பிளத்தல். கீறு இலாத நெஞ்சு என்பது இங்கே எளிதிலே பிளக்கப்படாத கல்லைப்போலும் உருகாத கடின மான நெஞ்சைக்குறிக்கிறது. ஒருவர், தமக்குப்பிற ரொருவர் செய்த நன்றியை நினைத்து அவரிடத்திலன்புசெய்து உருகாதிருத்தல் இழிவான குணமாதலின் கடையனாயினேன் என்றார். இந்தப்பாட் டில் அடிகள் தமக்குச் சிவபெருமான் திருப்பெருந்துறைக்கு வந்து அருள்செய்ததைக் கூறுதலோடு தாம் அவரோடு உடன் செல்லா திருத்தற்குக்காரணம், தமது தீவினையினாலுண்டாகிய அன்பின்மை யென்று கூறுகின்றார். அடிகள் (5 - 97) வது பாட்டில் "அருள் செயன்பரும் நீயுமங்கெழுந்தருளி யிங்கெனை — யிருத்தினாய் முறையோவெனெம்பிரான் வம்பனேன்வினைக் கிறுதியில்லை" என் றும், (5 - 93) வது பாட்டில் "திணியார் மூங்கிலனையேன் வினை யைப் பொடியாக்கித் — தணியார்பாதம் வந்தொல்லைதாராய் பொய் தீர் மெய்யானே" என்றுங் கூறியிருத்தல்காண்க. இதனாலே இன்

பங்கடந்த நிலையாகிய ஆனந்தாதீதத்தை யடைதற்கு அவ்வின்பத்துக்குக் காரணமான மெய்யன்பு வேண்டப்படுவதென்று கூறப்பட்டது.

---

96. மையி லங்குநற் கண்ணி பங்கனே
  வந்தெ னைப்பணி கொண்ட பின்மழக்
கையி லங்குபொற் கிண்ண மென்றலால்
  அரியை யென்றுனைக் கருது கின்றிலேன்
மெய்யி லங்குவெண் ணீற்று மேனியாய்
  மெய்ம்மை யன்பருன் மெய்ம்மை மேவினார்
பொய்யி லங்கெனைப் புகுத விட்டுநீ
  போவ தோசொலாய் பொருத்த மாவதே. ௨௬.

[ப-ரை] மை இலங்கு நற்கண்ணி பங்கனே — மை தீட்டிய கண்களையுடைய உமாதேவியை இடதுபாகத்தில் வைத்திருப்பவனே; வந்து எனைப்பணிகொண்டபின் — (திருப்பெருந்துறைக்கு அந்தணனுருவில்) வந்து அருள்செய்து என்னை உனது தொண்டனாகச்செய்து ஏவல்கொண்டபின்; மழக்கை இலங்கு பொற்கிண்ணம் என்றுஅலால் — சிறு குழந்தைகள் தங்களுடைய கையில் விளையாடுகின்ற பொன்வட்டில் ஒன்றை எளிமையான பொருள் என்று நினைப்பது போலல்லாமல்; அரியை என்று உனைக்கருதுகின்றிலேன் — நீ எவரும் காணுதற்கு அருமையான பொருளாயிருக்கின்றாய் என்று நான் உன்னை நினைக்கமாட்டேன்; மெய்இலங்கு வெண் நீற்றுமேனியாய் — உண்மையானது விளங்குகின்ற வெண்மையான திருநீற்றை அணிந்திருக்கிற உடம்பையுடையவனே; மெய்ம்மை அன்பர் — புறப்பற்று, அகப்பற்றுக்களை விட்டு உன்னிடத்திலே முழு அன்புவைத்திருக்கும் உண்மை அடியார்கள்; உன்மெய்ம்மை மேவினார் — உன்னைச்சார்ந்து தங்கள் பொய்த்தன்மையை (அசத்துத்தன்மையை) முற்றிலும்விட்டு உன்னிடத்தில்

என்றும் உளதாகிய மெய்த்தன்மையை (சத்துத்தன்மையை) அடைந்தனர்; அதாவது உன்னோடத்துவிதமாய்க்கலந்து இன்ப முறுகின்றனர்; அங்கு நீ — அவ்விடமாகிய சிவலோகத்திலி ருக்கிற நீ; பொய்யில் — நிலையில்லாத உலகவாழ்வில்; எனைப் புகுதவிட்டு — என்னைச்செல்லும்படி விட்டு; போவது பொருத்தம் ஆவதே — நீ தனியே சிவநகருக்குப்போதல் தகுதியாகுமோ; சொலாய் — சொல்லி அருள்க.

[வி-ரை] மை இலங்கு நற்கண்ணிபங்கனே என்றதனாலே அருட்சத்தியோடுகூடியே நீ என்னை இங்கே தனியேவிட்டுப்போக லாமா என்பது குறிப்பிடப்பட்டது. வந்து எனைப்பணிகொண்ட பின் — இது சிவபெருமான் திருப்பெருந்துறைக்குவந்து அடிகளை ஆட்கொண்டதைக் குறிக்கிறது. மழக்கை இலங்கு பொற்கிண்ணம் என்று அலால் அரியை என்று உனைக்கருதுகின்றிலேன் — மழ என்பது மழவு — சிறுபிள்ளைகள். சிறுபிள்ளைகள் தங்களுடைய கையிலுள்ள பொற்கிண்ணத்தின் அருமையை அறியாதிருத்தலைச் சிவபெருமான் தமக்கு முன்வந்து ஆட்கொண்ட செயலின் அரு மையை அறியாதிருத்தலுக்கு அடிகள் ஒப்புமையாகக்கூறினார். இங் ஙனம் அருட்செயலின் அருமையை அறியாதிருத்தல் சிவபெருமா னிடத்தில் அன்புவைத்து உருகாமைக்குக் காரணமாகின்றது என் பது குறிப்பிடப்பட்டது. மெய் இலங்கு வெண் நீற்றுமேனியாய்— பசுவினுடைய கரியநிறமான சாணத்தைச்சுட்டு வெண்பொடியாக்கு கின்ற கனல்போல, இருள்போலும் மலத்தை ஒழித்து ஒளியைத் தருகின்ற அருளுக்குக் குறியீடாக வெண்ணீறு மக்களுக்கு உண் மையை விளக்கலால் மெய்இலங்கு வெண்ணீறு என்றார். "உண்மை யிலுள்ளது நீறு" என்று தேவாரம் (2–66–2) பாட்டில் கூறியிருத் தல் காண்க. பின்மெய்மை அன்பர் உன்மெய்மை மேவினார் என்று கூறப்பட்டிருத்தலுக்கு, வெண்ணீறாகிய அருள்மேனியையுடையவ னென்பது பொருத்தமாயிருத்தல் காண்க. பொய்யில் — பொய்– நிலையில்லாததன்மை. பொய்யில் — நிலையில்லாத தன்மையை

உடைய உலக வாழ்வில். போவது பொருத்தம் ஆவதே — போவது — தொழிற்பெயர். பொருத்தம் ஆவதே — ஏ - வினைப் பொருளில் வந்தது. சொலாய் — சொல்லாய் என்றது சொலாய் என இடைக்குறையாய் வந்தது. அடிகள் இந்தப்பாட்டில் சிவ பெருமான் திருப்பெருந்துறைக்கு வந்து ஆட்கொண்டருளியதைக் கூறியதோடு தம்மைத் தன்னோடு உடன்கொண்டு செல்லாமல் தனியே உலகில்விட்டுப்போனதையுங் கூறுகின்றார். சிவபெருமான் தம்மை உலகில், விட்டுப்போனதற்குக்காரணமாகத் தமக்கு அவன் அருள்செய்த செயலின் அருமையை அறிந்து அவனிடத்தில் அன்புசெய்து உருகாமையைக்கூறுகின்றார். இதனால் ஆனந்தாதீத நிலையை அடைதற்குச் சிவபெருமானிடத்தில் அன்புசெய்தல் இன்றியமையாததென்பது எதிர்மறையில் வைத்துககூறப்பட்டது.

---

97. பொருத்த மின்மையேன் பொய்மை யுண்மையேன்
போத வென்றெனைப் புரிந்து நோக்கவும்
வருத்த மின்மையேன் வஞ்ச முண்மையேன்
மாண்டி லேன்மலர்க் கமல பாதனே
அரத்த மேனியா யருள்செ யன்பரும்
நீயு மங்கெழுந் தருளி யிங்கெனை
இருத்தி னாய்முறை யோவெ னெம்பிரான்
வம்ப னேன்வினைக் கிறுதி யில்லையே. ௯௭.

[ப-ரை] கமலமலர்ப்பாதனே—தாமரை மலர்போலும் திருவடிகளையுடையவனே; அரத்தமேனியாய் — சிவந்த திருமேனியை யுடையவனே; எனைப்போத என்று புரிந்து நோக்கவும் — என்னை வருக என்று வலிய அழைத்து விரும்பி அருட்கண்ணாலே பார்த்து அருள்செய்யவும்; அருள்செய் அன்பரும் நீயும் அங்கு எழுந்தருளி — உன் அருள்வழி ஒழுகும் அடியார்களும் நீயும் சிவலோகத்துக்குப் (திருப்பெருந்துறையிலிருந்து) புறப்பட்டுப்போய்; இங்கு—

திருப்பெருந்துறையில்; எனை இருத்திஞய்—என்னை இருக்கும்படி செய்தாய்; பொய்மை உண்மையேன் பொருத்தம் இன்மையேன்— நான் நிலையில்லாத உலகவாழ்வில் பற்றுவைத்திருப்பவனு யிருத்த லால் நின்னோடு சிவலோகத்துக்கு வருவதற்குத் தகுதியில்லாதவன் ஆய்விட்டேனே? வஞ்சம் உண்மையேன வருத்தம் இன்மையேன் — (நீ அங்ஙனம் அருட்கண்ணால் நோக்குதற்கேற்ப) நான் நின்னி டத்தில் உண்மை அன்பு இல்லாதிருத்தல்பற்றி உனேடு உடன் வராதிருத்தலுக்கு மனவருத்த மில்லாதவனுயிருக்கிறேனே? முறை யோ — (நான் மேலேகூறியபடி தகுதியில்லாத என்னை உனேடு கூட்டிக்கொண்டு போகாமலிருத்தல் ஒரு பார்வையில் முறையாயி ருப்பினும் நீ திருப்பெருந்துறைக்கு அடியார்களோடு வலியவந்து என்னை ஆண்டருளியபின் என்னை அவ்வடியார் கூட்டத்தோடு சேர்த்துச்செல்லாதிருத்தல்) முறையாகுமோ? என் எம்பிரான் — எனக்கும் அடியார்களுக்குந்தலைவனே; வம்பனேன் வினைக்கு இறு தியில்லை — நான் முறையல்லவென்று சொன்னேன்; அது சரிய ன்று, முறையுள்ளது, ஏனெனில் பயனில்லாது வீண்பொழுது போக்குகிறவனுகிய நான் உலகில் செய்த தீவினையானது அளவில் லாமலிருக்கிறது (அது அனுபவித்துக் கழிதற்குமுன்னே நான் உன் னிடம் எவ்வாறு வரக்கூடும்). மாண்டிலேன் — நான் இறந்தேனில் லையே.

[வி - ரை] பொய்மையுண்மையேன் பொருத்தம் இன்மை யேன் — முன்பாட்டில் அடிகள் சிவபெருமானை நோக்கி "பொய்யி லங்கெனைப் புகுதவிட்டு நீ போவதோ சொலாய்" என்று கேட்ட கேள்விக்குத்தாமே இந்தப்பாட்டில் விடை, விஞஉருவில் பகருகின் ருர். இதற்கு விஞவாகப் பொருள்கொள்ளவில்லையாஞல், பின் வரும் இருத்திஞய்முறையோ, என்பதோடு இவ்வுரை பொருத்த மாகமாட்டாது. வஞ்சம் உண்மையேன் வருத்தம் இன்மையேன்— இதனையும் விஞவாகக்கொள்ளுதற்குப் "பொய்மை உண்மையேன் பொருத்தம் இன்மையேன்" என்பதற்குச் சொல்லப்பட்ட காரணத் தைக்கொள்ளுக. முறையோ என்எம்பிரான் -— என் எம்பிரான்

என்பதனாலே அடிகள் சிவபெருமானோடுவந்த அடியார்களையும் குறிக்கின்றார். இதனாலே சிவபெருமான் தனக்கும், தன்னோடுவந்த அடியார்களுக்கும் தலைவனாயிருக்க, அவன் அடியார்களை மாத்திரம் கூட்டிக்கொண்டு தம்மைவிட்டுப்போதல் முறையல்ல என்று கூறு தற்குப்பொருத்தமாக அடிகள் சிவபெருமானை என் எம்பிரான்என்று விளித்தார். வம்பனேன் வினைக்கு இறுதி இல்லையே—சிவபெருமான் தம்மைக் கூட்டிப்போகாதிருத்தல் ஒரு காரணத்தினாலே முறையா யிருக்கிறது என்பார் அடிகள் வம்பனேன் வினைக்கிறுதியில்லையே என்று மொழிந்தார் மாண்டிலேன் — தம்மை இறைவன் ஆட் கொண்டபின உலகிலிருக்கும்படி ஆணைசெய்ததற்காக மனம்வரு ந்தி மாண்டிலேன் எனக்கூறினார்.

---

104. பாட வேண்டுநான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்
காட வேண்டுநான் போற்றி யம்பலத்
தாடு நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டுநான் போற்றி யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீட வேண்டுநான் போற்றி வீடுதந்
தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே. உஅ.

[ப·ரை] நின்மெய்யர் மெய்யனே — உன்னுடைய திருவடி களையே நினைந்து அனபுசெய்யும் மெய்யடியார்களுக்கு மிகுந்த அன்புசெய்து காக்கின்றவனே; நான நினனையே போற்றிப் பாட வேண்டும்—நான் உன்னையேவணங்கி உனது மெய்ப்புகழைப்பாடு தல்வேண்டும்; நான் பாடிநைந்து நைந்து நெகரு நெக்கு உருகி ஆடவேண்டும் — அங்ஙனம் பாடிக்கொண்டே தனமுனைப்பின்றி உன்வயப்பட்டு அகங்குழைந்து உருகி (உள்ளக்களிப்பினாலே)

ஆடல்வேண்டும்; போற்றி — உனக்கு வணக்கம்; நாயினேன் நான் அம்பலத்து ஆடும் நின்கழற்போது கூடவேண்டும்—நாயைப்போல இழிவுள்ள நான் தில்லையம்பலத்திலே நடனஞ்செய்கின்ற நின்னுடைய திருவடித்தாமரை மலர்களைச் சேர்தல்வேண்டும்; போற்றி— உனக்கு வணக்கம்; ஈளை இப்புழுக்கூடு நீக்கி — புழுக்கள் வாழுகின்ற இந்த இழிவுள்ள என்னுடைய உடலை உயிரினின்றும்பிரித்து அருளல்வேண்டும்; போற்றி — உனக்கு வணக்கம்; நான் பொய் எலாம் வீடவேண்டும் — நான் நிலையில்லாத உலகவாழ்வுப்பற்றினை முற்றிலும் விடுதல்வேண்டும்; போற்றி—உனக்கு வணக்கம்; வீடுதந்து அருளு — எனக்கு வீட்டின்பத்தை தந்து அருள்செய்வாயாக; போற்றி — உனக்கு வணக்கம்.

[வி-ரை] நின் மெய்யர் மெய்யனே — இதனாலே இறைவன் தன்னிடத்தில் அறிவு,அன்பு,செயல்களைத் தன்முனைப்பின்றி உள்ளவாறு நிகழ்த்தும் அடியார்களுக்கு, தானும் அவர்களுக்குத்தக்கவாறு அருள் செய்கின்றான் என்பது கூறப்பட்டது. நான் நின்னையே போற்றிப்பாடவேண்டும்—நின்னையே என்பதிலுள்ள ஏ—பிரிநிலை ஏகாரம். போற்றி — வினையெச்சம். நான் பாடி நைந்து நைந்து நெக்கு நெக்கு உருகி ஆடவேண்டும் — நைதல்—அழிதல். அது இங்கே தன்வயமழிதலைக குறிக்கிறது. நெக்குநெக்கு — அகங்குழைந்து உருகி. நைந்துநைந்து, நெக்குநெக்கு - அடுக்குச்சொற்கள்; மிகுதியைக் குறிக்கின்றன. ஆடல் — உள்ளக்களிப்பு காரணமாகக் கூத்தாடல். போற்றி — வணக்கம். போற்று—தொழிற்பெயராய் போற்றுதல், அல்லது வணக்கம் என்ற பொருளில் வந்தது. போற்று—பகுதி. இ—தொழிற்பெயர் விகுதி. பின்நான்கு இடங்களிலே வருகின்ற போற்றி என்ற சொல்லும் இதே பொருளில் வந்தது. நாயினேன் நான் அம்பலத்து ஆடும் நின்கழற்போது கூடவேண்டும—கழல் - திருவடியையும், போது—தாமரை மலரையும் குறிக்கின்றது. கழற்போது—கழலாகியபோது. கூடல்—அத்துவிதமாய்க் கலந்துகூடல். ஈளை இப்புழுக்கூடு நீக்கு — ஈளை - எனது.

வேற்றுமை உருபுமயக்கம். புழுக்கூடு — புழுக்களினால் நிறைந்திருக்கிற இந்த எனது உடல். இதனால் உடலினுடைய இழிவு கூறப்பட்டது. நான் பொய் எலாம் வீடவேண்டும் — பொய் என்பது நிலையில்லாத உலகவாழ்வுப் பற்றைக்குறிக்கிறது. எலாம்—முற்றிலும். வீடல் — நீட்டல்விகாரம். வீடுதந்து அருள் — வீடு—வீட்டின்பம். உலகவாழ்வுப் பற்றைவிட்டாலொழிய வீட்டின்பம்பெற முடியாதாதலின் பொய்யெலாம் வீடவேண்டும் என்றதற்குபின் வீடுதந்தருள் என்றார்.

அடிகள் இந்தப்பாட்டில் ஒருவர் ஆனந்தாதீத நிலையை அடைதற்கு உலகப்பற்றுவிடல், ஆடல், பாடல், கூடல், வீடுஅடைதல் ஆகிய செயல்கள் அவரிடத்திலிருத்தல்வேண்டு மென்பதைக் கூறுகின்றார்.

திருச்சதகமுடிவிலுள்ள இந்தப்பாட்டில் அடிகள் தாமடைதற்குரிய ஆன்மலாபமாகிய சிவப்பேற்றைக்கூறி அச்சிவப்பேற்றையடைவிக்கும் அன்புச்செயல்களை தாம் செய்யும்படி அருள்செய்ய வேண்டுமென்று இறைவனை வேண்டிக் கொள்கின்றார்.

---

உத்தரகோசமங்கையில் அருளிய

## சு. நீத்தல் விண்ணப்பம்.

---

நீத்தல் விண்ணப்பம் என்பது நீத்தல், விண்ணப்பம் என்னும் இருசொற்களாலாகியது. நீத்தல் — விடுதல். விண்ணப்பம் — முறையீடு. நீத்தல் விண்ணப்பம் என்ற சொற்றொடர், நீத்தலால்செய்யும் விண்ணப்பம் என்று மூன்றும் வேற்றுமை உருபும், பயனும் உடன் தொக்கதொகையாய் விரியும்; அதாவது அடிகள் தம்மை இறைவன் நீத்தலால் அவனுக்குச்செய்யும் விண்ணப்ப

மாகும். இறைவன் திருப்பெருந்துறைக்கு வந்து அடிகளை ஆண்டருளியபோது அவரைச்சிலகாலம் இவ்வுலகிலிருந்து பின் தன்னை வந்து சேரும்படிக்கூறி நிறுத்திவிட்டு சில அடியார்களோடும் கைலாயத்திற்கெழுந்தருளியது பற்றி அடிகள் உள்ளம் வருந்தி இறைவனுக்குச்செய்யும் முறையீடாகும். இது திருவுத்தரகோசமங்கையில் அருளிச்செய்யப்பெற்றது. இதில் வருகிற செய்யுட்கள் முழுவதும் கட்டளைககலித்துறைகள். இந்த நீத்தல்விண்ணப்பப் பிரபந்தம் கடையவன் என்று ஆரம்பித்துக் கடையவன் என்று முடிவதன்றி அந்தாதித்தொடையாகவும் பாடப்பெற்றிருக்கிறது.

## பிரபஞ்சவைராக்கியம்.

---

பிரபஞ்சம், வைராக்கியம் என்ற இரண்டு வடமொழிச்சொற்கள் சேரும்பொழுது, மகரவொற்றுக்கெட்டு, பிரபஞ்சவைராக்கியம் என்றாயிற்று. பிரபஞ்சம் — உலகம். வைராக்கியம் — வெறுப்பு. பிரபஞ்சவைராக்கியம் எனபது உயிர், நிலையில்லாத உலகவாழ்வை வெறுத்தலாகும். நீத்தல் விண்ணப்பத்தை அடிகள் உலகவாழ்வை வெறுத்தல் காரணமாகசசெய்தலால் பிரபஞ்சவைராக்கியம், நீத்தல் விண்ணப்பத்தின் ஞானப்பொருளாய்க் கூறப்பட்டது.

---

[கட்டளைக்கலித்துறை]

திருச்சிற்றம்பலம்.

105. கடையவ னேனைக் கருணையி னாற்கலந் தாண்டுகொண்ட, விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின்தோல், உடையவ னேமன னுமுத்தர கோசமங் கைக்கரசே, சடையவனேதளர்ந் தேனெம்பி ரானென்னைத் தாங்கிக்கொள்ளே. உக.

## நீத்தல் விண்ணப்பம்.

[ப-ரை] கடையவனேனை — (நின் திருவடிகளைச் சார்தற்கு) கீழ்ப்பட்டவனாகிய என்னை; கருணையினால் — (என்மேல்வைத்த) பேரருளினாலே; கலந்து ஆண்டுகொண்ட—(திருப்பெருந்துறைக்கு வந்து) எனனோடு அத்துவிதமாய்க்கலந்து நின்னடிமையாக ஆண்டு அருளிய; விடையவனே — எருத்தை ஊர்தியாகக்கொண்டவனே; விட்டிடுதி — என்னைக் கைவிட்டுவிடுவாயோ? விறல்வேங்கையின் தோல்உடையவனே — வலிமையுடைய புலியைக்கொன்று அதன் தோலை (ஆடையாக)த் தரித்திருப்பவனே; மன்னுமுத்தரகோச மங்கைக்கு அரசே — நிலைபெற்றிருக்கும் திருவுத்தரகோச மங்கைக் குத் தலைவனே; சடையவனே — (தலையின்மேலே) சடையை யுடையவனே; தளர்ந்தேன் — (நீ என்னை உலகில் விடுத்துக் கைலைக்குப் பிரிந்துபோனதினாலே) மனச்சோர்வடைந்தேன்; எம்பிரான் — எங்களுடைய தலைவனே; என்னைத்தாங்கிக்கொள் — என்னைக்காப்பாற்றி அருளாய்.

[வி-ரை] விடையவனே — திருமூலர் திருமந்திரம் 2411 - வது பாட்டில் "ஆய பசுவும் அடலேறெனநிற்கும்" என்று கூறிய படி விடையவன் எனபது உயிர்களை அடிமைகளாக ஆளுகிறவன் என்ற கருத்தை உணர்த்துகின்றது. உத்தரகோச மங்கைக்கரசே— (அடிகள் திருப்பெருந்துறையை நீங்கியபின) திருவுத்திரகோசமங் கைக்கு வந்து அத்தலத்திலிருந்து நீத்தல் விண்ணப்பம் பாடியதால் உத்தரகோசமங்கைக்கரசே என்றார். சடையவனே — பகீரதன் செய்த தவத்தினாலே வானினின்று உலகிலிழிந்த கங்கைவெள் ளத்தை உலகம் அழியாதிருக்கும்படி அதனை ஒரு துளியாக்கித் தனது சடையில் வைத்துக்கொண்டது சிவபெருமானது பேராற் றலைக் குறித்தலால் அடிகள் தம்மைக்காப்பாற்றுதற்குச் சிவபெரு மான் ஆற்றலுடையான் என்பதைக்குறிப்பிட்டார். தளர்ந்தேன் — தளர்ந்தேன் என்பது இங்கே சிவபெருமான் தம்மைவிட்டுப் பிரிந்தத னிமித்தம், அடிகள் அடைந்தமனத்தளர்வைக் குறிக்கின்றது. விட் டிடுதி என்பதில் "இ" முன்னிலை எதிர்காலவினைவிகுதி, "த்"

எழுத்துப்பேறு (தொல்காப்பியம் சொல்லதிகாரம் — சூத்திரம் 223) இறைவன் முன்னமே அடிகளை விட்டுப்பிரிந்துபோனதினாலே விட்டிடுதி என்பதற்கு எதிர்காலப்பொருள் கொள்ளப்பட்டது. ஏ- அசை. கண்டாய் - முன்னிலையசை. இந்தப்பாட்டில் அடிகள் தம்மைச் சிவபெருமான் திருப்பெருந்துறையில்வைத்து ஆண்டருளிப் பிரிந்துபோனதற்காக மனச்சோர்வடைந்து தம்மை விட்டுவிடாமல் காப்பாற்ற வேண்டுமென்று முறையிடு செய்கின்றார்.

---

115. மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப யானுன் மணி மலர்த்தாள், வேறுபட் டேனை விடுதிகண் டாய்வினை யேன் மனத்தே, ஊறுமட் டேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே, நீறுபட் டேயொளி காட்டும்பொன் மேனி நெடுந் தகையே ௩௦.

[ப-ரை] வினையேன் மனத்தே — நல்வினை தீவினைகளென்னும் இருவினைகளையும் செய்கின்றவனாகிய எனது உள்ளத்திலே; ஊறும் மட்டே — சுரக்கின்றதேன்போல இன்பந்தருகின்றவனே; மன்னும் உத்தரகோசமங்கைக்கு அரசே — நிலைபேறுயுள்ள திருவுத்தரகோசமங்கைக்குத் தலைவனே; நீறுபட்டு — திருநீறு அணிந்திருத்தலால்; எய் ஒளி காட்டும் பொன்மேனி — பொருந்திய ஒளிவிளங்குகிற பொன்னிறமேனியோடும்(வந்து என்னை ஆண்டருளிய); நெடும் தகையே — பேரருட்குணமுடையவனே; அஞ்சு (உம்) - ஐம்பொறிகளும்; மாறுபட்டு — என்னோடு இணங்காது பகைத்து; என்னை வஞ்சிப்ப — என்னை உலகநுகர்வுகளிலே செல்லவிட்டு வஞ்சனையைச்செய்ததனாலே; யான் — நான்; உன் மணி மலர்த்தாள் — பூக்களை அணிந்திருக்கிற உன்னுடைய அழகிய திருவடிகளைவணங்கிப்பெறுவதாகிய பேரின்பத்தை அடையாமல்; வேறு பட்டேனை — அத்திருவடிகளை மறந்து நினையாதவனாகிய என்னை;

விடுதி — கைவிட்டுவிடுவாயோ; (அதாவது கைவிடாதே என்ற படி).

[வி-ரை] வினையேன் மனத்தே ஊறும்மட்டே — சிவபெருமான் சீவன்முத்த அடியார்களுடைய தூயஉள்ளத்தில் தங்கியிருந்து கொண்டு அவர்களுக்கு இன்பங்கொடுத்தலால் அடிகள் வினையேன் மனத்தே ஊறும்மட்டே என்றார். நீறுபட்டு — நீறு - திருநீறு. பட்டு — பொருந்தி, அணிந்து; பட்டு என்பது இங்கே படுதலால் என்னும் காரணப்பொருளில் வந்தது. ஏய் ஒளி காட்டும் பொன் மேனி — திருநீற்றின் ஒளியானது அருளொளியைக் குறித்தலால் நீறுபட்டே ஒளிகாட்டும் பொன்மேனி என்றார். பொன்மேனி — பொன்போலும் நிறமுடையமேனி. நீறுபட்டே ஒளி காட்டும் பொன்மேனி என்றதனாலே அடிகள் தம்மைத் திருப்பெருந்துறையில் திருநீறணிந்த மேனியோடும் ஆட்கொள்ளவந்த அந்தணர் கோலத்தைக்குறிக்கிறார். நெடுந்தகையே என்பது பெருங்குணம். அது இங்கே அடிகளை ஆட்கொள்ளவந்த பேரருட்குணத்தைக் குறிக்கிறது. அஞ்சு என்பது இங்கே ஐம்பொறிகளைக் குறிக்கிறது. எண்ணல் அளவை ஆகுபெயர். எனனை வஞ்சிப்ப—வஞ்சிப்ப — வஞ்சித்தலால் என்னும் காரணப்பொருளில் வந்த செய வென்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம். வஞ்சித்தலாவது, சிவபெருமான் திருவடிகளை வணங்கி அடையப்பெறுவதாகிய நிலையான இன்பத்தை மறக்கச்செய்து, நிலையில்லாத உலக இன்பத்தை நிலையுள்ளதென விரும்பி அதனை நுகரும்படிசெய்தல். "மாறிநின்றென்னை மயக்கிடும் வஞ்சப்புலனைந்தின் வழியடைத் தமுதே ஊறிநின்று" என்று அடிகள் (22 – 1) பாட்டில் கூறியிருத்தல் காண்க. உன் மணிமலர்த்தாள் வேறுபட்டேனை — தாள் என்பது இங்கே திருவடிகளை அடைதலால் பெறப்படுவதாகிய பேரின்பத்தைக்குறிக்கிறது வேறுபடுதல்—நீங்கியிருத்தல்; அதாவது மறந்து நினையாதிருத்தல். விடுதி — கைவிடுவாயோ; வினா வினை. அது இங்கே கைவிடாதே என்னும் பொருள்தந்துநின்றது. கண்டாய் — முன்னிலை அசை.

திருவண்ணாமலையில் அருளிய

# எ. திருவெம்பாவை

## சொற்றொடர் விளக்கம்.

திருவெம்பாவை இருபது பாட்டுக்களையுடையது. ஒவ்வொரு பாட்டின் இறுதியும் எம்பாவாய் என்ற சொற்றொடர் கொண்டு முடிதலால் இப்பதிகம் திருவெம்பாவை என்ற பெயரால் குறிக்கப் படுகின்றது. திருவெம்பாவை என்ற சொற்றொடர் திரு, எம், பாவை என்ற மூன்று சொற்களால் ஆகியது. திரு, என்பது அருள்; எம், என்பது எங்கள் என்று பொருள்படுகிற தன்மைப் பன்மைப் பொதுப்பெயர்; பாவை என்பது சித்திரப்பதுமை போன்ற பெண். பாவை என்ற சொல் ஆய் என்ற விளியுருபேற்று பாவாய் என்று விளிப்பெயராயிற்று. இப்பதிகம் முதல் ஒன்பதுபாட்டுக்களிலும் கன்னிப்பெண்கள் சிலர், தத்தம் வீட்டினுள்ளே துயிலும் பெண் ஒருத்தியை விளித்துக் கூறுதலால் பாவாய் எனறு ஒருமையிலும்,பெண்கள் சிலர் சேர்ந்து கூறுதலால் எம் என்று பன்மையிலும் கூறியது பொருத்தமுடைமை அறிக. இப்பதிகம் சிவபெருமானது அருட் செயலைக் கூறுதலின் எம்பாவை என்பதனுடன், திரு என்ற அடைமொழி சேர்த்துக் கூறப்படுகின்றது. மாணிக்கவாசக அடிகள், திரு அண்ணமலைத் திருப்பதியில் தங்கியிருந்தபொழுது மார்கழித்திங்கள் விடியற்காலத்தில் அங்கே உள்ள கன்னிப்பெண்கள் சிலர் சேர்ந்து தங்களையொத்த ஓர கன்னிப்பெண், கண் துயிலும் ஒவ்வொரு வீட்டுக்கு முன்னே போய் அவளை அவள் படுத்திருக்கும் அமளியிலிருந்து எழுந்து கதவைத் திறந்து வந்து தங்களுடன் சேர்ந்து தாமரைத்தடாகத்துக்கு முழுக வரும்படி விளித்த செயலைக்கண்டறிந்தார். அடிகள் தாம் கண்டறிந்த கன்னிப்பெண்கள் செயலை உருவகமாக அமைத்து அழிக்கப்பட்ட உலகத்தை மீளப் படைக்கத் தொடங்கு சிவசத்திகளின் செயலாக இந்தத் திருவெம்பாவைப் பதிகத்திற் பாடுகின்றார்.

## திருவெம்பாவைக் காலவிளக்கம்.

மக்களாகிய நாம் இவ்வுலகில் வாழும் வாழ்நாளைப் பகலும் இரவும் சேர்ந்த நாளை ஒருமையாக வைத்துக் கணக்கிடுகின்றோம். ஒவ்வொருநாளும், பூமி தன்னைச் சுற்றியும், ஞாயிற்றைச் சுற்றியும் வருவதனால் உண்டாகிறது. அவ்வாறு சுற்றுங்கால் பூமிமேல் ஞாயிற்றின் ஒளிபடுங்காலம் பகலாகவும், படாதகாலம் இரவாகவும் அமைகிறது; ஆதலின், ஒவ்வொருநாள் இரவும் சிவசத்தியினது சங்காரகாலத்தையும் ஒவ்வொரு நாட் பகலும் சிவசத்தி உலகத்தை மீளப்படைத்து நிலைத்து நிற்கச்செய்யும் திதிக்காலத்தையும், இரவு விடிகிறதற்கு முன்னே விடியற்காலமாகிய அஞ்சு நாழிகைக்காலம் சிவசத்தி உலகத்தை மீளப்படைக்கத் தொடங்கும் அவதரத்தையும் குறிக்கின்றன. இங்ஙனம் நாளை ஒருமையாக வைத்துத் தைத்திங்கள் முதல் ஆனித்திங்கள் வரை கணக்கிடப்படும் உத்தராயண காலம் தேவர்களுக்கு ஒருநாளின்கண்ணுள்ள பகலாகும்; ஆடித்திங்கள் முதல் மார்கழித்திஙகள் வரை கணக்கிடப்படும் தக்கணாயன காலம் இரவாகும். இங்ஙனம் கணககிடப்படுதலின மக்களுடைய மார்கழித்திங்கள் முழுவதும் தேவர்களுடைய இரவு காலத்தில் ஆறில் ஒரு பகுதியாகிய விடியற்காலமாகிறது. இந்த விடியற்காலத் தொடக்கத்தில் மக்கள் துயில் நீங்கி நாட்கடனாற்றத் தொடங்குதலால், அககாலம் பள்ளியெழுச்சிக்காலம் (துயில் நீங்கி எழுகிற காலம்) என்று கூறப்படுகிறது. சைவர்கள் துயில் நீஙகி எழுந்ததும் சிவபெருமானை வழிபடுங்காற் கூறும் தோத்திரப் பாட்டுக்களாக அமையும்படி அடிகள் பத்துப்பாட்டுககள் அடங்கிய திருப்பள்ளி எழுச்சிப்பதிகம் பாடியருளினா. ஆகலின் படைப்புத் தொழிலை பராசத்தியிற்றோன்றிய வைந்தவ சத்திகளாகிய சிவசத்திகள் படைப்புத் தொழிலைத் தொடங்கும் அவதரம், மககளுடைய விடியற்காலமாகிய திருப்பள்ளியெழுசசி எனக் குறிக்கப்படுகிற திருப்பள்ளி யெழுச்சியாகிய அவதரம், தேவர்களுக்கு விடியற்காலமாகிய மார்கழித்திஙகளாற் குறிககப்படுகின்றது. கூத்தப்பெருமான் சிறப்பாக நடனஞ்செய்கிற மார்கழித்திங்கள் திருவாதிரையும் அதற்கு

முன் ஒன்பது நாட்களும் ஞாயிற்றின் ஒளி திங்கள் வழியாய் நாம் வாழும் பூமியின் கண் மிகுதியாக விளங்கும் காலமாதலின் மார்கழி விழாநாட்களாகிய அக்காலத்தில் திருவெம்பாவைப் பாட்டுக்கள் மாத்திரம் ஒவ்வொரு சைவனும் ஆன்மார்த்தமாகச் செய்யும் சிவவழி பாட்டிலும் கோவிலிற் பொதுவாகச் செய்யப்படும் பரார்த்த வழி பாட்டிலும் ஓதுதற்குரியனவாகக் கருதப்பட்டு அம்முறை நீண்ட காலமாக நமது தமிழ் நாட்டில் நடைபெற்று வருகிறது.

## திருவெம்பாவைக் கருத்து விளக்கம்.

சிவமும், சத்தியும் ஒன்றோடொன்று பிரிக்க முடியாதபடி இரண்டற அத்துவிதமாயியைந்து நிற்கும். சர்வசங்கார காலத்தில் உலகம் ஒடுங்கியிருக்கும்பொழுது சத்தி சிவத்தில் ஒடுங்கியிருக்கும். அப்பொழுது சுத்தமாயை, அசுத்தமாயைகளும் அவ்வவற்றிலுள்ள உயிர்களோடு, காரணமாத்திரையாய் ஒடுங்கிநிற்கும். ஆணவ மல மறைப்பு முற்றிலும் நீங்காத உயிர்களுடைய கேவல நிலையை சிவ பெருமான் கண்டு சகியாது இரக்கங்கொண்டு அவ்வுயிர்கட்குப் பொதுவாக அருள் செய்யவேண்டும் என்னும் கருத்துக்கொண்ட பொழுது அவனிடம் ஒடுங்கியிருந்த சிவசத்தி பிரிந்து, பிரிந்தாலும் வேறாகாதபடி சிவத்தோடியைந்து நிற்கிறது. இந்த நிலையில் சிவசத்தி, பராசத்தி எனப்பெயர் பெறும். பராசத்திமாயையோடு தொடர்பு படாது உயிர்கட்கு மறைப்பு சிறிதும் இல்லாத ஞான மாகும். இந்தப் பராசத்தி உயிர்கட்குச் சிறப்புவகையால் ஐந்தொழில் குறித்து இச்சாஞானக்கிரியாசத்திகளாய்த் தொழில்செய்யும் அவ தரத்தில் திரோதானசக்தி அல்லது ஆதிசத்தி என்ற பெயர் பெறு வள். இந்த ஆதிசத்தியாகிய அபரசத்தியானது, உயிர்கட்கு மலபரி பாகத்தின் பொருட்டு பிராரத்தகன்மத்தைக்கொடுக்கவேண்டுமென்ற ஞானமும் கிரியையும் ஒத்த அருவுருவமுடையவளான பொழுது, மனோன்மனி என்ற பெயர் பெறுவள். அபரசத்தி என்பது மாயை யுடன் இயைந்து உயிர்கட்கு மறைத்தலைச்செய்யுஞ் சத்தி. இந்த அபரசத்தி உயிர்கட்கு மலபரிபாகத்தின் பொருட்டுப் பிராரத்தகன்ம

பலன்களைப் புசிப்பிக்கும்படி கொடுத்தற்கு அவற்றை ஒன்ருேன்ருய் மறைத்துக் கொடுக்கவேண்டுமென்று இச்சைகொண்ட அவதாரத்திற்ரேன்றிய செயலையும், உருவத்தையும் உடையவளான பொழுது மகேசை என்ற பெயர் பெறுவள். இந்த அபரசத்தி உயிர்கட்கு இளைப்பொழிக்கவேண்டிக் கன்மத்தை மாறிக்கொடுக்கவேண்டுமென்ற அவதாரத்திற் சங்காரத் தொழிலையும் உருவத்தையுமுடையவளான பொழுது இரௌத்திரி என்ற பெயர் பெறுவள். இந்த அபரசத்தி, பிராரத்தகன்மத்தை அறியச் செய்தற்கு உயிர்கட்கு அந்தக்கரணம் முதலிய கருவிகளை நிறுத்த வேண்டுமென்ற திதித் தொழிலுடையவளானபொழுது இலக்குமி என்ற பெயர் பெறுவள். இந்த அபரசத்தி உயிர்களின் பிராரத்தகன்மத்தை அறியுந் தொழிலை நிறுத்துதற்குத் தாரகமாக அந்தக்கரண முதலிய அறிகருவியைக் கொடுகக வேண்டுமென்ற அவதாரத்திற் ரேன்றிய படைப்புத் தொழிலையும் உருவத்தையும் உடையவளான பொழுது வாணி என்ற பெயர் பெறுவள்.

5. மேலே கூறியவாற்ருல் சத்தி ஒன்றே உயிர்கட்கு ஐந்தொழில் செய்தல் குறித்து வேறு வேறு தொழில்களைச் செய்யும் பொழுது வேறு வேறு பெயர்கள் பெறுவள் என்பது தெளிவாகும். இச்சத்திகளை அதிட்டிக்கும் சத்திமான்களும் முறையே சதாசிவன், மகேசன், உருத்திரன், திருமால், நான்முகன் என்று வெவ்வேறு பெயர்கள் பெற்று நிற்பர். இச்சத்திகள் தொழில் செய்யும் இடங்களும் வெவ்வேறுதத்துவங்களாகவேயிருக்கும். சத்தி, சத்தி தொழில் செய்யும் இடம், சத்தியை அதிட்டித்து நிற்குஞ் சத்திமான் ஆகிய மூன்றும் எப்பொழுதும் ஒன்ருேடொன்றியைந்து நிகழும். சிவபெருமானுடைய பொதுவியலுண்மையை அறியாதார், மூர்த்திகளுக்கு வேறுபாடு கற்பித்து அவர் பெரியர் இவர் பெரியர் என்று கூறிப்பிணங்கியிடர்ப்படுவர். உலகிற்கு முழுமுதற் கடவுள் ஒருவனே என்ற உண்மையை அவர் அறியார் போலும்.

6. மேலே கூறப்பட்ட சத்திகள் தொழில் வேறுபாடு பற்றி மூவகைச் சத்திகளாகவும், எண்வகைச் சத்திகளாகவும், ஒன்பது

வகைச் சத்திகளாகவும் இன்னும் பல்வேறு வகைப்பட்டு நிற்குஞ் சத்திகளாகவும் கூறப்படும். அச்சத்திகளோடு புணர்ந்து நிற்குஞ் சிவமும் அவை தொழில் செய்யுமிடங்களாகிய தத்துவங்களும் வெவ்வேறு பெயர் பெற்று நிற்கும். இவ்வேறுபாடுகள் அனைத்தும் இலயம், போகம், அதிகாரம் என மூன்றுயடங்கும். இலயம், போகம், அதிகாரம் என்பனபற்றி அறிய விரும்புகிறவர்கள் சிவ ஞானபாடியம் கழகப் பதிப்பு 275, 276, 277 பக்கங்கள் பார்க்க.

7. திருவெம்பாவையிற் குறிக்கப்பட்ட சத்திகள் ஒன்பது. அவை மனோன்மனி, சர்வபூததமனி, பலப் பிரதமனி, பலவிகரணி, கலவிகரணி, காளி, இரௌத்திரி, சேட்டை, வாமை என்பன. இந்த ஒன்பது சத்திகளையும் புணர்ந்தும் அதிட்டித்தும் நிற்குஞ் சத்திமான்கள் முறையே சதாசிவன், ஆன்மமூர்த்தி அல்லது சர்வபூததமனர், சூரியமூர்த்தி அல்லது பலப்பிரதமனர், சந்திரமூர்த்தி அல்லது பலவிகரணர், ஆகாயமூர்த்தி அல்லது கலவிகரணர், வாயுமூர்த்தி அல்லது ஈசானர், தேயுமூர்த்தி அல்லது உருத்திரர், அப்புமூர்த்தி அல்லது பீமர், பிருதிவிமூர்த்தி அல்லது வாமதேவர் என்னும் பெயர்கள் பெறுவர். பிருதிவிமூர்த்தி அராகதத்துவம் வரையிலும், அப்புமூர்த்தி காலதத்துவம் வரையிலும், தேயுமூர்த்தி சுத்த தத்துவம் வரையிலும், வாயுமூர்த்தி ஈசுவரதத்துவம் வரையிலும் ஏனைய நான்கு மூர்த்திகளும் சிவதத்துவம் வரையிலும் வியாபித்துள்ளனர் என்று சைவநூல்கள் கூறுகின்றன. இப்பாகுபாடு சிவபெருமானது போகநிலையைக் குறிக்குஞ் சதாசிவமூர்த்தியின் சத்தியாகிய மனோன்மனி முதலாகத் தொடங்கி சிவபெருமான் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் உயிர், சூரியன், சந்திரன், ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவியாகிய எட்டு உருவங்களையும் ஆதாரமாகக் கொண்டது. இதனால் சிவபெருமான் போக நிலையில் சதாசிவமூர்த்தியாய் நின்று, உயிர்கள் கேவலநிலையினின்று நீங்கிப் புனருற்பவமாமாறு குறித்துத் தூலவிச்சாஞானக் கிரியைகளோடு சேர்ந்து சுத்த மாயையினின்று சுத்தப் பிரபஞ்சத்தையும், அசுத்தமாயையினின்று

அசுத்தப் பிரபஞ்சத்தையும் தோற்றுவித்தலும், அதன்பின் சூக்கும அதிகாரநிலையில் மகேசனாய் நின்று,விந்துவினின்றுஞ் சுத்தப்பிரபஞ் சங்களைச் சந்நிதி மாத்திரையிற் தோற்றுவித்துத் தொழில்செய்தலும், அதன்பின் தூலஅதிகார நிலையில் நின்று அனந்தேசன், உருத்திரன், மால், நான்முகன் ஆகிய இவர்களை அதிட்டித்து நின்று, அசுத்தமா யையினின்று மிசிரப் பிரபஞ்சத்தையும், பிரகிருதிமாயையினின்று அசுத்தப் பிரபஞ்சத்தையும் தோற்றுவித்துத் தொழில் செய்தலும் திருவெம்பாவைப் பதிகத்திற் கூறப்பட்டனவென அறிக.

8. திருவெம்பாவையில் 'ஆதியும் அந்தமும்' என்ற முதலா வது பாட்டு மனோன்மனிச் சத்தியின் திருவாக்காய் சர்வ பூதத மனிச் சத்தியைப்பிரேரித்து உணர்த்துகின்றது. 'பாசம் பரஞ்சோதி' என்ற இரண்டாவது பாட்டு, சர்வபூததமனிச் சத்தியின் திருவாக் காய் பலப்பிரதமனிச்சத்தியைப் பிரேரித்து உணர்த்துகிறது. 'முத் தன்ன வெண்ணகையாய்' என்ற மூன்றாவது பாட்டு பலப்பிரத மனிச்சத்தியின் திருவாக்காய்க் கலவிகரணிச்சத்தியைப் பிரேரித்து உணர்த்துகிறது. 'ஒண்ணித்தில நகையாய்' என்ற நான்காவது பாட்டு, கலவிகரணிச்சத்தியின் திருவாக்காய் கலவிகரணிச் சத்தியை பிரேரித்து உணர்த்துகின்றது. 'மாலறியா நான்முகனும்' என்ற அஞ்சாவது பாட்டு, கலவிகரணிச் சத்தியின் திருவாக்காய் காளிச் சத்தியை பிரேரித்து உணர்த்துகிறது. 'மானேநீனென்னலை' என்ற ஆருவது பாட்டு,காளிச்சத்தியின் திருவாக்காய் இரௌத்திரிச் சத்தியைப் பிரேரித்து உணர்த்துகிறது. 'அன்னே இவையுஞ் சில வோ'என்ற ஏழாவது பாட்டு,இரௌத்திரிச் சத்தியின் திருவாக்காய் சேட்டைசசத்தியைப் பிரேரித்து உணர்த்துகின்றது. 'கோழி சிலம் பச் சிலம்பும்' என்ற எட்டாவது பாட்டு, சேட்டைச்சத்தியின் திரு வாக்காய் வாமைச்சத்தியைப் பிரேரித்து உணர்த்துகின்றது. இந் தப் பாட்டில் சேட்டைச்சத்தி வாமையைப் பார்த்து "ஆழியானன் புடைமையாமாறும் இவ்வாறோ" என்று தன்னை அதிட்டித்து நிற்கும் திருமாலினிடத்தில், துயின்று கொண்டிருக்கும் வாமை அன்பில்லை

என்று கூறுவது பொருத்தமாயிருத்தலை அறிக. இனி 'முன்னைப் பழம்பொருட்கும்' என்ற ஒன்பதாவது பாட்டிலிருந்து இருபதா வது பாட்டு முடிய பன்னிரண்டு பாட்டுக்களிலும் ஒன்பது சத்தி களும் ஒன்று சேர்ந்து சிவபெருமானை நோக்கிப் பாடுகின்றனர்.

## முடிவுரை.

9. இங்ஙனம் ஒன்பது சத்திகளும் மேலே கூறப்பட்டவாறு முறையே ஒன்றனை ஒன்று பிரேரித்து உணர்த்த உலகத்தைப் படைத்தல் முதலிய ஐந்தொழில்களும் நடைபெறுதற்குச் சிவபெரு மானே முழுமுதற் றலைவன். இக்கருத்துப்பற்றி யன்றோ திருநா வுக்கரசு அடிகள் "ஆட்சி உலகை உடையாய் போற்றி" (6-57-4)என் றும், "உலகை நடுங்காமற் காப்பார்தாமே" (6-36-8) என்றும், "கண் ணாய் உலகுக்கு நின்றாய் போற்றி" (6 - 55 - 11) என்றும் கூறி யருளினர். சிவபெருமானுடைய தலைமையில் நடைபெறுகிற இந்த ஆட்சி, உள்ஆட்சி (Inner Government) என்று கூறப்படும். புற உலகில் அரசியற் பணியாளர் பிரேரித்துச் செய்யும் ஆட்சி யெல்லாம் இதற்கு ஒருவாறு ஏகதேசமானபடியாய் அமைந் துள்ளது:— உள்ளாட்சி எவ்வாறு அருளைத் துணையாகக்கொண்டு உயிர்களுடைய இன்ப நலத்தின் பொருட்டு இறைவனால் நடத்தப் பெறுகிறதோ, அவ்வாறே புற ஆட்சியில் அரசரும் அரசியற் பணி யாளரும் அருளைத் துணையாகக்கொண்டே குடிமக்கள் இன்ப நல மடையும்படி ஆட்சிசெய்தல் வேண்டும். இக்காலத்திலுள்ள புற ஆட்சிகள் பொருட்பேற்றை முதன்மையாகக் கொண்டு அருளை மறந்து நடத்தப் பெறுதலால் அமைதியின்மையும் துயரும் உண் டாயிருக்கி றன. புற ஆட்சிகள் செவ்விதாய் நடைபெறுமாறு இறைவன் அருள்புரிவாராக.

## சத்தியை வியந்தது

சத்தி என்பது அருட்சத்தி. அது இங்கே உலகை மீளப்படைக் கும்பொழுது எண்வகை ஆன்மாக்களிடமாக நின்று தொழில் செய்

யும். அது மனோன்மணியாகிய சதாசிவத்தினது சத்தியையும், அச் சத்தி எண்வகை ஆன்மாக்களிடமாக நின்று தொழில் செய்யும், எண்வகைச் சத்திகளையுங் குறிக்கிறது. அது மேலேகூறிய எண் வகைச் சத்திகளையுங் குறிக்கிறது. சத்தியை வியந்ததென்பது மனோன்மணியும், ஒன்பது சத்திகளும் முறையே ஒருவரை ஒருவர் பிரேரித்துச் செய்யும் படைப்புத் தொழிலை அடிகள் அதிசயித்துப் பாடியது.

[வெண்டளையான்வந்த இயற்றரவிணைக் கொச்சகக்கலிப்பா]

திருச்சிற்றம்பலம்.

155. ஆதியு மந்தமு மில்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்தியவாழ்த் தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதா ரமளியின்மே னின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனு மாகாள் கிடந்தா ளென்னேயென்னே
ஈதே யெந்தோழி பரிசேலோ ரெம்பாவாய். கக.

[ப-ரை] வாள்தடங்கண்மாதே—ஒளிபொருந்திய பரந்த கண் களையுடைய பெண்ணே; ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி—முதலும் முடிவுமில்லாத அறிதற்கரிய பேரொளிப் பொரு ளாகிய சிவபெருமானைப்பற்றி; யாம் பாடக கேட்டேயும்—நாங்கள் பாடுதலால் (எழும் ஒலிகள்) நின் செவிகளிற் புகுந்து அவற்றை நீ, கேட்கும் வலியுடையவளா யிருந்தாலும்; வளருதியோ—(அவ்வொ லிகளை நீ கேளாதிருப்பது யாது காரணத்தினாலோ) தூங்குகின் றாயோ? (அல்லது); நின் செவி வன் செவியோ—நினது செவிகள் அவ்வொலிகளைக் கேட்கமாட்டாத செவிட்டுச் செவிகளோ; மாதே வன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலி போய் வீதிவாய்க் கேட்

டலும் — நாங்கள் சிவபெருமானுடைய நீண்ட கழல்களை அணிந் துள்ள திருவடிகளை வாழ்த்திப் பாடிக்கொண்டு வருகிற ஒலிகள் தெருவிலும் (தெருவிலுள்ள வீடுகளிலும்) சென்று கேட்குந்தரத் தனவாயிருப்பினும்; விம்மி விம்மி மெய்ம்மறந்து — மூச்சுவிட்டுக் கொண்டு தனது உடலை மறந்து; போது ஆர் அமளியின்மேல் நின் றும் — மலர் நிறைந்த படுக்கையினின்று எழாமல் அதன்மேல் நிலையாகப் படுத்துக்கொண்டும்; புரண்டு — உருண்டும்; இங்ஙனம் ஏதேனுமாகாள் கிடந்தாள் — இப்படி யாதொரு பயனையும் அடை யாதபடி தூங்கிப் படுக்கையின்மேற்கிடக்கின்றாள்; என்னே என் னே — இத்தன்மைதான் என்னை? (நாங்கள் அறிய முடியவில்லை); எங்தோழி பரிசு இதுவே — எங்கள் தோழியினுடைய தன்மை இதுதானோ? எம்பாவாய்—எங்கள் பிரியமான நங்கையே; ஏல் ஓர்— நாங்கள் சொன்னவற்றை ஏற்றுக்கொண்டு இவ்வாறு தூஙகிக் கொண்டிருப்பது சரியா என்று நினைத்துப் பார்.

[வி-ரை] இதில் மனோன்மணி, சர்வபூததமனியைத் துயிலு ணர்த்தி அவளுடைய தொழிலைச் செய்யும்படி ஏவுகின்றாள். வாள் தடங்கண் மாதே — வாள் + தடம் + கண்=வாட்டடங்கண்; வாள்— என்பது ஒளி—கண்ணானது ஏனைய நான்கு பொறிகள்போல் அல் லாது சேய்மைக் கண்ணுள்ள பொருளிடத்துஞ் சென்று அறியும் ஒளி வலியுடையதாதலின் வாட்கண் என்றார் தடம்—பரப்பு, விசா லம். வாள்தடம்கண் என்றதனால் புறத்தேதொலையிற் சென்றும் அகத்தே அகன்றும் அறியும் அறிவுடையவள் என்பது குறிப்பிடப் பட்டது. இத்தகைய அறிவுடைய நீ அக்கண்ணை வளரும்படி விட்டுத் தூங்கல் தகுதியாமா என்பது குறிப்பிப்பார், வாட்டடங் கண்மாதே என்று அடிகள் முதற்கண் கூறினார். ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும் சோதி — சோதி அறிதற்கு அருமையாத லின் அருஞ்சோதி என்றும் பிறசோதிகளுக்கெல்லாம் சோதியாயி ருத்தலின் பெருஞ்சோதி என்றும் அடிகள் கூறினார். அருமை இங்கே பாசஞான பசுஞானங்களாலறிய முடியாததன்மையைக் கூறு

கின்றது. சோதியானது தோற்றக் கேடுகளில்லாது என்று முள்ளதா யிருத்தலின் ஆதியும் அந்தமுமில்லாச் சோதி என்றூர். திருஞான சம்பந்த அடிகள் "துஞ்சுநாடுறந்து தோற்றமுமில்லாச் சுடர்விடு சோதி"(1-41-4) என்று கூறியது காண்க. யாம்பாடக் கேட்டேயும்- இந்தச்சோதி (ஒளி) யைச்சார்ந்து உயிர்கள் மலத்தொடக்கு நீங்க வேண்டியவைகளாதலின் அந்தச் சோதியைப் பாடுதல் ஆணவமல நீக்கத்திற்குக் காரணமாயிருத்தல்பற்றி சோதியை யாம்பாடஎன்றூர். துயிலுதல் ஆணவமலத்தில் அழுந்துதலேயும், துயிலுணர்த்தல் ஆண வமலப்பற்றை விட்டு நீக்குதலேயும் குறிக்கின்றன. "நேசாய வீசனு நீடாண வத்தரை—யேசாதமாயாடன்றெலழுப்புமே" என்று திரு மந்திரம் 2163-வது பாட்டில் திருமூலர் கூறுதல் காண்க. கன்னிப் பெண்கள் ஒருவரொருவரை எழுப்பி உணர்த்துதல், ஒன்பது வைந் தவ சக்திகளும் ஒருவரையொருவர் அவரவர் தொழில் செய்யுமிடங் களாகிய தத்துவங்களுக்குரிய ஆன்மாக்களுடைய ஆணவமலமறைப் பை நீக்குதலேக் குறிக்கிறது. பாடஎன்பது பாடுதலால் என்ற பொருளில் வந்தது; அதாவது யாம் பாடுதலாலுண்டாகும் ஒலிகள் கேட்டேயும் என்பது கேட்கத்தக்க அவ்வளவு உரத்த ஒலியா யிருப்பினும் என்ற பொருளில்வந்தது. கேட்டுக்கொண்டிருப்பினும் என்று பொருள் கொள்வது பின்சொல்லப்படுகிற வளருதியோ என் பதற்கும், வன்செவியோ நின்செவிதான் என்பதற்கும் முரணுயிருக் கும், துயிலுணருமுன் கேட்பது முடியாது. ஆதலின் வளருதியோ— கண்வளருதியோ எனபது வளருதியோ என்று தலேகுறைந்து வந் தது. நின்செவி வன்செவியோ — வன்செவி என்பது கேட்காத செவி, செவிட்டுச் செவி. மாதேவன் வார்கழல்கள் — 'மாதேவன்' முதல் 'ஈதே எந்தோழி பரிசு' வரை வீட்டுக்கு வெளியே நிற்கிற கன்னிப் பெண்களிலொருத்தி வீட்டுக்குள்ளிருக்கிற பெண்ணேப் பற்றிப் பிறபெண்களிடம் சொன்ன கூற்றுக நாம் கொள்ளல்வேண் டும். 'ஏதேனுமாகாள் கிடந்தாள்' என்று படர்க்கையிற் கூறுதலும், ஈதே எந்தோழி பரிசு என்று கூறுதலும், முன்னிலேயில் 'யாம் பாடக்கேட்டேயும்' என்று சொன்ன பின்பு 'மாதேவன் வார்கழல்

கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய் வீதிவாய்க் கேட்டலுமே' என்று கூறுதலும் அவ்வாறு கொள்ளுதல் பொருத்த முடைத்தென்பதை நன்கு விளக்கும். விம்முதல் என்பது ஏங்குதல். அது இங்கு தூங்கும் பொழுது மூச்சை உள்ளே வாங்குதலாலும் வெளியே விடு தலாலும் உண்டாகும் ஏங்குதலைக்குறிக்கிறது. மூச்சை உள்ளே வாங்கும் பொழுது வயிறு வீங்கலும் மூசசை வெளியே விடும் பொழுது வயிறு குழிதலும் உண்டாகின்றன. விழித்த பினபே அழுதல் முடியுமாதலானும், பின்னே மெய்ம்மறந்து என்று வருதலா னும் அழுதல் என்ற பொருள் பொருந்தாது. விம்மி விம்மி என் பது அடுக்குத் தொடர். ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே என்னே — கண்விழித்து வீட்டுக் கதவைத்திறந்து தங்களுடன் சேர்ந்து சோதியைப் பாட வரவில்லையாதலின் ஏதேனும் ஆகாள் என்றார். என்னே என்னே அடுக்குத்தொடர். எந்தோழி பரிசு ஈதே — ஈதே என்பதிலுள்ள 'ஏ' இதுவா என்னும் வினாப் பொரு ளில் வந்தது. பரிசு = தன்மை. எம்பாவாய் ஏல் ஓர் — எம்பா வாய் — எங்களுடைய பிரியமான தோழிப் பெண்ணே, பாவாய் என்பதற்கு எங்கள் கண்ணுள்ளிருக்கிற பாவை போன்றவளே என்று பொருள் உரைப்பினும் அமையும். ஏல் ஓர் — ஏல் = ஏற் றுக்கொள் (Admit) ஓர் — ஆராய்ந்து பார், (Consider attentively and decide); சிலர் இவை இரண்டும் அசை நிலைகள் என்று கூறுகின்றார்கள். அவை அசை நிலைகள் என்று தொல்காப்பி யம் நன்னூல் இலக்கணங்களிற் கூறப்படவில்லை. ஒரும் என்ப தும் உம் என்பதும் அசைகளாகக் கூறப்பட்டிருத்தலேயன்றி ஓர் என்பது அசை நிலையாகக் கூறப்படவில்லை; நாம் அவற்றை அசை நிலையாகக் கொண்டாலும் ஈண்டைக்கேற்பப் பொருள் சிறக்க வில்லை. மனோன்மனி, சாதாக்கிய தத்துவத்திற் தொழில்செய் யுஞ் சிவசத்தி. அச்சிவசத்தி தனக்குக் கீழேயுள்ள தத்துவங்களில் தொழில் செய்தற்குரிய சர்வபூததமனிச் சத்தியைப் பார்த்து "நீ நான் சொல்லும் அறிவுரைகளை ஏற்றுக்கொண்டு ஆராய்ந்து துணி ந்து உனது தத்துவ எல்லைக்கண்ணுள்ள ஆன்மாக்களுக்கு வேட்

கை, அறிவு, செயல்கள் விளங்கும்படித் தொழில் செய்" என்று ஏல் ஓர் என்பனவற்றிற்குப் பொருள் கொள்ளுதலே இப்பாட்டிற்கு ஏற்புடைத்தாய சிறப்புப் பொருளாம். ஓரறிவுரையைக் கேட்பார் அதனை ஆராய்தற்குமுன் அதனைப் பற்றுள்ளமின்றி (Prejudice) மனத்திலே ஏற்றுக்கொள்ளுதல் இன்றியமையாது வேண்டப்படுதலின் அடிகள் முதற்கண் 'ஏல்' என்று கூறிப் பின் 'ஓர்' என்று கூறியருளினர். ஓர்தலின்றித் தத்துவங்களிலே தொழில் செய்யும் சத்திகளுக்கும் ஆன்மாக்களுக்கும் அருளொளி விளக்கமுண்டாகாதாதலின் அடிகள் ஓர் என்று கூறினர். "ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே" என்று அடிகள் சிவபுராண அகவலில் கூறியது காண்க. 'ஏல் ஓர்' என்ற இரண்டு சொற்களுக்கும், மேலே கூறப்பட்ட பொருள்களே முதல் எட்டுப்பாட்டுக்களுக்கும் சமாஜப்பதிப்புத் திருவாசக உரையிலும் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால் அதில் 8-வது பாட்டுமுதல் 20-வது பாட்டுவரையிலுள்ள பாட்டுக்களில் வரும் ஏல் ஓர் என்பன அசைநிலைகளாகக் கூறப்பட்டிருக்கின்றன.

---

திருவண்ணுமலையில் அருளிய

# அ. திருவம்மானை.

---

திருவம்மானை என்ற சொற்றொடர் திரு, அம்மானை, யென்ற இரு சொற்களாலாகிய ஒரு சொற்றொடர். அம்மானை என்பது, பெண்கள் தனியேயிருந்துகொண்டு வெண்கலம், வெள்ளி முதலிய பொருள்களாலாகிய மூன்று உருண்டைகளில், இரண்டு கைகளிலுமொவ்வொரு உருண்டை இருக்க ஒன்று மேலே எறியப்பட்டுக் கீழே மாறி மாறி வந்து கொண்டிருக்கும்படி விளையாடும் விளையாட்டு. அம்மனை என்ற சொல் நெடித்தல் விகாரமேற்று அம்மானை என்றாயிற்று. இந்த அம்மனை விளையாட்டில் பெண்கள் பாடவேண்

டிய பாட்டாகச் சித்தாந்த ஞானக்கருத்தை வைத்து அடிகள் பாடியி ருக்கிறார். அம்மனை விளையாட்டு இப்பொழுதுந் தமிழ்ப்பெண்டிர் விளையாடும் விளையாட்டாக இருக்கின்றது.

## ஆனந்தக்களிப்பு.

ஆனந்தக் களிப்பென்பது, ஆனந்தத்தினாலே களிப்பு என விரி யும். ஆனந்தம் என்பது பேரின்பம். களிப்பென்பது மகிழ்ச்சி மீக் கூர்தல். ஆனந்தக்களிப்பு என்பது பேரின்பம் நுகர்தலினாலே மகிழ்ச்சி மீக்கூர்தல்.

[ஒப்புமைபற்றிவந்த ஆறடித்தரவு கொச்சகக்கலிப்பா]

திருச்சிற்றம்பலம்.

---

190. ஊனா யுயிரா யுணர்வாயென் னுட்கலந்து
தேனா யமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளுந்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேர்
ஆனா அறிவா யளவிறந்த பல்லுயிர்க்குங்
கோனாகி நின்றவா கூறுதுங்கா ணம்மானாய். கூஉ.

[ப-ரை] அம்மானாய் — அம்மனை விளையாடும் பெண்ணே; அளவிறந்த பல்லுயிர்க்கும்—எண்ணிறந்த பல்கோடி உயிர்களுக்கும்; தேனார்கொன்றை மலர்ச்சேவகனார் — தேன் துளிக்கின்ற கொன் றைமாலையைத் தலைமேலே யணிந்திருக்கின்ற ஐந்தொழிலியற்றும் சிவபெருமான்; ஊனாய்—எனது உடலுக்கு உடலாயும்; உயிராய்— எனது உயிருக்கு உயிராயும்; உணர்வாய் — நான் ஒற்றித்து நின்று உணரும் உணர்வுக்கு உணர்வாயும்; என்னுட் கலந்து (உம்) — எனது உள்ளத்தினுள்ளே கலந்து நின்றும்; ஆனா சீரொளிசேர் அறிவாய்—என்னைவிட்டு நீங்காது மலஞ்சிறிதுங் கலவாத பேரொ

ளியோடு கூடிநின்று அறிவிக்கும் பேரறிவாயும்; தேனாய் அமுதமு மாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய் — தேன்போலும், அமுதம்போ லும், இனிமையான கரும்பின் வெல்லக்கட்டி போலுமிருக்கிற பேரின்பத்தை நுகர்வித்தற்கு உடனாய் நின்றும்; வானோரறியா வழி — தேவர்களும் அறியாதிருக்கிற முறைமையில்; எமக்குத்தந் தருளும் — அடியார்களாகிய எங்களுக்குப் பேரின்பத்தைக் கொடுத் தருள் செய்கின்ற; கோனாகி நின்றவாறு — தலைவனாய் நின்ற தன் மையை; கூறுதுங்காண் — சொல்லிப் பாடி அம்மனை விளையாடு வோமாக.

[வி-ரை] அம்மானாய்—அம்மனை யென்னும் விளையாட்டின் பெயர், அந்த விளையாட்டை விளையாடுகின்ற பெண்ணை ஆகு பெய ராய்க் குறிக்கின்றது. அம்மானை யென்பதனோடு ஒருமை முன் னிலை விளியுருபு 'ஆய்' சேரும்பொழுது நிலைமொழி யீற்றிலுள்ள 'ஐ' கெட்டு அம்மானாய் என்றாயிற்று. இந்த அம்மானை விளையாட் டானது ஒவ்வொரு பெண்ணும் தனியேயிருந்து விளையாடும் விளை யாட்டாதலால் அம்மானாய் என ஒருமையில் விளித்தார். அளவி றந்த பல்லுயிர்க்கும் தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் — சிவ பெருமான் எண்ணிறந்த பலகோடி உயிர்களும் வீட்டின்பமடை யும்படி படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் அவைகள்மேல் வைத்த பேரருளால் ஒழிவின்றிச் செய்துவருதலின் அளவிறந்த பல்லுயிர்க்குஞ் சேவகனாரென்று கூறினார். தேனார் கொன்றை மலர்ச் சேவகனார் என்றதனாலே அவன் எல்லா உயிர்களுக்கும் இன்பம் அளிப்பவனென்பது குறிப்பிடப்பட்டது. "உரைசேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனிபேத, நிரைசேரப்படைத்த வற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான் கோயில்" என்ற திரு ஞானசம்பந்த சுவாமிகள் (1–132–4) பாட்டில் இக்கருத்தைக் கூறியி ருத்தல் காண்க. ஊனாய் உயிராய் உணர்வாய் என்னுட் கலந்து— ஊன்—உடல்; ஆகுபெயர். இதனாலே இறைவன் உயிர்களுடன் கலந்திருக்கும் மூவகைக் கலப்புங் கூறப்பட்டது. உயிர் உடலைச்

சேர்தலால் வேற்றுமை உணர்வும், இறைவனைச் சேர்தலால் ஒற்றுமை உணர்வும் உடையதாகின்றது. உயிர் இறைவனோடு கலந்து உணரும் ஒற்றுமை உணர்வினால் மட்டுமே பிறவுயிர்களோ டும் ஒற்றுமை உணர்வுடையதாய்ப் பேரின்பம் அடையும். கலந்து நிற்றல் அடிகளுக்கு மட்டும் தனிமையாயிருத்தலின் என்னுட் கலந் தென்று ஒருமையிற் கூறினார். இதனாலே இறைவனுடைய மெய்த் தன்மை (சத்துத் தன்மை) கூறப்பட்டது. ஆனசீரொளிசேர் அறி வாய் — இறைவன் உயிர்களைவிட்டுப் பிரியாத அறிவுடையவனாயி ருத்தலின் ஆன அறிவாய் என்றும், இறைவனுடைய அறிவானது சிறிதும் மலக்கலப்பில்லாத அகண்டமான பேரொளியாயிருத்த லின் சீரொளிசேர் அறிவாய் என்றுங்கூறினார். இதனாலே இறை வன் உயிர்களுக்கு வேறாய் நின்று அறிவிக்கும் அறிவுத்தன்மை (சித்துத்தன்மை) கூறப்பட்டது. தேனாய் அமுதமுமாய்த் தீங் கரும்பின் கட்டியுமாய் — அடிகள் தாம் நுகரும் பேரின்ப நுகர்வை உலகில் உள்ளவர்களுக்கு அறிவித்தற்கு அவர்கள் அறியக்கூடும் அனுபவத்தில் வைத்துத் தேன், அமுதம், கரும்பின்கட்டி யென ஒருபுடை உவமைகளாகக் கூறினார். இதனாலே இறை வன் உயிரோடு உடனாய் நின்று பேரின்ப நுகர்விக்கும் இன்பத் தன்மை (ஆனந்தத் தன்மை) கூறப்பட்டது. ஆய் உவமப்பொரு ளில் வந்தது. வானோரறியா வழி — வானவர் நிலவுலகத்துக்கு வந்து இறைவனை வழிபட்டு வீடடைதல் முறைமையாகலின் வானோரறியா வழி யென்றார். இவ்வுண்மையை அடிகள் (20–10) பாட்டிற் கூறியிருத்தல் காண்க. எமக்குத் தந்தருளும்—பேரின்பந் தந்தருளி அடியார் கூட்டத்தில் தம்மைச் சேர்த்தலால் எமக்கு என்று பன்மையிற் கூறினார். கோனாகிநின்றவாறு — ஆறு என்பது 'ஆ' என்று கடைகுறைந்து நின்றது. இறைவன், தான் எல்லா உயிர்களுக்கும் தலைவனென்ற நிலையில் அவர்களோடு ஒன்றாய்க் கலந்தும், வேறாய் நின்று அறிவித்தும், உடனாய் நின்று நுகர்வித் தும் அத்துவிதமாய் நின்று பேரின்பந் தந்தருளுதலின் கோனாகி நின்றவா என்றார். கூறுதுங்காண் — காண் என்பது முன்னிலை

அசை. அம்மானை விளையாடுகிற பெண்கள் அவ்விளையாட்டைத் தனியே ஒவ்வொருவரும் விளையாடினலும் ஓரிடத்தில் சேர்ந்திருந்து விளையாடுதலால் கூறுதும் என்று பன்மையிற் கூறினர். கூறுதல் என்பது இங்கே கூறி அம்மானை விளையாடுதலைக் குறிக்கிறது. 'தும்' என்பது எதிர்காலங் காட்டுந்தன்மைப் பன்மைவிகுதி. அடிகள் இந்தப்பாட்டில் இறைவன், உயிர்களுக்கு அவைகளோடு அத்துவிதமாய் ஒன்ருயும், வேருயும், உடனுயும் நின்று அவைகளைப் பேரின்பமடைவிக்கும் பேரருட் செயலைக் கூறுகின்ருர்.

---

தில்லையில் அருளிய,

## க. திருப்பொற் சுண்ணம்.

திருப்பொற்சுண்ணம் என்பது திரு என்ற அடைமொழியுடன், பொன், சுண்ணம் என்ற இரண்டு சொற்கள்சேர்ந்து ஆகியது. பொன் என்பது பொன்னிறம் போலுமுள்ள மஞ்சளைக் குறிக்கிறது. சுண்ணம் என்பது பொடி. பொற்சுண்ணம் என்பது திருக்கோயிலி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய திருமுழுக்குக்காக மஞ்சளோடு பலவகை நறுமணப்பொருள்களைச்சேர்த்து மங்கலப் பெண்களால் இடித்துப் பொடியாகச்செய்யப்படும் கலவைப்பொடி. மாயையின் வடிவங்களாகிய தனு, கரண, புவன, போகங்களைப் பொடிசெய்து, மலப்பிணிப்பு நீங்கிச் சிவனுக்கு ஆளாந்தன்மையை யடைதல், இதனல் பெறப்படும் ஞானப்பொருளாம்.

ஆனந்தமனேலயம்.

ஆனந்த மனேலயம் என்பது ஆனந்தம், மனம், இலயம் என்ற மூன்று சொற்களாலாகிய ஒரு சொற்ருெடர். மனம், இலயம் என்ற இருசொற்களும் சேர்ந்து வடமொழி இலக்கண முடிபாக மனேலயம் என்ருயிற்று. மனேலயம் என்பது உயிரினுடைய மனமானது மலப்பிணிப்பு முற்றும் நீங்கித் தன்முனைப்புக்கெட்டு

இறைவன் திருவடி நிறைவில் ஒடுங்குதலாகும். ஆனந்தமனோ லயம் என்பது உயிர், தான் அடைந்திருக்கும் பேரின்பநுகர்வினால் தனதுமனங்கெட்டு இறைவனுடைய திருவடி நிறைவில் இரண் டறக்கலந்து அடங்கியிருத்தலாகும்.

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.]

திருச்சிற்றம்பலம்.

---

214. வேதமும் வேள்வியு மாயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையு மாயினார்க்குச்
சோதியு மாயிரு ளாயினார்க்குத்
துன்பமு மாயின்ப மாயினார்க்குப்
பாதியு மாய்முற்று மாயினார்க்குப்
பந்தமு மாய்வீடு மாயினாருக்
காதியு மந்தமு மாயினாருக்
காடப்பொற் சுண்ண மிடித்துநாமே. கக.

[ப-ரை] வேதமும் ஆயினார்க்கு — பொதுஇயல்பு நிலையைக் கூறும் வேதத்திலே கூறப்படும் பொருளாயிருக்கிறவனுக்கும்; வேள்வியும் ஆயினார்க்கு—சிறப்பியல்புநிலை வழிபாடுகளாகிய ஞான நூலை ஓதல், ஓதுவித்தல், ஞானநற்பொருளைக் கேட்டல், கேட்பித் தல், சிந்தித்தலாகிய ஐவகைப் ஞான நூற் பொருளாயிருக்கிறவனுக் கும்; பொய்ம்மையும் ஆயினார்க்கு — திரோதான சத்திவயப்பட்டு உலகில்வாழும் மக்களுக்கு அவர்களால் அறியக்கூடாத பொய்ப் பொருளாயிருக்கின்றவனுக்கும்; மெய்ம்மையும் ஆயினார்க்கு—உலக வாழ்வை நிலையில்லாததெனத் தெளிந்து அருள்வயப்பட்டு ஒழுகும் மெய்யடியார்களுக்கு அவர்களால் உணரப்பெறும் மெய்ப்பொருளா யிருக்கிறவனுக்கும்; இருளாய்—உலகில்வாழும் மலப்பிணிப்புடைய மக்களுக்கு தங்களறிவைமயக்கும் இருட்பொருளாயும்; சோதியும்

ஆயினார்க்கு — மும்மலப்பிணிப்பு நீங்கிய மெய்யடியார்களுக்குப் பேரொளிப் பொருளாயிருக்கிறவனுக்கும்; துன்பமும்ஆய் — உலகில்வாழும் மலப்பிணிப்புடைய மக்களுக்குத் துன்பத்தைக்கொடுக்கும்பொருளாய் இருக்கிறவனுக்கும்; இன்பமும் ஆயினார்க்கு—மலப்பிணிப்பு நீங்கி அருள் வயப்பட்டுத் தன்னை வழிபடும் மெய்யடியார்களுக்குப் பேரினபத்தைக்கொடுக்கும் பொருளாயிருக்கிறவனுக்கும்; பாதியும்ஆய் — உலகில் வாழும் மலப்பிணிப்புடைய மக்கள் தன்னைப் புறத்தில் வழிபடும்பொருட்டு உமாதேவியைத் தனது இடது பாகத்தில் பாதி உருவமாகக்கொண்டும்; முற்றும் ஆயினார்க்கு — மலப்பிணிப்பு நீங்கி வியாபக அறிவு விளங்கும் மெய்யடியார்களுக்கு அவர்கள் வழிபடுங்கடவுளாக அருட்சத்தி தன்னுள் ஒடுங்கி நிற்க முழுதும் தனது சொரூபநிலையில் விளங்குகிறவனுக்கும்; பந்தமும் ஆய் — உலகில்வாழும் மலப்பிணிப்புடைய மக்களுக்கு அவர்கள் மலப்பிணிப்பைச் சிறிதுசிறிதாகப் படிமுறையில் நீக்குதற்கு மறைப்புத்தொழிலைச்செய்து பந்தத்தைக்கொடுக்கிற பொருளாயிருக்கிறவனுக்கும்; வீடும் ஆயினார்க்கு — அங்ஙனம் மும்மலப்பிணிப்பு முழுதும் நீங்கிய மெய்யடியார்களுக்கு வீட்டினைப் பொருளாயிருக்கிறவனுக்கும்; ஆதியும் — உலகம் தோன்றும்பொழுது அதனைத் தோற்றுவிக்கும் முதற்பொருளாயிருக்கிறவனுக்கும்; அந்தமும் ஆயினார்க்கு — முடிவில் உலகம் ஒடுங்கும்பொழுது அதனைத்தன்னிடம் ஒடுக்கும் முடிவுப்பொருளாயிருக்கிறவனுமாகிய தில்லையிலெழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு; ஆட — திருமுழுக்குச்செய்ய; நாம் பொற்சுண்ணம் இடித்தும் — மங்கலப் பெண்களாகிய நாம் மஞ்சளும், பலநறுமணப்பொருள்களும் சேர்ந்த கலவைப்பொருளைப் பொடியாக இடிப்போமாக.

[வி-ரை] வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு — கருவியறிவைக்கூறும் வேதமானது திரோதான சத்திவயப்பட்ட மக்கள் இறைவனுடைய பொதுவியல்பு நிலைவழிபாட்டைக் கூறுதலால், வேதமும் ஆயினார்க்கு என்பது பொதுவியல்புநிலையில்

வழிபாடுசெய்யப்படும் கடவுளாயிருக்கிறவனென்று பொருள்கூறப் பட்டது. ஆகின்றான் என்று நிகழ்காலத்திற் கூறற்பாலது ஆயி ஞர் என்று இயல்புபற்றி இறந்தகாலத்தாற் கூறப்பட்டது. இவ் வாறே பின்வரும் ஆயினூர்க்கு என்பவைகளுக்குங்கொள்க. வேள்வி யென்பது விரும்பிசசெய்யப்படும் கிரியை என்று பொருள்படும். அது இங்கே பதவுரையிற் கூறியபடி ஐந்துஞான வேள்விகளையுங் குறிக்கின்றது. "ஞான நூல் தனையோதல் ஓது வித்தல் நற்பொரு ளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்று, யீனமிலாப்பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவனடி அடைவிக்கும் எழில் ஞானபூசை" என்று சிவஞான சித்தியார் எட்டாவது சூத்திரம் 23-வது பாட்டுக் கூறுகிறபடி இவ்வைந்தும் இறைவனுடைய திருவடிகளை யடைவிக் கும் ஞானபூசையாதலின் அவை இறைவனது சிறப்பியல்புநிலை வழி பாட்டைக்கூறுகின்றது என்பது கூறப்பட்டது. பொய்ம்மையும் மெய்ம்மையும் ஆயினூர்க்கு — பொய்ம்மை யென்பது நிலையில்லாத உலகவாழ்விற்குரிய இறைவனுடைய பொதுவியல்பையும், மெய்ம் மை யென்பது என்றும் ஒருபடித்தாய் மாறுதலின்றி நிலையாயுள்ள இறைவனது சிறப்பியல்பையுங்குறிக்கின்றன. இதனாலே இறைவன் பொய்யருக்குப் பொய்யன் என்பதும், மெய்யருககு மெய்யன் என்ப தும் கூறப்பட்டன. இருளாய் சோதியும் ஆயினூர்க்கு—செய்யுளா தலின் சோதியும் இருளாயினூர்க்கு என்ற சொற்றொடர் இருளாய் சோதியும் ஆயினூர்கரு என்று முறை பிறழ்ந்து வைக்கப்பட்டது. இருள் என்பது மும்மலப்பிணிப்புடையவர்களுககு இறைவன் இருளாய் விளங்குவதையும் மும்மலப்பிணிப்பு நீங்கிய மெய்யடியார் களுக்கு அவன் அகண்டாகாரப்பேரொளியாய் விளங்குவதையுங் குறிக்கின்றன. "அருட்கணணிலாதார்க் கரும்பொருள் தோன்று, அருட்கண்ணுளோரக் கெதிர் தோன்றும் அரனே இருட் கண்ணினோர்க் கங்கிரவியுந்தோன்றாத், தெருட்கண்ணினோர்க்கெங் குஞ் சீரொளியாமே" என்று திருமூலர் திருமந்திரம் 1808-வது பாட்டில் கூறியிருத்தல் காண்க. துன்பமும் ஆய் இன்பமும் ஆயி னூர்க்கு — துன்பமென்பது இஙகே உலகில் வாழும் மக்களுக்கு

இருவினைத் தொடர்பினால் மாறிமாறி வருகின்ற இன்பதுன்பங் களாகிய உலகத்துன்பத்தையும், இன்பமென்றது என்றும் பேரா இயற்கைப் பெருந்தகைமையுடைய பேரின்பத்தையும் குறிக்கின் றன. உலகவாழ்வில் நிலையில்லாத இன்பத்தை இறைவன் வைத்தது அதன் தன்மையை மக்கள் உலக அனுபவத்தில் கண்டுகழித்துப் பேரின்பத்தை நாடித்தேடிக் கூடுதற் பொருட்டேயாகும். பாதியும் ஆயினார்க்கு — பாதியுமாய் என்றது இறைவன் உலகவாழ்வில் மக்களது வழிபாட்டுக்கு மாதிருக்கும்பாதியனாய் (அர்த்த நாரீ சுரன்) இருக்கும் பொதுவியல்பு நிலையைக்குறிக்கின்றது. பந்த மும் வீடும் ஆயினார்க்கு — அருட்சத்தியோடு இயைந்துநிற்கிற இறைவன், முதற்கண் உயிர்களைத் தனது திருவடிப்பேரின்பம் பெறுதற்குப் பக்குவம் அடைவித்தற்காகப் பந்தநிலையில் வைத்து அவைகள் அந்நிலையில் பலபிறவிகளில் உள்ள உலக அனுபவத்தால் பக்குவம் அடைந்தபின் அவைகளுக்குப் பேரின்பம் அளிக்கும் அருளலாகிய தொழிலைச்செய்கின்றான் என்பது இதனாலே கூறப் பட்டது. பந்தத்தைச்செய்யும் மறைப்புத்தொழிலில் இறைவன் திரோதான சத்தியோடு இயைந்து நின்று படைத்தல், காத்தல், அழித்தல், என்ற மூன்று தொழில்களையுஞ் செய்கின்றான். மறைப்பு நீங்கிய அருளலாகிய தொழிலில் இறைவன் அருட்சத்தி யோடு இயைந்து நின்று உயிர்களுக்கு வீட்டின்பமளிக்கின்றான். ஆதியும் அந்தமும் ஆயினார்க்கு — இதனால் இறைவன் உலகத்தைப் படைத்தற்குக்காரணனாய் முன்னவனாய் இருக்கின்றான் என்பதும், உலகத்தை அழித்து ஒடுக்குதற்குக்காரணனாய் பின்னவனாய் இருக் கின்றான் என்பதும், அவன் பிறப்பிறப்பில்லாது என்றும் உள்ள தனி முதல்வனென்பதும் கூறப்பட்டன. அடிகள் (5 - 99)-வது பாட்டில் "மாலும் நான்முகத்தொருவன் யாரினும், முன்ன எம் பிரான்வருக; உலகம் யாவையும் இறுதியுற்றநாள் பின்ன எம் பிரான் வருக" என்று இவ்வுண்மையைக் கூறியருளினர். இடித் தும் என்ற சொற்றொடரில் "தும்" எதிர்காலங் காட்டுந்தன்மைப் பன்மைவிகுதி. ஏ — அசை. ஆடஎன்னும் தன்வினை ஆட்ட என்னும் பிறவினைப்பொருளில் வந்தது.

தில்லையில் அருளிய

# கO. திருக்கோத்தும்பி.

கோத்தும்பி என்ற சொற்றொடர், கோ, தும்பி என்ற இரண்டு சொற்கள் சேர்ந்து அவை சேரும்பொழுது தகரவொற்றுத் தோன்றி கோத்தும்பி என்றாகியது. கோ என்பது தலைமை. தும்பி என்பது வண்டு. கோத்தும்பி எனபது அரசவண்டு என்று பொருள்படும். வண்டென்பது இங்கே உருவகமாய் மாந்தருடைய மனத்தைக்குறிக்கிறது. வண்டானது பூக்கள் தோறும் சென்று சென்று தினையளவு தேனை நுகர்தல்போல, உலக இன்பத்தை நிலையெனக்கொள்ளும் உலகமாந்தர் தங்கள் மனம் ஐம்பொறிகளோடு உலகிலுள்ள பலநுகர்வுப்பொருள்களிலும் சென்று சென்று சிறிதளவு இன்பம் நுகர்ந்து, இன்ப அமைதியைப் பெறுதிருத்தலால், மாந்தருடைய மனம் வண்டாக உருவகஞ்செய்யப்பட்டது. சிறிதளவு உலகவின்பம் கொடுப்பதாகிய உலகநுகர்வுப் பொருளை விட்டு என்றும் நிலையான பேரின்பம் கொடுப்பதாகிய இறைவனுடைய திருவடிகளையே நினையாமல் நினைந்து தெவிட்டாத பேரின்பமடைதல் வேண்டுமென்று மாந்தருக்கு அடிகள் இப்பதிகத்தில் அறிவுரை கூறுகின்றார்.

## சிவனைக்கியம்.

சிவனைக்கியம் என்பது சிவன், ஐக்கியம் என்ற இரண்டு சொற்களோடு மூன்றும் வேற்றுமையுருபு விரிந்து சிவனோடைக்கியம் என்றாயிற்று. சிவனைக்கியம் என்பது உயிர் சிவனோடு இரண்டறக்கலந்து தானெனச்சிவனென வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட்டு நிற்கும் நிலையாகும். அது இங்கே அந்நிலையால் உயிர் அடையும் சிவானுபவத்தைக் குறிக்கின்றது.

## திருக்கோத்தும்பி.

### [நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா]

திருச்சிற்றம்பலம்.

---

216. நானாரென் னுள்ளமார் ஞானங்க ளாரென்னை யாரறிவார்
வானோர் பிரானென்னை யாண்டிலனேல் மதிமயங்கி
ஊனா ருடைதலையி லுண்பலிதே ரம்பலவன்
தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ. ௩௪.

[ப-ரை] வானோர்பிரான் — தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமான்; மதிமயங்கி (யிருந்த) என்னை — உலகநுகர்வுகளிற் பற்றுவைத்துத் தன்னைமறந்து) மயக்க அறிவு அடைந்திருந்த என்னை; ஆண்டிலனேல் — (திருப்பெருந்துறையில் இப்பொழுது எனக்கு உண்மை உணர்த்தி) என்னைத் தனது மீளாஅடிமையாகக் கொண்டு ஆண்டருள் செய்யாவிட்டால்; நான் ஆர்—நான் என்பது, உலக இன்பம் நுகர்தற்குக்கருவியாகவேண்டப்படும் தத்துவக்கூட்டமும், அத்தத்துவக்கூட்டத்தாலாகிய உடலும் அல்லாது அவ்வுடலில் உள்ளும்புறமும் விளங்கி அதனை இயக்கித்தத்துவங்களை எல்லாம் அறிந்து வருகின்ற உயிர் என்று என்னால் எவ்வாறு உணர முடியும்? என்னை அறிவார் ஆர் — நான் அவ்வாறு இயங்கி அறிவதும், சிவபெருமான் தத்துவங்களை இயக்கியும், என்னுள் நின்று இயங்கியும், அறிவித்தும், அறிந்தும் வந்தால் அல்லாமல் எனக்கு நேரே இயல்வதன்று என்ற எனது தன்வயமற்ற தன்மையை என்னால் எவ்வாறு உணரமுடியும்; எனது உள்ளம் ஆர் — சிவபெருமான் அவ்வாறு தத்துவங்களை இயககியும், எனக்கு அறிவித்தும், அறிந்தும் செய்துவந்தது, காமம், வெகுளி, மயக்கங்களின் வயப்பட்டு ஐம்புலன்களைச் சேர்ந்து உலக இன்பம் நுகர்தற்கு ஒழிவின்றிச் சங்கற்பவிகற்பங்களைச் செய்துவந்த எனது உள்ளத்தில் வைத்து என்பது அல்லாது காமம், வெகுளி, மயக்கங்களிலிருந்து முற்றிலும் நீங்கி, பசுகரணம் நீங்கிய சிவகரணம் அடைந்து சுத்த

மாயாசாந்தியாதீதகலையில் உன்மனுகலைவரை விளங்கிச் சிவபெருமானையே நினைத்துக்கொண்டிருக்கும் எனது உள்ளத்தில் வைத்து என்பதை நான் எவ்வாறு உணரமுடியும்; ஞானங்கள் ஆர் — அவ்வாறு எனது உள்ளம் பசுகரணம் நீங்கிய சிவகரணம் அடைந்து சிவமாந்தன்மை எய்தியதும், சிவமாந்தன்மை எய்திய அவ்வுள்ளத்தில் சிவபெருமான் தனது எண்குணங்களையும் பதிவித்து, தீவிர சத்தி நிபாதம் அடைவித்துப் பேரின்பம்நுகரச்செய்ததும் சரியை, கிரியை யோகம், ஞானம் என்ற, படிமுறையில் முறையே அவ்வுள்ளத்தில் உறைத்து விளங்கச்செய்த, கேட்டல் ஞானம், சிந்தித்தல் ஞானம், தெளிதல் ஞானம், நிட்டை ஞானம் என்ற நால்வகை அநுபூதி ஞானங்களால் என்று என்ஞல் எவ்வாறு உணரமுடியும்; கோத்தும்பீ — (இவ்வாறு இறைவன் உலகநுகர்வில் உழன்றுகொண்டிருந்த என்னை நிலையாயுள்ள தெவிட்டாத பேரின்பத்தை நுகரும்படி செய்ததனுல்) ஏ அரசவண்டே; ஊன் ஆர் உடைதலையில்— ஊன்நிறைந்துள்ள நான்முகனுடைய தலையிலிருந்து உடைபட்ட மண்டையோட்டில்; உண்பலிதேர் அம்பலவன்—தான் உண்ணும் பிச்சைச் சோற்றை மனைகடோறும் சென்று கொள்கின்ற கூத்தப் பெருமானுடைய; தேன் ஆர் கமலமே —தேன்போன்று பேரின்பம் நிறைந்துள்ள தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளிடத்தில் மட்டும்; சென்று ஊதாய் — சென்று ஊதுவாயாக. நீ அவ்வாறு ஊதினுல் நிறைந்த தெவிட்டாத இன்பம் பெறுவாய் என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] இந்தப்பாட்டில் கோத்தும்பி என்பது உருவகமாய் உள்ளத்தைக்குறிக்கிது. பின் இரண்டு அடிகளும் உள்ளத்தைப் பார்த்துக்கூறும் அறிவுரை. முதல் இரண்டு அடிகளும் அவ்வறிவுரை கூறுதற்குக்காரணமாகிய அடிகளுடைய அனுபவ உறைப்பு ஞானம் (நேரேகண்டுணர்ந்த மெய்யறிவு); இந்த அறிவுரை உலகில் சிற்றின்பத்தில் உழன்று வருந்துகின்ற மாந்தரெல்லாருக்கும் பொருந்தும். மதிமயங்கி — மதி – அறிவு; பேரின்பம் இன்ன

தென அறியாது உலக இன்பத்தை மெய்யென்று அறியும் அறிவு. இங்கே மயக்க அறிவு என்று கூறப்பட்டது. மதிமயங்கி என்ற சொற்றொடருக்குப்பின் அவாய் நிலையால் தொக்கி நின்ற 'இருந்த' என்ற சொல்லை வருவித்து விரித்துப் பொருள் கூறப்பட்டது. வானோர்பிரான் என்றதனால் "யாவர்க்கு மேலாமளவிலாச் சீருடையான் – யாவர்க்குங்கீழாம் அடியேனை," என்பது குறிப் பிடப்பட்டது. என்னை ஆண்டிலனேல் — இறைவனுக்கும் உயி ருக்கும் எப்பொழுதும உளதாகிய ஆண்டான் அடிமைத்தொடர்பு கூறப்பட்டது. இத்தொடர்பு என்றும் உளதாயினும் அதனை உயிர் தனக்கு மெய்யுணர்வு பிறக்கும்பொழுது அறியத்தொடங்கு கின்றது. உயிரினுடைய மெய்யுணர்வு அளவில், இறைவனும் அதனை ஆண்டருள்செய்து மெய்யுணர்வு முற்றியபொழுது அதற்கு மேலான பேரின்பத்தை அருள்செய்கின்றான். நான் ஆர் — மெய் யுணர்வு பிறக்குமுன் உடலினையே உயிர் என்று நினைந்த தமது நிலையையும், சிவபெருமான தம்மை ஆண்டருளினபின் தம்மை உள்ளபடி அறிந்த நிலையையும், ஒப்பிட்டு வியப்படைந்து அடிகள் நான் ஆர் எனறு கூறியருளினர். நான்ஆர் - அதாவது நான் - யாரா யிருப்பேன். இப்பொழுது உணர்கிற நிலையிலுள்ள 'நான்' ஆயிருப் பேனோ? சிவமாகிய தலைவனை ஒழியவேறு 'நான்' என்றொருதலைவ னில்லை என்ற இந்த 'நான்' நிலையை சிவபெருமான் என்னை ஆண் டருளியபின்பு தாம் அவனோடு இரண்டறக்கலந்து நின்று உணர்ந் தார் என்பது கருத்து. என்னை யார் அறிவார் — இதனால் அடிகள் உயிர் எப்பொழுதும் இறைவனைச்சார்ந்து ஒழுகும் தன்வயமில்லாத தன்மையைக்கூறுகின்றார். உயிர் தன்னை, உடல் அல்ல என்று அறிந்தபின் அறியும் அடுத்த நிலைஇது, ஆதலால் இதனை நான் யார் என்பதற்குப்பின்வைத்துப் பொருள் உரைக்கப்பட்டது. உயி ரானது தனது தன்வயமற்ற நிலையை அறிந்தபொழுது அக் குறையை நீக்க, குறைவிலா நிறைவுடைய இறைவனைச் சார முயன்று வீட்டுநெறியைச்சேர்கின்றது. இறைவனும் நற்பயன் விளைத்தற்பொருட்டுக் குறையுடைய உயிர்களுக்கு அருள்செய்கின்

ருன். தேவாரம் (2 - 67 - 7)ல் "குறையுடையார் குறைதீர்ப் பார்" எனவும், "குறையுடையார்க்கல்லால்களைகிலார் குற்றமே" என்றும் (3 - 26 - 4) திருஞானசம்பந்த அடிகள் கூறியருளினார். அடிகள் தம்மை இறைவன் ஆண்டு அறிவித்ததற்கு முன் அகங்காரத் தால் தாமாகவே எவற்றையும் அறிந்ததாக நினைந்ததைக்குறிப்பிட் டும், இப்பொழுது இறைவனுக்குள் அடங்கி நிறைவான தன்மை அடைந்து எல்லாம் உணர்வதைக்குறிப்பிட்டும் என்னை யார் அறி வார் என்றார். உயிர் தனது தலைவனாகிய சிவபெருமானை அறிதற் குத் தன்னை அறிதல் இன்றியமையாதது. எனது உள்ளம் ஆர் — உயர்திணையிலன்றி அஃறிணை விளைப்பெயர்க்கண்ணும் 'ஆர்' வருதல் புதியனபுகுதல் என நன்னூல் விருத்தியுரை ஆசிரியர், சங்கரநமச்சி வாயப்புலவர் கூறியிருத்தல் காண்க. சிவபெருமான் உயிரினை ஆண்டு அறிவித்ததற்குமுன் உள்ளமானது உயிரினது அகக்கருவி யாக அகங்காரத்தினால் உலகநுகர்வுப் பொருள்களைப்பற்றிச் சங் கற்பவிகற்பங்கள்செய்து ஐம்புலன்களுடன் சேர்ந்து உலகநுகர்வு களில் ஈடுபட்டிருந்தது. சிவபெருமான் உயிரினை ஆண்டறிவித்த பின், உள்ளம் ஐம்பொறிகளுடன் சேர்ந்து உலகநுகர்வுப்பொருள் களை நோக்குதலின்றி இறைவனையே நோககுகின்றது. அப் பொழுது அது பஞ்சக்கிலேசங்களிலிருந்து முற்றிலும் விடுதலை யடைந்து வேட்கை, அறிவு, செயல்கள் திருந்தி அருளொளி விளங்கப்பெற்று சுத்தமாயாசாந்தியாதீதகலையில் "அளப்பருங்கர ணங்கள் நான்கும் சிந்தை (உள்ளம்) யேயாக" என்று சேக்கிழார் அடிகள் கூறியபடி இறைவனையே சிந்தித்திருக்கின்றது. இந்நிலை யில் உள்ளம் (சிந்தை) சிவத்தினின்றும் வேறல்ல என்று தமிழ்மறை நூல்கள் கூறுகின்றன. இவ்வாறு உயிர் உலக இனபம்நுகர்தற்கும், சிவபெருமான் அதனை ஆண்டருளியபின் உலகில் சிவபோகமாகிய பேரின்பம் நுகர்தற்கும், உள்ளமே கருவியாயிருத்தலின் அடிகள் எனது உள்ளம் ஆர் என்றார். இறைவன் ஆண்டருளவில்லையா னால் உள்ளமானது பேரினபம் நுகர்தற்குத்தக்க நிலையை அடைய மாட்டாது என்பது கருத்து. உயிர் சிவபெருமானைக்கண்டு பேரின்

பம் அடைதலுக்கு உள்ளமே கருவியாயிருக்கிறது என்பதைத் திருநாவுக்கரசு அடிகள் உள்ளத்திருக்குறுந்தொகைத் தேவாரப்பதிகப் பாட்டுக்களில் "ஊறலைக்கண்டுகொண்டதெனுள்ளமே" என்றும், "எந்தையைக்கண்டுகொண்டதெனுள்ளமே" என்றும், "கள்ளத்தைக் கழியமனமொன்றி நின்னுள்ளத்திலொளியைக் கண்டதுள்ளமே" என்றும், "என்னெஞ்சிலீசனைக்கண்டதுள்ளமே" என்றும், "சிந்தையுட்சிவனாய் நின்ற உருவினைக்கண்டுகொண்டதெனுள்ளமே" என்றும், (5 - 98)ல் கூறியருளினமை காண்க. திருமந்திரம் 1201வது பாட்டில் "சிந்தையில்வைத்துச் சமாதிசெய்வீரே" என்று கூறப்பட்டிருத்தல் காண்க. ஞானங்கள் ஆர் — ஞானங்கள் என்று இங்கே கூறப்படுவன வீட்டுநெறியில் சரியை (சேர்த்தல்), கிரியை (செயல்), யோகம் (கூடுதல்), ஞானம் (அடைதல்) என்னும் நான்கு படிமுறை நிலைகளிலும், முறையே அடையத்தக்க கேட்டல்ஞானம், சிந்தித்தல் ஞானம், தெளிதல் ஞானம், நிட்டைஞானம் என்ற நால்வகை அநுபூதி ஞானஙகள. உள்ளமானது சிவமாஞ் செம்மைத் தன்மை அடைதற்கு இந்த நான்கு ஞானங்களும் ஏதுக்களாயிருத்தலின் அடிகள் எனது உள்ளம் ஆர் என்று கூறியபின் ஞானங்களார் என்று கூறியருளினார். கோத்தும்பீ — தும்பி என்றபெயர் ஈற்றில் இகரம் நீண்டு விளிப்பெயராக வந்தது (நன்னூல் 305-வது சூத்திரம்). உருவகப்பொருளாகிய உள்ளமானது (மனம்) சிவபெருமானுக்கு ஆட்பட்டு அடங்கியிருத்தலே ஆண்மை என்று குறிப்பிப்பார் தும்பி என்று கூறாது கோத்தும்பி என்றார். உண்பலி தேர் அம்பலவன் — தேர்தல் - கொள்ளுதல். "விளங்குதலையோட்டில் உண்பலிதேரியவந்தெனதுள்ளங்கவர்கள்வன்" என்ற திருஞானசம்பந்த அடிகள் (1 - 1 - 4)-வது பாட்டில் தேர்தல் இப்பொருள் குறித்தமை காண்க. பிச்சை ஏற்றலாகிய சிவபெருமானது பொதுவியல் வடிவமானது ஏனைய வடிவங்கள்போன்று அவனுடைய அடியார்களுடைய ஒழுக்கத்துககு எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. இக்கருத்தைத் திருமூலர் திருமந்திரம் 1888-வது பாட்டில் "பரந்துலகேழும் படைத்தபிரானை — இரந்துணியென்

பர்களெற்றுக்கிரக்கும் — நிரந்தரமாக நினையுமடியார்—இரந்துண்டு தன்கழ லெட்டச்செய்தானே" எனவும், திருஞானசம்பந்த அடிகள் (1 - 76 - 6) பாட்டில் "மனமுலாமடியவர்க் கருள்புரிவகையலால் பலிதிரிந்துண்பிலான்" என்றும் கூறியருளினர். உண்பலிதேர் அம்பலவன் என்றதனல் யாதொரு பற்றுமிலாது உயிர்கள் பேரின் பம் அடையும்பொருட்டுப் புறத்திலே தில்லையிலும்,அகத்திலே உயிர் களுடைய உள்ளத்திலும் ஒழிவின்றி நடனஞ்செய்கின்றவன என் பது பின்னே கூறப்படும், தேனர்கமலமே சென்று ஊதுதலுக் குக் காரணமாகக்கூறப்பட்டது. தேனர் கமலமேசென்று ஊதாய்—கமலம் - தாமரைப்பூ. அது இங்கே சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளையும் குறிக்கின்றது. இது உவமை ஆகுபெயர். கமலமே என்பதிலுள்ள (ஏ) பிரிநிலை ஏகாரம். தினைத்தனைத் தேனுள்ள சிறுபூக்களிடம்போய் ஊதாது எப்பொழுதும் இனபத் தேன் சொரிகின்ற திருவடித்தாமரைப் பூககளில் மட்டுமேசென்று ஊதுவாயாக என்ற கருத்து பிரிநிலை ஏகாரத்தால் உணர்த்தப்பட் டது. கமலம்சென்று என்பது ஏழாம் வேற்றுமைத்தொகை. ஊது தல் — பூவிலுள்ளதேனே உண்ணுதற்கு அதனிடத்து வண்டுகள் ரீங்காரம்செய்தல். உள்ளத்துக்கு ஏற்றிக்கூறுங்கால் நிலையில்லாத உலகச்சிற்றினபத்தை நாடித்தேடி உழலாது, நிலையான பேரினபத் தைத்தரும் திருவடிகளை மனத்தால் நினைந்தும் நாவால் புகழ்ந்தும், உடலால் தொண்டுசெய்தும் வழிபடுதலாகும் இந்தப்பாட்டில் மாணி க்கவாசக அடிகள் தம்மைத் திருப்பெருந்துறையில் சிவபெருமான் ஆண்டருளியபின்; அதாவது அவேஞேடு இரண்டற அத்துவிதமாய்க் கலந்து நிறைவு அறிவை அடைந்தபின் நான் ஆர் என்பதும், தமது தன்வயமற்ற தன்மையும், சிவமாம் செம்மைத்தன்மை அடைந்த தமது உள்ளத்தினிலையும்,தாம் அடைந்த கேட்டல்,சிந்தித்தல்,தெளி தல் நிட்டைகூடுதல் என்ற நால்வகை அநுபூதி ஞானங்களின் நிலை யும்,உணர்ந்ததாகத்தமது சுவாநுபவத்தை உலகமாந்தர் அறிந்து உய் யுமாறு கூறினர். நான் ஆர் என்றதனல் சரியைஞானமும், என்னே அறிவார் ஆர் என்றதனல் சரியைஞானம் அடங்கிய கிரியைஞான

மும், எனது உள்ளம் ஆர் என்றதனால் சரியை கிரியைஞானங்க ளடங்கிய யோகஞானமும், ஞானங்கள் ஆர் என்றதனால் சரியை, கிரியை, யோகஞானங்களும் அவை அடங்கிய ஞானத்தில் ஞான மாகிய மெய்ஞ்ஞானமுங்கூறப்பட்டன. இன்னும் நான் யார் என்ற தனால் அசத்துத்தன்மை நீங்கிச்சத்துத்தன்மை அடைதலும் என்னை அறிவார் ஆர் என்றதனால் அசித்துத்தன்மை நீங்கிச் சித் துத்தன்மை அடைதலும், எனது உள்ளம் ஆர், ஞானங்கள் ஆர், என் பனவற்றால் பிறப்பு இறப்புக்களாகிய பிறவித்துன்பம் நீங்கி நிலை யான பேரின்பம் அடைதலும் கூறப்படுகின்றன. முப்பொருள் களுள் இறைவன் சத்துப்பொருள். உலகம் அசத்துப்பொருள். உயிர் சதசத்துப்பொருள். சதசத்தாகிய உயிர் முதலாவது உலகத் தைச் சார்ந்து உலகமயமாய் அநுபவமடைந்து, பின் சிவத்தைச் சார்ந்து சிவமயமாய்ப் பேரின்பம் அடைகின்றது, என்ற சித்தாந்த உண்மையை, ஆண்டிலனேல் என்ற எதிர்மறையில் வைத்து இப் பாட்டுக்கூறுகின்றது. இதே கருத்தை (22 - 7) பாட்டுக்கூறுகின் றது. இந்தப்பாட்டில் இன்று என்பது ஆண்டருளியபின் என்று பொருள்படும். இருள்கடிந்து என்பது நான் ஆர், என்னை அறிவார் ஆர் என்பவற்றோடும் உள்ளத்தில் எழுகின்ற ஞாயிறுபோன்று நின்ற தன்மை என்பது உள்ளமார் என்பதனோடும், அருளி என் பது ஞானங்காளர் என்பதனோடும், உன்னை அறியகிற்பார்யார் என் பது இந்தப்பாட்டில்வரும் மூன்று 'ஆர்'களோடும், அறிவார் யார் என்பதனோடும் கருத்தினால் பொருந்துதலையும் "என்றும் நீ அல்லை அன்றியொன்றில்லை" என்பன உயிர்வேறாய் நின்று இறைவனை அறியமாட்டாமைக்குக் காரணமாய்க் கூறப்படுதலையும் உற்றுநோக் குக. இவ்வாறு இவ்விருபாட்டுக்களும் ஒன்றனை ஒன்று விளக்குவன வாயிருக்கின்றன என்பது கண்டுகொள்க.

**217.** *தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே, நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெப்போதும், அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன் சொரியுங், குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.* **கூ௫.**

[ப-ரை] கோத்தும்பீ — அரசவண்டே; பூவினில் (சென்று ஊதி) — ஒவ்வொரு பூவிலுஞ்சென்று ரீங்காரஞ்செய்து ஊதி; தினைத்தனை உள்ளது ஓர் தேன் உண்ணாது — தினையளவு உள்ள தேனை நுகராது; நினைத்தொறும் — (அவனைமனத்தினாலே) நினைக்கும் பொழுது; பேசும்தொறும் — அவனது அருட்செயலை ஆர்வங்கொண்டு வாயினாலே) பேசும்பொழுதும்; காண்தொறும் — (அவனது திருவுருவத்தைக்) கண்ணாலே பார்க்கும்பொழுதும்; எப்போதும் — இங்ஙனம் எந்தக்காலத்திலும்; அனைத்தும் எலும்பு உள்நெக — உடம்பிலுள்ள எல்லா எலும்புகளின் உட்பகுதிகளும் நெகிழ்ந்து உருகும்படி; ஆனந்தத்தேன் சொரியும் — இன்பமாகிய தேனை இடைவிடாது பொழியும்; குனிப்பு உடையானுகசேசென்று —மன்றுள் நடனம்செய்கின்ற கூத்தப்பிரானிடத்திலேயே சென்று; ஊதாய் — ரீங்காரஞ்செய்து பாடுவாயாக.

[வி-ரை] கோத்தும்பீ — கோ – தலைமை, அரசு; தும்பீ – ஈற்று இகரம், ஈகாரம்ஆயது; விளியுருபு. தும்பீ என்பது இங்கே உருவகமாய் மனத்தைக்குறிக்கிறது. கோத்தும்பி என்பது உலக வாழ்விலுழன்று எய்த்து அருளை நாடத்தொடங்கும் மனத்தைக் குறிக்கிறது. உலகவாழ்வில் மயங்கி உழலும் மனத்தை நோக்கிக் கூறுதல் பயன்படாதாகலின். பூவினில் (சென்றுஊதி) – இன் — சாரியை. இல் — ஏழாம்வேற்றுமை உருபு. உம் — விகாரத்தாற் றொக்கது. சென்று ஊதாய் என்று உவமேயத்துககுக் கூறப்பட்டவற்றை உவமானத்துக்குங்கொள்க. தினைத்தனை உள்ளது ஓர்தேன் உண்ணாது — தினை – ஒரு சிறியதானியம். தனை — அளவு.

உண்ணாதே என்பதிலுள்ள 'ஏ' அசை. ஓர்தேன் — ஒவ்வொரு பூவிலும் கிடைக்கும்தேன். நினைத்தொறும், பேசுந்தொறும், காண் தொறும் எப்போதும் — நினைத்தல் – அறிவு நிகழ்தலையும், பேசுதல் – வேட்கை நிகழ்தலையும், காணுதல் – செயல் நிகழ்தலையும் குறிக்கின்றன. மனத்திலுள்ள வேட்கைவாயினாற் பேசப்படுதலின் பேசுதல், வேட்கை நிகழ்தலைக்குறிப்பதாகிறது. இங்ஙனம் கூறப் பட்ட அறிவு, வேட்கை, செயல்நிகழ்ச்சிகளைத் தவிர மக்களுக்குள் நிகழ்தல் வேறின்மையால் அவற்றிற்குப்பின் எப்போதும் என்றார். அனைத்து எலும்பு உள்நெக — எலும்பு உடம்பிலுள்ள கடினமான பொருள். எலும்பு உள்நெக — என்றதனால் எலும்பு முழுவதும் உருக என்பதும், கடினமான பொருளாகிய எலும்புகளெல்லாம் உருக, உடம்பிலுள்ளதசை, நரம்பு முதலிய பிறபொருள்களும் நுண்ணுடம்புகளும் உருக என்பதும் குறிப்பால் கூறப்படுவனவா கின்றன. உயிருக்குக் கருவிகளாயுள்ள எல்லா உடல்களும் உரு கவே, உயிரும் உருக என்பது பெறப்படும். இங்ஙனம் எல்லா உடம்புகளுடன்கூடிய உயிர் கூத்தப்பிரானிடத்து அன்பினாலுரு குதலினால் அவ்வுயிர் இறைவனோடு இரண்டறக்கலந்து இடையறாத இன்பம் அடையும் என்பது பெறப்படும். ஆனந்தத்தேன் சொரி யும் — ஆநந்தத்தேன் – ஆனந்தமாகியதேன். சொரிதல் — உயிர் நுகரும்படி இடையறாது பொழிதல். குனிப்பு உடையானுக்கே — குனிப்பு – கூத்து, குனிப்புடையான் — கூத்தைச்செய்கிறவன், நடராசன். ஏ — பிரிநிலை ஏகாரம். சென்று ஊதாய் — ஊதல் – பூவினைச்சுற்றி ரீங்காரஞ்செய்தல். வண்டானது பூவினைச்சுற்றி ரீங்காரம்செய்து அதிலுள்ள தேனை உண்ணுகின்றதாதலின் சென்று ஊதாய் என்று கூறினார். இந்தப்பாட்டு உருவகமாய் மனத்தைப் பார்த்துக் கூறப்பட்டது. உருவகம் என்பது உவமானம், உவ மேயங்கள் அடங்கும்படி கூறப்பட்டது. ஓ மனமே நீ, ஓர் வண் டானது பூக்கள்தோறும் சென்று (ரீங்காரம்செய்து) சிறிய அள வுடையதேனை நுகர்தல்போல, உலக நுகர்வுப்பொருள்கள் ஒவ் வொன்றிலுஞ்சென்று அதன்கண்ணுள்ள உலகச்சிற்றின்பம்

நுகர்ந்து, நுகர்ந்து உழன்று அமைதி அடையாதிருக்கின்றாய். ஆனால் நீ, அவ்வுலக நுகர்வுப்பொருள்களை விட்டொழிந்து பேரின்பப்பொருளாயிருக்கிற கூத்தப்பிரானை மனத்தினால் நினைந்தும், அவன் புகழை ஆர்வமுடன் பேசியும், அவன் திருவுருவத்தைக் கண்டும் வழிபட்டால், அவன் எப்பொழுதும் இடையறாத பேரின்பம் நுகரும்படி செய்வன் என்பது இப்பாட்டிலடங்கியுள்ள உவமான உவமேயங்களாற் பெறப்படுங்கருத்து.

---

221. சட்டோ நினைக்க மனத்தமுதாஞ் சங்கரனைக்
கெட்டேன் மறப்பேனோ கேடுபடாத் திருவடியை
ஒட்டாத பாவித் தொழும்பரைநா முருவறியோஞ்
சிட்டாய சிட்டற்கே சென்றூதாய் கோத்தும்பீ. ௩௬.

[ப-ரை] கோத்தும்பீ — அரசவண்டே; மனத்து சட்ட நினைக்க — ஒருவர் தம்முடைய மனத்தில் அவனை நேர்மையாக நினைக்க; அமுது ஆம் சங்கரனை — இன்பமாகுஞ் சிவபெருமானை; மறப்பேனோ — நான் ஒருகணமாயினும் மறந்து உய்வேனோ; கெட்டேன் — அங்ஙனம் மறப்பேனாயின் திண்ணமாய்க் கெட்டுவிடுவேன்; கேடுபடாத் திருவடியை — அழிவின்றி (எங்கும் நிறைந்து) என்றும் உளதாகிய சிவபெருமானுடைய திருவடிகளாகிய திருவருளை; ஒட்டாத — அத்துவிதமாய்க் கலந்து சேராத; பாவித் தொழும்பர் உரு—பாவிகளாகிய அடிமைகளுடைய உடல் உருவை; நாம் அறியோம் — நாம் கண்ணினாலும் காணமாட்டோம்; சிட்டாய சிட்டன் சென்று — சிறந்தவனாயுள்ள பெரியோனாகிய சிவபெருமானிடம் சென்று; ஊதாய் — ரீங்காரஞ்செய்து ஊதுவாயாக. அங்ஙனம் நீ ஊதுவாயானால் பேரின்பமடைவாய் என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] கோத்தும்பீ—கோ-தலைமை, அரசு. கோத்தும்பீ—அரசவண்டு. இங்கே வண்டு என்பது உருவகமாய் மனத்தைக்குறிக்

கிறது. தும்பீ என்பதிலுள்ள ஈற்று இகரம் நீண்டு விளியுருபு ஆயிற்று. மனத்து சட்ட நினைக்க அமுதாம் சங்கரனை—மனம் + அத்து = மனத்து. அத்து - சாரியை. இங்கே மனம் என்பது ஐம் பொறிகளோடு சேர்ந்து உலகநுகர்வுப்பொருள்களை நோக்கி நிற்கும் 'கடிமனம்' அன்று. உலகப்பொருள்களில் விருப்பின்றிச் சொல்லுல கத்தையும், பொருளுலகத்தையும் கடந்து தம்மை மறந்து சிவபெரு மானையே நினைய வல்லவருடைய செம்மைமனம். பட்டணத்துப் பிள்ளையார் கோயினன்மணிமாலை 4-வது பாட்டில் "உரையின வரை யும் பொருளினளவு – மிருவகைப்பட்ட வெல்லையுங்கடந்து தம்மை மறந்து நின்னை நினைப்பவர் — செம்மைமனத்தினும்" என்று இந்த மனத்தைக்கூறி அருளினர். இங்கே கூறப்பட்டமனம், செம்மைமனம் என்பது அடிகள் சட்டநினைக்க என்று கூறுவதனுல் அறியப்படும். சட்ட என்பது சட்டோஎன விகாரமாயிற்று. இத ற்கு எதிரிடையான தன்மையை அடிகள் (30 - 2)-வது பாட்டில் "சட்டநேர்பட வந்திலாத சழக்கனேனுனைச் சார்ந்திலேன்" என்று தம்மேல்வைத்துககூறி அருளினர். சட்ட – நேர்மையாக. இது சட்டமென்றும் வழஙகப்படும். நீதிமன்றுள் வழஙகப்படுகிற சட் டம் (Law) மக்களுடைய மாறுபாடுகளை நேர்மைப்படுத்துவதால் அப்பேருடையதாயிற்று. நேர்மை என்பது இஙகே எல்லாவுயிர் களும் தன்னைப்போல இன்பநலம் அடைதல் வேண்டுமென்ற இறை வனுடைய கருத்தை ஒருவரறிந்து அதற்கிணங்கித் தம்மை மறந்து அவன் அருள் வழியிலே ஒழுகும் நேர்மை. அமுது — அழிவு படாது என்று முளதாகிய இனபம். உவமையாகுபெயர். சிவ பெருமானே வீட்டு நிலையில் நேரே போகப்பொருளாயிருத்தலால் அமுதாஞ்சஙகரனை என்றார். சங்கரன் — வடமொழிச்சொல். சம் — இன்பம். கரன் — செய்கிறவன். சிவபெருமான் உயிர் களுக்கு இன்பத்தைச் செய்கிறவனுதலால் அடிகள் இங்கே அவனை அமுதாஞ்சங்கரனை என்றார். இங்ஙனம் ஒருவர் தம்மைமறந்து அருள்வழியில் ஒழுகி, சிவபெருமானைதம் மனத்திலே நினைக்க நினைக்க அம்மனத்தின் கண இனபமானது ஊற்றுநீர்போலச் சுரந்து பெருகும் என்பார் மனத்து சட்ட நினைக்க அமுதாம் என்றார். இக்

கருத்தை அடிகள் (42 - 5) -வது பாட்டில் "காயத்துளமுதூறவூற நீகண்டுகொள்ளென்று காட்டிய சேயமாமலர்ச்சேவடிக்கண் நம் சென்னிமன்னித்திகழும்" என்று கூறியருளினர். திருநாவுக்கரசு அடிகள் தேவாரம் (4 - 74, 4, 5, 6) பாட்டுக்கள் ஒவ்வொன்றின் ஈற்றிலும் "நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்தவாறே" என்று கூறியருளினர். மறப்பேனோ — பின்னுலே கெட்டேன் என்று வந்திருத்தலால் மறப்பேனோ என்பதற்கு மறந்து உய்வேனோ என்று உரைசெய்யப்பட்டது. உயிர்களுக்கெல்லாம் இன்பந்தரும்பொருளாயிருக்கிற சிவபெருமானை மறந்து அடிகள் தாம் விரும்புகிற இன்பமடைய முடியாது என்பார் மறப்பேனோ என்றார். "அம்பலக் கூத்தனை — நினைத்தனைப்பொழுதும் மறந்துய்வனோ" என்று திருநாவுக்கரசு அடிகள் தேவாரம் (5 - 2 - 1) பாட்டில் கூறுதல் காண்க. கெட்டேன் — மறப்பேனுகில் கெடுவேன் என்று எதிர்காலத்தாற் கூறற்பாலது, தெளிவுபற்றி இறந்த காலத்தாற் கூறப்பட்டது. காலவழுவமைதி. கெடுதலாவது — துன்பமடைதல். கேடுபடாத் திருவடியை — எங்கும் நிறைந்து விளங்கும் அருட்பேரொளியானது திருவடி எனப்பட்டது. அது என்றும் உளதாதலின் கேடுபடாத்திருவடி என்றார். திருவடி என்பதற்குச் சிவன் அருள் பொருளென்பதைத் திருநாவுக்கரசு அடிகள் தேவாரம் (4 - 76 - 1) பாட்டில் "இருளவா அறுக்கு மெந்தையிணை யடிநீழலென்னும் அருள்" என்று கூறியிருத்தலை நோக்கி அறிக. ஒட்டாத — ஒட்டுதலென்பது சிவபெருமான் உயிரினேடு பிரிப்பின்றிக் கலந்து நிற்றலைக் குறிக்கிறது. பாவித்தொழும்பர் உரு — தொழும்பர் - அடிமைகள். சிவபெருமான் தங்களுக்கு ஆண்டவனுயும், தாம் அவனுக்கு அடிமைகளாயும் இருக்கும் உண்மையை யறியாது தாங்களே தலைவனென்று அறிந்துகொண்டு ஒழுகும் மக்களை அடிகள் இங்கே பாவித்தொழும்பர் என்றார். "காண்பாளொளி யிருளில் காட்டிடவுந்தான் கண்ட வீண்பாவமெந்நாள் விழும்" என்று உமாபதி சிவாசாரியார் திருவருட்பயன், உயிர்விளக்கம் 3-வது பாட்டில் கூறியிருத்தல் காண்க. தொழும்பரை உரு என்றது, உருபுமயக்கம்; ஆறும்

வேற்றுமைப் பொருளில் வந்தது. நாம் அறியோம் — நாம் என்பது அடியார்களைக் குறிக்கிறது. அடிகள் அடியார்களைச் சேர்த்து நாம் என்று பன்மையில் கூறினர். இங்கு அறிதல் என்பது புறக்கண்ணாலே பார்த்து அறிதல். அறியோம் — கண்ணாலே பார்த்தற்கு அஞ்சுவோம் என்றபடி. அடிகள் (35 - 6) பாட்டில் "தடமலர் புனைந்து நையும் — ஆளலாதவரைத் கண்டாலம்மநா மஞ்சுமாறே" என்று இக்கருத்தைக் கூறியருளினர். சிட்டாய சிட்டற்கே சென்று — சிட்டம் என்பதில் அம் கெட்டு சிட்டு என நின்றது. சிட்டம்— சிறந்தது. சிட்டன்—பெரியோன. சிட்டாய சிட்டன்—சிறந்தவனாகிய பெரியோன்; அதாவது அவனுக்கு மேல் பெரியோன் இல்லை. சிட்டன் + கு + ஏ - சிட்டற்கே. கு - உருபு மயக்கம். ஏ - பிரிநிலை ஏகாரம். பெரியோனிடத்திலேயே சென்று. ஊதாய்—ஊதுதல்— பூவைசசுற்றி வண்டுகள் ரீங்காரஞ்செய்து பாடுதல்.

---

தில்லையில் அருளிய

# கக. திருத்தெள்ளேணம்.

---

தெள்ளேணம் என்பது திரு என்னும் அடைமொழியோடு சேர்ந்து திருத்தெள்ளேணம் என்றாகியது. தெள்ளேணம் என்பது பண்டைக்காலத்தமிழ் மகளிர் சிலர் சேர்ந்துகொண்டு மகிழ்ச்சியினாலே கைகொட்டிப் பாடி ஆடுவதோர் விளையாடலென்று அதன்கீழ் வரும் பாட்டுக்களால் நாமறிகிறோம். அது இக்காலத்து வழக்கிலில்லாததால் அதைப்பற்றி நாம் தெளிவாய் அறிய முடியவில்லை. மாணிக்கவாசக அடிகள் இந்த விளையாட்டில் வைத்து, சிவனோடடைவு என்ற சித்தாந்த ஞானக்கருத்தைப் பாடியருளினர்.

## சிவனோடடைவு

சிவனோடடைவு என்பது சிவன் என்ற சொல்லோடு அடைவு என்ற சொல் சேரும்பொழுது மூன்றும் வேற்றுமையுருபு விரிந்து

சிவனோடடைவு என்றாயது. சிவன் என்பது தன்னை யெய்தும் உயிர்களுக்கு இன்பங்கொடுக்கின்றவனென்று பொருள்படும். அடைவு என்பது சேர்தல், கலத்தல்; அதாவது உயிரானது சிவனோடு பொருளால் வேறாயினும் கலப்பினால் ஒன்றெனும்படி ஒற்றித்து நிற்றலால் உயிர் அடையும் பேரின்ப நுகர்வு.

[நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா]

திருச்சிற்றம்பலம்.

235\. திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநா மறியவோ ரந்தணனா யாண்டுகொண்டான்
ஒருநாம மோருருவம் ஒன்றுமில்லாற் காயிரந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ. ௲௭.

[ப-ரை] திருமாலும் பன்றியாய்ச் சென்று உணராத் திருவடியை—(நான்முகனும் திருமாலும் 'நான் பெரியன், நான் பெரியன' என்று பூசலிட்ட காரணத்தினால் அவர்களிருவருடைய நடுவிலே நிலமுதல் வானளவும் நீண்டதழற்பிழம்பாய்ச் சிவபெருமான் தோன்றியபொழுது) திருமால் பன்றி உருவங்கொண்டு அவன் அடியைக் காண்பதற்காக நிலத்தின் கீழே சென்று தோண்டியும் காணமுடியாத சிவபெருமானுடைய திருவடிகளை; நாம் உரு அறிய — அடியார்களாகிய நாம் உருவத்தில் நேரே அறியும்படியாக; ஓர் அந்தணனாய் ஆண்டுகொண்டான் — (திருப்பெருந்துறைக்கு) ஓர் அந்தணனாய் வந்து என்னை ஆண்டுகொண்டருளினான்; ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமிலாற்கு — நாமமாவது, உருவமாவது இல்லாத சிவபெருமானுக்கு; நாம் ஆயிரம் திருநாமம் பாடி தெள்ளேணம்கொட்டாம்— அவனுடைய பொதுவியல்பு நிலையில் ஆயிரந் திருநாமங்களும் (ஆயிரம் உருவங்களும்) சொல்லி வாழ்த்தி மகளிராகிய நாம் தெள்ளேணம் என்னும் விளையாட்டைக் கைகொட்டி ஆடிப்பாடி விளையாடுவோமாக.

[வி-ரை] திருமாலும் பன்றியாய்ச் சென்று உணராத் திருவடியை—திருமாலும் - உம் உயர்வு சிறப்பு. தேவர்களிற் சிறந்த திருமாலும் என்ற பொருள் குறித்து நின்றது. திருவடி—இரண்டு திருவடிகள். இதனாலே அடிகள் சிவபெருமான் தமக்குத் தீக்கைசெய்த பொழுது தமது தலையின்மேல் வைத்த அவனுடைய இரண்டு திருவடிகளையுங் குறிக்கின்றார். நாம் உருஅறிய — நாம் என்பது அடிகளோடு சேர்ந்த அடியார்களைக் குறிக்கிறது. உருஅறிய—உருவத்தில் நேரேயறிய. ஓர் அந்தணனாய் ஆண்டுகொண்டான் — அந்தணன் என்பது சிவபெருமான் திருப்பெருந்துறைக்கு அந்தணன் கோலத்தில் வந்து அடிகளை ஆண்டருளியதைக் குறிககிறது. ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லாற்கு — நாமமாவது, உருவமாவது இல்லாத சிவபெருமானுடைய நிலை தத்துவஙகளுக்கப்பாற்பட்ட அவனுடைய சிறப்பியல்பு நிலையாகும். ஆயிரம் திருநாமம் பாடி — ஆயிர நாமமென்பது இங்கே எண்ணில்லாத நாமஙகளைக் குறிக்கிறது. திருநாவுக்கரசு அடிகள் தேவாரம் (6-31-4) பாட்டில் "எண்ணரிய திருநாமம்" என்று கூறியிருத்தல் காண்க. சிவபெருமானுடைய பொதுவியல்பை நோககி மாத்திரம் அவனைப் பல உருவஙகளில் பல திருநாமஙகள் சொல்லி மனம், நா, மெய்களினால் வழிபடலாமேயன்றி மனம், நா, மெய்களைக்கடந்த அவனுடைய சிறப்பியல்பு நோககி மனம், நா, மெய்களினால் வழிபட முடியாது என்பது இதன் கருத்து. மெய்யுணர்வுடையார் சிவபெருமானுடைய சிறப்பியல்பு நிலையில் அவனோடு இரண்டறக கலந்து இடையறாது இன்புற்றிருப்பர். நாம் தெள்ளேணம் கொட்டாமோ — தெள்ளேணம் எனபது பண்டைக்காலத்தில் மகளிர் கூடிக்கைகொட்டி ஆடும் ஓர்வகை விளையாட்டு. இக்காலத்திலிது வழக்காறற்றுப் போயிற்று. அடிகள் தாமிருந்த காலத்தில் வழக்கிலிருந்த இந்த விளையாட்டினமேல் வைத்து உலகர் உய்யும் பொருட்டு அறிவுரைகளைக்கூறி அருளினார். கொட்டாமோ — ஆம் — தன்மைப்பன்மை விகுதி தெரிநிலை எதிர்கால வினைமுற்று. வகர இடைநிலை பகுதிக்குப்பின் சேர்ந்து கெட்டது. ஓ - அசை.

239. அருமந்த தேவ ரயன்திருமாற் கரியசிவம்
உருவந்து பூதலத்தோ ருகப்பெய்தக் கொண்டருளிக்
கருவெந்து வீழக் கடைக்கணித்தென் னுளம்புகுந்த
திருவந்த வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. ௩அ.

[ப-ரை] அருமந்ததேவர் அயன்திருமாற்கு அரிய — சிறந்த தேவர்களாகிய நான்முகனும் திருமாலும் தேடியுங்காணாத; சிவம்— சிவபெருமான்; உருவந்து — அந்தணன்வடிவில் அருட்குரவனாய் வந்து; பூதலத்தோர் உகப்பு எய்த — நிலவுலகத்திலுள்ளவர்கள் மேன்மை அடைய; கொண்டு அருளி — என்னை அடிமையாக ஆட்கொண்டருளி; கருவெந்துவீழ — பிறவிக்குக்காரணமான மலக்குற்றங்களெல்லாம் முற்றிலும் ஒழியும்படி; கடைக்கணித்து— தீக்கையில் அருட்கண்ணாலே என்னைப்பார்த்து; என் உளம்புகுந்த — அங்ஙனம் பார்த்ததனாலே தூய்மையடைந்த என்னுடைய உள்ளம் புகுந்தமையால்; திருவந்தஆறு — பேரின்பச்செல்வம் எனக்குக்கிடைத்தவகையை; தெள்ளேணம் பாடிக்கொட்டாம் — மகளிராகிய நாம் தெள்ளேணம் என்னும் விளையாட்டைக் கைகொட்டிப் பாடி விளையாடுவோமாக.

[வி-ரை] அருமந்ததேவர் அயன் திருமாற்கு அரிய — அருமருந்தன்ன என்பது அருமந்த எனமருவியது. கிடைத்தற்கரிய அதாவது சிறப்புடைய. திருமாற்கு என்பதில் கு — சாரியை. அருமை இங்கே இன்மை என்னும் பொருள்பட நின்றது. உருவந்து — அந்தணன் உருவில்வந்து. பூதலத்தோர் உகப்பு எய்த— உகப்பு – உயர்ச்சி, மேன்மை. மக்களில் ஒருவர், அவர் பிறவிப் பயனாகிய பேரின்பமடைதல் காரணமாக நிலஉலகத்தார் மேன்மை அடைதலால் பூதலத்தோர் உகப்பு எய்த என்றார். கருவெந்துவீழ — கரு – பிறப்பு. இங்கே அது பிறப்புக்குக்காரணமாகிய மலக் குற்றங்களைக் குறிக்கிறது. அம்மலக்குற்றங்கள் காமம், வெகுளி, மயக்கம் என்பன. கடைக்கணித்து — கடைக்கண்பார்வை அருட்

பார்வையாதலின் கடைக்கணித்து என்பது அருட்கண்ணாலே பார்த்து என்னும் பொருள்படவந்தது. அது காரணப்பொருளில் வந்த வினையெச்சம். இந்த அருட்கண்பார்வை, தீக்கையில் குரவனால் மாணவகன்மேல் செய்யப்படுகிறது. என் உளம்புகுந்த திருவந்தவா — கடைக்கணித்தலாலே உளம்புகுதலும், உளம்புகுதலாலே திருவருதலும், முறையே காரணகாரியங்களாய் வந்தன. திரு — செல்வம். அது இங்கே பேரின்பச்செல்வத்தைக் குறிக்கிறது. வந்தவாறு என்பது, வந்தவா எனக்குறுகி நின்றது. வந்த + ஆறு — வந்தவாறு; ஆறு — வகை. அடிகள் இந்தப்பாட்டில் சிவபெருமான் திருப்பெருந்துறைக்கு அருட்குரவனாய்வந்து தீக்கை செய்து தம்மை அடிமையாக ஆண்டருளியதைக் கூறுகின்றார்.

---

245. கயன்மாண்ட கண்ணிதன் பங்கனெனைக்கலந் தாண்டலுமே, அயன்மாண் டருவினைச் சுற்றமுமாண் டவனியின்மேல், மயன்மாண்டு மற்றுள்ள வாசகமாண் டென்னுடைய, செயன்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. ௩௬.

[ப-ரை] கயன்மாண்ட கண்ணிதன்பங்கன் — கயல்மீன் போல மாட்சிமைப்பட்ட கண்களை உடைய உமாதேவியாரை இடதுபக்கத்தில் வைத்திருக்கிற சிவபெருமான; எனைக்கலந்து ஆண்டலும்—என்னோடு இரண்டறக்கலந்து திருப்பெருந்துறைக்குக் குருவாய் வந்து என்னை அடிமையாகக்கொண்டு ஆண்டருள்செய்தலும்; அயல்மாண்டு (உம்) - அங்ஙனம் ஆண்டருளுதலுக்குப்புறம்பாயுள்ள உலகப்பற்று ஒழிந்தும்; அருவினைசசுற்றமும்மாண்டு (உம்) — என்னைச் சுற்றியிருந்த கடத்தற்கு அரிய பழவினைப்பயன் முற்றிலும் ஒழிந்தும்; அவனியின்மேல் மயல்மாண்டு (உம்) — உலகவாழ்வினெனக்கு முன்னிருந்தமயக்க அறிவுமுற்றிலும் ஒழிந்தும்; மற்றுமுள்ள வாசகமும் மாணடு (உம்) — இன்னும் முன்

என்னிடமிருந்த வேட்கைபற்றிப் பேசியபேச்சுக்கள் பலவும் ஒழிந்தும்; என்னுடைய செயல்மாண்டவா — மயக்க அறிவு ஒழிதலாலும், வேட்கைப்பேச்சுக்கள் ஒழிதலாலும் என்னுடையசெயல் ஒழிந்தவகையை; தெள்ளேணம்பாடி கொட்டாம் — மகளிராகிய நாம் தெள்ளேணம் என்னும் விளையாட்டைக் கைகொட்டிப்பாடி விளையாடுவோமாக.

[வி-ரை] கயல்மாண்ட கண்ணிதன்பங்கன் — கயல்மீன்தான் நீர்க்கரைமேலிட்ட முட்டைகளைத் தன்பார்வையால்பொரிக்கச்செய்தலுக்கு உமாதேவியார் தமது அருட்கண்ணாற் பார்த்து எல்லாவுயிர்களையும பாதுகாத்தல் ஏகதேச உவமையாதல்பற்றி, கயல்மாண்ட கண்ணிதன் பங்கன் என்றார். திருவாலவாயிலெழுந்தருளியிருக்கும் அம்மையார் அங்கயற் கண்ணி என்றும் மீனாட்சி அம்மன என்றும் அழைக்கப்படுதல் காண்க. எனைக்கலந்து ஆண்டலுமே—கலத்தல் என்பது, உயிரும், சிவமும் இரண்டு பொருள்களாயிருந்தும் வேற்றுமையின்றி அத்துவிதமாய்ச்சேர்தல். இந்தககலப்பில் உயிர் சிவத்தினுடைய திருவடி நிறைவிலடங்கி நானெனுமுணர்வுதோனறாமல் பேரின்பம் நுகர்ந்துகொண்டிருத்தல். அயல்மாணடு — அயல் – புறம்பு. மேலேகூறப்பட்ட கலத்தலுக்குப் புறம்பாயுள்ள நிலை; அதாவது உலகவாழ்வுநிலை. மாளுதல் — முற்றிலும் ஒழிதல். இதிலும் பின்னேமாணடு என்று வருகிற மூவிடங்களிலும் தொக்கியிருக்கிற ‘உம்’ விரித்துரைக்க. அருவினைசசுற்றமுமாண்டு —வினைச்சுற்றம் — வினையாகிய சுற்றம். வினை இங்கே பழவினைப் பயனைக்குறித்து நின்றது. வினைப்பயன், வினை செய்தவனை நிழல் போலவிடாது சுற்றிக்கொண்டிருத்தலால் வினைப்பயன் சுற்றம் எனப்பட்டது. உம் - உயர்வு சிறப்பு குறித்தது. அவனியின்மேல் மயல்மாண்டு — மயல் — மயக்க அறிவு. உலக வாழ்வை மெய்யென மயங்கசசெய்யும் சுட்டறிவு. பலவகையாக எழும இந்த உலகச்சுட்டறிவு ஒழிந்தாலன்றி ஒரேபொருளாகிய சிவத்தையே அறியும் பேரறிவு பிறவாது ஆதலின் மயல்மாண்டு என்றார்.

மற்றுள்ள வாசகமும் மாண்டு — மற்று — இன்னம். வாசகமும் என்றதில் 'உம்' என்பது வாயினாலே உண்டாகும் வாசகத்துக்குக் காரணமாய் மனத்திலுள்ள வேட்கையுமன்றி வாசகமும் என்று பொருள்படலால் இறந்தது தழீஇய எச்சவும்மை. ஒருவன் மனத்திலுள்ள வேட்கைபற்றியே அவன்வாயிலிருந்தெழும் வாசகமுண்டாகும் என்பது உளநூல் (Psychology) உண்மையாகும். உலகில் பலவகையாக எழும் மனத்திலுள்ள வேட்கையும், அதுபற்றி உண்டாகும் பேச்சும் ஒழிந்தாலன்றி, சிவம் ஒன்றனையேபற்றி நிற்கும் பேரன்பு உண்டாகாது ஆதலின் மற்றுள்ளவாசகமுமாண்டு என்றார். வேட்கையானது உயிர்களிடத்தும், சிவத்தினிடத்தும் நிகழும் பொழுது அன்பு என்று கூறப்படும். அவனியின்மேல் என்ற அடைமொழியை மற்றுள்ளவாசகமுமாண்டு என்பதற்கும் செயல் மாண்ட என்பதற்கும் சேர்த்துக்கொள்க. செயல்மாண்டவா — மாண்டவாறு என்பது மாண்டவா எனக்கடைகுறைந்து நின்றது. மாண்டஆறு — ஒழிந்தவகை. அறிவும், வேட்கையும், செயலில் வந்து அடங்கி ஒடுங்குதலால் மயல்மாண்டவாறும், வாசகம் மாண்டவாறும், என்று கூறாது, மயல்மாண்டும், வாசகமும்மாண்டும் என்று கூறினார். உலகவாழ்வில் அறிவு, வேட்கைகளின் பயனானது உலகப் பொருள்களை நுகர்தலாகிய செயலில் முடிவடைகின்றது. பேரின்பவாழ்வில் சிவத்தைப்பற்றிய அறிவும், அன்பும் (வேட்கையும்) அவனைசசேர்ந்து பேரின்பம் நுகரும் செயலில் முடிவாகின்றது. உலகவாழ்வில் சிற்றின்பம் நுகரும் செயல் ஒழிந்தாலன்றிப் பேரின்பம் நுகருஞ்செயல் உண்டாகாது ஆதலின் செயல்மாண்டவாபாடி என்றார். எவ்வகை இன்பமும் மக்களுக்கு அறிவு, வேட்கை, செயல்கள் நிகழ்ச்சியினாலே உண்டாகின்றது. உலகச் சிற்றின்பமானது இம்மூன்றும் உலகப்பொருள்களைப்பற்றி நிற்பதாலுண்டாகினறது. பேரின்பமானது இம்மூன்றும் திருந்திச் சிவமொன்றனையேபற்றி நிற்றலாலுண்டாகின்றது. அருட்சத்தியிலிருந்து பிரிந்த ஞானசத்தியாகிய அறிவும், இச்சாசத்தியாகிய வேட்கையும், கிரியாசத்தியாகிய செயலும் உயிர் வீட்டினை அடையும்

நிலையில் அருட் சத்தியிலொன்றுயொடுங்கி அருட் சத்தியிலொடுங்கிய உயிர் சிவத்திலொடுங்கிப் பேரின்பமடைதலால் இந்த வகையை அடிகள் செயல்மாண்ட ஆறு என்று கூறினர். "செயலற்றிருக்கச் சிவாநந்தமாகும்" என திருமந்திரம் 2319-வது பாட்டில் கூறியது அறிக. கொட்டாமோ — ஓ – முன்னிலை அசை. அடிகள் இந்தப்பாட்டின் இரண்டாவது அடியில் அயல்மாண்டு என்றதனல் தம்மிடத்திலிருக்கிற மாயைமலம் ஒழிந்ததையும், அருவினைச்சுற்றமும் மாண்டு என்றதனல் வினைமலம் ஒழிந்ததையுங் கூறினர். மாயை, வினைமலங்களுக்கு ஆதாரமாயுள்ள ஆணவமலமும் ஒழிந்தது என்று இனம்பற்றி நாம் கொள்ளலாம். மூன்றுவது, நான்காவது அடிகளில் அவர் தமக்கு இங்ஙனம் மும்மலங்களுமொழிந்தமையால் உலகவாழ்வில் பற்றி நின்ற தமது அறிவு, வேட்கை, செயல்கள் மூன்றும் திருந்தி அருளிலே ஒடுங்கி, அவ்வருளிலொடுங்கிய தாம் சிவத்திலொடுங்கி நிற்பதைக் குறிப்பாகக்கூறுகின்றுர்.

---

251. உவலைச் சமயங்க ளொவ்வாத சாத்திரமாஞ்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறுங்
கவலைக் கெடுத்துக் கழலிணைகள் தந்தருளுஞ்
செயலைப் பரவிநாந் தெள்ளேணங் கொட்டாமோ. ௨௦.

[ப-ரை] உவலைச்சமயங்கள் — தத்துவங்களில் விளங்குகிற ஏகதேச உண்மையையே தங்கள் சமய முழுவுண்மையாகக்கொள்ளும் பல) பொய்ச்சமயங்கள்; ஒவ்வாத சாத்திரமாம் — ஒன்றுக்கொன்று முரணுவனவாய்க் கூறுகிற சமயநூல்களாகிய; சவலைக் கடல் உளனாய் — மனக்குழப்பக் கடலினுள்ளே மூழ்கினவனாய்; கிடந்து தடுமாறும் கவலைக்கெடுத்து — கிடந்து தடுமாறுதலுக்கு ஏதுவாகிய மனக்கவலையை முற்றிலும் நீக்கி; கழல் இணைகள் தந்து அருளும்செயலைப் பரவி — (இறைவன் திருப்பெருந்துறைக்கு

அருட்குரவனாய் வந்து) தன்னுடைய இரண்டு திருவடிகளையும் என்னுடைய தலைமேல்வைத்துத் தீக்கைசெய்து அடிமையாக ஆட்கொண்டருளும் அருட்செயலைத்துதித்து; நாம் தெள்ளேணம் கொட்டாம் — மகளிராகிய நாம் தெள்ளேணம் என்னும் விளையாட்டைக் கைகொட்டி ஆடிவிளையாடுவோமாக.

[வி-ரை] உலைச் சமயங்கள் — உலைச்சமயம் என்பது பொய்ச்சமயம். பொய்ச்சமயம் என்றால் பொய்யைக்கூறும் சமயமன்று. நிலமுதல் நாதம் ஈறாக உள்ள 36 தத்துவங்களில் எந்த எந்தச்சமயம் எந்தஎந்தத் தத்துவம் வரையில் விளங்கும் அறிவைத் தத்தம் உண்மையாகக்கொள்ளுமோ அந்தச்சமயங்களெல்லாம் 36 தத்துவங்களுககு மேற்பட்டு விளங்கும் சைவசமய முழுஉண்மை (absolute truth or universal truth) யைக் கூறாமல் ஏகதேச உண்மையையே (relative truth) கூறுகின்றன. இந்த ஏகதேச உண்மையைக்கூறும் சமயங்களே உலைசசமயஙகளென்று கூறப்பட்டன. ஒவ்வாத சாத்திரமாம் — அஙஙனம் கூறுகிற ஒவ்வொரு சமயமும் தான்வியாபித்திருக்கிற தத்துவத்தின் எல்லையையே அறிவெல்லையாககொணடு ஆன்மாக்களின பல்வகைப்பக்குவம் நோக்கி வேறுபட்டனவாகிய நூல்களைக்கூறுதலால் அந்நூல்கள் கூறுகிற சமய உண்மைகளும் வேறுபட்டனவாய் ஒன்றுக்கொன்று முரணுவனவாய்த் தோன்றுமாதலின் ஒவ்வாத சாத்திரமாம் என்றார். சவலைக்கடல் உளனாய் — உண்மையை ஆராயப்புகும் ஒருவன், அஙஙனம் பலசமயஙகள் கூறும் நூல்களை ஓதியதனால் ஒன்றுகொன்று முரணுவனவாய்த்தோன்றும் உண்மைகளில் முடிவான உண்மை தான் யாதோ எனத்தியஙகி மனக்குழப்பமுற்றுமயங்குவனாதலின், சவலைக்கடல் உளனாய்க்கிடந்து என்றார். கிடந்து தடுமாறும் கவலைக் கெடுத்து—கவலை என்ற சொல் ஐகாரங்கெட்டுக் கவல் என நின்றது. அது இரண்டாம் வேற்றுமை உருபு ஏற்று கவலை என நின்றது. ஒருவன், உண்மையை அறியாது பலவாக உண்டாகும் மனக்குழப்பத்தால், தடுமாற்றத்தை அடைவிக்கும் மனக்கவலை உறுதலின்

கிடந்து தடுமாறும் கவலை என்றார். கழல் இணைகள் தந்து அருளும் செயலைப்பரவி — கழலிணைகள் - இரண்டு திருவடிகள். கழல்— ஆகுபெயர். குரவன் தனது இரண்டு திருவடிகளையும் மாணவகன் தலைமேல் வைத்தல் ஞானதீக்கையின் முடிவில் செய்யப்படுஞ் செயல். அஙஙனம் குரவன் தனது இரண்டு திருவடிகளையும் மாண வகன் தலையின்மேல் தீக்கையின் முடிவில் வைகஇறதற்குமுன் மாணவகனுடைய மலக்குற்றங்களைப் போக்கி அவனுடைய மனத் திலே அருளொளி விளஙகச்செய்து தத்துவங்களுக்கப்பாற்பட்டு அருளொளியில் விளங்குகிற சைவசமய முழுவுண்மையை அறியச் செய்கின்றானாகலின், கவலைக்கெடுத்துக் கழலிணைகள தந்தருளும் என்றார். இறைவன் அருட்குரவனாய்த் திருப்பெருந்துறைக்கு வந்து தமக்குத் தீகைகசெய்து தலைமேலே தனது இரண்டு திருவடிகளை வைத்த அருட்செயலை நினைந்து துதிப்பதாக அடிகள் தெள்ளேணம் கொட்டும் மகளிர் வாயிலாக இந்தப்பாட்டில் கூறுகின்றார். உலகில் மக்கள் அறிகிற உண்மைகளெல்லாம் தத்துவங்கள் வாயிலாக விளங் கும் ஏகதேச உண்மைகளேயன்றி, தத்துவஙகளுக்கு அப்பாற்பட்டு அருளொளியில் விளங்கும் முழுவுண்மை அன்று. அருளொளியில் முழுவுண்மையாகத் தனது சிறப்பியலில் விளங்கும் சைவசமயக் கடவுள், ஆன்மாக்களின் பக்குவம் நோக்கி அவர்கள் படிமுறையில் ஒவ்வொரு தத்துவத்தின் வாயிலாகவும், ஏகதேச உண்மையை அறி யும் பொருட்டு அத்தத்துவங்களில், பொதுவியல்பில் விரவி நின்று முடிவில் தத்துவங்களுக்கப்பாற்பட்டு அருள் ஒளியில் முழுவுண்மை யில் விளஙகுகிற தன்னையே அறியும்படி செய்கிறான். இந்த சைவ சமயமானது உலகிலுள்ள சமயஙகளெல்லாவற்றையும், புறப்புறச் சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், அகச்சமயம், எனப்பிரித்து அந்தந்தச் சமயங்களுககு அறிவெல்லையாக விளங்கும் தத்துவங் களைக்கூறி, அவைகளெல்லாம் சமயஙகளுக்கெல்லாம் மேலாக விளங்கும் சைவசமயத்தை அடைவதற்குப் படிகளாகக் கூறப்படுகின் றன. சைவசமய உண்மைப்படி எச்சமயத்திலொழுகுகின்றவரும் அதற்குத்தக்க பயனை அடையும்படி அச்சமயக் கடவுளை சைவ

சமயக் கடவுள் அதிட்டித்து நின்று செய்வன். இதனுல் சைவசமய மானது உலோகாயதம் உள்ளிட்ட எல்லாச் சமயங்களையும் தன் அகத்தே கொண்டதாகும். அது ஏனைய சமயங்கள்போல ஒரு பகுதியின் உண்மையைக்கூறுஞ் சமயம் (Sectional religion) அன்று. அடிகள் இந்த உண்மையை இந்தப்பாட்டில் கூறுகின்றுர். "புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புககும் புகன்மிருதி வழியுழன் றும் புகலுமாசசிரம — வறத்துறைகளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள் பல தெரிந்து மாரணங்கள் படித்துஞ்—சிறப் புடைய புராணங்களுணர்ந்தும் வேதசிரப்பொருளை மிகத்தெளிந் துஞ்சென்றுர் சைவத் — திறத்தடைவரிதிற் சரியை, கிரியாயோ கஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" என்று அருணந்தி சிவாசாரியார் சிவஞானசித்தியார் 8-வது சூத்திரச் செய் யுளில் கூறியிருத்தலை நோக்குக. இவ்வுண்மை இந்நூல் (10 - 5) பாட்டிலும், 'இத்தெய்வநெறிநின்று' என்னும் முதற்குறிப்புடைய சேந்தனுர் திருவிசைப்பாப் பாட்டிலும் கூறப்பட்டிருக்கின்றன.

---

தில்லையில் அருளிய

## கஉ. திருச்சாழல்.

---

திருச்சாழல் என்பது திரு, சாழல் என்ற இரண்டு சொற்களா லானது. சாழல் என்பது சிறுமகளிர் சிலர்சேர்ந்து விளையாடும் முற்காலத்து விளையாட்டு. அடிகள் காலத்தில் ஈழநாட்டை ஆண்ட புத்த மன்னன் தனது ஊமைப்பெண், புத்தகுரு ஆகிய இருவர் உள்பட பலபுத்தர்கள்சூழத் திருத்தில்லையிலுள்ள கூத்தப்பிரான் கோயிலுக்குவந்து, தில்லைவாழந்தணர்களை நோக்கி, 'நாங்கள் உங்க ளோடு வாதுசெய்து புத்தசமயத்தை இங்கு நிலைநாட்டி சைவசம யத்தை ஒழிக்க வந்திருக்கிறோம்' என்று அறிவித்தான். அதுகேட்ட தில்லைவாழந்தணர்கள் வேண்டுவனசெய்ய, அன்றிரவு கூத்தப்

பிரான் தில்லைவாழந்தணர்களுடைய கனவிற்றோன்றி "ஊருக்கு வெளியே பன்னகசாலையில் தவஞ்செய்துகொண்டிருக்கும் மாணிக்க வாசக அடிகளிடம் கூறினால் அவர் புத்தரை வாதில் வெல்லுவார்," என்று திருவாய் மலர்ந்தருளினர். தில்லைவாழந்தணர்கள், மாணிக்க வாசக அடிகளை சோழமன்னன், அடியார்கள், கலைவாணர்கள் முத லியவர்கள் பின்தொடர்ந்துவர அழைத்துக்கொண்டு, கோயிலில் புத் தர்களிருக்குமிடத்தை அடைந்தார்கள். அங்கே மாணிக்கவாசக அடி களுக்கும் புத்தர்களுககும் வாது நிகழ்ந்தது. வாதில் புத்தர்கள் முர ணைப் பேசியபொழுது அடிகள் கலைமகளை வேண்டிக்கொள்ள, புதத மன்னன் நீஙகலாகப் புத்தர்கள் எல்லாரும் ஊமையாகிவிட்டார்கள். அதுகண்ட புத்தமன்னன் அடிகளை வணங்கி 'பிறவியிலேயே ஊமையாயிருககிற எனது பெண்ணின் ஊமைத்தன்மையை நீர் நீக்க வல்லிரேல் நாங்கள் எல்லோரும் சைவராவோம்' என்று கூறி னன். அடிகளினுடைய அருளாலே மன்னனுடைய பெண்ணின் ஊமைத்தனமை நீங்கியது. அடிகள் பாடிய திருச்சாழற் பதிகப் பாட்டுக்களிலுள்ள முன்னிரணடடிகளையும், புததர்கள் வினவிய பொருள்களை வினவாககொண்டு, தாம் அந்த ஊமைப்பெண்ணைக் கேட்க, அப்பெண் கூறியவிடை அப்பாட்டுககளிலுள்ள பினனிரண டடிகளாகும்.

## சிவனுடைய காருணியம்.

---

சிவனுடைய காருணியம் என்பது சிவனுடைய பேரருட்செய லாகும். புத்தர்கள், உயிர்கள் பொருட்டுச் சிவன் அவைகள்மேல் வைத்த பேரருளால் ஐந்தொழில் செய்கின்றான் என்ற உண்மையறி யாது கேட்டகேள்விகளுக்கு, அடிகள் ஊமைப்பெண்வாயிலாக சிவ பெருமானுடைய பேரருளை விளக்குமுகத்தால் விடைகள் கூறின மைபற்றித் திருச்சாழல், சிவனுடைய காருணியத்தைக்குறிக்கிற தென்பது பெறப்படுகின்றது.

## திருச்சாழல்.

[நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா]

*திருச்சிற்றம்பலம்.*

---

263. தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ. ௬௧.

[ப-ரை] சாழல் ஏடீ — சாழல் விளையாட்டை விளையாடும் கன்னிப்பெண்ணே; தென்பால் — தெற்குத்திக்கை நோக்கி; உகந்து ஆடும் தில்லைச்சிற்றம்பலவன் — (உயிர்கள் பேரின்பநலம் அடையும்பொருட்டு ஐந்தொழில் செய்ய) விரும்பித்தில்லை மன்றுள் நடனஞ்செய்கின்ற கூத்தப்பிரான்; பெணபால் உகநதான் — உமா தேவியாகிய பெண்ணைத் தனது இடது பாதியில் வைத்து மகிழ்கின் முன்; பெரும்பித்தன் — (உயிர்கள் பேரின்பநலமடையவிரும்புகிற கூத்தப்பிரான பெண்ணையும் இடதுபாகத்தில் வைத்து மகிழ்தலால்) பித்தனல்லனோ?

(ஊமைப்பெண் விடைகூறியது)

பெண்பால் உகந்து இலனேன் — (கூத்தப்பிரான் உலகர் அறியும்படியாக) தனது இடது பாதியில் உமாதேவியாரை வைத்து மகிழ்ந்திருக்காவிடில்; இருநிலத்தோர் — பெரிய உலகத்தில் இல் லறநெறியில் வாழும் மக்கள்; பேதாய் — (இல்வாழ்க்கையாலுண் டாகும் நற்பயனை) அறியாதவர்களாய்; விண்பால் — (தக்கப்பருவம் அடைதற்குமுன்) சிவலோக இன்பத்தினிடத்துப் (பிரியம்வைத்து); யோகுஎய்தி — துறவுநிலையை அடைந்து; வீடுவர் — (இல்லற வாழ்க்கையைத்) துறந்துவிடுவார்கள். தக்க பருவம் வருகிறவரை மக் கள் துறவற நெறியை அடையாது இல்லறவாழ்க்கையில் வாழும்படி செய்யக்காட்டுதற்கு 'தென்பாலுகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன் பெண்பால் உகந்தான்' என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] சாழல் ஏடீ — சாழல் என்பது முற்காலத்தில் தமிழ்நாட்டிலுள்ள சிறுமகளிர் சிலர் சேர்ந்து கைகோர்த்து விளையாடும் ஓர் விளையாட்டு. மாணிக்கவாசக அடிகள் சைவசமய உண்மைகளைப்பற்றி புத்தர்கேட்ட கேள்விகளுக்கு ஊமைப்பெண்ணாயிருந்த புத்தமன்னன் மகள் சாழல் விளையாட்டு விளையாடுதல் போல் மகிழ்ந்து விடைகூறும்படிசெய்தார். முன் இரண்டு அடிகளும் புத்தர்கேட்ட கேள்வியையும், பின் இரண்டு அடிகளும் அக் கேள்விக்கு ஊமைப்பெண் கூறிய விடையையுங் குறிக்கின்றன. ஏடீ — பெண்களை அழைத்துக்கூறும் முன்னிலைப்பிரியச்சொல். ஓ — அசை. தென்பாலுகந்தாடுந் தில்லைச்சிற்றம்பலவன் — சிவபெருமானாகிய கூத்தப்பிரான் உயிர்கள் இன்பமடைந்துய்யும் பொருட்டு உலகில் எங்கும் ஐந்தொழில் குறிக்கும் திருநடனஞ் செய்யினும் சிறப்பாக சிதம்பரம், திருவாலங்காடு, மதுரை, திருநெல்வேலி (நெல்லையம்பலம்), திருக்குற்றாலம் ஆகிய ஐந்து தமிழ்நாட்டிடங்களில் திருநடனஞ்செய்கின்றான். இவ்வைந்திடங்களில் திருத்தில்லை (சிதம்பரம்) யானது உலகமாகிய விராட்புருடனுக்கு இதயத்தானமாயிருத்தல்பற்றி மிகச்சிறந்தவிடமாதலால் தென்பாலுகந்தாடுந் தில்லைச்சிற்றம்பலவன் என்றார். கூத்தப்பிரான் மக்களுடைய உடலிலுள்ள இதயத்தில் நடனஞ்செய்தல்போல, உலகத்திற்கு இதயத்தனமாகிய திருத்தில்லையில் நடனஞ்செய்கின்றார். ஆதலால் தென்தமிழ்நாடு உலகில் இறைவனது திருவருள் விளங்கும் சிறந்த இடமாகும். இதைப்பற்றிப் போற்றித்திருவகவலில் தென்னாடுடைய சிவனே யென்பதற்கு நானெழுதிய விளக்கவுரையையும் சேர்த்துப்பொருளறிக.

> ஈறான கன்னி குமரியே காவிரி
> வேறான நவதீர்த்த மிக்குள்ள வெற்பேழுள்
> பேறான வேதா கமமே பிறத்தலான்
> மாறாத தென்றிசை வையகஞ் சுத்தமே

என்னும் திருமந்திரம் 2755-வது பாட்டில் திருமூலர் தென்றிசைச் சிறப்பைக் கூறியிருத்தல் காண்க.

பெண்பால் உகந்தான் — பால் - பக்கம், பாதிப் பக்கம். சிவ பெருமான் இடது பக்கத்தில் உமாதேவியாரை வைத்துக்கொண்டி ருக்கும் கோலம் உமாமகேசுர வடிவம். அது அவனுடைய பொது இயல்பு வடிவம் சிவபெருமானுடைய பொது இயல்பு வடிவமா னது இல்லற வாழ்க்கையில் ஆணும் பெண்ணுமாய்க்கூடி வாழும் மக்களுடைய போகவாழ்க்கைக்கு எடுத்துக்காட்டாயிருக்கவேண்டு வதுபற்றிச சிவபெருமான் உமாமகேசுர வடிவங்கொண்டான். "போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்," என்று அருணந்திசிவாசாரியார் சிவஞானசித்தியார் 1-வது சூத்திரம் 50வது பாட்டில் இக்கருத்தைக் கூறுதல் காண்க. இயல்புபற்றி உகந்தான் என்று இறந்தகாலத்தாற் கூறப்பட்டது. பெரும்பித்தன்—உலகில் பித்தனுவான் செய்கின்ற செயல்களெல்லாம் ஒன்றுக்கொன்று பொருத்தமில்லாததாயிருக்கும். ஆண்பாலாரும், பெண்பாலாரும் கூடி இசைந்துவாழ்தல் அவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் அடங்கி யிருக்கும் நற்பண்புகளை வெளிப்படுத்தற் பொருட்டேயாம். பெண் பாலார் பொதுவகையில் ஆண்பாலரைப்போல உலகில் ஐம்புலப் பொருள்களை நுகரும் தன்மையுடையராயினும், சிறப்புவகையில் ஆண்பாலாரால் கண்டும், கேட்டும், உண்டும், மோந்தும், தீண்டியும் நுகரப்படும் ஐம்புலப்பொருள்களெல்லாம் பெண்பாலாரிடத்தில் ஒருங்கே உள்ளன. ஆதலால் இல்லறவாழ்க்கையில் வாழ்ந்து தக்க பருவம் அடைந்த ஆண்பாலார்க்கு அவர்கள் துறவற நெறியிற் செல்லும்பொழுது பெண்பாலாருடைய தொடர்பு நீங்குகின்றது. மாதர்பால் அவாவை நீத்தவரே வீட்டின்பம் அடைவரென்று தாம் கூறிய முறைமைக்கு மாறாக எல்லா உயிர்களும் வீட்டின்பமடை தல்வேண்டுமென று விரும்புகிற சிவபெருமான் தனது இடது பாகத்தில் ஓர்பெண்ணை வைத்து மகிழ்தல் பெரும்பித்தன் செய லாகத்தோன்றுகின்றது என்பார், பெரும்பித்தன் என்றூர். பெரும் பிததன் என்றது பெரும்பித்தனல்லனே என்று புத்தர்கேட்ட கேள் வியாகக்கூறப்படுகிறது. காண் — முன்னிலை அசை. பெண்பால் உகந்து இலனேல் — புத்தர்கேட்ட கேள்வியையே ஊமைப்பெண்

அனுபவித்து எடுத்துக்கொண்டு கூறுகின்றாள். இருநிலத்தோர் — இருநிலம் – பரந்து பெரியதாயுள்ள உலகம். இருநிலத்தோர் என் பது உலகில் இல்லறவாழ்க்கையில் வாழும் மக்களே மிக்க பெரும் பகுதியினராதலின், இல்வாழ்க்கையரை இருநிலத்தோர் என்றார். பதினாயிரத்தில் ஒருவர்கூடத் துறவியாயிருப்பது அருமை. பேதாய்- பேது – அறியாமை. இங்கே அது அறியாமையை உடையவராயிருத்தலைக்குறிக்கிறது. இல்லறவாழ்க்கையானது அறநெறிக்குட் பட்ட உலகபோகச் சிற்றின்ப வாழ்க்கை. மக்கள் முதற்கண் இச் சிற்றின்ப வாழ்க்கையை நெறிப்படவாழ்ந்து, திருத்தமில்லாத தங் கள் வேட்கை, அறிவு, செயல்களைப் படிமுறையில் திருந்தச்செய்து பக்குவமடைந்தபின்பே, சிவபோகப் பேரின்பவாழ்க்கையை அடை விக்கும் துறவறநெறிக்குத் தகுதியுடையவர்களாகின்றார்கள். பருவ முதிர்ச்சிக்கு முன்பு துறவறநெறியிற் புகுதல்கேட்டினை விளைவிக் கும் என்பதை இங்கே பேது (அறியாமை) எனப்பட்டது. பேதை யராய் என்பது இங்கு பேதாய் எனக்குறுகி நின்றது. இது செய் யுள் விகாரம். விண்பால் — விண் – சிவலோகம்; இங்கே சிவ லோக இன்பத்தைக்குறிக்கிறது. பால் — ஏழாம்வேற்றுமை உருபு. விண்பால் — சிவலோக இன்பத்தினிடத்து (பிரியம வைத்து); அதாவது நூல்களில் கூறப்பட்டிருக்கிற சிவலோக இன பத்தினிடத்து (பிரியம்வைத்து). யோகு எய்தி — யோகு – யோகம்; சிவத்தினோடு ஒன்றுபடல். இது துறவறத்துக்குரியது. யோகு என்பது இஙகே துறவறநெறியைக்குறிக்கிறது. யோகு எய்தலாவது, மககள் தங்கள் தகுதியை நினையாமல் பயனை மாத்திரம் விரும்பித் துறவறநெறியை யடைதல். வீடுவர் — வீடுவர் என்ப தற்குமுன் அவாய் நிலையாக இல்லறநெறி என்ற சொற்றொடரை வருவித்து இல்லற நெறியைத் துறந்துவிடுவார் என்று உரைசெய் யப்பட்டது. அங்ஙனம் உமாமகேசுவரன், உமாதேவியாரோடு பிரி யாது சேர்ந்திருப்பினும் உமாமகேசுரன் பிரமசாரியும், உமாதேவி கன்னியுமாவள். அருணந்தி சிவாசாரியார் சிவஞானசித்தியார் 2- வது சூத்திரம் 77-வது பாட்டில் "சிவஞ்சத்திதன்னை யீனறுஞ்

சத்திதான் சிவத்தையீன்று — மூவந்திருவரும் புணர்ந்திங்குல குயி ரெல்லாமீன்றும் — பவன்பிரமசாரியாகும் பான்மொழி கன்னியா குங் — தவந்தருஞானத்தோர்க்கித் தன்மைதான்றெரியுமன்றே'' என்று கூறுதல் காண்க. இவ்வுண்மையை இக்காலத்தில் கிறித்த வர் முதலிய புறச்சமயத்தவர் அறியாதிருத்தல்போல, முற்காலத்தில் புத்தர்களும் அறியாதிருந்தனர். முன் இரண்டு அடிகளுக்கும் நீ—தோன்றா எழுவாய். சொல்வாய்—தோன்றாப்பயனிலை. பின் இரண்டு அடிகளுக்கும் இருநிலத்தோர்—எழுவாய். வீடுவர் — பயனிலை.

---

திலலையிலருளிய

# கந. திருப்பூவல்லி.

பூவல்லி என்ற சொற்றொடர் பூ, அல்லி என்ற இரண்டு சொற் களாலாய் அவை புணரும்போது பூவல்லி என்றாகியது. அல்லி என்பது பூவினுள்ளிருக்கும் அகவிதழ். அகவிதழையுடைய பூ என்று பொருள்படும். அல்லிப்பூ என்ற சொற்றொடர் இனிமை நோக்கி பூவல்லி என மாற்றிவைக்கப்பட்டது. மகளிர் சிலர் சேர்ந்து ஓர் பூந்தோட்டத்திலுள்ள பூக்களைக்கொய்து விளையாடுதல் முற் காலத்துமகளிர் விளையாட்டுக்களிலொன்று. மாணிக்கவாசக அடி கள் அவ்விளையாட்டின்மேல் வைத்து மாயாவிசயம் நீக்குதலென்ற சித்தாந்தவுண்மையைக் கூறியருளினார்.

## மாயாவிசயம் நீக்குதல்.

மாயாவிசயம் நீக்குதல் என்ற சொற்றொடர் மாயை, விசயம், நீக்குதல் என்ற மூன்று சொற்களாலாகியது. மாயை, விசயம் இரண்டுசொற்களும் புணரும்பொழுது மாயாவிசயம் என்றாகியது.

இது வடமொழி இலக்கணமுடிபு. மாயை என்பதிங்கே மாயை யின் காரியங்களாகிய தனுகரணபுவன போகங்களைக்குறிக்கிறது. விசயம் என்பது மக்கள் தங்கள் சகலநிலையில் இவைகளால் நுகரும் நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை ஆகிய ஐம்புலநுகர்வுகள். நீக்கு தல் — ஒழித்தல். மாயாவிசயம் நீக்குதலென்பது மக்கள் தாங்கள் வாழுமுலகில் ஐம்புலநுகர்வுகளை ஒழித்தலாகும். மக்கள் சிவத்தை யடைதற்கு ஐம்புலநுகர்வை முற்றிலும் ஒழிததல்வேண்டுமாதலின் அதனை அடிகள் அவர்களுக்கறிவுரையாகத் திருப்பூவல்லி பாட்டுக் களில் கூறியருளினார்.

[நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா]

திருச்சிற்றம்பலம்.

---

275. இணையார் திருவடி யென்றலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்க ளத்தனையுந் துறந்தொழிந்தேன்
அணையார் புனற்றில்லை யமபலத்தே யாடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ. சஉ.

[ப-ரை] ஆர்இணைதிருவடி — (சிவபெருமான் திருப்பெருந் துறைக்குக் குருவாய் வந்து உயிரகள் பேரின்பம்) நுகருதற்குரிய தனது இரண்டு திருவடிகளையும்; என்தலைமேல்வைத்தலும் — எனது தலைமேல்வைத்து(என்னை மீளாஅடிமையாகக்கொண்டு ஆண் டருள்செய்தவுடனே); துணையான சுற்றங்கள் அத்தனையும் — (நான் முன்உலகவாழ்வில் சிற்றின்பம் நுகர்தற்குத்) துணையாய் என் னைச் சுற்றியிருந்த எல்லாப்பற்றுக்களையும்; துறந்து ஒழிந்தேன் — விட்டு நீங்கினேன்; அணைஆர்புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற — தடுக்கப்பட்ட கரைகளோடு பொருந்திய நீர்நிலைகளையுடைய தில்லைமன்றிலே நடனஞ்செய்கின்ற; புணையாளன் சீர்பாடி—(உயிர் கள் பிறவிக்கடலைக் கடத்தற்கு) தெப்பம்போலிருப்பவனாகிய சிவ

பெருமானுடைய புகழை நாவினாலேபாடி; அல்லிப்பூ கொய்யாமோ — (அவனுடைய திருவடிகளிற் சாத்துதற்கு) மகளிராகிய நாம் அக விதழையுடைய பூக்களைப் பறிப்போமாக.

[வி-ரை] ஆர்இணை திருவடி — ஆர்தல் – நுகருதல். இணை – இரண்டு. இரண்டு திருவடிகளும், உயிர்கள் சிவபோகம் நுகருதற் குரியனவாயிருத்தலால் ஆர்இணை திருவடி என்றார். "ஏகமாய் நின்றே இணையடிகளொன்றுணரப் — போகமாய்த்தான் விளைந்த பொற்பினான்" என்று சிவஞானபோதம் 11-வது சூத்திரவெண்பா வில் இரண்டு திருவடிகளும் உயிர்கள் சிவபோகம் நுகருதற்குரியன வாய்க் குறிப்பிட்டிருத்தல் காண்க. என்தலைமேல் வைத்தலும் — குரு, சீடன்தலைமேலே இரண்டு திருவடிகளையும் வைத்தல் குரு வுக்கும் சீடனுக்கும் என்றும் உள்ள ஆண்டானடிமைத்தொடர்பை அறியச்செய்தற்கு அடையாளமாகும். திருவடிகளைத் தலைமேல் வைக்கப்பெற்ற சீடன் பாசமுற்றும் நீங்கி சிவபெருமானுடைய திரு வடிவியாபகத்துளடங்கிப் பேரின்பமுறுகின்றான். அடிகள் தாம் பாடிய (42 - 1 முதல் 10) பாட்டுக்களின் இறுதியிலும் "சேவடிக் கண் நம்சென்னிமன்னித்திகழுமே" என்று பாடியிருக்கிறார். திரு மூலர் திருமந்திரம் 2049-வது பாட்டில் "தாடந்தளிக்கும் தலை வனே சற்குரு — தாடந்து தன்னையறியத்தரவல்லோன் — தாடந் துதத்து வாசீதத்துச்சார்சீவன் — தாடந்து பாசந்தணிக்குமவன் சத்தே" என்று பாடியிருக்கின்றார். துணையான சுற்றங்கள் அத் தனையும் — சுற்றங்கள் – பற்றுக்கள். இங்கே உலகபோகம் நுகர் தற்கு ஒருவனைச் சுற்றியிருப்பனவெல்லாம் சுற்றங்களென்று கூறப் பட்டன. சுற்றங்கள் அத்தனையும் என்பது சுற்றங்கள் எத்தனை உள்ளனவோ அத்தனையும்; அதாவது சுற்றங்கள் முழுதும் பற்றுக் களில் யாதாமொன்று நீங்காமல் எஞ்சியிருத்தல் பேரின்பம் நுகர் தற்குத் தடையாயிருக்குமாதலின், துணையான சுற்றங்கள் அத்தனை யும் என்றார். புணையாளன் சீர்பாடி — புணை – தெப்பம். ஒரு வன் கடலை நீந்துதற்குத் தெப்பம் துணையாய் உதவுவதுபோல, பிற

வினை நீங்குதற்குச் சிவபெருமானுடைய திருவடிகள் துணையாயிருக்கின்றன ஆதலின் சிவபெருமானை புணையாளன் என்றார். புணையாளன் என்றதனாலே சிவபெருமான உயிர்களுடைய பக்குவமறிந்து அவற்றை பிறவிக்கடலைக் கடக்கச்செய்கின்றான் என்பது கூறப்பட்டது. அல்லிப்பூக்கொய்யாமோ — அல்லிப்பூ - அகவிதழையுடைய பூ. நீரிலே உள்ள தாமரை அல்லது ஆம்பல்பூக்கள் எனினும் பொருந்தும். ஓ — அசை. மகளிர்சேர்ந்து பூக்கள் கொய்தல் அடிகள் காலத்திருந்த வழக்குப்போலும். அவ்வழக்கு இருந்ததனாலே அதன்மேல் வைத்து அடிகள் இப்பதிகம் பாடினார்.

---

தில்லையில் அருளிய

## கச. திருவுந்தியார்.

---

திருவுந்தியார் என்ற சொற்றொடர் திரு, உந்தி, ஆர் என்ற மூன்று சொற்களாலாகிய ஒரு சொற்றொடர். திரு என்பது அடைமொழி. உந்தி யென்பது பண்டைக்காலத்தமிழ்ச் சிறுமியர் விளையாடும் விளையாட்டில் ஒன்று. இப்பொழுது அது வழக்கிலில்லை. ஆர் என்னும் பின்னடைமொழி விளையாட்டினது சிறப்பைக் குறிக்கும்.

### ஞானவெற்றி

ஞான வெற்றி யென்ற சொற்றொடர் ஞானத்தினால் வெற்றி யென விரியும்; அதாவது உயிர் தான இறைவனோடு இரண்டறக் கலந்து அடையும் மெய்ஞ்ஞானத்தினாலே மும்மலப் பிணிப்புக்களையும் வென்று அடையும் வெற்றி.

[ க லி த் தா ழி சை ]

திருச்சிற்றம்பலம்.

297. தச்சு விடுத்தலும் தாமடி யிட்டலும்
அச்சு முறிந்ததென் றுந்தீபற
அழிந்தன முப்புர முந்தீபற. சகூ.

[ப-ரை] தச்சு விடுத்தலும் — தச்சனால் ஆக்கப்பட்ட தேர் முப்புரங்களை எரிப்பதற்குச் சிவபெருமான் முன்பு நிறுத்தப்பட்டு; தாமடியிட்டலும் — அத்தேரின்மீது சிவபெருமான் ஏறுதற்குத் தமது திருவடிகளை வைத்தலும்; அச்சு முறிந்தது — அத்தேரின் அச்சு முறிந்தது; என்றுஉந்தீபற — உந்தீபற என்று சொல்லிச் சிறுமியர்களே உந்தியைப் பறக்கவிட்டு விளையாடுங்கள்; அழிந்தன முப்புரம் (உம்) — அசுரர்களிருந்த முப்புரங்களானவை சிவபெருமான் சிரித்ததனாலே தீயுண்டாகி அதனாலே வெந்து சாம்பலாயின வென்றும்; உந்தீபற — உந்தீபற என்று சொல்லி உந்தியைப் பறக்கவிட்டு விளையாடுங்கள்.

[வி-ரை] தச்சு விடுத்தலும்—தச்செனபது முதனிலைத் தொழிற் பெயராய்த் தச்சன் தொழிலையும் அவன் தொழிலாற் சமைத்த தேரினையும் குறிக்கின்றன. இது இருமடியாகுபெயர். உந்தீபற என்பது —உந்தியை மேலே பறககவிட்டு விளையாடுதல். முப்புரமும் அழிந்தன — முப்புரங்களென்பது ஆணவம், கன்மம், மாயை யென்னும் மும்மலங்களைக் குறிக்கிறது. முப்புரங்கள் அழிந்தன வென்பது உயிர் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் அடைந்ததும் அதற்கு இறைவன் அருட்குரவனாகவந்து தீகைக செய்தலும், அம்மும்மலப் பிணிப்புக்களும் உயிரைவிட்டு நீங்கின என்பது இதனாற் குறிக்கப்பட்ட ஞானப்பொருளாகும்.

---

தில்லையில் அருளிய

# கரு. திருத்தோணோக்கம்.

---

தோணோக்கம் என்பது தோள், நோக்கம் என்ற இரண்டு சொற்களாலாகிய சொற்றொடர். தோள் நோக்கம் என்பது மகளிர் சிலர் சேர்ந்து ஒருவர் தோளை வேறொருவர் பார்த்துக்கொண்டு

பொத்திய கைகொட்டி விளையாடுவதோர் மகளிர் விளையாட்டு. அவ் விளையாட்டு இக்காலத்துத் தமிழ்நாட்டு வழக்கிலில்லாததால் நன்கு விளங்கவில்லை. மாணிக்கவாசக அடிகள் அவ்விளையாட்டின்மேல் வைத்துப் பிரபஞ்ச சுத்தியென்னும் சித்தாந்தவுண்மையைக் கூறு கின்றார்.

## பிரபஞ்ச சுத்தி.

பிரபஞ்சசுத்தி என்ற சொற்றொடர் பிரபஞ்சம், சுத்தி என்னும் இரண்டுவடமொழிச்சொற்களாலாகி அவை புணரும்பொழுது நிலை மொழியினீற்றிலுள்ள மகரவொற்றுகெட்டு பிரபஞ்சசுத்தி என்று யிற்று. பிரபஞ்சம் என்பது உயிரில் உலகத்தையும், உயிர் உலகத் தையும் குறிக்கும். சுத்தி என்பது தூய்மை. பிரபஞ்சசுத்தி யென் பது இறைவன், உயிரின்மேல்வைத்த பேரருளால் உயிரில் பொரு ளிலும், உயிர்ப்பொருளிலும் அத்துவிதமாய்க் கலந்து நிற்றலால் அவை தம்மோடு கலந்திருக்கிற மலத்தன்மைகெட்டு தூய்மையடை தலாகும்.

[நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா]

திருச்சிற்றம்பலம்.

---

315. பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே
தீர்த்தாய் திகழ்தில்லை யம்பலத்தே திருநடஞ்செய்
கூத்தா வுன்சேவடி கூடும்வண்ணந் தோணோக்கம். சச.

[ப-ரை] திகழ்தில்லை அம்பலத்தே திருநடம்செய் கூத்தா — (அருள் ஒளி) விளங்கும் தில்லை மன்றினில் (உயிர்கள்பொருட்டு ஒழிவின்றி) நடனஞ்செய்கின்ற கூத்தப்பெருமானே; பேய்த்தேர்— கானலை; பூத்து ஆரும் பொய்கை — தாமரைப்பூக்கள் பூத்து நிறைந்திருக்கின்ற தடாகத்திலுள்ள; புனல் இதுவே எனக்கருதி —

நன்னீரிதுவே என்று மயங்கி நினைந்து; முகக்கஉறும்பேதை — (அதனை, தனது நீர்வேட்கையைத் தணிப்பதற்கு அதன் அருகே போய்) மொண்டு குடிக்க எண்ணும் மடவோனுடைய; குணம் ஆகாமே — மயக்க அறிவுக்குணம் எனக்கு உண்டாகாதபடி; தீர்த் தாய் — (என்னை அடிமையாக ஆட்கொண்டு) அம்மயக்க அறிவை ஒழித்தாய்; உன்சேவடி கூடும்வண்ணம்—உனது செவ்விதாகவுள்ள இரண்டு திருவடிகளையும் சேரும்படி; தோணோக்கம் (ஆடாமோ) — நாங்கள் தோணோக்கம் என்ற விளையாட்டை ஆடுவோமாக.

[வி-ரை] பேய்த்தேர் — இது ஒரு பாலை நிலத்தில் முது வேனிற்காலத்து நண்பகலில் சேய்மைக்கண் நிற்கின்ற ஒருவனுக்கு நன்னீர்போல் தோன்றுகின்றகானல். பூத்து ஆரும்பொய்கை புனல் இதுவே எனக்கருதி — பூத்து என்ற சொல்லுக்கு முன்வரும் தாமரை சொல்லெச்சம். ஆர்தல் — நிறைந்திருத்தல். இதுவே என்பதிலுள்ள ஏ—தேற்றம். முகக்கஉறும் பேதை—முகக்கஉறும் —முகக்குறும் எனக்குறைந்து நின்றது. முகத்தல்–மொள்ளுதல். உறுதல் — நினைத்தல். பாலைநிலத்தில் முதுவேனிற்காலத்து நண் பகலில்நீர்வேட்கையுடைய ஒருவன் தனது நீர்வேட்கையைத்தணித் தற்குச் சேய்மைக்கண் தோன்றுகிற கானலை நல்ல நீரென நினைத்து அதனருகேபோய் மொண்டு குடித்துத் தனது நீர்வேட்கையைத் தணிக்க எண்ணுதலானது நிலையில்லாது சிறிது காலம், உள்ளது போலத்தோன்றிமறையும் உலகவாழ்வில் ஒருவன் அதன்கண் உள்ள நுகர்வுப் பொருள்களால் சிற்றின்பம் நுகர்ந்து தன்னிடத்து இயல் பாயுள்ள இன்பவேட்கையைத் தணிக்க எண்ணும் எண்ணத்துக்கு உவமையாகக் கூறப்பட்டது. எங்ஙனம் கானல், வேட்கையைத் தணியாதோ அங்ஙனம் உலகச்சிற்றின்பமும் உயிர்களிடத்துள்ள நிலையான இன்பவேட்கையைத்தணியாது என்பது கருத்து. கானல் நீன்னீர் உள்ளதாகத் தோன்றுதல்போல, உலகவாழ்க்கையும் நிலை உள்ளதுபோலத்தோன்றி சிலகாலம் இருந்து கெடுதலுக்குப் பேய்த்தேர் உவமையாயிற்று. "பேய்த்தேர் நீரென்று வரும் பேதைக்கு மற்றணைந்த—பேய்த்தேரசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்த

தனைக்கண்டுணர்வாரில்வழியிற் காணும சத்தின்மை—கண்டுணர்வா ரில்லதெனக்காண்'' என்று சிவஞானபோதம் 7-வது சூத்திர வெண்பாக் கூறுதலை நோக்குக. குணம் ஆகாமே—குணம் என்பது இங்கே பிரகிருதி மாயைக்குளதாகிய சாத்துவீக, ராசத, தாமத குணங்கள். இக்குணங்களால் மயக்கவறிவு உண்டாதலால் குணம் ஆகாமே என்றார். குணம்—பேரின்ப வாழ்வை அறியாத மடவோ னுக்குளதாகிய மயக்க அறிவுக்குணம். தீர்த்தாய்-தீர்த்தல்-ஒழித்தல், நீக்குதல். பிறவினைப் பொருளில் வந்தது. உன சேவடி கூடும்வண் ணம் — செம்மை + அடி = சேவடி. செம்மை—நேர்மை. பேரின் பம் அடைதற்குரிய திருவடிகளாயிருத்தலால் சேவடி என்றார். திருவடிகளை அடைதலே பேரின்பமடைதலாதலின் சேவடி கூடும் வண்ணம் என்றார். தோணோக்கம் (ஆடாமோ) — தோணோக்கம் என்பது, அடிகள் இருந்த காலத்து உள்ள ஒருவகையான மகளிர் விளையாட்டு. அது இக்காலத்தில் வழக்கற்றுப் போயினமையால், அது இன்னதென்று விளங்கவில்லை. தோணோக்கம் என்பது ஒரு வர் தோளை மற்றொருவர் கண்ணுற்பார்க்க முயன்றாடும் ஆட்டம் என்று அச்சொல்லின் பொருளாலே நாம் அறியலாம். அடியார்களை மகளிராக உருவகஞ்செய்து அடிகள் இவ்விளையாட்டின்பேரில் வைத்து இத்தோணோக்கப் பதிகம் பாடி அருளினார்.

---

328. உரைமாண்ட வுள்ளொளி யுத்தமன்வந் துளம்புகலும்
கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே
இரைமாண்ட இந்திரியப் பறவை யிரிந்தோடத்
துரைமாண்ட வாபாடித் தோணோக்க மாடாமோ. சடு.

[ப-ரை] உரைமாண்ட — நாவினால் கூறவொண்ணாத; உள் ஒளி உத்தமன் — அக ஒளியைத் திருமேனியாகவுடைய சிவபெரு மான்; வந்து உளம்புகலும் — எனது உள்ளத்தில் விளங்கித்தோன் றினான் (அங்ஙனம் விளங்கித்தோன்றுதலும்); கரைமாண்ட காமப்

பெரும்கடலை—எல்லையில்லாத அவாவாகிய பெரிய கடலை; கடத்தலுமே — நான்கடந்தேன் (அங்ஙனங்கடத்தலும்); இரைமாண்ட இந்திரியப்பறவை இரிந்து ஓட — உலகபோகப் பொருள்களை எவ்வளவு நுகர்ந்தாலும் அவற்றில் அவாத்தணியாதிருக்கிற ஐம்பொறிகளாகிய பறவைகள் அஞ்சி ஓடின, (அங்ஙனம் அவை ஓடலும்); துரைமாண்ட ஆறுபாடி — இடவுணர்வு அற்று வியாபக உணர்வு விளங்கிய வகையைப்பாடி; தோணோக்கம் ஆடாமோ — மகளிராகிய நாங்கள் தோணோக்கம் என்ற விளையாட்டை ஆடுவோமாக.

[வி-ரை] உரைமாண்டஉள் ஒளி உத்தமன் — உள்ஒளி — அகவொளி. அகக்கண்ணால் காணுதற்கு ஏதுவாகிய தூவெளிஒளி· உலகத்திலே புறம்பேவிளங்கும கதிரவன், திஙகள், தீ இவற்றின் ஒளிக்கு உள்ளீடாய் விளஙகும் ஒளியாதலின் உள்ளொளி எனப்பட்டது. இந்த ஒளியே உலகங்கள் தோன்றுதற்கும், ஒடுங்குதற்கும் நிலைக்களனாயுள்ள ஒளி. இந்த ஒளியில் உலகங்களிலுள்ள உருவங்களெல்லாம் நுண்ணியனவாய் அடஙகியுள்ளன. எஙகும் நிறைந்திருக்கிற இந்தத்தூவெளி ஒளியானது மலவிருள் நீக்கமுடையவர்களுக்கு விளங்கித்தோன்றும். இந்த ஒளியைப்பற்றித் திருமூலர், திருமந்திரம் 1808-வது பாட்டில் "தெருட்கண்ணினோர்க்செங்குஞ் சீரொளியாமே" என்று கூறி அருளினார். இந்த உள்ளொளி சிவபெருமானுக்குத் திருமேனியாக விளங்குதலால் உள்ளொளியுத்தமன் என்றார். சிவபெருமான் தனகெனெ ஒன்றும் வேண்டாது எல்லாவுயிர்களும் இனபநலமடைதற்கு ஒழிவின்றி ஐந்தொழில் செய்தலால் அடிகள் அவனை உத்தமன் என்றார். இந்த உள்ளொளியானது வாய்ச்சொற்களால் கூறப்படுதலன்றி அநுபவத்தால் மாத்திரம் தனியே உணரப்படுதலின், உரைமாண்ட என்றார். ஒலிக்கு ஆதாரமாகிய வாக்குக்களெல்லாம் சுத்தமாயையிலே உண்டாதலின் 36 தத்துவங்களுக்கு மப்பாற்பட்ட உள்ளொளியானது அவ்வாக்குகளாற் கூறப்படாதது என்பார் உரைமாண்ட என்றார். மாண்ட — இறந்த; அதாவது கடந்த எனனும் பொருளில் வந்தது. வந்து உளம்புகலும்— சிவபெருமான் எல்லா மக்களுடைய உள்ளத்திலும் எப்பொ

முழுதும் இருத்தலால், வந்து புகுதல் என்பதற்கு விளங்கித் தோன்றுதல் என்று உரைசெய்யப்பட்டது. உள்ளத்தில் விளங்குதல் என்பது, உள்ளத்தை உடையவர் அறியும்படி ஒளியோடு தோன்றுதலாகும். உள்ளம் என்பது உளம் என இடைகுறைந்து நின்றது. வந்து புகுதல் என்பது சொல்லாற்றலால் வந்து புகுந்தான், அங்ஙனம் புகுதலும் என்ற பொருளில் வந்தது. இவ்வாறே பின்வருகிற கடத்தலும் என்பதற்கும், இரிந்து ஓட என்பதற்கும் கொள்ளுக. கரைமாண்ட காமப்பெருங்கடலைக் கடத்தலுமே — கரை – எல்லை, அளவு. கரைமாண்ட — அளவு கடந்த; அதாவது இவ்வளவினதென்று சொல்ல முடியாத. காமம் — ஆசை, அவா; உலகநுகர்வுப்பொருள்களை நுகர்தற்கு விரும்பும் அவா. இவை உலகப்பற்றுடையார்க்கு அளவின்றி விரிதலின் கரைமாண்ட காமப் பெருங்கடல் என்றார். "ஆசைக்கோர் அளவில்லை" என்றார் தாயுமான அடிகளும். இந்த அவாவானது பிறவிக்குக் காரணமாகிய மயக்க அறிவா (அவிச்சையா)லுண்டாகின்றது. அநித்தத்தை நித்தமென்றும் இன்பமல்லாததை இன்பமென்றும் தானல்லாததைத் தானென்றும் எண்ணுகிற இந்த அவிச்சைக்குப் பிறப்பிடமாகிய மல இருளானது உள்ளத்தில் விளங்கின தூவெளி ஒளியால் நீங்குதலால் உரைமாண்ட உள்ளொளி உத்தமன் வந்துளம்புகலும் கரைமாண்ட காமப்பெருங்கடலைக் கடத்தலுமே என்றார். இரைமாண்ட இந்திரியப்பறவை இரிந்து ஓட — இந்திரியம் என்பது ஐம்பொறிகள். இவ்வைம்பொறிகளும், உண்ணுதற்கு இரைதேடி அலைந்து திரியும் பறவைகளுக்கு ஒப்பிடப்பட்டன. ஓரறிவுடைய பறவைகள் தாங்கள் உண்ணுதற்கு எப்பொழுதும் அலைந்து இரைதேடுதல்போல, ஆறறிவுடையமக்கள் தாங்கள் உலகச்சிற்றின்பம் நுகர்தற்கு உகலநுகர்வுப்பொருள்களைத் தேடிப்பெறுதற்கு எப்பொழுதும் அலைந்து திரிகிறார்கள் என்னுங்கருத்து இதனால் கூறப்பட்டது. உலகப்பற்றுடையவர்கள் எவ்வளவு நுகர்வுப்பொருளாகிய விடங்களை நுகர்ந்தாலும் அவற்றால் தாம் கருதிய இன்பம்பெற்று அமைதி அடையாதிருத்தலால் இரைமாண்ட இந்திரியப்பறவை என்றார். இரைமாண்ட—இரையாகிய விடயங்களால் அமைதிபெற

முடியாத மலநீக்கம்பெற்றுக் காமக்கடலைக்கடந்த ஒருவர் பேரின்பச் சுவையை விரும்புவர் அன்றி சிற்றின்பநுகர்வுப்பொருளைச் சிறிதும் விரும்பித் தேடமாட்டாராதலின் இரைமாண்ட இந்திரியப் பறவை இரிந்தோட என்றார். இரிதல் — அஞ்சுதல். இரிந்து ஓட லென்பது விடயநுகர்வை விரும்புதல் பிறவித்துன்பத்துக்கு ஆளாக்குமென்று அஞ்சி விரைவில் நீங்கல். துரைமாண்ட ஆறு பாடி — துறை என்பது எதுகைநோக்கித் துரை எனத்திரிந்தது. துறை — தங்குமிடம்; அதாவது உயிர் தங்குமிடம். மலப்பிணிப்பினாலே முன் உடலினுள்ளே சிறைப்பட்டு வியாபகமில்லாதிருந்த உயிர் உள்ளொளியைச சேர்தலினாலே அசசிறை நீஙகப்பெற்று வியாபகமடைதல் இஙகே துரைமாண்டவாறு என்று கூறப்பட்டது. மாண்ட — மாட்சிமைப்பட்ட. மாண்டவாறு — மாண்டவா என ஈறுதொக்கது. இந்தப்பாட்டில் அடிகள் உள்ளொளி உத்தமன் உளம்புகல், காமககடலைக்கடத்தல், இந்திரியப்பறவை இரிந்து ஓடல் ஆகிய மூன்றும் முறையே ஒன்றுக்கொன்று ஏதுவும் பயனுமாயிருத்தலைக்கூறி அவை மூன்றினையும் உயிர் அடையப்பெறுதலினால் சிறைத்தன்மை நீங்கி எங்கும் சிவமாய் நிறைந்திருக்கும் வியாபகத்தன்மை அடையும் மாட்சிமையைத் தம்மேல்வைத்து வீட்டுநெறியிலொழுகும் அடியார்கள் அறியும்படிக்கூறி அருளினார். இந்தப்பாட்டில் சிவஞானபோதம் 9–வது சூத்திரத்தில் கூறப்பட்ட மலவிருள் நீக்கம் கூடப்பட்டது. 10-வது சூத்திரத்தில் கூறப்பட்ட அருளொளி விளக்கமும், 11-வது சூத்திரத்தில் கூறப்பட்ட சிவப்பேறும் கூறப்படவில்லை.

---

தில்லையில் அருளிய

# கசு. திருப்பொன்னூசல்.

---

திருப்பொன்னூசல் என்பது, திரு என்ற அடைமொழியோடு பொன், ஊசல் என்ற இரண்டு சொற்களும் சேர்ந்து ஆகியது.

பொன்னூசல் என்பது பொன்னாற் செய்யப்பட்ட ஊஞ்சற்பலகை. அழகிய ஊஞ்சற் பலகை என்று கூறினும் பொருந்தும். இரண்டு கால்கள் நட்டு அவற்றின்மேல் ஒருவிட்டம் போட்டு, அவ்விட்டத்தின் இருபக்கத்திலும் கயிறுகட்டித்தொங்கவிட்ட பலகையில் இளம் மகளிர் சிலர் இருந்துகொண்டு ஊஞ்சலாடி விளையாடுதல் திருப் பொன்னூசலாடுதலாகும். அடிகள் இந்த விளையாட்டின்மேல் வைத்து, விளையாடும் மகளிர் வாயிலாக அருட்சுத்தியாகிய சித்தாந்த உண்மையைக்கூறுகின்றார்.

## அருட்சுத்தி.

அருட்சுத்தி என்ற சொற்றொடர் அருள், சுத்தி என்னும் இரண்டு சொற்களாலாகி, அவை புணரும்போது அருட்சுத்தி என்றாகியது அருள் என்பது தீயிற் சூடு பிரியாதிருப்பதுபோல இறைவனோடு இரண்டறக்கலந்து அவனைவிட்டுப் பிரியாதிருக்கின்ற சத்தியாகிய ஆற்றலாகும். இந்த அருட்சத்தியே உயிர்களுடைய மும் மலப்பிணிப்பு நீங்கும்படி இறைவனோடியைந்து நின்று ஐந்தொழில் செய்கின்றாள். சுத்தி என்பது தூய்மை அடைதல். அருட்சுத்தி என்பது அருளினாலே தூய்மையடைதல். அருட்சத்தி மக்களுடைய மும்மலப்பிணிப்பு, படிமுறையில் நீங்குதற்கு திரோதான சத்தியாய் அவர்களுடைய உள்ளத்திலிருந்து ஓவாது அருளொளி விளங்கச்செய்து உண்மையை உணர்த்திக்கொணடிருக்கிறாள். இங்ஙனம் அருட்சத்தி உணர்த்திக்கொண்டிருத்தலால் மக்கள் உள்ளமானது அருளொளிவிளங்கப்பெற்று படிமுறையில் மும்மலப் பிணிப்பினின்று முற்றிலும் நீங்கித் தூய்மையடைகிறது. உலக வாழ்வில் மக்கள் மும்மலப்பிணிப்பினின்று நீங்கி அருளொளிவிளக்க முற்றுத் தூய்மையடைதல் அருட்சுததியென்று கூறப்பட்டது.

உறுகயி றூசல் போல வொன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல் போல வந்துவந் துலவு நெஞ்சம்

*பெறுகயி றூசல் போலப் பிறைபுல்கு சடையாய் பாதத்*
*தறுகயி றூச லானே னதிகைவீ ரட்ட னீரே.*

என்று திருநாவுக்கரசு அடிகள் (தேவார அருள்முறைத்திரட்டு பாட்டு 77) கூறுகிறபடி ஊஞ்சற்பலகை,

நிலையின்றி ஓயாமல் அங்குமிங்கும் ஆடிக்கொண்டிருத்தலானது மக்கள் உலகவாழ்வில் ஐம்புலநுகர்வுப்பொருள்களை ஒன்றை விட்டொன்று பற்றி உழன்று நிலையானவின்பவமைதியைப் பெறு திருத்தலுக்கும், ஊஞ்சற்பலகைக் கயிறு அறுந்து தரையையடைந்த பொழுது அங்குமிங்கும் ஆடாதிருக்கும் நிலையான தன்மையை யடைதலானது இன்பத்தின் பொருட்டு உலகில் ஐம்புலநுகர்வுப் பொருளில் உழன்றுகொண்டிருந்த மக்கள் அதனைவிட்டு இறைவ னுடைய திருவடியையடைந்து நிலையான பேரின்பமடைதலுக்கும் பொருத்தமான உவமைகளாயிருத்தலால் திருப்பொன்னூசல் அருட்சுத்தி யென்னும் உண்மையை நன்குவிளக்குதலை யறிக.

[ஒப்புமைபற்றிவந்த ஆறடித்தரவு கொச்சகக்கலிப்பா]

திருச்சிற்றம்பலம்.

---

332. **நஞ்சமர் கண்டத்த னண்டத் தவர்நாதன்**
**மஞ்சுதோய் மாடமணி யுத்தர கோசமங்கை**
**அஞ்சொலாள் தன்னோடுங் கூடி யடியவர்கள்**
**நெஞ்சுளே நின்றமுத மூறிக் கருணைசெய்து**
**துஞ்சல் பிறப்பறுப்பான் தூய புகழ்பாடிப்**
**புஞ்சமார் வெள்வளையீர் பொன்னூச லாடாமோ. சசா.**

[ப-ரை] புஞ்சம் ஆர்—திரட்சிபொருந்திய; வெள்வளையீர் — வெண்சங்கினாலாகிய வளையல்களைக் (கையிலே) தரித்திருக்கிற பெண்களே; மஞ்சுதோய் மாடம் — மேகம் வரையில் அளாவி

உயர்ந்திருக்கிற மாளிகைகளையுடைய; அணி உத்தரகோசமங்கை— அழகிய உத்தரகோச மங்கையில் (திருக்கோயில் கொண்டருளி யிருக்கின்ற); நஞ்சமர்கண்டத்தன்—(திருப்பாற்கடலினின்றெழுந்த) நஞ்சைத்தேவர்களுய்யும்பொருட்டு உண்டதனால் நீலகண்டத்தை யுடையவனும்; அண்டத்தவர் நாதன் — வானுலகத்திலிருக்கிற வானவர்களுக்குத் தலைவனுமாகிய சிவபெருமான்; அஞ்சொலாள் ஓடுங்கூடி—இனிய சொற்களையுடைய உமாதேவியாரோடு சேர்ந்து; அடியவர்கள் — (சிவபெருமானை தங்களுக்கு ஆண்டவனென்றும் தாங்களவனுக்கு மீளா அடிமைகளென்றும், தங்கள் மெய்யறிவி னாலேயுணர்ந்து அவனுடைய திருவடிகளை மட்டுமே நினைந்து கொண்டிருக்கிற) அடியார்களுடைய; நெஞ்சுளே நின்று — நெஞ்சி னுள்ளே அருளொளியாய் நிலைபெற்றுவிளங்கி; அமுதம் ஊறிக் கருணைசெய்து — பேரின்ப உணர்வு ஊற்றெடுத்தூரும்படியாக அருள்செய்து; துஞ்சல்பிறப்பறுப்பான் — அவர்களுக்கு இனி வரும் இறப்பையும், பிறப்பையும் நீக்குகின்றான்; தூயபுகழ்பாடி — (அப்பேர்ப்பட்டவனுடைய) மெய்யான புகழைப்பாடி; பொன்னூச லாடாம் — மகளிராகிய நாம் பொன்னூசலாடுவோமாக.

[வி-ரை] நஞ்சமர்கண்டத்தன — இதனால் சிவபெருமான் தன்னைவந்து அடைக்கலம் புகுந்த உயிர்களைத் துன்பத்தினின்று நீக்கிக்காப்பாற்றியருளுவன் என்பது கூறப்பட்டது. அண்டத் தவர்நாதன — இதனால் சார்ந்தாரைக்காத்தல் தலைவர் கடன் என்ற முறைமைப்படி சிவபெருமான் தன்னைச் சரணடைந்த தேவர்களைத் துன்பத்தினின்று நீக்கினகாரணத்தால் சிவபெருமானை அண்டத் தவர் நாதன் என்றார். அஞ்சொலாள் ஓடுங்கூடி — அம் — அழகு; அது இங்கே இனிமையைக் குறிக்கிறது. அடியவர்கள் நெஞ்சுளே நின்று அமுதம் ஊறி — அடியார்களுடைய நெஞ்சானது முழு அருளொளி விளக்கத்தினாலே மும்மலப்பிணிப்பு முற்றிலும் நீங்கப் பெற்றமையால் நஞ்சமர்கண்டத்தன், அண்டத்தவர்நாதன், அஞ் சொலாளோடுங்கூடி, அடியவர்கள் நெஞ்சுளேநின்று என்றார்.

நின்று என்பது நிலைபெற்றுவிளங்கி, அமுதம் என்பது இங்கே என்றும் பேராயியல்புடைய பேரின்பத்தைக்குறிக்கிறது. ஊற என்பது ஊறி எனத்திரிந்தது. ஊற என்பது உருவகம். ஓர் ஊற்றிலிருந்து நீரானது சுரந்து எழுதல்போல அடியார்களுடைய நெஞ்சுளிருந்து பேரின்பவுணர்வு சுரந்து எழுகிறது என்று உருவகத்தின் உவமையும், உவமப்பொருளும் விரியும். கருணைசெய்து துஞ்சல் பிறப்பறுப்பான் — கருணைசெய்து என்னும் வினையெச்சம் காரணப்பொருளில் வந்தது; அதாவது அமுதமூறக் கருணைசெய்தல் "துஞ்சல் பிறப்பறுத்தலுக்குக காரணமாய்வந்தது. 'ஊனந்தன்னை ஒருங்குடனறுக்கும் ஆனந்தமே யாறா அருளியும்' என்றும் (2-105,106), "வான்வந்தசிந்தை மலங்கழுவ வந்திழியும் ஆனந்தங் காணுடையானாறு" என்றும் (19 - 4), அடிகள் இக்கருத்தைப் பிறவிடங்களிலுங் கூறியிருத்தல் காண்க. துஞ்சல்பிறப்பு — உம்மைத்தொகை. எடுத்தவுடலோடு உலகில்வாழும் சீவன்முத்த அடியார்களுக்கு முதற்கண் இறப்பும், பின் பிறப்பும் அடியோடு நீங்குதலால் துஞ்சல்பிறப்பறுப்பான் என்றார். எடுத்தவுடலில் இறப்பு நீங்காவிட்டால் பிறப்பு நீங்காதென்பது கருத்து. இயல்புபற்றி அறுக்கின்றான் என்பது அறுப்பான் என எதிர்காலத்தாற் கூறப்பட்டது. நஞ்சமா கண்டத்தன் அஞ்சொலாளோடுங்கூடி அடியவர்கள் நெஞ்சுளேநின்று அமுதம் ஊறிக் கருணைசெய்து துஞ்சல் பிறப்பறுப்பான் என்று இயைபுசெய்துமுடிகக. தூயபுகழ் — இறைவன் தனக்கொன்றும் வேண்டாது உயிர்களுய்யும்பொருட்டுச செய்யும் அருட்செயலாலுண்டாகும் மெய்ப்புகழாதலின் தூயபுகழ் என்றார். ஆடாமோ என்பதில் (ஓ) அசை. ஆம் — உளப்பாட்டுத்தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி. ஆடுவாம என்பது ஆடாம் என்னும் எதிர்காலப்பொருளில் வந்தது. வகர இடைநிலை தொக்கது. ஊஞ்சலாடுகிற ஒருபெண் தனனோடு அவ்வூஞ்சலாடுகின்ற பிறபெணகளைப்பார்த்துத் தன்னையும் அவர்களோடுளப்படுத்தி ஆடாம் என்று கூறுகின்றாள். இப்பாட்டில் அடியவர்கள் நெஞ்சுளே நின்று அமுதமூறிக் கருணைசெய்து என்றதனாலே அருட்சத்தி கூறப்பட்டது.

### தில்லையில் அருளிய
# கஎ. அன்னைப்பத்து.

அன்னை என்பதிங்கே அகப்பொருட்டுறைக் கற்பியலில் செவிலித் தாயைக் குறிக்கிறது. அன்னைப்பத்தென்பது செவிலித்தாய், தலைவி தலைவனுடன் மனை வாழ்க்கை வாழ்ந்துகொண்டிருக்குமிடத்துக்குப் போய் தலைவி, தன்னிடம் மனைவாழ்க்கைச சிறப்பை யாக்குவதாகிய தலைவனது குணச்சிறப்பை தலைவியினிடம் கேட்டறிந்ததை நற்றா யிருக்குமிடத்திற்குப்போய் அவளிடம் கூறிய கூற்றுக்களையுடைய பத்துப் பாட்டுககளடங்கிய பதிகமாகும். இது அகப்பொருட்டுறைக கற்பியலில் செவிலித்தாய், நற்றாய்ககு, தலைவி தலைவனுடன வாழும் மனைவாழ்ககைச் சிறப்பை உவந்து கூறுதல் என்னும் துறையைச் சேர்ந்தது.

## ஆத்தும பூரணம்

ஆத்தும பூரணம் என்பது ஆத்துமா, பூரணம் என்னும் இரண்டு சொற்கள் சேர்ந்தாகியது. ஆத்துமா—உயிர். பூரணம்—நிறைவு. கடவுள், உயிர், உலகம் என்னும் என்றுமுள்ள முப்பொருள்களில் கடவுளும் உயிரும் ஒன்றுக்கொன்று இரண்டறககலந்து பிரிவின்றி நிற்கும அறிவுப்பொருள்கள். இவ்விருவகை அறிவுப்பொருள்களுள் கடவுள் மெய் (சத்து), அறிவு (சித்து), இன்பம் (ஆனந்தம்) என னும் மூன்று வகையாலும் நிறைவுடைய பொருளாகும். உயிரா னது சகசமலமாகிய ஆணவமலத்தாலும், ஆகந்துக மலஙகளாகிய மாயை வினை மலங்களாலும் பிணிககப்பட்டு அவற்றின் மறைப்பி னுலே தனது வேட்கை, அறிவு, செயல்கள் தன்னிடம் ஒரு புடை விளங்கும் தன்மையுடைய குறைவையுடையது. இக்குறைவுபாட் டினுல் மக்களுடைய உலகவாழ்வில் உளதாகிய இன்பமும் குறைவு பாடுடையது. "குறைந்தடைந்தார் ஆழாமைக காககுமடி" என்று திருநாவுக்கரசு அடிகள் (6—6—2) கூறுகிறபடி தஙகளுடைய

குறைவை உணர்ந்தவர்களே இறைவனுடைய திருவடிகளைச்சார்ந்து தங்கள் வேட்கை, அறிவு, செயல்கள் மலப்பிணிப்பிலிருந்து முழுவதும் நீங்கப்பெறும் நிறைவையடைந்து போராப் பேரின்பம் பெறுவர். "சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம், ஒன்றினாற் குறையுடையோம் அல்லோ மன்றே உறுபிணியார் செறலொழிந் திட் டோடிப்போனா" (6—98—5) என்று திருநாவுக்கரசு அடிகள் தாம் கடவுளுடைய திருவடிகளைச சேரப்பெற்றதனால் மும்மலப் பிணிப்பு நீங்கி நிறைவையடைந்து பேரின்பம் பெற்றதைக்கூறுதல் காண்க. இவ்வாறு உயிரானது பேரின்பப்பேற்றுக்கேதுவாகிய நிறைவையடைதலே ஆத்துமபூரணமடைதலாகும். அடிகள் நிறைவுப்பொருளாகிய சிவபெருமானைச்சார்ந்து தமது சீவபோதமாகிய குறைவு நீங்கிச் சிவபோதம்பெற்று நிறைவுள்ள பேரின்பம் பெற்றதைப்பற்றி "குணங்கள்தா மில்லா இன்பமே உன்னைக், குறுகினேற் கினியென்ன குறையே" என்று (22 - 4) கூறியிருத்தல் காண்க. அடிகள் தாம் மேலேகூறியவாறு பெற்ற பேரின்பநிலையை அன்னைப் பத்துப்பதிகம் பாட்டுக்களில் அகப்பொருட்டுறையில் வைத்துக் கூறுதலால் அன்னைப்பத்து, ஆத்துமபூரணம் கூறுவதாகின்றது.

[கலிவிருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

343 உன்னற் கரியசீ ருத்தர மங்கையர்
மன்னுவ தென்னெஞ்சி லன்னே யென்னும்
மன்னுவ தென்னெஞ்சில் மாலயன் காண்கிலார்
என்ன அதிசய மன்னே யென்னும். சஎ.

[ப-ரை] உன்னற்கரியசீர் — மனத்தாலும் நினைத்தற்கு முடியாத சிறப்பையுடைய; உத்தரமங்கையர் — உத்தரகோசமங்கையென்னும் புண்ணியத்தலத்தில் திருக்கோயில்கொண்டு வீற்றிருந்தருளும் சிவபெருமான்; என்நெஞ்சில் மன்னுவது—எனதுள்ளத்திலும் பேரருளொளியோடு நிலையாக வீற்றிருத்தலையுடையர்; அதாவது வீற்றிருக்கின்றவர். அன்னே என்னும் — செவிலித்தாயே

என்று (என்னிடத்தில் தலைவி) சொல்லுகின்றாள்; மன்னுவது என் நெஞ்சில் — அவ்வாறு சிவபெருமான் எனதுள்ளத்தில் நிலையாயிருந்து (பேரின்பமருளுவனாயினும்); மால், அயன் காண்கிலர் — தேவர்களாகிய மாலும், நான்முகனும் (அவர்களுக்கிடையே அவன் தழற்பிழம்பாய் நின்றகாலத்தில் முறையே அதனடியையும், முடியையும்) தேடிக்காணும் ஆற்றலில்லாதவராயினர்; அன்னே — செவிலித்தாயே; என்ன அதிசயம் என்றும் — எனதுள்ளத்தில் எனக்கு எளிமையாய் என்றும் நிலையாயிருக்கும் சிவபெருமான் மாலினாலும், நான்முகனாலும் தேடியும் காணமுடியாத அரும்பெரும் சோதிப்பொருளாயிருப்பது என்னவியப்பு என்று தலைவி என்னிடம் கூறுகிறாள். தேவர்களாகிய நான்முகனும், மாலும் சீவபோதமுடையவர்களாய், தழற்பிழம்பாய் நின்ற சிவபெருமானைத்தேடினதனாலே அவனைக்காணமுடியவில்லை; நானோசீவபோதம் முற்றிலும் இழந்து சிவபெருமானோடிரண்டறக்கலந்து சிவபோக வியாபகத்துள்ளடங்கி நிற்றலால் எனதுள்ளத்தில் மலவிருள் முற்றிலும் நீங்கும்படி அருளொளியோடு விளங்கி என்றும் வீற்றிருந்து இன்பமருளுகின்றான் என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] உன்னற்கரியசீர் உத்தரமங்கையர் — சிவபெருமான் வாழ்பதியாக உத்தரகோசமங்கையூரை 'பத்தரெல்லாம் பார்மேல் சிவபுரம்போற்கொண்டாடும் பதி'யாதலின் (19 - 3) அடிகள் அங்ஙனம் கூறினார். என் நெஞ்சில் மன்னுவது — நெஞ்சென் பதிங்கே இறைவனோடத்துவிதமாய்க்கலந்து ஒன்றுபட்டிருக்கிற உயிரினோடு ஒன்றுபட்டிருக்கிற உள்ளம். இந்த நிலையான உள்ளமானது அதனிடம் முழுவருளொளி விளங்குதல் காரணமாக மலவிருள் முற்றிலும் நீங்குதலாலுண்டாகிறது. இந்த உள்ளத்தைத் திருமூலர் 'மன்மனம்' என்று கூறுகின்றார் (திருமந்திரம் - 620). இவ்வுள்ளத்தினோடொன்றுபட்டிருக்கிற உயிர் இறைவனுடைய வியாபகமான திருவடி நிழலிலடங்கிச சிவம் ஒன்றுமாத்திரமே காண்கிற வியாபக அறிவுடையதாயிருக்கிறது. மன்னுவது — தொழிற்பெயர். இதற்குப்பின அவாய் நிலையால் உடையர் என்ற

சொல் தொக்கிநிற்கிறது; இது சொல்லெச்சம். அன்னே என்னும் - அன்னை என்ற சொல் அதனீற்றிலுள்ள ஐகாரம் கெட்டு ஏகாரமாகத்திரிந்து அன்னே என்று விளிப்பெயராகமாறியது. என்னும் என்பது செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று; இது இங்கே உயர்திணை ஒருமைப் பெண்பாற்படர்க்கை நிகழ்கால வினைமுற்றுப்பொருளில்வந்தது. "மன்னுவது என்நெஞ்சில் மாலயன் காண்கிலர் — நாடி நாரணன் நான்முக னென்றிவர், தேடியுந் திரிந்துங்காண வல்லரோ, மாட மாளிகை சூழ்தில்லையம்பலத் தாடி பாதமென் நெஞ்சுளிருக்கவே" என்று திருநாவுக்கரசு அடிகள் (5 - 1 - 10) இதே உண்மையைக் கூறியிருக்கின்றார். என்ன அதிசயம் என்னும் — அதிசயம் என்ற சொல்லுக்கு அதிசயப்பத்து (26-வது பதிகம்) த்தலைப்பிற்கு எழுதிய விளக்கவுரையைக்கொள்க. முன்னிரண்டடிகளினாலே சீவன்முத்தர் நிலையிலுள்ள அடிகளுக்கு உத்தரகோசமங்கைத் திருக்கோயிலிலுள்ள அருளுருவாகிய சிவலிங்க வடிவம் பேரொளிவடிவாய்த் தோன்றியதுபோலவே தமதுள்ளத்தினும் அப்பேரொளிவடிவமானது விளங்கியதென்பது கூறப்பட்டது. எங்கும் சிவமயமாய்க்காண்கிற சீவன்முத்தருக்குச் சிவலிங்கம் அருளொளிவடிவமாய்த் தோன்றுமேயன்றி நம்போன்றவர்களுக்குத் தோன்றுவதுபோலச் சிலைவடிவமாய்த்தோன்றாது. இந்த உண்மையைத் திருநாவுக்கரசு அடிகள் "என்ன மாதவஞ்செய்தனை நெஞ்சமே, மின்னுவார்சடை வேதவிழுப்பொருள், செங்கெலார்வயற் சேறையுட் செந்நெறி, மன்னு சோதிநம் பால்வந்து வைகவே", (5-77-2) என்று கூறியருளினார். இந்தப்பாட்டில் அடிகள் தாம் மெய்யுணர்வினாலே சுவானுபூதிகமடைந்ததாக உலகறிந்துய்யும்படி அவர்களுக்குக்கூறுகின்றார்.

---

தில்லையில் அருளிய

## கஅ. குயிற்பத்து.

---

குயிற்பத்து என்பது சோலையில் வாழும் ஓர்குயிலை நோக்கிக் கூறும் பத்துப்பாட்டுக்களடங்கிய ஒரு பதிகமாகும். இறைவன்

கயிலையிலிருந்து திருப்பெருந்துறைக்கு வந்து, தம்மை ஆண்டருளிப் பேரின்பமளித்தபின் தம்மை உலகிலிருக்கும்படி ஆணை செய்து பிரிந்துபோன பிரிவாற்ருமையினுலே அடிகள் மனம் வருந்தி ஓர் குயிலை இறைவனிடம் தூதாக அனுப்பி அவனைத் தம்மிடம் வரச்சொல்லுவதுபோலக்கூறிப் புலத்தலைக் குயிற்பத்து உணர்த்துகின்றது. இது அகப்பொருட்டுறை, கற்பியலில் நெய்தற் றிணைக்குரிய இரங்கலாகிய பகுதியில் தன்னைவிட்டுப் பிரிந்துபோன தலைவனிடம், தலைவி — பிரிவாற்ருமையினுலே மனம்வருந்தி ஓர் குயிலை அவனிடத்தில் தன்னுடையவருத்தத்தைக்கூறித் தன்னிடம் வரச்சொல்லும்படித் தூதாக அனுப்புவதுபோலசசொல்லிப் புலத்தல்போல்வது. (1 - 60 - 8) பாட்டில் திருஞானசம்பந்த அடிகள் குயிலைத் திருத்தோணிபுரத்துறையும் சிவபெருமானுக்குத் தூதாக அனுப்பிக்கூறியிருத்தலையறிக

---

## ஆத்தும விரக்கம்.

---

ஆத்துமவிரக்கம் என்பது ஆன்மவிரக்கம் என்றுங்கூறப்படும். ஆத்துமவிரக்கம் என்பது ஆத்துமாவினது இரக்கம் எனவிரியும். ஆத்துமா — உயிர். இரக்கம் — வருத்தம். அது இங்கே பிரிவாற்ருமையாலுண்டாகும் மனவருத்தைத் குறிக்கிறது. உயிரும், இறைவனும் என்றுமுள்ள இருவேறு அறிவுப்பொருள்கள் ஆயினும் ஒன்றினைவிட்டு மற்ருென்று பிரியாது இரண்டறக்கலந்திருக்கும் அத்துவித நிலைமையுடையது. உயிர் தனது கட்டுநிலையில் மலப்பிணிப்பினுலே இந்த அத்துவித நிலையையறியாதிருந்து வீட்டுநிலையில் இறைவனுல்ஆட்கொள்ளப்பெற்றபின் இறைவனேடிரண்டறக் கலந்திருத்தலால் உணர்கிறது. உணர்ந்தாலும் சீவன்முத்தர் தாம் எடுத்த உடலோடு உலகில்வாழும்வரையும் பிராரத்துவவினைமல வாசனை ஒரோவழி தம்மைத்தாக்குதலால் அவருக்குச் சிவக்காட்சி மறைந்து உலகக்காட்சி தென்பட்டுப் பிரிவாற்ருமையுண்டாகிறது.

# குயிற்பத்து.

*ஆத்துமவிரக்கம் என்பது சீவன் முத்தருக்கு ஓரோவழியுண்டாகும் இந்தப்பிரிவாற்றாமையால் நேரிடும் மனவருத்தமாகும்.*

---

[அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்]

*திருச்சிற்றம்பலம்*

---

351. *தேன்பழச் சோலை பயிலுஞ் சிறுகுயி லேயிது கேள்நீ, வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை யாட் கொண்ட வள்ளல், ஊன்பழித் துள்ளம் புகுந்தென் னுணர் வது வாயவொருத்தன், மான்பழித் தாண்டமென் னோக்கி மணாளனை நீவரக் கூவாய்.* சஅ.

[ப-ரை] *தேன்பழச்சோலை — தேன்துளிக்கும் கனிகளையுடைய மரச்சோலைகளில்; பயிலும் சிறுகுயிலே — வாழ்கின்ற இளங்குயிலே; நீ இதுகேள் — நீ, நான் உன்னிடஞ்சொல்லுகின்ற தூதுமொழியைக் கேட்பாயாக; மான்பழித்து ஆண்ட — மானினுடைய (கண்களைக்) குறைவுபடுத்தி அவற்றை வென்று; மெல் நோக்கி மணாளனை — இனிமையான அருட்கண்களையுடைய உமாதேவியாருடைய நாயகனும்; வான்பழித்து — சிவலோகமாகிய கயிலையைவிட்டு நீங்கி; இம்மண்புகுந்து — இந்த நிலவுலகிற்கு வந்து; மனிதரை ஆட்கொண்டவள்ளல் — பக்குவப்பட்ட மக்களைத் தீக்கைசெய்து அடிமையாக ஆட்கொண்டு பேரின்பமளிக்கும் வள்ளற்றன்மையுடையவனும்; என் ஊன்பழித்து — எனது உடலிலே சிறப்பாகத்தங்குதலின்றி; என் உள்ளம் புகுந்து — எனது மும்மலப்பிணியைக கெடுத்தற்பொருட்டு என்னோடொன்றுபட்டிருக்கிற உள்ளத்தில் அருட்பேரொளியாய் விளங்கி; என் உணர்வது வாயவொருத்தன் — (எனது சீவபோதமொழிந்து அவனுடைய சிவபோதத்திலடங்கி அவனோடிரண்டறக்கலந்து நிற்கும் அத்துவித நிலையில்) எனது மெய்யுணர்வில் வியாபகமாய்ச்செறிந்து விளங்கும்*

உணர்வாயிருக்கிற தனிமுதல்வனுமாகிய சிவபெருமானே; நீ வரக் கூவாய் — நீ என்னிடம் வரும்படிக் கூவுவாயாக.

[ப-ரை] நீ இதுகேள் — இது என்பதிங்கே ஏற்புழிக்கோடலால் தூதுமொழியைக்குறிக்கிறது. மான்பழித்தாண்ட — உமாதேவியாருடைய கண்களுக்கு உவமைகூறும் பொருள்கள் மானினுடைய கண்களாதலால் மான் என்பதற்கு மானினுடைய கண்கள் என்று உரைகூறப்பட்டது. பழித்தல் — குறைவுபடுத்தல், கீழ்ப்படுத்தல். இதனாலே உமாதேவியாருடைய கண்களுக்கு மானினுடைய கண்கள் ஒப்புமையாகாது என்பது கூறப்பட்டது. மெல்நோக்கி மணாளன் — நோக்கு + இ = நோக்கி. இ – வினைமுதலுணர்த்தும் விகுதி; கண்களையுடையவள். "கண்ணிற் கணிகலங் கண்ணோட்டம்" என்று திருவள்ளுவர் கூறுகிறபடி (திருக்குறள் 575) உமாதேவியார் உயிர்களிடத்தில் எப்பொழுதும் தண்ணளி செய்யும் அருளையுடையவளாதலின் அவளை மெல்நோக்கி என்றார். மணம், ஆளன் என்ற இரண்டு தமிழ்ச்சொற்களும் சேர்ந்து தமிழிலக்கண விதிப்படி மணவாளன் என்று இருக்கவேண்டியது மணாளன் என மருவியது. இறைவன் எல்லாவுயிர்களுக்கும் அருட்சத்தியோடுகூடியிருந்து எப்பொழுதும் இன்பமளித்தலால் நித்த மணாளன் என்று கூறப்படுகின்றான். "நித்த மணாளர் நிரம்ப அழகியர்" என்று அடிகள் (17 - 3) பாட்டில் கூறுதல் காண்க. நாலாவது அடியால் இறைவன் உயிர்களுக்கு இன்பமருளும்பொருட்டுத் தன்னின்வேறாகாத அருட்சத்தியோடு கூடியவன் என்பது கூறப்பட்டது. "தன்நிலைமை மன்உயிர்கள் சாரத்தருஞ்சத்தி பின்னமிலான் எங்கள் பிரான்" என்று திருவருட்பயன் 2-வது பாட்டு இவ்வுண்மையைக் கூறுதல்காண்க. வான்பழித்து இம்மண் புகுந்து — ஒளியோடு விளங்கும் சிறப்புடைய கயிலைமலையைவிட்டு அச்சிறப்பில்லாத நிலவுலகிற்குப் பக்குவப்பட்ட அடியார்களை ஆட்கொள்ளும்பொருட்டு வருவதால் வான்பழித்து இம்மண்புகுந்து என்றார். இதனால் அடியார்கள் பொருட்டு இறைவனது தண்ணளி

யோடுகூடிய எளிமை கூறப்பட்டது. மனிதனை ஆட்கொண்ட வள்ளல் — இதனால் பக்குவப்பட்ட அடியார்களுக்கு அவர்களிடம் தனது எண்குணங்களையும் பதியச்செய்தலாகிய தன்னையே ஈந்து தாளுக்குதல் என்னும் வள்ளற்றன்மைகூறப்பட்டது. ஆட்கொள் ளும்வள்ளல் என நிகழ்காலத்தாற் கூறற்பாலது இயல்புபற்றி ஆட் கொண்டவள்ளல் என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது. இவ் வள்ளற்றன்மைக்கு ஒரு பெருஞ்செல்வன் தன்னின் வேறாயிருக் கிற நிலையில்லாத செல்வப்பொருளை வரையாதுகொடுத்தல் சிறிது மீடாகாது. இரண்டாவது அடியினாலே இறைவன் பக்குவப்பட்ட மக்களெல்லாருக்கும் செய்யும் பேரருட்செயலை அடிகள் கூறுகின் றார். என் ஊன்பழித்து — ஊன் - ஆகுபெயராய் உடலைக்குறிக் கிறது. உடலை ஆக்குகின்ற தத்துவங்களில் இறைவன் கலந் திருந்து அவற்றை இயக்குவது மாயாவடிவங்களில் விரவியிருக்கிற உயிரினது மலத்தைக்கெடுத்தற் பொருட்டேயாகும். உடல்முழு வதும் தூவெளியொளி நிரம்பப்பெற்று மலவிருள் நீங்கியபொழுது அவ்வுடல் முழுவதும் சிவகரணமாய் ஒளிவிளக்கமுடையதாகின் றது; அப்பொழுது இறைவன் அவ்வுடலில் பொதுவாய்க் கலந் திருக்கவேண்டுமேயன்றி முன்னிருந்ததுபோல அவ்வுடலிற் சிறப் பாகவிருந்து அதனை இயக்குதல் வேண்டப்படாமையின ஊன் பழித்து என்றார். உணர்வு என்பதற்கு முன்வரும் 'என்' என் னும் சொல்லை ஊன் என்பதற்கு முன்னும் உள்ளம் என்பதற்கு முன்னும் சேர்த்துக்கொள்க. என் உள்ளம் புகுந்து — புகுதல் என்பது இங்கே முழு அருளொளியோடு விளங்குதல். உள்ளம் என்பதிங்கே இறைவனோடு ஒன்றியிருக்கும் உயிருடன் முழுமை யும் ஒன்றுபட்டிருக்கும் உள்ளம். "நானுமென் சிந்தையும் நனுகும் வண்ணம் நானணுகும்" என்று அடிகள் (40 - 6) பாட்டில் இந்த உள்ளமாகிய சிந்தையைக் கூறியிருத்தல் காண்க. இவ்வாறு இறைவனோடொன்றியிருக்கும் உயிரோடு உள்ளம் ஒன்றுபட்டிருத் தலுக்கு அவ்வுயிரானது உடலைப்பழித்தல் ஏதுவாயிருத்தலின் ஊன் பழித்து என்பதற்குப்பின் அதன்பயனாயுள்ள உள்ளம் புகுதலை அடி

கள் கூறினர். இந்த உண்மையை அடிகள் (34 - 6) பாட்டில் "கடலின் திரையதுபோல் வருகலக்கம் மலம் அறுத்தென், உடலும் எனதுயிரும் புகுந்தொழியா வண்ணம் நிறைந்தான்" என்று கூறியருளினர். உணர்வது வாயவொருத்தன் — உணர்வது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி; உணர்வென்பது இங்கே இறையுணர்வாகிய மெய்யுணர்வு; அதாவது உயிர் இறைவனோடிரண்டறகலந்து நிற்கும் சிறப்பியல்பு அத்துவித நிலையில் இறைவனுடைய வியாபக வுணர்வில் வியாப்பியமா யடங்கியிருக்கும் உணர்வு. உணர்வு மூவகைப்படும்:— (1) உடலுணர்வு — இது பாசஞானம்; (2) உயிருணர்வு — இது பசுஞானம்; (3) இறையுணர்வு — இது பதிஞானம், அல்லது மெய்யுணர்வு, இங்கே கூறப்படும் உணர்வு பதிஞானமாகிய மெய்யுணர்வு. இந்த உணர்வே சிவானுபவத்திற்கேதுவாயிருக்கிறது. உயிர் உணர்வானது வியாபக இறையுணர்வில் ஒன்றுபட்டு அடங்கியிருக்கும்பொழுது இந்தச் சிவானுபவம் உயிருக்குச் சுவானுபூதிகமாதலால் என் உணர்வது வாயவொருத்தன் என்றார். சிவஞானசித்தியார் 8-வது சூத்திரம் 34-வது பாட்டுப்பார்க்க. இந்தச் சுவானுபூதிகத்தை உயிர்க்கு அடைவித்தற்குச் சிவபெருமான் ஒருவனே உரியவனாதலின் ஒருத்தன் என்றார். (என்) ஊன்பழித்து என்றதனாலே சிவஞானபோதம் 9-ம் சூத்திரம் கூறுகிறபடி ஒளிவிளக்கத்தாலுண்டாகிற பாசநீக்கமும், என்னுள்ளம் புகுந்து என்றதனால் சிவஞானபோதம் 10-ம் சூத்திரம் கூறுகிறபடி அருள்விளக்கத்தாலுண்டாகிற பசுபோத நீக்கமும், என் உணர்வது வாயவொருத்தன் என்றதனாலே சிவஞானபோதம் 11-வது சூத்திரம் கூறுகிறபடி இனபவிளக்கத்தாலுண்டாகிற சிவப்பேறும், அடிகள் தமது அனுபவநிலையை உலகர் அறிந்துய்யும்படி இந்தப்பாட்டின் 3-வது அடியில் கூறியருளினர். பக்குவப்பட்ட அடியார்களுக்கெல்லாம் இறைவன் தனது பேரருளினாலே பேரின்பமளிக்கின்றான் என்னும் அவன்வள்ளற்றன்மையை 2-வது அடியில் பொதுவாகக்கூறிய அடிகள் 3-வது அடியில் அவ்வள்ளற்றன்மையைத் தம்மிடத்தும் அருளினனென்று தம்மைச் சான்றாகக்காட்டி உலகர் அவ்வுண்மையை அறியும்படி கூறியருளினர்.

நீவரக்கூவாய் — இவ்வாறு தமக்குப்பேரின்பவனுபவத்தையருளிய சிவபெருமானை ஒருகணமேனும் மறந்திருத்தல் தகாதாதலின் சோலையிலுள்ள மரத்தின்மேலிருந்து இயல்பாகக்கூவும் நீ அவனிடம் என்வருத்தத்தைக்கூறி அவ்வருத்தம் தீர்தற்கு என்னிடம் உடனே வரும்படி கூவுவாயாக என்று அடிகள் குயிலைநோக்கி இயற்கை நவிற்சி அணியாக இதனுற் கூறியவாருயிற்று பிராரத்துவ வினைமலவாசனை ஒரோவழி தங்களைத் தாக்காதிருக்கும்பொருட்டு சீவன்முத்தர்கள் இறைவனை இடையரு து தங்கள் உள்ளத்தில் நினைந்துகொண்டிருக்க வேண்டுமென்பது இப்பாட்டின் கருத்து.

---

தில்லையில் அருளிய

# கக. திருத்தசாங்கம்.

---

திரு என்னும் தமிழுடைமொழியோடு தசம், அங்கம் என்னும் இரண்டு வடமொழிச்சொற்களும் சேர்ந்து, அவை மூன்றும் புணர்ந்து திருத்தசாங்கம் என்ருகியது. தசம்—பத்து. அங்கம்—உறுப்பு. தசாங்கம் என்பது பத்து உறுப்புக்கள். அவை கீழ் வரும் பாட்டுக்களிற் கூறுகிறபடி இறைவனுக்குரியனவாகிய (1) நாமம், (2) நாடு, (3) ஊர், (4) ஆறு, (5) மலை, (6) ஊர்தி, (7) படை, (8) முரசு, (9) தார், (10) கொடி, ஆகிய பத்து உறுப்புக் களுமாகும். அவை பத்தும் இன்ன என்று முறையே 1 முதல் 10 பாட்டுக்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. அரசன் ஒருவன் தான் ஆளும் மக்களாகிய குடிகள் துன்பத்தினின்று நீங்கி உலக இனபமடையும் பொருட்டு அவர்களை ஆட்சிசெய்ய இப் பத்து உறுப்புக்களும் துணைகளாக உதவுகின்றன. அதுபோல உலகினை ஆளும் முழுமுதற்றலைவனுகிய இறைவனும் அப்பத்து உறுப்புக்களையும் துணைகளாகக்கொண்டு உயிர்கள், மும்மலப்பிணிப் பினுலுண்டாகும் துன்பத்தினின்று நீங்கிப் பேரின்பமடையும்

பொருட்டு ஆட்சிசெய்கின்றான் என்பதை உணர்த்தத் திருத்த சாங்கம் கூறப்படுகின்றது. இறைவன், மக்கள் தன்னைக்காணாது அவர்களை ஆட்சிசெய்து செலுத்தும் அரசியலை, மன்னன் தானுருங் குடிகளையும், அவர்கள் காணும்படி ஒருவாறு ஆட்சிசெய்து அரசியல் செலுத்துகின்றான். அதனால் அரசனை குறிக்கும் மன்னன் என்ற பெயர் இறைவனுக்கும் பெயராக வழங்கப்படுகின்றது. இறைவனை தமிழ்நாட்டினையாளும் சேர, சோழ, பாண்டியமன்னன் என அடிகள் (48 - 7) கூறியிருத்தல் காண்க. மன்னன் என்ற தமிழ்ச்சொல் நிலைபெறச்செய்கிறவன என்று பொருள்படும். பேரின்பத்தில் நிலைபெறசெய்யும்படி உயிர்களை உலகில் ஆட்சிசெய்யும் இறைவனுக்கு, தன்குடிமக்களை உலகவின்பத்தில் நிலைபெறவாழும்படி ஆட்சிசெய்யும் அரசனொருவன் ஒருவாறு ஒருபுடை உவமையாதலால் இறைவனையும் உலகிலுள்ள அரசனையும் பண்டைத்தமிழர் மன்னன் என்று பெயரிட்டு வழங்கினார்கள். அடிகள் இத்திருத்தசாங்கத்தில் ஓர் பெண் இறைவனுடைய பத்து உறுப்புக்களின் பெயரையும் கூறும்படி ஓர் கிளியைப்பார்த்துக் கேள்விகேட்பதாயும், அக்கிளி அப்பெண்ணைநோக்கித் தன்னிடங்கேட்ட கேள்விகளுக்கு விடைகள் கூறுவதாயும் வைத்து பத்துப்பாட்டுக்களையும் பாடியருளினார். அடிகள் இப்பதிகத்தில் மேலே கூறப்பட்ட பத்து உறுப்புக்களாலும் இறைவன் உலகில் மக்களை ஆட்சிசெய்து அடிமை கொண்ட முறைமையைக் கூறுகின்றார்.

## அடிமை கொண்ட முறைமை.

அடிமைகொண்ட முறைமை என்ற சொற்றொடர் அடிமை, கொண்ட, முறைமை என்ற மூன்று சொற்களாலாகியது. அடிமையென்பது மக்களும், பிறவுயிர்களும் இயல்பாக இறைவனுக்கு அறுதியிலே மீளாவாட்பட்டிருக்கும் தன்மை. மக்களெல்லாம், இறைவன், தாங்களின்பமடையும் பொருட்டுத் தங்களை இயக்க, இயங்கும் தன்மையும், அறிவிக்க அறியுந்தன்மையும் இயல்பாகவே வுடைய

வர்கள் என்றவுண்மை, அடிமை என்ற சொல்லாற் பெறப்படுகின்றது. கொள்கின்ற என்று முக்காலத்திற்கும் பொதுவான நிகழ் காலத்தாற் கூறற்பாலது, இயல்புபற்றிக்கொண்ட என்று இறந்த காலத்தாற் கூறப்பட்டது. முறைமை என்பது நியதி (Law). அடிமைகொண்ட முறைமை என்பது மலமறைப்பினாலே தங்கள் வேட்கை,அறிவு,செயல்கள் விளங்காதிருக்கிற மக்களுக்கு அவற்றை உலகவாழ்வின் பயனாகப் படிமுறையில் விளங்கும்படிசெய்து அவர்கள், தன்னை ஆண்டவனென்று அறிந்தபொழுது பேரின்பமடையும்படி இறைவன அவர்களைச்சிறப்பாக ஆண்டருளும் முறைமையாகும். இறைவனுக்கும், உயிர்களுக்கும் என்றும் இயல்பாகவுளதாகிய ஆண்டானடிமைத்தொடர்பு சைவசமயத்தில் ஓர் சிறந்த உண்மையாகும். அதனைப்பற்றி அடிகள் இந்நூலில் பலவிடங்களில் கூறுகின்றார்.

---

[நேரிசை வெண்பா]

திருச்சிற்றம்பலம்.

---

359. ஏதமிலா இன்சொல் மரகதமே யேழ்பொழிற்கும்
நாதனமை யாளுடையா னூரையாய்—காதலவர்க்
கன்பாண்டு மீளா அருள்புரிவா னூடென்றுந்
தென்பாண்டி நாடே தெளி. சகூ.

[ப-ரை] ஏதமிலா இன்சொல் — கேட்பவர்களுக்கு யாதொரு குற்றமுமில்லாத இனியசொற்களைச் சொல்லுகின்ற; மரகதமே — மரகதமணிபோன்ற பச்சை நிறமான கிளியே; நமையாளுடையான் — அடியார்களாகிய நம்மை அடிமையாக ஆண்டு அருள்செய்கின்றவனாகிய; ஏழ்பொழிற்கும் நாதன் — ஏழுலகங்களுக்கும் முழுமுதற்றலைவனாயிருக்கிற நமது ஆண்டவன்; நாடுரையாய்—(வீற்றிருந்து அரசுபுரியும்) நாட்டின்பெயரைக் கூறுவாயாக, (இது ஓர் பெண்,கிளியைப்பார்த்துக் கேட்டகேள்வி); காதலவர்க்கு—(பக்குவப்

பட்டு இறைவனிடத்தில் மெய்யன்புசெய்யும்) அடியார்களை; அன்பு ஆண்டு — தான் அவர்கள்மேல் வைத்தபேரன்பினாலே (தீக்கை செய்து) ஆண்டு; மீளாஅருள் புரிவான் — அவர்கள் திரும்பவும் உலகத்திலேவந்து பிறவாமல் அவர்களுக்குப்பேரின்பத்தை விரும்பி அளிக்கின்றவனாகிய சிவபெருமான்; நாடு — (ஆட்சிசெய்து வீற்றிருக்கும்) நாடானது; என்றும் தென்பாண்டிநாடே தெளி — எப்பொழுதும் தமிழ்நாட்டின் தெற்கிலுள்ள பாண்டிநாடே என்று தெளிவாயறிவாயாக. (இது கிளி, பெண்ணைப்பார்த்துக் கூறும் விடை).

[வி-ரை] மரகதம் — இது ஒன்பது மணிகளிலொன்று பச்சை நிறமாயுள்ள அம்மணியைக்குறிகுஞ் சொல், இங்கே உவமையாகுபெயராய்ப் பச்சை நிறமுள்ள கிளியைக்குறிகிறது. நமையாளுடையான் — அடிகள் தம்மையொத்த சீவன்முத்த அடியார்களையுஞ்சேர்த்து நமையாளுடையானென்று பன்மையிற் கூறுகின்றார். அடிகள் நமையாளுடையானென்று இங்கேகூறியது தம்மையும் தம்மைப்போன்றவர்களையும் இறைவன் சிறப்பியல்பு நிலையில் அடிமைகொள்ளும் தன்மையைக்குறிக்கிறது. ஏழ்பொழிற்கும் நாதன் — இதனால் இறைவனாகிய சிவபெருமான் நிலவுலகம் முதல் ஏழு உலகங்களையும் ஆளும் முழுமுதற்றன்மையுடைய ஒருவன் என்பது கூறப்பட்டது. காதலவர்க்கு — இரண்டாம் வேற்றுமை உருபுமயக்கம். மீளா அருள்புரிவான் — இதனால் சாயுச்சியப் பேரின்ப நிலையடைந்தவர்கள் அந்நிலையினின்று மீளார்கள் என்ற சித்தாந்த உண்மை கூறப்பட்டது. தென்பாண்டிநாடேதெளி — (ஏ) தேற்றப் பொருள்குறித்து நின்றது. தெளிதல் என்பது ஐயம் திரிபுகளின்றி உறுதியாய் அறிதல். சீகண்ட பரமசிவனுடைய தேவியாராகிய உமாதேவியார் முன் இமயமலையறையன் மகளாய் அவதரித்து இறைவனை மணந்ததுபோல், பின் பாண்டிநாட்டரசனாகிய மலையத்துவச பாண்டியன் மகளாக யாககுண்டத்தில் பிறந்து வளர்ந்த தடாதகைப்பிராட்டியார் இறைவனைத் திருமணஞ்செய்து அரசியல்செலுத்தும் பெரும்பேற்றை பாண்டிநாடடைந்ததால்

உலகில் ஏனையநாடுகளிலொன்றுக்குமில்லாத பெருஞ்சிறப்பை அப் பாண்டிநாடு உடையது. அதனால் ஏழுலகங்களையும் ஆட்சிசெய்யும் இறைவனது தனிஅரசியலுக்குப்பாண்டிநாடு தலைமைநாடாக இங்கே கூறப்பட்டது. போற்றித்திருவகவலில் தென்னாடுடைய சிவனே போற்றி என்பதற்கு எழுதப்பட்ட விளக்கவுரையைப்பார்க்க. இத னாலே இறைவன், உயிர்களை ஆட்சிசெய்தற்குத்துணையாக விருக்கும் நாடானது பத்து உறுப்புக்களிலொன்றாகக் கூறப்பட்டது.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# உ௦. திருப்பள்ளியெழுச்சி.

---

பள்ளி என்பது துயில். எழுச்சி என்பது எழுதல். பள்ளி யெழுச்சி எனபது துயில் நீங்கி எழுதலாகும். ஒவ்வொரு நாளிலும் பகலானது உலகம் விரிந்திருக்கிற காலத்தையும், இரவானது உல கம் ஒடுங்கியிருக்கிற காலத்தையும் குறிக்கின்றன. இரவு 25 நாழி கைக்குமேல் 30 நாழிகை வரையுள்ள விடியற்காலம், படைப்புக் காலந்தொடங்குகிற அவதரத்தைக் குறிக்கிறது. அழிப்புக் காலத் தில் உலகத்தோடொடுங்கிய உயிர்களுக்குப் பக்குவம் வருவித்தற் பொருட்டு இறைவன் இலய நிலையிலிருந்து தூல ஐந்தொழிற்கேது வாகிய சூக்கும ஐந்தொழில் செய்கிறான். அதனாலே உயிர்கள், முன் பல பிறவிகளிலுள்ள அனுபவங்களின் பயனாக திரோத மலத் தினின்று நீங்கும் பக்குவமடைகின்றன. மீளவும் இறைவன் தூல ஐந்தொழில் செய்தற்கு உன்முகமாய் நின்று முதற்கண் படைப்புத் தொழிலைத் தொடங்கும் அவதரம் திருப்பள்ளி யெழுச்சியாகும்.

---

## திரோதான சுத்தி

---

திரோதானசுத்தி என்பது, திரோதானம், சுத்தி என்னும் இரண்டு சொற்களாலாகியது. திரோதானம், திரோபவம், மறைத் தல் என்பன ஒருபொருட் சொற்கள். திரோதானம் என்பது இறை

வனது ஐந்தொழில்களிலொன்றாகிய மறைப்புத் தொழில். அது உயிர்க்கு இருவினையொப்புப் பருவமடையும்வரை, உலகில் நல்வினை, தீவினைகளால் அடையத்தக்க அனுபவமடையும் பொருட்டு இறைவன், உயிர்க்கு உண்மையை மறைத்து நிற்கும் அருட்செயலாகும். இந்த மறைப்புத்தொழிலில் இறைவன் படிமுறையில் மலத்தை நீக்கி உயிரைத் தூய்மையடையும்படிசெய்வது திரோதான சத்தியாகும்.

---

[எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

368. போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்
டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழினகை கொண்டுநின் திருவடி தொழுகோஞ்
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. ௧௦.

[ப-ரை] என்வாழ்முதல் ஆகியபொருளே — (என்னை இயக்கியும், எனது அறிவு, வேட்கை, செயல்களை நிகழ்வித்தும்), எனது வாழ்வை நடைபெறும்படி செய்கின்ற முழுமுதற்பொருளே; போற்றி — உன்னை வணங்குகிறேன்; புலர்ந்தது — பொழுது விடிந்தது; பூ இணை கழற்கு — உனது அழகிய இரண்டு திருவடிகளையும்; துணைமலர் கொண்டு—(அருச்சித்தற்குத்) துணையாயுதவும் பூக்களினாலே; ஏத்தி — அருச்சித்து; நின் திருமுகத்து — உன்னுடைய அழகிய முகத்தில்; எமக்கு மலரும் — அடியார்களாகிய எங்கள் பேரில் விளங்கும்; அருள் எழில் நகைகொண்டு — அருளாகிய நினது அழகிய புன்முறுவலை நாங்கள் பெற்று; நின்திருவடி தொழு

வோம் — நாங்கள் அருச்சித்த அந்த இரண்டு திருவடிகளையும் தொழுவோம்; கமலங்கள் மலரும் — தாமரை பூத்திருக்கிற; சேற்று தண்வயல்சூழ்—சேற்றினையுடைய வயல்கள் சூழ்ந்திருக்கிற; திருப் பெருந்துறையுறை சிவபெருமானே—திருப்பெருந்துறையில் வீற் றிருக்கின்ற சிவபெருமானே; உயர்ஏற்று கொடிஉடையாய்—உயர்த் தப்பட்ட ஏற்றுக்கொடியை உடையவனே; எனைஉடையாய் — என்னை அடிமையாக ஆண்டருளிய ஆண்டவனே; எம்பெருமான் —எங்கள் தலைவனே; பள்ளி எழுந்து அருளாய் — துயில் நீங்கி எழுந்து எங்களுடைய திரோதானமலத்தை நீக்கித் தூய்மைசெய்து பேரின்பம் அருள்செய்வாயாக.

[வி-ரை] என் வாழ்முதல்ஆகிய பொருளே — மக்களுடைய எவ்வித வாழ்க்கையும் இறைவனையின்றி நடைபெறாதாதலின் என் வாழ்முதலாகிய பொருளே என்றார். போற்றி — போற்றுதல்— வணக்கம். போற்று என்ற பகுதிமேல் இகர விகுதி பெற்றுவந்த தொழிற்பெயர். அது இங்கே கண்டவுடன் இரண்டு கைகளாலும் வணங்கும் வணக்கத்தைக் குறிக்கிறது. மலர்களால் அருச்சித்து வணங்குதல் பின் நிகழ்கின்றது. பூ இணைகழற்கு — பூ—அழகு. கழல் என்பது வீரகண்டயம். இஙகே ஆகுபெயராய்த் திருவடியைக் குறிக்கிறது. கழலை — உருபுமயக்கம். துணைமலர்கொண்டு — மல ரானது அருச்சித்தலுக்கு துணையாயிருத்தலின் துணைமலர் என்றார். நின்திருமுகத்து எமக்கு மலரும் — ஒருவரைக் கண்டபொழுது உள்ளத்தில் உள்ள அன்பால் உவகை உண்டாதலை முகம் காட்டுத லால் நின் திருமுகத்து எமக்கு மலரும் என்றார். அருள் எழில்நகை கொண்டு — எழில்நகை அருளுக்கு அடையாளமாயிருத்தலால் அருள் எழில் நகை என்றார். இகழ்ச்சி முதலிய பிறவகை நகைகளி லிருந்து பிரித்தற்கு எழில் நகை என்றார். நின்திருவடி தொழு கோம் — அடிகள் முதற்கண் சிவபெருமானை என்வாழ் முதலாகிய பொருளே என்று தாம் ஒருவரை மாத்திரம் குறிப்பிட்டு ஒருமையிற் கூறி, பின் எமக்கு எனறும், தொழுகோம் என்றும் தம்மை அடியார்

களோடு சேர்த்துப் பன்மையிற் கூறியது என்னையெனின், சிவபெருமான் உயிருக்கு வாழ்முதலாயிருப்பதை ஒவ்வோர் உயிரும் அகவுணர்ச்சியாகத் தனியே உள்ளத்தில் உணரவேண்டுதல் பற்றியும், வெளிச் செயல்களாயிருக்கிற மலர்களைக்கொண்டு அருச்சித்தலும், கையினால் தொழுதலும், பலர் சேர்ந்து செய்தல் கூடுமாதல் பற்றியும் என்க. தொழுகோம் என்பது தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று. உயர் ஏற்று கொடி உடையாய் — சிவபெருமான் ஏற்றுக்கொடியை உடையனாதல் உயிர்களை யெல்லாம் ஆட்சிசெய்து காத்தருளுதலைக் குறிக்கிறது. பள்ளி எழுந்து அருளாய் — பள்ளி எழுதல்—துயில் நீங்கி எழுதல். ஏ—அசை. சிவபெருமானுக்குத் துயிலுதலும், துயில் நீங்குதலும் இல்லையாதலின் உயிர்கள் துயிலும் பொழுதும், துயில் நீங்கும்பொழுதும் அவைகளோடு அவனும் உளனாதலின் அவனுக்கு அவை உபசாரமாகக் கூறப்பட்டன.

---

377\. புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின் றேமவ மேயிந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவு மலரவ னாசைப்
படவுநின் னலர்ந்தமெய்க் கருணையு நீயும்
அவனியிற் புகுந்தெமை யாட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. ருக.

[ப-ரை] திருப்பெருந்துறை உறைவாய் — திருப்பெருந்துறையில் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கின்றவனே; இந்தப்பூமி — இந்த நில உலகத்திலே (பிறந்து வாழச்செய்தல்); சிவன் உய்யக்கொள்கின்ற ஆறு என்று நோக்கி — சிவபெருமான் உயிர்களை ஆணவமலமறைப்பினின்று நீக்கிப் பிழைக்கச்செய்யும் வழி என்று எண்ணி; புவனியில் போய்ப்பிறவாமையின்—நிலவுல

*கத்திலே வந்து பிறவாமல்; நாம் நாள் அவமே போக்குகின்றோம்— நாம் நமது வாழ்நாளைப் பயனின்றிக்கழிக்கின்றோம் என்று; திருமால் ஆம் அவன் விருப்பு எய்தவும் — திருமாலாகிய அந்தப்பெரியோன் நிலவுலகத்திலே பிறக்க அவாக்கொள்ளவும்; மலரவன் ஆசைப் படவும் — வெண்தாமரை மலரின்மேல் வீற்றிருக்கின்ற நான் முகன் நிலவுலகத்திலே பிறகக அவாகக்கொள்ளவும்; நின் அலர்ந்த மெய்க்கருணையும் நீயும் — முழுதும் விளங்கிய மெய்யான அருட் சத்தியோடு நீ; அவனியில் புகுந்து எமை ஆட்கொள்ள வல்லாய்— இந்த உலகத்திற்கு எழுந்தருளிவந்து எங்களை அடிமையாக ஆண்டு பேரின்பமளிகக வல்லவனாயிருக்கிறாய்; ஆர் அமுதே—நிறைவான இன்பப்பொருளே; பள்ளி எழுந்து அருளாய் — துயில் நீங்கி எழுந்து எங்களுடைய திரோதான மலத்தை நீக்கித் தூய்மைசெய்து பேரின்பம் அருளிச்செய்வாயாக.*

[வி-ரை] *இந்தப்பூமி — இந்த நிலவுலகம்; அதாவது இந்த நிலவுலகத்திலே பிறந்து வாழச்செய்தல். சிவன் உய்யக்கொள் கின்ற ஆறு என்று நோக்கி — உயிர்கள் இந்த நிலவுலகத்தில் தங் கள் அறிவு,வேட்கை,செயல்களை நிகழ்த்தி வாழ்ந்தாலன்றித் தங்களை அநாதியேபற்றியுள்ள ஆணவமலவலிதேய்ந்து மலபரிபாகம் அடை ந்து வீட்டின்பம் அடையமுடியாது என்பார் சிவனுய்யக்கொள்கின்ற ஆறு என்று நோக்கி என்றார். இக்கருத்தைத் திருமூலர் திருமந் திரம்* 2163-*வது பாட்டில் "ஆசான்முன்னே துயில்மாணவகரைத் — தேசாய தண்டால் எழுப்புஞ்செயல்போல் — நேசாயவீசனு நீடாணவத்தரை—ஏசாதமாயாடன்றலே எழுப்புமே" என்று கூறி யருளினார். இக்கருத்தை நாம் திருநாவுக்கரசு அடிகள் பாடியருளிய திருக்கழிப்பாலைத் திருத்தாண்டகப் பாட்டுக்களிலும் காணலாம்* (6 - 12 - 1—10). *புவனியில்போய் பிறவாமையின் — பிறவாமை யின் என்றதில் இன் — அசை. மை — எதிர்மறையிடத்துவரும் வினையெச்சவிகுதி. பிறவாமை — பிறவாமல். நாம் நாள் அவமே போக்குகின்றோம்—நிலவுலகத்திலே பிறந்து வாழாதிருத்தல் வீட்டு*

இன்பம் எய்துதற்குத் தடையாயிருத்தலின் நாம் நாள் அவமே போக்குகின்றோம் என்றார். திருமால் ஆம் அவன் விருப்பு எய்தவும் மலரவன் ஆசைப்படவும்—அவன் – அறிசுட்டுப்பெயர். திருமால் விருப்பெய்தவும், மலரவன் ஆசைப்படவும் அவனியில் புகுந்து எமை ஆட்கொள்ளவல்லாய் என்று இயைபு செய்துமுடிக்க. விருப்பு எய்தலும், ஆசைப்படுதலும் ஒருபொருளன. நாமும் பூவுலகத்தில் பிறந்து வாழ்ந்தோம் இல்லேயே, வாழ்ந்தோமானால் இப்பொழுது சிவபெருமானைக்காண முடியாதிருக்கிற நம்மை அவன் வந்து ஆட்கொண்டிருப்பான் என்று திருமாலும் நான்முகனும் விருப்பெய்தல் கூறப்பட்டது. நின் அலர்ந்த மெய்க்கருணையும் நீயும் — அலர்தல் – குவிந்திருக்கிற பருவத்திலுள்ள பூவானது விரிந்து மணம் வீசுதல்; அதாவது திரோதமலத்திலடங்கி வெளிப்படாதிருக்கிற அருட்சத்தி முற்றிலும் வெளிப்பட்டு அச்சத்தி முழு ஆற்றலோடு விளங்குதல். கருணை — இரக்கம். இங்கே அது கருணையையுடைய அருட்சத்தியைக்குறிக்கிறது. அலர்ந்த மெய்க்கருணை — முழுவதும் விளங்கின அருட்சத்தி; அதாவது திரோதமலத்தடை சிறிதும் இல்லாமல் உயிர்களுக்கு அருள்செய்தலாகிய முழு அருட்சத்தி. அருட்சத்தியில், உயிர்களின் பக்குவக் குறைவுநோக்கி எவ்வளவு திரோதமலம் கூடியிருக்குமோ அவ்வளவும்பொய்(அசத்து),ஆதலின் அத்திரோதமலம் முழுதும் நீங்கியவழி மெய் (சத்து) ஆகிய அருட்சத்தி வெளிப்படுதலால் நின் அலர்ந்த மெய்க்கருணையும் நீயும் என்றார். உயிர் மெய்யுணர்வு அடைந்தபொழுது திரோதானசத்தி முழு அருட்சத்தியாய் விளங்கி அதற்கு வீட்டின்பம் அருள்செய்கிறது. அவனியில் புகுந்து எமைஆட்கொள்ளவல்லாய்—இதனால் அடிகள் தமக்குச் சிவபெருமான் திருப்பெருந்துறைக்குக் குருவடிவில் வந்து ஆட்கொண்டு அருள்செய்ததைக் கூறுகின்றார். திருமால், நான்முகன் முதலாகிய தேவர்களும் ஆசைப்படும்படியாக சிவபெருமான் பூவுலகத்துக்கு வந்து தம்மை ஆட்கொண்ட சிறப்பை அடிகள் இங்கே கூறினார். வல்லாய் என்றதனாலே சிவபெருமானுடைய பேராற்றல் கூறப்பட்டது. ஆர்

அமுதே — அடிமையாக ஆட்கொள்ளப்படுதலின் பயனாக அடிகள் வீட்டின்பம் பெறுதலால் ஆரமுதே என்று விளித்தார். ஆர்அமுது — நிறைந்த அமுது; அதாவது நுகருந்தோறும் மேலும்மேலும் வளரும் பேரினபத்தைக் குறிக்கிறது. அலர்ந்த மெய்க்கருணையும் நீயும் என்றதனாலும் ஆரமுதே என்றதனாலும் இந்தப்பாட்டில் சிவபோகம் கூறப்பட்டதென்று நாம் அறியலாம்.

---

தில்லையில் அருளிய

# உக. கோயின் மூத்த திருப்பதிகம்.

---

கோயிற்றிருப்பதிகத்திற்குக்கூறப்படும் விளக்கவுரை இதற்கும் பொருந்தும். ஆனால் இப்பதிகம் மூத்த என்னும் அடைமொழியை கோயில் என்ற சொல்லுக்கும், திருப்பதிகம் என்ற சொற்றொடர்க்கும் இடையில் வைத்தமைத்தபெயரால் கூறப்படுகின்றது. மூத்த என்பது மேலான அல்லது சிறப்பான என்று பொருள்படும். அடிகள் கோயிற்றிருப்பதிகத்தில் தமக்கு இறைவன் திருப்பெருந்துறைக்கு அருட்குரவனாய்வந்து ஆண்டருளிய அன்பைக்கூறி இப்பதிகத்தில் அவர் பொன்னம்பலக்கூத்தனை விளித்துத் தம்மைத் திருப்பெருந்துறையிலன்பினாலாண்டருளியபின் அடியார் கூட்டத்தில் உடனிருக்கும்படி தமக்கு அருள்செய்தல்வேண்டுமென்று முறையீடு செய்தலால் இப்பதிகம் பின்னையபதிகத்தைவிடச் சிறந்தாயுள்ள கோயின் மூத்ததிருப்பதிகம் என்று கூறப்பட்டது. அன்பானது முதற்கண் உலகவாழ்வில் கணவனுக்கும், மனையாளுக்கும் இடையே நிகழ்ந்து பின், உடற்றொடர்புடைய சுற்றத்தாரிடத்திலும் உடற்றொடர்பில்லாத மக்களிடத்திலும் பிறவுயிர்களிடத்திலும் முறையே வழங்கிப் பயிலப்பட்டுப் பெருகிமுதிர்ந்து உலகவாழ்வைக்கடந்த சிறப்பியல்பு நிலையிலுள்ள இறைவனிடத்திலும் செய்யப்படும் சிறந்த மெய்யன்பாகின்றது. இந்த அன்பைப்பற்றி

அடிகள் "மெய்யன்பை உடையாய்ப்பெற நான்வேண்டுமே" (32-3) என்றும், "தொண்டனேற்கும் உண்டாங்கொல்வேண்டாது ஒன்றும் வேண்டாது மிக்கவன்பேமேவுதலே" (32 - 4) என்றும் கூறியிருத்தல் காண்க. இந்தமெய்யன்பே இறைவன் பேரின்பமளித்தற்கு ஏதுவாயிருக்கும் அருளுக்குக்காரணமாயிருத்தலால் அன்பைப்பார்க்கிலும் அருள்சிறந்ததாகிறது. இக்கருத்துப்பற்றித் திருவள்ளுவரும் "அருள் என்னும் அன்பீன்குழவி" என்றார் (திருக்குறள் 757). இந்தப்பதிகம் இரண்டாவது பாட்டில் அடிகள், இறைவன் திருப்பெருந்துறைக்குவந்து தம்மை ஆண்டருளியபின், தாம் அடியார் கூட்டத்திலிருக்கும் அருளைப்புரிதல் வேண்டுமென்று கூறுதலை நோக்குக.

---

## அநாதியாகிய சற்காரியம்.

---

அநாதியாகிய சற்காரியம் என்ற சொற்றொடர் அநாதி, சத், காரியம் என்னும் மூன்று வடமொழிச்சொற்களாலும் அநாதி என்ற சொல்லுக்குப்பின், ஆகிய என்ற தமிழ்ச்சொல்லும் சேர்ந்து ஆகியது. அநாதி என்பது காலவெல்லைக்குட்பட்ட படைப்பு முதலிய முத்தொழில்களுக்கும் முந்திய காலவெல்லைக்குட்படாதநிலை. சத்தென்பது, என்றுமுள்ளகாரண நிலையைக்குறிக்கிறது. வடமொழியில் சத்காரியம் என்பது தமிழில் சற்காரியம் என்று மருவிவந்தது. சத்காரியம் என்ற சொற்றொடர் காரண நிலையில் என்றுமுளள உலகம் இறைவனால் காரியப்பட்டுத்தோன்றி இடையில் சிலகாலம் நிலைத்து முடிவில் அழிந்து ஒடுங்கும் காரிய உலகம். இங்ஙனம் காரிய உலகம் பண்டைக்காலந்தொட்டு உயிர்கள் பொருட்டு இறைவனது சங்கற்பத்தினால்தோன்றி நின்று, அழிந்து, ஒடுங்குதலால் அது அநாதியாகிய சற்காரியம் என்று கூறப்பட்டது. இந்தப்பதிகப் பாட்டுக்கள் கூறும், அடியார் கூட்டத்திலிருப்பதாகிய அருள்பெறுதலுக்கு மறைப்புத்தொழிலின் கீழ்நிகழும் படைத்தல், காத்தல்,

## கோயின் மூத்த திருப்பதிகம்.

*அழித்தல் ஆகிய முத்தொழில்களும் நிகழுதலுக்குக் காரிய உலகம் வேண்டப்படுதலின், இப்பதிகம் அநாதியாகிய சற்காரியம் கூறுவ தாயிற்று.*

---

[அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்]
*திருச்சிற்றம்பலம்.*

---

378. உடையா ளுன்ற னடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி, அடியே னடுவு ளிருவீரு மிருப்ப தானா லடியேனுன், அடியார் நடுவு ளிருக்குமரு ளைப்புரி யாய்பொன்னம் பலத்தெம், முடியா முதலே யென்கருத்து முடியும் வண்ண முன்னின்றே. ௫௨.

[ப-ரை] பொன்னம்பலத்து — திருத்தில்லையிலுள்ள பொன்னம்பலத்தில் உயிர்களுய்யும் பொருட்டு நடனஞ்செய்கின்ற; எம் முடியாமுதலே — அடியார்களாகிய நாங்களறிகிறபடி பிறப்பிறப்பின்றி என்றுமுளதாகிய தனிமுதற்பொருளே; உடையாள் — எங்களை அடிமையாகவுடைய அருட்சத்தியானவள்; உன்றன் நடுவிருக்கும்—ஐந்தொழில் செய்தற்குச் சிவமாகிய உன்னிடத்தில் நின்னின் வேறென்றுதபடி அத்துவிதமாய்க்கலந்து வியாப்பியமாயிருக்கின்றாள்; உடையாள் நடுவுள் — எங்களை அடிமையாகவுடைய அருட்சக்திக்கு உள்ளீடாய்; நீ இருத்தி — சிவமாகிய நீ அத்துவிதமாய் அவளுடன் கலந்து வியாபகமாயிருக்கின்றாய்; அடியேன் உள்நடு இருவீரும் இருப்பதானால் — உங்களிருவருடைய அடிமையாகிய என்னுடைய உள்ளத்தின் நடுவிலே நீங்களிருவரும் அத்துவிதமாய்க்கலந்து எனக்கு உணர்த்திக்கொண்டிருந்ததால் நான் நின்னாலாட்கொள்ளப்பட்டிருப்பதாயின்; என்முன் நின்று — எனக்கு முன்னாக நின்று; கருத்துமுடியும் வண்ணம் — நான் எனதுள்ளத்தில் நினைத்திருக்கிற கருத்து முற்றுப்பெறும்படி; அடியார் நடுவுள் — அடியார் கூட்டத்தினிடையில் (நான் கலந்திருந்து மகி

மும்படி); இருக்கும் அருளைப்புரியாய்—அவர்களோடத்துவிதமாய்க் கலந்திருக்கும்படியாயுள்ள அருட்செயலை நீ எனக்கு விரும்பிச் செய்வாயாக.

[வி-ரை] பொன்னம்பலத்து எம்முடியா முதலே—உயிர்கள் தன்னையடைந்து வீட்டின்பம் பெறும்வரைக்கும் அவைகள் மலத் தொடக்கிலிருந்து நீங்கும்படி இறைவன் என்றும் மாறாத நிலைமை யுடையவனாய்ப் பொன்னம்பலத்தில் நடனஞ்செய்கின்றானாதலின் அவனைப் பொன்னமபலத் தெம்முடியாமுதலே என்று விளிததார். உடையாள் உன்றன்நடு இருககும் உடையாள்நடுவுள் நீ இருததி— உயிர்கள் பொருட்டுப் படைப்பு முதலிய ஐந்தொழிலைத் தன்னிடத் தில் வியாப்பியமாயிருக்கின்ற அருட்சத்தியைத் துணைககாரணமாகக் கொண்டு சிவம் செய்தலால் உடையாளுன்றன் நடுவிருக்குமென் றார்; உலகிலுள்ள எந்தப்பொருளினுடைய சத்தியும் அதன் நடுவில் அடங்கியிருப்பதாக நாம் காண்பதுபோலச சிவனது ஆற்றலாகிய அருட்சத்தியும், அவனடுவிலிருப்பதாக இங்கே கூறப்படுகின்றது. அருட்சத்தியானவள் உயிர்களின்பொருட்டு ஐந்தொழில்செய்தற்குச் சிவம் உள்ளீடாய் அவளோடியைந்து வியாபகமாய்நிற்றலின் உடை யாள் நடுவுள் நீ இருத்தி என்றார். "எத்திறம்நின்றான் ஈசன் அத் திறம் அவளும் நிற்பள்" என்று சிவஞானசித்தியார் (சூ.2–74வது பாட்டுக) கூறுதல் காண்க. சிவமும் அருட்சத்தியும் ஒரு பொருள் என்றாவது, இரண்டு பொருள் என்றாவது கூறவொண்ணாதபடி அவ்விரண்டிற்கும் பொதுவாய், ஒருவரையொருவர் தீயும் அதன் சூடும்போலப் பிரியாதுநின்று சேர்ந்து உயிர்களின்மேல் பேரிரக்கங் கொண்டு ஐந்தொழில் செய்துவருதலால் ஒருவர் நடுவில் மற்றொரு வர் இருப்பதாக அடிகள் கூறினார். மக்களிருவர் ஒருவரோடொரு வர் நடுவு நிலைமையில் நின்றொழுகினால் மட்டுமே அவர்களிருவரும் ஒருவரெனும்படிக் கூறும்படியான நட்பையுடையவர்களாகிறாாகள என்பது உலகவனுபவம். "சத்தியுஞ் சிவமு மாய தன்மை இவ்வு லகமெல்லாம் ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உணர்குண குணியு மாகி வைத்தனன் அவளால் வந்த ஆக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்"

என்று இக்கருத்தை சிவஞானசித்தியார் 1-வது சூத்திரம் 69-வது பாட்டுக் கூறுகின்றது அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் — மக்களுடைய உலகவாழ்வுக்குரிய பொதுவியல்பு நிலையில் அவர்களுடைய உள்ளத்தில் சத்தியும், சிவமும் நிலையாயிருந்துகொண்டு அவர்களை எப்பொழுதும் இயக்கியும், அறிவித்தும் வருதலினாலேதான் அவர்கள் மலத்தொடக்கினின்று நீங்கி அருளொளி விளங்கப்பெற்று இறைவனுடைய சிறப்பியல்பு நிலையையடைந்து பேரின்பமடைகிறார்களென்ற சித்தாந்தவுண்மை இதனாலே கூறப்பட்டது. இருப்பதானாலென்பது இருத்தல் காரணமாக நான் நின்னலாட்கொள்ளப்பட்டிருப்பது உண்மையாயின் என்று சொல்லாற்றலால் பொருள்படும்.

சத்தன் அருள்தரிற் சத்தி அருளுண்டாஞ்
சத்தி அருள்தரிற் சத்தன் அருளுண்டாஞ்
சத்தி சிவமாம் இரண்டுந்தன் னுள்வைக்கச்
சத்தியம் எண்சித்தித் தன்மையு மாமே.

என்னும் திருமந்திரம் 333-வது பாட்டில் திருமூலர் இவ்வுண்மையைக் கூறியருளினர். என்கருத்து முடியும்வண்ணம் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய் — அடிகள் சிவபெருமானோடு திருப்பெருந்துறைக்கு வந்த சிவகணங்களாகிய அடியார்களுடன் இருத்தல்வேண்டுமென்று தாம் திருவாசகத்திலுள்ள பலபாட்டுக்களில் விண்ணப்பித்திருக்கின்ற கருத்தை இந்த இடத்திலுங் குறிப்பிடுகின்றார். அங்ஙனம் விண்ணப்பித்தற்கு முதன்மையான காரணம் அடிகள் முன் கைலாயத்தில் சிவகணங்களிலொருவராயிருந்து ஓர் குற்றத்திற்காக உலகிலேவந்து மானுடனாய்ப்பிறந்ததைத் தாம் இறைவனலாட்கொள்ளப்பெற்றபொழுது அவ்வடியார் கூட்டத்தில் மறுபடியும் சேர்ந்திருத்தல் வேண்டுமென்னும் பெருவிருப்பமாகும். அடிகள் தாமடியார் கூட்டத்திலொருவராயிருந்தால் சீவன் முத்தராய் உலகிலிருக்குங்காலத்தில் தம்மை ஒரு சிறிதும் உலக

வாதனை தாக்காது என்பது மற்றொருகாரணம். அடிகள் இக்கார ணங்களைத் தமது கருத்தில் வைத்துக்கொண்டு அடியார் நடுவுள் ளிருக்கும் அருளைப்புரியாய் என்று இறைவனுக்கு முறையீடு செய் கின்றார். இந்தப்பாட்டில் அடிகள், அருட்சத்தி இறைவனோ டியைந்து நின்று காரியவுலகில் ஐந்தொழில் செய்தலையும், அதனால் தாம் இறைவனாலாட்கொள்ளப்பெற்றதையும், கூறுதலால் இது அனுதியாகிய சற்காரியம கூறுவதாயிற்று.

---

தில்லையில் அருளிய

# உஉ. கோயிற் றிருப்பதிகம்.

கோயிற் றிருப்பதிகம் என்ற சொற்றொடர் கோயில், திரு, பதிகம் என்ற மூன்று சொற்களாலாகியது. கோயில் என்பது மக் கள் தன்னை வழிபட்டுய்யும் பொருட்டு தாவரவடிவில், தலைவனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் வீடாகும். பரதகண்டத்தில் சிதம்பரம் தவிர ஏனைய பலவிடங்களிலுள்ள சிவன்கோயில்களுக்கு அத்தலத்தின் பெயர் கோயிலுக்கு முன்னாக வைத்துக் கூறப்படு கின்றது. சிவன் கோயில்களில் ஒவ்வொரு நாளும் நடக்கிற நாள்வழி பாட்டுக் கிரியைகள் இறைவன், உயிர்களுய்யும் பொருட்டுத் தனது பேரருளினாலே செய்கிற படைத்தல், காத்தல், அழித்தல், மறைத் தல், அருளல் என்னும் ஐந்தொழிலைக் குறிக்கிறது. இரவு வழிபாடு முடிவாகும் நள்ளிரவு (அர்த்தசாமம்) வழிபாட்டுக்கிரியை ஆன்மாக் களிளைப்பாறும் பொருட்டு இறைவனது சங்காரம் அல்லது ஒடுக்கத் தைக்குறிக்கிறது. இந்த நள்ளிரவுக் கிரியையில் இறைவனுடைய அருட்சத்தியைக் குறிக்கிற திருவடிகள் அம்மன் கோயிலிலுள்ள திருப்பள்ளியறையில் இறைவனுடன் சேர்த்து வைககப்படுகிறது. இங்ஙனம் வைககப்படுதல் சத்தி, சிவத்திலொடுங்குதலைக் குறிக் கிறது. இந்த அர்த்தசாமப் பூசையில் சிதம்பரம் தவிர ஏனையதலக்

## கோயிற் றிருப்பதிகம்.

கோயில்களில் சத்தியின் கலைகளெல்லாம் சிவத்திலொடுங்குகின்றன. அங்ஙனம் எல்லாக் கோயில்களிலுமொடுங்குகிற சத்திகலைகள் சிதம்பரம் கோயிலில் நடக்கிற நள்ளிரவுப்பூசையில் வந்து ஒடுங்குகின்றன. ஆதலால் சிதம்பரத்திலுள்ள கூத்தப்பெருமான் கோயிலானது கோயில் என்ற பெயரானே மாத்திரம் வழங்கப்படுகின்றது. கோயில் என்ற தனிச்சொல் சிதம்பரம் கோயில் என்று பொருள்படும். அங்ஙனம் மூவர் தேவாரப் பதிகங்களிலும் கோயில் என்ற சொல் வழங்கப்பட்டிருக்கின்றது. பதிகம் என்றசொல் யாதாமொரு பொருளைப்பற்றிப் பெரும்பான்மையும் பத்துப்பாட்டுக்களால் முற்றுப்பெறும் பாட்டுத்தொகுதி. திரு என்பது அருளைக் குறிக்கும் அடைமொழி. ஒலிநயத்தின்பொருட்டு மூன்று சொற்கள் சேர்ந்து ஆகிய திருக்கோயிற் பதிகம் என்பது கோயிற் றிருப்பதிகம் என்று கூறப்பட்டது. கடவுள்மாமுனிவர் அருளிய திருவாதவூரடிகள் புராணம் 406-வது பாட்டில், திருவம்பலச் சருக்கத்தில் கோயிற் றிருப்பதிகமும், கோயின்மூத்த திருப்பதிகமும், திருத்தில்லையில் வைத்துப் பாடப்பட்டதாகக் கூறப்பட்டிருக்கின்றன. இப்பதிகம் 2-வது பாட்டுத்தவிர ஏனைய பாட்டுக்கள் ஒவ்வொன்றிலும் திருப்பெருந்துறையுறை சிவனே என்றும், இரண்டாவது பாட்டில் தென்பெருந்துறையுறை சிவபெருமானே என்றும் அடிகள் இறைவனை விளித்துக் கூறுதலினால் இறைவன் தாம் அவனிடத்தில் செய்த மெய்யன்பினால், தானுமன்பு செய்து திருப்பெருந்துறைக்கு எளிவந்து தீக்கைசெய்து தம்மை ஆண்டருளியதைக் கூறுகின்றாரென்று நாம் கொள்ளல்வேண்டும்.

---

## அனுபோக விலக்கணம்.

---

அனுபோக விலக்கணம் என்ற சொற்றொடர் அனுபோகம், இலக்கணம் என்ற இரண்டு சொற்களாலாகியது. இரண்டு சொற்களும் புணரும்பொழுது நிலைமொழியீற்றிலுள்ள மகரவொற்றுக் கெட்டு அனுபோக இலக்கணம் என்றாகியது. அனுபோகம் என்

பது ஒருவர் தமது தலைவனாகிய இறைவனோடு இரண்டறக்கலந்து ஒற்றித்து நின்று தம்முள்ளுணரும் பேரின்பநுகர்வு. இலக்கணம் என்பது அடையாளம். அநுபோக இலக்கணம் என்பது ஒருவர் பிறர்க்குக் கூறவொண்ணாத் தன்மையில் தம்முள் நுகரும் பேரின்ப நுகர்வுக்கு ஏதுக்களாயிருக்கும் அக அடையாளங்கள். அடிகள் அவ்வடையாளங்களை இந்நூலை ஓதுவாரறிந்து உய்யும்பொருட்டு இப்பதிகத்தைக் கூறுகின்றார்.

---

[எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

388\. மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னு ளெழுபரஞ் சோதி
யுள்ளவா காணவந் தருளாய்
தேறலின் றெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்க ளியாவையுங் கடந்த
இன்பமே யென்னுடை அன்பே. ருக.

[ப-ரை] தேறலின் றெளிவே — மிகத்தூயதேன் போன்று உயிர்களுக்கு இனிமையானவனே; சிவபெருமானே — சிவபெருமானே; திருப்பெருந்துறையுறை சிவனே — திருப்பெருந்துறையில் திருக்கோயில்கொண்டு வீற்றிருக்கும் சிவனே; ஈறிலாப்பதங்கள் யாவையுங்கடந்த இன்பமே — தத்துவங்கள் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டு விளங்கும் இறவாப்பேரின்பப் பொருளே; என்னுடை அன்பே — என்னை (அடிமையாக உடைய) அன்புக்குரியபொருளே; மாறிநின்று — (மெய்யாகிய நிலையான சிவப்

பொருளை நோக்கி நிற்றலுக்கு) மாறுபட்டுப் பொய்யாகிய நிலையில்லாத உலகநுகர்வுப்பொருளை நான் நோக்கி நிற்கும்படி; என்னை மயக்கிடும் வஞ்சப்புலனைந்தின் வழி அடைத்து — என்னை மயக்குகின்ற வஞ்சகமான ஐம்பொறிவாயில்களில் நான்செல்லுதலைத் தடுத்து; என் உள் அமுதமேவந்து ஊறிநின்று — எனது உள்ளத்தினுள்ளே அமுதம்போன்ற முழுப்பேரின்ப உணர்வானது விளங்கி ஊற்றிலிருந்து நீரெழுதல்போல எப்பொழுதும் எழும்படி; எழுபரஞ்சோதி உள்ளவா காண அருளாய் — தோன்றுதற்குக் காரணமான அருட்பேரொளியை இயல்பான முறைமையில் நான் அகக்கண்ணால் அறியும்படி அருள்செய்வாய்.

[வி-ரை] தேறலின் தெளிவு — தேறல் – தேன். தேறலின் தெளிவு – குற்றமில்லாத தூயதேன். பதங்கள் யாவையுங் கடந்த ஈறிலா இன்பமே — மண்முதல் நாதம் இறுதியாகிய முப்பத்தாறு தத்துவங்களில் வைத்து அறியப்படுவனவாயுள்ள தத்துவநிலைகளையுங்கடந்து நிற்கின்ற இறைவனது இன்பவடிவான சிறப்பியல்பு நிலையில் (சொரூபநிலையில்) உயிர்களால் இறவாதபேரின்பம் நுகரப்படுதலின், அடிகள் பதங்களியாவையுங் கடந்த ஈறிலா இன்பமே என்றார். பதம் — நிலை. உலகில் உயிர்கள் நுகரும் இன்பமும் இனபவடிவான இறைவன் தத்துவங்களிற்கலந்து நிற்றலாலுண்டாகிறது. ஈறிலா என்ற அடைமொழியை இன்பத்துடன் சேர்தது ஈறிலா இன்பம் என்பதற்கு இறவாத பேரின்பம் என்று பொருள் கொள்ளப்பட்டது. என்னுடை அன்பே — இத்தகைய பேரின்பத்தை உயிர்கள் நுகர்தற்கு அன்புகாரணமாயிருத்தலின், இன்பமே எனறு அடிகள் சிவபெருமானை விளித்தபின், அன்பே என்று கூறினார். ''அன்பே சிவமாவது ஆரும் அறிகிலர்'' என்று திருமூலர் திருமந்திரம் 270-வது பாட்டிற் கூறினமை காண்க. மாறிநின்று— நிற்க என்பது நின்று எனத்திரிந்து நின்றது. நிற்க என்பது காரியப்பொருட்டாய் எதிர்காலம் குறித்து 'செய'வென்னும் வாய்பாட்டு வினையெச்சமாய் வந்தது. வஞ்சப்புலன் — ஐம்பொறிகளால் நுகரப்படும் உலக இன்பம், உண்மையில் நிலையில்லாததாயும் துன்பந்

தருவதாயு மிருப்பினும் ஐம்பொறிகள் அவ்வுண்மையை மறைத்து நிலையான இன்பம்போலத் தோன்றச்செய்தலின் அவற்றை வஞ்சப் புலன் என்றார். என் உள்அமுதேவந்து ஊறி நின்று — உள் — உள்ளம், நெஞ்சு, மனம். வந்து என்ற சொல்லை அமுதம் என்ற சொல்லின்பின் சேர்க்க. சென்றடையாத பரஞ்சோதியாதலின், வந்து என்பதற்கு விளங்கி என்றபொருள் கூறப்பட்டது. நிற்க என்பது நின்று என மாறி நின்று என்பதிற்போலத் திரிந்துநின்றது. நின்று—நிலைபெற்று நிற்க; அதாவது எப்பொழுதும் நிலையாக எழும்படி. ஊறிநின்று என்பது உருவகம். 'ஓர் ஊற்றிலிருந்து நீரானது எப்பொழுதும் மேலே வந்துகொண்டிருத்தல்போல எனது உள்ளத்திலிருந்து பேரின்பவுணர்வு எப்பொழுதும் விளங்கிக்கொண்டிருக்க' என்று பொருள்படும். அமுதே என்ற சொல்லிலுள்ள 'ஏ' தேற்றத்தைக் குறிக்கிறது. இத்தேற்ற ஏகாரம் மலத்தொடக்குச் சிறிதுமில்லாத முழுப்பேரின்பம் (பரிபூரணானந்தம) என்ற பொருளைத்தருகின்றது. எழுபரஞ்சோதி உள்ளவா காண அருளாய் — எழுபரஞ்சோதி என்பது தோன்றுதற்குக்காரணமான பரஞ்சோதி. பரஞ்சோதி — மேலான ஒளி, பேரொளி, அருட்பேரொளி. முப்பத்தாறுதத்துவங்களையும் தன்னிடம் சத்தித்தொகுதியாய் அடக்கிக் கொண்டிருக்கிற இந்த அருட்பேரொளியை அகக்கண்ணாற் காணுகிற ஒருவரே முப்பத்தாறு தத்துவங்களையுங்கடந்த நிலையிலுள்ள பேரின்பத்தை உணரவல்லவர் ஆதலின், பரஞ்சோதி உள்ளவாகாண அருளாய் என்றார். காணுதல் என்பது இங்கே அகக்கண்ணால் (ஞானக்கண்ணால்) அறிதல். உள்ளவாறு என்பது உள்ளவா எனக்குறுகி நின்றது. உள்ளவாறு என்பது இயல்பான முறையில் என்று பொருள்படும். உயிர்கள் மலத்தைச்சார்ந்து நிற்றல் செயற்கையும், அருளைச்சார்ந்து நிற்றல் இயற்கையுமாதலின் உள்ளவாறு என்பதற்கு இயல்பான முறையில் என்று பொருள்கூறப்பட்டது. மலமுற்றிலும் நீங்கிய ஒருவனுக்கு அருட்பேரொளி, மலமறைப்பினின்று நீங்கிய காரணத்தால் உள்ளவாறு காணப்படும். மாணிக்கவாசக அடிகள் இந்தப்பாட்டில், 'இன்றெனக்கருளி', என்னும்,

முதற்குறிப்புப்பாட்டில் இருள்கடிந்துள்ளத்தெழுகின்ற ஞாயிறே போன்று நின்ற நின்தன்மை என்று முதலாவதாகக் கூறப்பட்ட அருட்பேரொளியானது அந்தப்பாட்டில் மூன்றாவதாகக்கூறப்பட்ட பேரின்பம் அடைவதற்குக் காரணமாயுள்ளது என்று கூறியருளினர். உலகப்பற்றை முற்றிலும்விட்டு முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாலுள்ள சிவத்தையே சிந்தித்துகொண்டிருக்கிறவருடைய உள்ளத்தில் அந்த அருட்பேரொளிவிளங்கும் என்ற உண்மையையும் இப்பாட்டிற் கூறியருளினர்.

---

389. அன்பினு லடியே னுவியோ டாக்கை
யானந்த மாய்க்கசிந் துருக
என்பர மல்லா இன்னருள் தந்தாய்
யானிதற் கிலனொர்கைம் மாறு
முன்புமாய்ப் பின்பும் முழுதுமாய்ப் பரந்த
முத்தனே முடிவிலா முதலே
தென்பெருந் துறையாய் சிவபெரு மானே
சீருடைச் சிவபுரத் தரைசே. ருச.

[ப-ரை] முன்புஆயும் — (உலகம் தோன்றுதற்கு) முன்னிருந்தவனாகியும்; பின்பு (ஆய்உம்) — உலகம் அழிந்த பின்பும் இருப்பவனாகியும்; முழுதும்ஆய் (உம்) பரந்த — உலகந்தோன்றுதற்கும் அழிதற்குமிடையே உள்ள திதிக்காலத்தில் உயிர்ப்பொருள் உயிரில்லாத பொருள் எல்லாவற்றிலும் ஊடுருவிக் கலந்துள்ளவனாகியும் நிறைந்து பரந்த; முத்தனே — (இவ்வாறு எல்லாப் பொருள்களிலும் கலந்து நிறைந்திருந்தாலும், அவற்றிற்குரிய மலங்களிற் சிறிதுந்தோய்ந்து மாறுதலடையாமல்) அநாதியே மலநீக்கமுடையவனாயிருக்கின்றவனே; முடிவிலா முதலே — (பிறப்பும்) இறப்புமில்லாத முதற் பொருளே; தென்பெருந்துறையாய்—தென்திக்கிலுள்ள திருப்பெருந்துறையில் திருக்கோயில்கொண்டெழுந்த

ருளியிருக்கின்றவனே; சிவபெருமானே — (எல்லா உயிர்களுக்கும் இன்பநலஞ் செய்தருளுகின்ற தலைவனாகிய) சிவபெருமானே; சீருடைச்சிவபுரத்தரசே—(எல்லா உலகங்களுக்கும் அப்பாலாய்ச்) சிறப்புடையதாய் விளங்குகிற சிவலோகத்துக்குத் தலைவனாயுள்ளவனே; அடியேன் — சிறியேனாகிய நான்; அன்பினால் — (உயிர்ப்பற்று, பொருட்பற்றுக்களாகிய உலகப்பற்றுக்களை யெல்லாம் விட்டு உன்னை மட்டும்) பற்றச்செய்கின்ற பேரன்பினால்; ஆவியோடு ஆக்கை — என் உயிரும் உடம்பும், (உன்வயம் ஒருவழிப்பட்டு அடங்கிநின்று); ஆனந்தமாய்க் கசிந்துருக—பேரின்பம் அடைதற்கு ஏதுவாய் (நீ எனக்குச் செய்தருளிய, காட்டும் உதவியையும்,காணும் உதவியையும் எனது உள்ளமானது நினைந்து நெக்கு நெக்காகக்) கசிந்துருகும்படி; என்பரமல்லா இன்னருள் தந்தாய் — என்சார்பு என்னைவிட்டு முற்றும் நீங்கும் வண்ணம் இனிமையாயுள்ள பேரருளொளியை எனது உள்ளத்தில் விளங்கச்செய்தாய்; இதற்கு நான் ஓர் கைம்மாறு இலன் — நீ இவ்வாறு அருள்செய்து பேரின்பம் அளித்ததற்கு உனக்கு நான் செயயக்கூடிய மாற்றுதவி ஒன்றுமில்லை.

[வி-ரை] முன்புஆய் உம் பின்பு (ஆய் உம்)—ஆய் உம் என்பதனைப் பின்பு என்ற சொல்லோடும் சேர்க்க. முழுது ஆய் உம் பரந்த முத்தனே — முழுதும் ஆய் என்ற சொற்றொடரை முழுது உம் ஆய் எனப்பிரித்து முழுதுஆய்உம் என உரைநடை செய்க. முழுது ஆகியும் பரத்தல் என்பது உலகமுற்றிலும் அணுவில் அணுவாய் அண்டத்தில் அண்டமாய் எள்ளுக்குள் எண்ணெய்போல உயிர்க்குயிராய் எங்கும் ஊடுருவி நிறைந்து வீற்றிருத்தல். அவ்வாறு இறைவன் உலகில் நிறைந்திருக்காவிட்டால் உயிர்களுக்கு அவன் கருதும் இன்ப நலம் உண்டாகமாட்டாது. இறைவன் அவ்வாறு எல்லாப் பொருள்களிலும் கலந்து நிறைந்திருப்பினும் அவற்றால் அவன் தொடக்குண்ணாது அவற்றைக் கடந்திருத்தல்பற்றி, அடிகள் இறைவனை முத்தனே என்று விளித்துக் கூறினார். முழுது ஆயும் பரந்த முத்தனே என்பதற்கு முழுது ஆகியும் பரந்திருப்பினும் முத்

தனே எனப்பொருள் கொள்க. முடிவிலா முதலே — முடிவு — அழிவு, இறுதி. இனம்பற்றிப் பிறப்புமில்லாதவன் எனக்கொள்க. முதல் — முதற்பொருள். எல்லாப் பொருள்களும் அழிப்புக்காலத் திலொடுங்குதற்கும் படைப்புக்காலத்தில் தோன்றுதற்கும் காரணப் பொருளாய் இருத்தலின் இறைவன் முதற்பொருளாய் இருக்கின் றான் என்று அடிகள் கூறினர். பிறப்பும் இறப்பும் இல்லாத முதற்பொருளாய் நீ இருத்தலால் பிறப்பிறப்புக்களுடையவனாய் இருந்த என்னைப் பிறப்பு இறப்புக்களினின்று நீக்கி, ஆண்டு பேரின்பம் அருள்செய்தாய் என்று குறிப்பிப்பாராகிய அடிகள் (பிறப்பு) முடிவிலா முதலே எனறு இறைவனை விளித்தார். தென் பெருந்துறையாய் — அடிகள் தமக்கு இறைவன் அடியார்களுடன் திருப்பெருந்துறைக்கு அந்தணன் வடிவில் வந்து ஆண்டு அருள் செய்ததை நினைந்து தென்பெருந்துறையாய் என்றார். சிவபுரத்து அரைசே — இறைவன் சிவபுரத்திலிருந்து திருப்பெருந்துறைக்கு வந்து ஆண்டவன் என்னும் நிலையில் தம்மை அடிமையாகக்கொண்டு அருள்செய்தான் என்று குறிப்பிப்பார் அடிகள் சிவபுரத்து அரைசே என்று கூறினர். அச்சிவபுரமானது சத்திநிபாத நிலையடைந்த அடி யார்கள் பேரின்பநலம் நுகரும் இடமாதலால் அதனை அடிகள் சீரு டைச் சிவபுரம் என்றார். அன்பினால் — இங்கே அன்பு என்பது பிறிதொன்றும் வேண்டாது இறைவனுடைய திருவடிகளையே பற் றச்செய்யும் அயராப்பேரன்பு ஆகும். இறைவன் எல்லா உயிர் களும் தன்னை அடைந்து இன்பநலம் பெறுதல்வேண்டும் என்ற அன்புடையவனாதலின், ஒருவர் எல்லா உயிர்களிடத்திலும் அன்பு செய்தாலன்றி இந்த அயராத பேரன்பை அடைதல்முடியாது. இறைவன், தமக்குச்செய்கிற அருள் விளக்கத்தினால் ஒருவர் தமக் கும் உயிர்க்கும் உள்ள வேற்றுமையினின்று முற்றிலும் நீங்கி இந்த வியாபக அன்பையடைதலின் அது அருளன்பாகும். இந்த அன்பே பேரா இயற்கைப் பேரின்பமடைவதற்கு ஏதுவாயுள் ளது. அடியேன் — கிடைத்தற்கு அரிய பேரின்பமானது "யாவர்க்குங் கீழாமடியேனுக்கு யாவருக்கும் மேலாமளவிலாச் சீரு

டைய இறைவனாலே" தமக்குக்கிடைத்தது என்று குறிப்பிப்பார் தம்மை அடியேன் என்று கூறினர். ஆவியோடு ஆக்கை—உடல் ஐம்பொறிவயப்பட்டு ஐம்புலன்வழியே செல்லுதலும் உயிர் இறைவனைநோக்கி அவன்வழிச் செல்லுதலுமின்றித் தம்முயிரும் உடலும் ஒருவழிப்பட்டனவாகி, இறைவனையே நினைந்து கசிந்துருகின என்று பொருள்படுதலுக்கு அடிகள் ஆவியோடு ஆக்கை என்ருர். அவ்வாறு கசிந்து உருகுங்கால் உயிரும் உடம்பும் ஒருவழிப்பட்டனவாயும், உடல் உயிரின் வசப்பட்டு அதன்வழி நினறது என்பதைக் குறித்தற்கும், வீடுபேற்றின் காலத்தில், உடலை ஆக்குகின்ற தத்துவங்கள் முதலியன சிவகரணமாய் உயிரிலடங்கி அவ்வாறு தத்துவ முதலிய பாசங்களடங்கிய உயிர் அருட்பேரொளியில் அடங்குகின்றது என்பதைக் குறித்தற்கும், அடிகள் ஆக்கையோடு ஆவிஎன்னது ஆவியோடு ஆக்கை என்று கூறினர். என்பரம் அல்லா இன்னருள் தந்தாய் — பரம் என்ற சொல் இங்கே பக்கம் அதாவது சார்பு என்னும் பொருள்பட நின்றது. 'அல்லா' என்பதில் 'து' விகுதி தொகைி நின்றது. "என்பரம் அல்லா இன்னருள்" என்ற சொற்ருெடர் என்பரம் அல்லாது இருத்தற்குக்காரணமாயுள்ள இன்னருள் எனவிரியும்; அதாவது உலகத்தைச்சாராது, உன்னையே சார்ந்திருத்தற்குக் காரணமாயுள்ள இனிய அருள், என் அறிவு வேட்கை, செயல்கள் எனது சார்பிலிராமல் எங்கும் நிறைந்து இருக்கிற உன்னுடைய அறிவுவேட்கை செயல்களுக்குள் தன்முனைப்புச் சிறிதுமின்றி அடங்கி இருக்கச்செய்கின்ற இனியஅருள் என்பது பொருள். எப்பொழுதும் அருள் உயிர்களுக்கு இன்பநலத்தையே செய்தலால் அதனை இன்னருள் என்ருர். இன் அருள் தந்தாய் — என்பது இன்றெனக்கருளி என்ற முதற் குறிப்புப்பாட்டில் அடிகள் கூறியபடி எனது உள்ளத்தில் அதன் கண்ணுள்ள மலவிருள் முற்றிலும் நீங்கும்படி இனிய அருட்பேரொளி விளங்கச்செய்தாய் என்று பொருள்படும். இப்பதிகம் கடைசிப்பாட்டில் 'தந்தது உன்றன்னை' என்று அடிகள்கூறி இருத்தல் காண்க. யான இதற்கு ஓர் கைம்மாறு இலன் — (மாயாதத்துவங்கள் எல்லாம்

அடங்கி நான் உன்னிடம் அடங்கியிருக்கும் உண்மை நிலையில்) தாம் யாதொரு கைம்மாறும் இறைவனுக்குச்செய்யமுடியாது என்று அடிகள் கூறினர். அடிகள் அனுபோக இலக்கணம் கூறுகிற கோயிற்றிருப்பதிகம் "இன்றெனக்கருளி" என்னும் முதற்குறிப்புடைய ஏழாவது பாட்டிற் கூறுகிறபடியே அத்தேபதிகம் இரண்டாவது பாட்டாகிய இந்தப்பாட்டிலும் மலநீக்கத்தாலுண்டாகும் (1) அறிவுநிலையும், அருள்விளக்கத்தாலுண்டாகும் (2) அன்பு நிலையும், இன்பவிளக்கத்தாலுண்டாகும் (3) செயல் நிலையும் ஆகிய மூவகைச் சிறப்பு இயல்பு அத்துவித அநுபோக நிலைகளையும் கூறி அருளினர். ஆனால் அந்தப்பாட்டிற் கூறப்பட்ட முதலாவது நிலையை இந்தப் பாட்டில் மூன்றாவதாகவும் மூவகை நிலைகளுக்கு முரிய ஏதுவும் பயனும் ஆகிய முறைமைக்கு மாறின்றி அடிகள் கூறினர்.

---

390. அரைசனே யன்பர்க் கடியனே னுடைய
அப்பனே யாவியோ டாக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின் றுருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே
திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே
திருப்பெருந் துறையுறை சிவனே
உரையுணர் விறந்துநின் றுணர்வதோ ருணர்வே
யானுன்னை யுரைக்குமா றுணர்த்தே. நிரு.

[ப-ரை] அன்பர்க்கு அரைசனே — (நீ உயிர்கட்கு இடைவிடாது செய்யும் அருட்செயலை அறிந்து நினைந்து உருகி உன்னிடம் மெய் அன்புசெய்யும்) அடியார்களுக்கு நீயும் அன்புடையவனயிருந்து அவர்களை அடிமையாக ஆண்டு அருள்செய்கின்ற தலைவனே; அடியனேனுடைய அப்பனே — (அவ்வாறு உனது தன்மையிருத்தலால்)சிறியேனாகிய என்னையும்(மகன் என்கிற கேண்மையில் திருப்பெருந்துறைக்கு வந்து ஆண்டருள்செய்த) எனது தந்தையே;

ஆவியோடு ஆக்கை புரைபுரைகனியப் புகுந்து நின்று உருக்கி — உயிரை உருக்குதலுடன் அவ்வுயிரிருக்கும் உடலிலுட்டுளைகளெல்லாம் கனியும்படி என்னுள்ளத்துள் விளங்கி நிலையாக நின்று (உடல் பொறிகரணங்களையெல்லாம் நெகநெக்காக) உருகும்படிசெய்து; பொய் இருள்கடிந்த மெய்ச்சுடரே — அவ்வுயிரிலும் உடம்பிலும் நிறைந்து விரவி உலகபோகத்தை நிலையாயுள்ளது எனமயங்கி அறியும்படி செய்கின்ற மலத்தை முற்றிலும் நீக்கி அருளிய என்றும் உளதாகிய அருட்பேரொளியே; திரைபொராமனனும் தெண் அமுதக்கடலே — உலக இன்பதுன்ப அலைகளாகிய விகாரங்கள் மோதாது என்றும் ஒரு தன்மைத்தாய் நிலைபெற்றிருக்கும் தெளிந்த அமுதம் போன்ற இன்பக்கடலே; திருப்பெருந்துறை உறை சிவனே — திருப்பெருந்துறையில் திருக்கோயில் கொணடெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே; உரை உணர்வு இறந்து நின்று உணர்வது ஓர் உணர்வே — ஒருவர் நாவினல் உரைக்கப்பெறுஞ் சொல்லையும் மனத்தினல் அறியப்பெறும் சுட்டறிவினையுங் கடந்து (அன்பினலுருகி நின்ேறடு இரண்டறக்கலந்து) உணரப்படும் தன்மையுடைய ஒப்பற்ற உணர்வுப்பொருளே; யான் உனை உரைக்கும் ஆறு உணர்த்து — இப்பேர்ப்பட்ட தன்மையை உடைய உன்னை உனனின் வேருக நின்று நாவினல் உரைக்கும் வழியை எனக்கு அறிவிப்பாயாக (நாவினலுரைக்கமுடியாது எனறபடி).

[வி-ரை] அன்பர்க்கு அரைசனே — சிவபெருமான் எல்லா உயிர்களுக்கும் பொதுவாக ஆண்டவனயிருப்பினும, அவனது முழுமுதற் றலைமையை அறிந்து அத்தலைமைக்குள் அடங்கி நின்று தன் முனைப்பின்றி அன்புடன் வழிபடும் அடியார்களைச சிறப்பாக ஆண்டருள் செய்தலின், அன்பர்க்கு அரைசனே என்ருர். அரைசன் என்ற சொல் இங்கே ஆண்டு காத்தருளும் தலைவனைக்குறிக்கிறது. அடியனேனுடைய அப்பனே — "என் அப்பன் என்னையும் ஆண்டுகொண்டருளிய அற்புதமறியேனே" என்று அடிகள் அற்புதப்பத்து ஏழாவது பாட்டிற் கூறியருளினமை காண்க. ஆவி

யோடு ஆக்கை புரைபுரை கனியப்புகுந்து நின்று உருக்கி — புரை புரைகனிய என்ற சொற்றொடரை ஆக்கையைத் தழுவுவதாகக் கொள்க; அதாவது ஆவியோடு புரைபுரை கனிய ஆக்கை(யிலும்) புகுந்து நின்று உருககி என இயைத்துப் பொருள்கொள்க. உருகுதல், உடனிகழ்வதாகக் கூறப்பட்ட ஆவிஆககை என்ற இரண்டு பொருள்களுள், ஆவிஉயர்வுடைய பொருளாதலின் ஆவியோடு ஆக்கை என ஆவியைத் தலைமைப்பொருளாகவைத்து அடிகள் கூறினர். மெய்சசுடர்ஆவி யுட்புகுந்து நினறு உருக்குதல், அவ்வாவியின்கண்ணுள்ள பொய்யிருள் கடிதலுக்கும், மெய்ச்சுடர்புரை ஆக்கை(யுட்) புகுந்து நின்று உருக்குதல், அவ்வாககையின் கண்ணுள்ள புரை (உட்டுளை) கனிதற்கும் காரணஙகளாய் இன்றியமையாது வேண்டப்படுவன. குளிகையுடன் ஒரு குகையில் வைத்து உருக்கப்பட்ட செம்பு தன்னை ச சேர்ந்துள்ளகளிம்பு நீங்கிப் பொன்னுகமாறுதல் போல, உடலின்கண் மலத்தோடு சேர்ந்துள்ள சீவன் அருளை அறிந்து உருகி அருளைசசார்ந்து அதன்வயப்பட்டபொழுது மலத்தன்மையோடுகூடிய சீவத்தனமை நீங்கிச் சிவத்தன்மையாக மாறுதலடையப்பெறுகின்றது என்பது உருககி என்றதனுற் போந்த பொருள். பொய்இருள்கடிந்த மெய்சசுடரே — பொய் என்பது நிலையாமை, அசத்து. அது இங்கே நிலையில்லாத உலகபோகத்தைக் குறிக்கிறது. "பொய்யாய செல்வத்தேபுக்கழுந்தி நாடோறும்" என்று (10 - 17)வது பாட்டில் பொய் என்பது நிலையாமை எனறு பொருள்படுதல் காண்க. இருள் என்பது மலத்தைக் குறிக்கிறது. இருள் ஊனக்கண்ணுக்குப் பொருளைத்தெரியவொட்டாமற் செய்தல்போல மலம் தான் விரவியுள்ள பொருளின் உண்மைத் தன்மையை மக்கள் அறியவொட்டாமற் செய்தலினுல் மலம் இருள் எனப்பட்டது. பொய் இருள் என்பது நிலையில்லாத உலக போகத்தை நிலையுள்ளது எனமயஙகி அறியச்செய்கிறமலம் என்று பொருள்படும். மெய் என்பது என்றும் உள்ளது, சத்து. சுடர் என்பது முப்பத்தாறு தத்துவங்களையுங்கடந்து உளதாகிய அருட்பேரொளியைக் குறிக்கிறது. மெய்ச்சுடர் என்பது என்றும் உள

தாகிய அருட்பேரொளி. மெய்ச்சுடர் ஆவியுட்புகுந்து நின்று பொய்இருள் கடிதல் என்பது ஞாயிற்றினொளியானது ஒருவன்கண்ணுக்குப் புற இருளை நீக்குதல்போல, அருட்பேரொளி சீவனிடத்துள்ள மலத்திலுண்டாவதாகிய அகவிருளை நீக்குதல் ஆகும். மெய்ச்சுடர் புரைபுரைகனிய ஆக்கை(யில்)புகுந்துநின்று உருககுதல் என்பது, அருட்பேரொளியானது உடல்பொறிகரணங்களில் விரவியுள்ளமலத் தன்மையை முற்றிலும் நீககி அவற்றைச சிவகரணங்களாக விளங்கச்செய்தல் ஆகும். புரை என்பது உட்டுளை. ஆககை புரைபுரைகனியப் புகுந்து நினறு உருக்குதல் என்பது, உடம்பினிலும் அதனிடத்திலுள்ள மயிர்க்காற்றுளைகள் எலும்புத்துளைகள் நரம்புத்துளைகள் முதலிய எல்லாவற்றிலும் ஊடுருவிக் கலந்து அவற்றை யெல்லாம் இளகச்செய்து உருக்குதல். இவ்வாறு உடல் உருகுதலன்றி அது ஒருவழிப்பட்டு உயிரின்கண் அடங்கிநிற்ப அவ்வுயிரும் உருகி இறைவன் வயப்பட்டு அடஙகி நில்லாது ஆதலின் ஆக்கை புரைபுரைகனியப்புகுந்து நின்றுருக்கி என்றார். திரை பொராமன்னும் அமுதத்தெண்கடலே — திரை என்பது அலை. அது இங்கே உருவகமாய் உலகவாழ்விலுள்ள இன்ப துன்பங்களைக் குறிக்கிறது. கடலில் எப்பொழுதும் அலைமோதி விகாரஞ்செய்தல் போல உலகவாழ்விலுள்ள இன்பதுன்பங்களால் மக்கள் மொத்துண்டு விகாரம் அடைகின்றார்கள். பொராது என்ற வினையெச்சத்தில் 'து' விகுதி தொக்கிநின்றது. மன்னும் என்பது விகாரமடையாது என்றும் ஒருதன்மைத்தான அமைதி நிலையோடு பொருந்தும் என்று பொருள்படும். நிலையான பேரின்பம் அடைதற்கு நிலையான அமைதி இன்றியமையாது வேண்டப்படுதலால் அடிகள் அவ்வாறு கூறியருளினார். அமுதம் என்பது அமுதம்போனற இன்பம். தெண்அமுதக்கடல் எனபது உப்பினோடு கலந்த கடல்போல அல்லாது தெளிந்த அமுதக்கடல். சிவபெருமான் அளவில் இன்பம் உடையவன் ஆதலின் அவனை அடிகள் தெண்அமுதக்கடலே என்றார். உரைஉணர்வு இறந்துநின்று உணர்வதோர் உணர்வே — உரைஉணர்வு உம்மைத்தொகை. உரை என்பது பாசஞானத்தை

யும் உணர்வு என்பது பசுஞானத்தையும் குறிக்கும். "உரைஉணர் விறந்த ஒருவ போற்றி" என்று போற்றித் திருவகவலில் வருதல் காண்க. உணர்வு என்பது உணரப்படுவது எனனும் செயப்பாட்டுப் பொருளில் வந்தது. ஈற்றில் உணர்வு என்பது பதிஞானத்தால் மாத்திரம் உணரப்படும் உணர்வுப் பொருள். யான் உன்னை உரைக் குமா ஆறு உணர்ந்தது — சிவாநுபோகம் நாவினால் உரைக்க முடியா மையைக்குறிக்கிறது. இக்கருத்தை "எங்ஙனிருந்த தென்றெவ் வண்ணஞ் சொல்லுகேன் அங்ஙனிருந்ததென்றுந்தீபற, அறியு மறிவ தன்றுந்தீபற" என்று திருவுந்தியார 4-வது பாட்டுக் கூறுகின்றது. அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆநந்தம் "என்று திருமூலர் கூறி யருளினார்". (திருமந்திரம் 2944-வது பாட்டு). இந்தப் பாட்டில் அடிகள் இறைவனை ஆவியோடாக்கை புரைபுரைகனியப்புகுந்து நின்றுருக்கிப் பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே என்று விளித்துக் கூறியதனால், இறைவன தமக்குத் தன்னையே அறியும் தனி அறிவு நிலையை அறிவித்தான் என்பதும், உரைஉணர்விறந்து நின்றதோ ருணர்வே என்று விளித்துக் கூறியதனால் இறைவன் தமக்குத் தன்னையே உணரும் தனிஅன்பு நிலையை உணர்த்தினான் என்ப தும், திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே என்று விளித் துக்கூறியதனால் இறைவன் தமக்குத் தன்னுடைய திருவடிகளையே அடையும் தனிசசெயல் நிலையை அடைவித்தான் என்பதும் கூறி யவாறாயின. இந்தச்சிறப்பு இயல்பு அத்துவித நிலைகள் மூன்றும் ஆன்மாப்பேரின்பநிலை அடைதற்கு முன்னுறுவனவாகிய அநுபோக இலக்கணங்களாகும். யானுன்னை உரைக்குமாறுணர்த்தே என்ற தனால் இப்பேரின்ப அநுபோகம் இனனது என நாவினால் உரைக்க முடியாது என்பது கூறப்பட்டவாறாயிற்று.

---

391. உணர்ந்தமா முனிவ ரும்பரோ டொழிந்தார்
உணர்வுக்குந் தெரிவரும் பொருளே
இணங்கிலி யெல்லா உயிர்கட்கு முயிரே
யெனைப்பிறப் பறுக்குமெம் மருந்தே

திணிந்ததோ ரிருளிற் றெளிந்ததூ வெளியே
திருப்பெருந் துறையுறை சிவனே
குணங்கள்தா மில்லா இன்பமே யுன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே. ருசு.

[ப-ரை] உணர்ந்தமாமுனிவர் உம்பரோடு — (இறைவனோடு அத்துவிதமாய்க்கலந்து அவனுடைய சிறப்பியல்பு நிலையை) உணர்ந்த மேலான முனிவர்களும், தேவர்களும்; ஒழிந்தார் — இறைவனது பொதுவியல்பு நிலையைத்தங்கள் கருவியறிவினாலே அறிந்த ஏனையமக்களும், தேவர்களும்; உணர்வுக்கும் தெரிவு அரும் பொருளே — தஙகளுடைய மெய்யுணர்வாலும், கருவியறிவாலும் முழுவதும் அறியமுடியாத பேரின்பப்பொருளே; இணைஙகிலி — (அங்ஙனம் அவ்வாறு அறியாதமுடியாதிருத்தலால்) எவருக்கும் ஒப்பில்லாத மேலானவனே; எல்லாவுயிாகட்கும் உயிரே — (எல்லாவுயிர்களுககும் அவற்றின்மேல் வைத்த பேரன்பால் அவை நினனை அடைதற்குத் தகுதிபெறுமவணணம்) அவற்றோடு இரணடறக கலந்து நின்று இடையறாது அறிவித்தும், அறிந்தும் வருகின்ற பேரன்புப்பொருளே; திணிந்தது ஓரிருளில் தெளிந்ததூவெளியே— உயிர்கள் நின்னை அறியவொட்டாது அவற்றோடு நெருங்கிநிற்கும் ஒப்பற்ற ஆணவமலவிருளோடு நீயும் தாகின்றி அருட்பேரொளியாய்க் கலந்து நிற்றல்பற்றி அவ்வுயிர்களிடத்திலுள்ள நெருங்கிய இருள் சிறிது சிறிதாகக் குறைந்துகுறைந்து முடிவில் அவ்விருள் முழுவதும் நீங்கி அதனால் அவ்வுயிர்களில் தெளிவாய் விளஙகும் தூய்மையான ஒளிப்பொருளே; ஏனைப்பிறப்பறுக்கும் எம்மருந்தே— (இவ்வாறு நீ உயிர்களுககு எப்பொழுதுஞ்சலியாது செய்கிற முறைமைப்படி என்னிடத்தும நீ பேரன்புவைததுத் திருப்பெருந்துறைக குவந்து என்னை ஆண்டு அடிமைகொண்டு) மலத்தாலாகிய எனது பிறவிப்பிணி முற்றிலும் நீஙகுதற்கு மருந்தாயிருப்பவனே; திருப்பெருந்துறையுறை சிவனே — திருப்பெருந்துறையில திருக்கோயில்கொணடு வீற்றிருககிற சிவபெருமானே; குணங்கள் தாம்

இல்லா இன்பமே — தாமதம், ராசதம், சாத்துவிகம் என்னும் மாயா குணங்களின் தொடர்பு சிறிதுமின்றி அருட்குணங்களே விளங்கும் பேரின்பப்பொருளே; நின்னைக்குறுகினேற்கு இனி என்னகுறையே — இவ்வாறு நீ என்னை ஆண்டருளியதனால் பேரின்ப நிலையடைந்த எனக்கு நான்கேட்டு நீ தரும்படி என்ன குறையிருக்கிறது. (ஒரு குறையுமில்லை யென்றபடி).

[வி-ரை] உணர்ந்தமாமுனிவர் உம்பரொடொழிந்தார் உணர்வுக்குந்தெரிவரும்பொருளே — இறைவனுடைய பேரறிவையும், பேரின்பத்தையும் நோக்க அவனது சிறப்பியல்பு நிலையைத் தங்கள் மெய்யுணர்வினால் உணர்ந்த முனிவர் தேவர்களுடைய அறிவும், இன்பமும்கூட சிற்றறிவும், சிற்றின்பமுமாதலால் உணர்ந்தமாமுனிவர் உம்பரும் தெரிவரும்பொருளே என்றார். அவ்வாறாயின் ஏனைய மக்கள் தேவாகளுக்கு இறைவன் தெரிவரும்பொருளாயிருத்தல் சொல்லாமலே விளங்கும். இதனால் சிவசமவாதி மதம் மறுக்கப்பட்டது. இணங்கிலி — இணங்கு முதனிலைத்தொழிற் பெயர் — ஒப்பு. இணஙகிலி — மேற்கூறிய உணர்ந்தமாமுனிவர் உம்பர் முதலிய எவர்க்கும் ஒப்பில்லாத மேலானவன் என்பது கூறப்பட்டது. எல்லாவுயிர்கட்கும் உயிரே — இறைவன் எல்லாவுயிர்கட்கும் பிராணனாய் நின்று அவற்றை இயக்கியும், அறிவித்தும் செய்து வருதலால் அவனை அடிகள் எல்லா உயிர்கட்கும் உயிரே என்றார். திணிந்தது ஓர் இருளில் தெளிந்ததூவெளியே— திணிந்த = நெருங்கிய. தூவெளி = ஞானகாசம், சிதம்பரம். உயிர்களுக்குக் கட்டு நிலையில் இறைவனையடையும் பக்குவம் வருவிக்கும்பொருட்டு இறைவனது அருட்சததியானது திரோதான சத்தியாய் நின்று உலகபோகம் நுகர்வித்தும், பாகம் வந்த அளவில் அருட்சத்தியாக மாறி நின்றும் இவ்வாறு உயிர்களுககு முழுப்பக்குவம்வந்து மலம் நீஙகிப் பின்முழுவதும் அருட்சத்தியாகமாறி தூவெளியில் பேரொளியாக விளஙகுதலின் அடிகள் இறைவனைத் "திணிந்ததோரிருளிற் றெளிந்த தூவெளியே" என்றார். எனைப்பிறப்பறுக்கும் எம்மருந்து — எனை - எனது. உருபுமயக்கம். உடற்பிணிக்கு மருந்துபோல

உயிர்ப்பிணியாகிய தமது பிறவியை திருப்பெருந்துறைக்கு வந்து தம்மை ஆண்டு அருள்செய்து நீக்கினன் என்பார் அடிகள் எனைப் பிறப்பறுக்கும் எம்மருந்தே என்றார். தம்மைப்போன்ற எல்லா வுயிர்களுடைய பிறவிப்பிணிக்கும் இறைவனை மருந்தாகலின் அடிகள் எம்மருந்தே என்று பன்மையால் விளித்தார். குணங்கள் தாம் இல்லா இன்பமே — குணங்கள் என்பது இங்கே மாயையோடு தொடர்புடைய சாத்துவிகம் முதலிய மூன்றுகுணங்களையும் குறிக்கிறது. இறைவன் தன்வயத்தனதல் முதலிய எட்டு அருட்குணங்களையும் உடையவன். உயிர்களுக்கு இறைவனை அடையும் பேரின்பம் அவன் அருட்குணங்களெட்டும் உயிரினிடத்து முற்றிலும் பதிதலால் உண்டாகின்றது. இந்தப்பேரா இயற்கைப்பேரின்பமானது, சத்துவகுணம் உயிரின்மாட்டுவிளங்குதலால் உண்டாகும் நிலையில்லாத உலக இன்பம்போல அன்று என்பார் 'குணங்கள் தாமில்லா இனபமே' என்றார. தாம் — அசை. நின்னைககுறுகினேற்கு இனி என்னகுறையே — குறைவில்லா நிறைவுடைய இறைவனை, அடிகள் தாம் அவனைசசேராதிருககுங்கால் உடையதாயிருந்த குறைகளை அறிந்து, சேர்ந்தபின் எல்லாககுறைகளும் நீங்கிப் பேரின்பம் பெற்றேன் என்பாா நின்னைககுறுகினேறகு இனி எனனகுறையே என்றார். இதனல் உலகில் வாழும் மககள எல்லாரும் குறையுடையவர்கள் எனபதும், அக்குறைவுகளை அவர்கள் அறிந்து இறைவனைசசேர்ந்து அவன்கண் அடங்கினலாலனறி அவை தீரா என்பதும் கூறப்பட்டன. "குறைந்தடைந்தாராழாமைக் காக்குமடி" என்று திருநாவுககரசு அடிகளும் (6 - 6 - 2), "குறையுடையார்க் கல்லால் களைகிலார் குற்றமே" என்று திருஞானசம்பந்த அடிகளும் (3 - 26 - 4) கூறியிருத்தல் காண்க. குறுகினேன் என்றதனல் அடிகள்தமது தன்முனைப்பு முற்றிலும் நீங்கி இறைவன்திருவடி அடைந்தார் என்பது குறிப்பாலுணர்த்தப்பட்டது. இந்தப்பாட்டில் 'திணிந்ததோரிருளிற்றெளிந்த தூவெளியே' என்றதனல் அருளொளிகாரணமாக உணடாகும் மலநீக்கத்தால் விளங்கும் அறிவுவிளக்கமும் 'எனைப்பிறப்பறுககும் எம்மருநதே'

என்றதனால் அவ்வறிவுவிளக்கம்பற்றி உண்டாகும் அன்பு விளக்கமும் "குணங்கடாமில்லா இன்பமே" என்றதனால் அவ்வன்பு விளக்கம்பற்றி உண்டாகும் செயல்குறிக்கும் இன்பவிளக்கமும் கூறப்பட்டன. நிறை அறிவு, நிறை அன்பு, நிறைசெயல் மூன்றுமே பேரின்பத்துக்குக் காரணமாயுள்ளன என்பது 'இன்றெனக்கருளி' என்ற முதற்குறிப்புப்பாட்டிற் கூறப்பட்டதுபோல் இந்தப்பாட்டிலும் கூறப்பட்டது.

---

392. குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
　　ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
　　மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறா நீர்போற் சிந்தைவாய்ப் பாயுந்
　　திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீயென் னுடலிடங் கொண்டாய்
　　இனியுன்னை யென்னிரக் கேனே. ௱எ.

[ப-ரை] ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே—அழியாது எப்பொழுதும் எங்கும் நிறைந்து அசையாதிருக்கும் நிலையான பேரொளிமலையே; குறைவிலா நிறைவே — யாதொரு குறைவுமின்றி நிறைந்த அறிவுப் பொருளே; கோதிலா அமுதே — துன்பம் சிறிதுங்கலவாத பேரின்பப்பொருளே; சிறைபெறா நீர்போல—அணைக்கட்டினால் றடுக்கப்படாத ஆற்றுநீரானது கடலைநோக்கி விரைந்து செல்லுதல்போல; சிந்தைவாய் பாயுந் திருப்பெருந்துறையுறை சிவனே — பாசஞான பசுஞானத் தடைகள் நீங்கிய எனதுள்ளத்தில் விரைந்து கலந்து அருளொளி உள்விளங்கி நிலைபெற்றிருப்பவனாகிய திருப்பெருந்துறையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானே; மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்து — வேதாகமங்களாயும் அவ்வேதாகமங்களிற் கூறப்பட்டிருக்கிற முழுமுதற் பொருளாயும்

விளங்கி; என்மனத்திடை மன்னிய மன்னே — எனது உள்ளத்தில் நிறைந்த அறிவுப்பொருளாய் நிலைத்து நிற்கிற பொருளே; இறைவனே — என்னை அடிமையாகக்கொண்டு ஆண்டு அருளிய தலைவனே; நீ என்உடல் இடம்கொண்டாய் — எனது உடலையும் (உடலின்கண்ணுள்ள உள்ளத்தையும்) நீ கோயிலாகக்கொண்டு நிலையாக எழுந்தருளியிருக்கும் இருப்பிடமாகக் கொண்டருளினாய்; இனி உன்னை என் இரக்கேனே — (அவ்வாறு நீ என் உடலிலும் உள்ளத்திலும் நிலையாக வீற்றிருந்து 'நான்' 'நீ' என்னும் வேற்றுமையின்றி என்னுடன் அததுவிதமாய்க்கலந்து பேரினபம் அளித்து அப்பேரினபப்பேறுபெற்ற நான்) உன்னிடத்தில் கேட்டுப்பெறவேண்டியது என்ன இருக்கிறது (ஒன்றும் இல்லை என்றபடி).

[வி-ரை] ஈறிலாக்கொழுஞ்சுடர்க்குன்றே — ஈறு என்பது அழிவு. கொழுமை என்ற அடைமொழியானது ஒளிமிகுதியைக் குறிக்கிறது. கோடிஞாயிற்றினொளிதொகுதியும் அவ்வொளிக்கு ஈடாகாது. குன்று என்பது மாறுதலின்றி நிலையாயிருத்தலைக் குறிக்கிறது. சிறைபெறா நீர்போல் — சிறை என்பது தடை. அது இங்கே ஆற்றுநீரைத் தடைசெய்கிற அணையைக்குறிக்கிறது. சிறைபெறா நீர் என்றதனால் நீர் எனபது ஆற்றுநீர் என்னும் பொருள்பட நின்றது. சிவஞானபோதம் எட்டாவது சூத்திரம் "சிறைசெய்ய நின்ற" என்னும் முதற்குறிப்பு வெண்பாப்பொருளை நோக்குக. சிந்தைவாய் பாயும் திருப்பெருந்துறை உறைசிவனே— வாய் இங்கே ஏழாம்வேற்றுமை உருபு. பாயும் என்பது விரைந்து செல்லும் என்ற பொருள்பட நின்றது. அது சிவன் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. சிந்தைவாய் பாயும் சிவன், திருப்பெருந்துறை(யில்) உறை(யும்) சிவன்எனமுடிக்க. மறையுமாய் மறையினபொருளுமாய் என்மனத்திடைமன்னிய மன்னே — மறை என்ற சொல் இங்கே பொதுப்பெயராய் இறைவனை அடைதற்கு வழிகாட்டும் வேதாகமங்கள் முதலிய கலைகளைக்குறிககிறது. பதிபசுபாசங்களைத் தெரித்துணர்த்தும் பலகலையாகமவேதங்கள் பசுவுக்குப்

பாசத்தடையை நீக்கவழிகாட்டிப் பதியையடையச்செய்தலால் மறையுமாய் மறையினை பொருளுமாய் என்றும், அவற்றைக்கற்று கேட்டுத்தெளிந்து நிட்டைகூடியதனாலுண்டாகும் பதிஞானமானது சிவகரணமாய் மாறிய நிலையிலுள்ள தமது உள்ளத்தில் அநுபூதிஞானமாய் விளங்குதலால் என்மனத்திடைமன்னியமன்னே என்றும் அடிகள் கூறினர். மனம் எனபது இங்கே சிவனையே பற்றுகிற மனம், அதனைத் திருமூலர் திருமந்திரம் 620-வது பாட்டில் 'மன்மனம்' என்று கூறுகின்றார். திருநாவுக்கரசு அடிகள் இந்த மனத்தைத் தமது தேவாரத்தில் 'மனமணி' என்றும் உலகபோகத்தைப்பற்றும் கீழ்மனத்தைக் 'கடிமனம்' என்றும் (4 - 76 - 4) கூறுகின்றார். அடிகள் இப்பதிகம் 10-வது பாட்டில் "சிந்தையே கோயில்கொண்ட எம்பெருமான்" என்று கூறுகின்றார். நீ என்உடல் இடம்கொண்டாய் — "ஞானிக்குக்காயம் சிவமே தநுவாகும்" என்று திருமூலர் திருமந்திரம் 2135-வது பாட்டில் கூறுதல்காண்க. இனி உன்னை என் இரக்கேன் — அடிகள் தாம் திருப்பெருந்துறையில் சிவபெருமானால் ஆண்டருளப்பெற்று பேரின்பப்பேறு அடைந்தபின் பெறத்தக்கது ஒன்றிமில்லை யாதலின் 'இனி உன்னை என் இரக்கேன்' என்றார். இரக்கேன் எனபதில் 'கு' என்பது எதிர்காலம் காட்டும் விகுதி. ஏ-ஈற்றசை இந்தப்பாட்டில் அடிகள் முதற்கண் முதலாவது அடியில் சிவபெருமானை "ஈறிலாக்கொழுஞ்சுடர்க்குன்றே" என்று விளித்து அவனுடைய சத்துத்தன்மையையும், "குறைவிலா நிறைவே" என்று விளித்து அவனுடைய சித்துத்தன்மையையும், "கோதிலா அமுதே" என்று விளித்து அவனுடைய ஆனந்தத் தன்மையையும் குறிப்பிட்டுப் பின்னர் அச்சத்துத்தன்மைபற்றி அவன் தமக்கு அருள்செய்ததை மூன்றாவது அடியில் "சிறைபெறு நீர்போல் சிந்தைவாய்ப்பாயும் திருப்பெருந்துறையுறை சிவனே" என்றும், அச்சித்துத்தன்மைபற்றி அவன் தமக்கு அருள்செய்ததை இரண்டாவது அடியில் "மறையுமாய்மறையின் பொருளுமாய் வந்து என்மனத்திடை மன்னியமன்னே" என்றும், ஆநந்தத் தன்மைபற்றி அவன தமக்கு அருள்செய்ததை நாலாவது அடியில்

"இறைவனே" நீ என்னுடலிடங்கொண்டாய் இனி உன்னை என் இரக்கேனே என்றும் கூறியருளும் அழகை நோக்கி அகமகிழ்க. அடிகளுடைய நிறைவுபெற்ற அறிவு, அன்பு, செயல்கள் மூன்றும் சிவபெருமானுடைய சத்து, சித்து, ஆநந்தம் என்ற மூன்றையும் அடைதற்கு முறையே ஏதுக்களாய் இருந்தமை காண்க.

---

393. இரந்திரந் துருக என்மனத் துள்ளே
யெழுகின்ற சோதியே யிமையோர்
சிரந்தனிற் பொலியுங் கமலச்சே வடியாய்
திருப்பெருந் துறையுறை சிவனே
நிரந்தவா காயம் நீர்நிலந் தீகால்
ஆயவை யல்லையா யாங்கே
கரந்ததோ ருருவே களித்தன னுன்னைக்
கண்ணுறக் கண்டுகொண் டின்றே. நி அ.

[ப-ரை] இமையோர் சிரந்தனில் — (தேவர்கள் நின்னுடைய திருவடிகளில் தங்கள் தலைகளைப் பொருந்தவைத்து வணங்குதலால்) தேவர்களுடைய தலைகளில்; பொலியும் கமலச்சேவடியாய் —மிளிர்ந்து விளங்குகின்ற தாமரைமலர்போலும் மெல்லிய இரண்டு செவ்விய திருவடிகளை உடையவனே; இரந்து இரந்து உருக — (நான் எனது குறைவையும், அளவிலாச்சீருடைய நினது நிறைவையும் நோக்கி நின்னை அடைதல்வேண்டுமென்னுங் கருத்துடன் இடைவிடாது வேண்டுதல்பற்றி எனதுமனம் அன்பினுலிளகி யுருகுதலால்; என்மனத்துள்ளே எழுகின்ற சோதியே — எனது மனத்தினுள்ளே விளங்கித்தோன்றுகிற பேரொளிவடிவே; திருப்பெருந்துறை உறை சிவனே — திருப்பெருந்துறையில் திருக்கோயில் கொண்டருளியிருக்கும் சிவபெருமானே; நிரந்த ஆகாயம் கால் தீ நீர் நிலம் ஆய் — எங்கும் பரந்துள்ளவெளி, காற்று, தீ, நீர், மண், ஆகிய ஐம்பெரும் பூதங்களுடன் அத்துவிதமாய்க் கலந்து

அவையேயாகியும்; அவை அல்லையாய் — (அங்ஙனம் நீ ஐம்பூதங் களுடன் கலந்திருப்பினும்) அவற்றால் மாறுதலடையாது அவற் றைக் கடந்திருப்பவனாகியும்; ஆங்கே கரந்தது ஓர் உருவே — (அவ் வாறு நீ ஐம்பூதங்களோடு கலந்திருப்பினும்) உண்மை அன்பர்களுக் கன்றிப் பிறர்காணும்படி வெளிப்படத்தோன்றி நில்லாது அப்பூதங் களினுள்ளே மறைந்துகொண்டிருக்கும் ஒப்பற்ற ஒளிவடிவமே இன்று - இற்றைநாள்; கண்ணுறக்கண்டு — (தில்லையில்) எனது அகக்கண்ணால் நினது பேரொளி (ஞானாகாசம்) வடிவத்தைக்கண்டு; களித்தனன் — என்றும் மாறாத பேரின்பமடைந்தேன். ("அத்த னெனக்கருளியவாறார் பெறுவார்" என்பது குறிப்பெச்சம்).

[வி-ரை] கமலச்சேவடி — தாமரை மலர்போலு மெல்லிய சேவடி. தாமரை மலர்களணிந்திருக்கிற சேவடி என்றுரைப்பினும் பொருந்தும். செம்மை + அடி = சேவடி. உண்மை அன்பர்களுக்கு நேர்மையிலின்பமளிக்கும் திருவடிகள். இரந்து இரந்து உருக — இரத்தல் என்பது கீழோனொருவன் மேலோனொருவனிடம் தன் குறையைச் சொல்லி அக்குறையை நீக்க வேண்டுதல். அது இங்கே மாணிக்கவாசக அடிகள் சிவபெருமானிடம் தம்மை அவன் திருவடி களிற் சேர்த்துக்கொள்ளல் வேண்டுமென்று வேண்டுதலைக் குறிக்கி றது. அங்ஙனம் வேண்டும்பொழுது அவர் மனம் அன்பினால் இளகி உருகுதலால் உருக என்றார். உருக என்பது இங்கே காரணப் பொருளில் செய என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்ச மாய் வந்தது. அடிகள் சிவபெருமானிடம் வேண்டுதல் செய்ததை பிரார்த்தனைப் பத்துப் பாட்டுக்களிலும் 'உற்றாரை யான் வேண் டேன்' என்ற முதற்குறிப்புப் பாட்டுப்போன்ற சிலபாட்டுக்களிலும் கூறியருளினமை காண்க. என் மனத்துள்ளே எழுகின்ற சோதியே —சிவபெருமான் தமக்கு இடைவிடாது செய்துவரும் அருட்செயல் களை உணர்ந்து நினைந்து அவனிடத்தில் அன்பு மீதூருந்தோறும் மனத்தினிடம் அருளொளி விளங்கி இன்பமுண்டாதலால் அடிகள் என் மனத்துள்ளே எழுகின்ற சோதியே என்றார். "அன்புறு

சிந்தையின் மேலெழுமவ்வொளி — இன்புறு கண்ணியோடேற இசைந்தன" என்று திருமந்திரம் 282-வதுபாட்டில் திருமூலர்கூறுதல் காண்க. மனம் என்பது இங்கே மலமாசு நீங்கிய மனம். மலமாசு ஒருபுடை நீங்கப்பெற்ற நம்போன்றவர்களும் தங்கள்மனத்தில் சிவபெருமானுடைய திருவருளை அன்பால் நினைந்து உருகுவார்களானால் அதன்கண் இன்பமுண்டாகிப் பெருகுதலை அனுபவத்தில் நாம் காணலாம். நிரந்த ஆகாயம் கால் தீ நீர் நிலம் ஆய் — நிரந்த என்பது எங்கும் பரந்திருக்கிற. இந்த அடைமொழி ஆகாயத்தை மட்டும் தழுவும். சிவபெருமான் வெளி முதலிய ஐம்பூதங்களிலும் நிறைந்திருத்தலால் அவை தத்தமக்குரிய குணங்களை உடையனவாயுள்ளன. அடிகள் (4 — 137 - 141)வரிகளில்

பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி

என்று கூறியிருத்தல் காண்க. அவை அல்லையாய் — சிவபெருமான் ஐம்பூதங்களிலும் அத்துவிதமாய்க் கலந்திருப்பினும் அவற்றிலடங்காது அவற்றைத் தன்னுளடக்கிக் கடந்திருக்கின்றான் என்பார் அவை அல்லையாய் என்றார். ஆங்கே கலந்தது ஓருருவே — ஐம்பூதங்களும் அவற்றின் காரியாவத்தையில் காரியஉலகமாய்ப் பரிணமித்து நின்று காரணாவத்தையில் சூக்குமமான சத்திவடிவில் சிவபெருமானுடைய அருட்பேரொளியில் (ஞானாகாசத்தில்) அடங்கியிருத்தலால் அடிகள் ஆங்கே கரந்ததோருருவே என்றார். உருவு என்பது ஒளிஉருவு. சோதியாய்த்தோன்றும் உருவமே என்று அடிகள் (22—9)ல் கூறியது நோக்குக. அந்த உருவம் உலகிற் காணப்படுமுருவம் போன்றின்மையின் அடிகள் ஓருருவே (ஒப்பற்ற உருவே) என்றார். கரந்தது—சூக்குமமாய்ச் சத்திவடிவில் மறைந்து விளங்கித்

தோன்றுதிருப்பது. இன்று என்பது அடிகள் தில்லையிலிருந்த நாட்களில் ஒன்றைக்குறிக்கிறது. இந்தக் கோயிற்றிருப்பதிகத்தை அடிகள் தில்லையில் வைத்துப் பாடியதாகத் திருவாதவூரர் புராணம் 406-வது பாட்டில் கடவுள்மாமுனிவர் கூறுகின்றார். ஏ—அசை. கண்ணுறக்கண்டு களித்தனன்—கண் என்பது இங்கே அகக்கண்ணே; அதாவது மெய்யுணர்வைக் குறிக்கிறது. கடவுள்மாமுனிவர் திருவாதவூரர்புராணம் 414-வது பாட்டில் அடிகள்''தத்துவமுடிவிலாகுந் தாண்டவந்தம்முட்கண்டு நித்தலுஞ்சென்றிறைஞ்சியன்பால்''என்று கூறுதலை நோக்குக. கண்ணுறக்காணுதலாவது மெய்யுணர்வால் கூத்தப்பிரானை உள்ளத்திலுணர்தலாகும். களித்தல் என்பது அவ்வுணர்ச்சி காரணமாக உள்ளத்தில் பேரினபம் (ஆநந்தம்) நுகருதல் ஆகும். இப்பாட்டில் இப்பதிகம் ஏனையபாட்டுக்களிற் போல் ஆங்கே கரந்ததோருருவே என்றதனால் அறிவும் 'இரந்திரந்துருக என் மனத்துள்ளே எழுகின்ற சோதியே என்றதனால் அன்பும்' கண்ணுறக்கண்டுகளித்தனன் என்றதனால் செயலும் தமதுள்ளத்தில் குறைவின்றி நிரம்பியதனால் பேரினபநுகர்ச்சி உண்டானதாக அடிகள் கூறுகின்றார். ஞானஇச்சாக்கிரியாசத்திகளாகிய அறிவு 'அன்பு' செயல்கள் மூன்றும் ஒருயிரினில் குறைவின்றி நிரம்புவதே பேரின்ப அநுபோக இலக்கணமாகும். இந்த மூன்று சத்திகளும் நிறைவது உயிர் சிவபெருமானோடு அத்துவிதமாய்க்கலந்து அவனுடைய ஞானஇச்சாக்கிரியா சத்திகள் அதனிடம் பதிதலால் உண்டாகிறது. உலகபோகநுகர்வை விரும்பி உலகில் வாழும் மக்களும் தங்களிடம் ஏகதேசமாய் விளங்குகிற இந்த ஞானஇச்சாக்கிரியா சத்திகளை நிகழ்த்தியே எத்தொழிலையும் செய்கிறார்கள். அவர்கள் திருவருளைத் தங்களுள்ளத்திலறிந்துணரச்செய்யும் அறவழியில் தங்கள் ஞான இச்சாககிரியாசத்திகளை நிகழ்த்தி ஒழுகுவார்களானால் அவ்வொழுக்கம் தங்கஔாழுககத்துக்குத் தக்கவாறு ஏகதேச இன்பத்தைப் பயப்பதல்லாமல் உலகநெறியிலிருந்து பேரின்பத்துக்கு ஏதுவாகிய மெய்யுணர்வைப் பயக்கும் வீட்டுநெறிக்குச் செல்லும் பக்குவத்தையுமுண்டுபண்ணும். இக்காலத்து மக்கள் பெரும்பான்

மையும் இவ்வுண்மையை அறியாது நிலையில்லாத பொருட்செல்வ முதலியவற்றால் மயங்கித் தீயநெறியிலொழுகித் தாங்களே தங்களுக்குக் கேட்டினைத் தேடிக்கொள்கிறார்கள்.

---

394. இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே. ருசு.

[ப-ரை] எனக்கு — உனக்கு என்றும் மீளா அடிமையாயுள்ள எனக்கு; இன்று — (திருப்பெருந்துறையில் என்தலைமேல் உன்னுடைய இரண்டு திருவடிகளையும்வைத்து ஞானதீக்கைசெய்து ஆண்டருளின) இந்நாள்; எழுகின்ற ஞாயிறேபோன்று — உலகின்கண் இரவு நீங்கிய காலைநேரத்தில் பேரொளியோடெழுந்து புறவிருளை நீக்குகின்ற பகலவனைப்போல; உள்ளத்து இருள் கடிந்து நின்றநின்தன்மை — எனது உள்ளத்திலுள்ள மல இருளை உனது அருட்பேரொளியாலே முற்றும் நீக்கி, அவ்வுள்ளம் சிவத்தன்மை நிறையும்படிசெய்து நீ என்னோடு இரண்டற (அத்துவிதமாய்)க்கலந்து நிலையாக நிற்கும் பேரருட்டிறனால்; நீயல்லால் பிறிதுமற்று இன்மை — நீ உலகுளெங்கும் ஒழிவற அறிவாய் நிறைந்திருந்தாலன்றி எந்த உயிர்ப்பொருளும் இயங்கவும் அறியவும் செய்யாது, எந்த உயிரில் பொருளும் இயங்காது என்ற உண்மையை; நினைப்பற நினைந்தேன் — எனது உள்ளத்தில் விளங்கும் நினைப்பும் மறப்பும் நீங்கின மெய்யுணர்வினால் நான் அறிந்தேன்; அணுவாய்ச் சென்று சென்று (உம்) — கட்டுநிலையில் (பெத்தநிலையில்) ஒவ்

வொரு உயிருக்கும் அதன் பருவத்துக்குத்தக்கபடி அவ்வுயிரேயாய் அதனுடன் அத்துவிதமாயியைந்து விளங்கிநின்று அதனுடைய வேட்கை அறிவு செயல்களைப் படிமுறையில் விளக்கி அதற்கேற்ற உலகபோகத்தை நுகரும்படி செய்தும்; தேய்ந்து தேய்ந்து (உம்) — வீட்டுநிலையில் (முத்திநிலையில்) அவ்வுயிர் உலகப்பற்றைவிட்டு இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் அடையத்தொடங்கித் தன்னையே (சிவத்தையே) நோக்கிநின்று படிமுறையில் மலவலி தேயப்பெறும்பொழுது மலவலிதேய்ந்து சிவமாய் விளங்கும் அளவுக்கேற்றவாறு நீயும் சிவமாய் விளங்கும் உயிராய் அதனோடு அத்துவிதமாய் இயைந்து நின்று அதன் வேட்கை, அறிவு, செயல்களைப் படிமுறையில் விளக்கி உயர்போகம் நுகருமபடி செய்தும்; ஒன்று ஆம் திருப்பெருந்துறை உறை சிவனே — (அவ்வுயிர் தனது மல வலி முற்றுந்தேய்ந்து சிவத்தன்மை நிரம்பி விளங்கும்பொழுது) பொருட்டன்மையால் இருபொருளாயிருப்பினும் அவ்வுயிரோடு நீ வேறு அவ்வுயிர்வேறு என்பதின்றிக் கலப்புத்தன்மையால் ஒருமைப்பட்டுவிளங்கும் திருப்பெருந்துறையில் கோயில்கொண்டருளிய சிவபெருமானே; நீ ஒன்றும் அல்லை — (உயிர், படிமுறையில் அறிவுப்பெருக்கம் அடைதற்குத் தத்துவப்படிகளிலேறிச் செல்லும்பொழுது நீ அவ்வுயிரோடும் தத்துவங்களோடும் ஒன்றாயும், வேறாயும், உடனாயும் கலந்திருந்தாலும் உயிரிலாவது தத்துவங்களிலாவது சிறிதும் தோய்ந்து மாறுதலடையாமல் உனது இயற்கைத் தன்மையில் நிலையாக விளங்குதலால்) நீ உயிர் அல்லாதவனாயும், தத்துவங்கள் அல்லாதவனாயும் அவற்றிற்கு வேறாயுள்ள நிறை அறிவுப்பொருளாயிருக்கினறாய்; நீஅன்றி ஒன்றில்லை — (அவ்வாறு நீ உயிராவது, தத்துவங்களாவது அல்லாதவனாய் அதனின்று வேறு தனிப்பொருளாயிருப்பினும்) அவ்வுயிரிலும், தத்துவங்களிலும் நீ நிறைந்திருக்காவிட்டால் உயிர இயங்கவும் அறியவும் செய்தற்கு வல்லதன்று; தத்துவங்களும் இயங்குதற்கு வல்லவன்று; ஆர்உன்னை அறியகிற்பார் — (அவ்வாறு நீ உயிரிலும் தத்துவங்களிலும் உண்மையும் இன்மையுமாய் விளங்கும் இயற்கைத்

தன்மையினல்) மாந்தரில் யார்தான் உன்னை உன்னோடு அத்துவித மாய்க்கலந்து நின்று உணராமல் உனக்கு வேறாய்நின்று தனித்த நிலையில் அறியவல்லவர். (ஒருவரும் இல்லை என்றபடி)

[வி-ரை] இன்று—சிவபெருமான் திருப்பெருந்துறைக்கு அடியார்கூட்டத்தோடு வந்து மாணிக்கவாசக அடிகளுடைய தலையின் மேல் தனது திருவடிகளைவைத்துத் தீக்கைசெய்து ஆண்டருளிய நாளைக்குறிக்கிறது. இந்த நாளில் அடிகளுடைய தீவிரதரசத்திநிபாத நிலையானது தீக்கையால் குறைவிலா நிறைவுபெற்றது என்பது குறிப்பிடப்பட்டது. "மெய்யே உன்பொன்னடிகள்கண்டு இன்று வீடுற்றேன்" (1-32) என்றும், "பெருந்துறையுள் மேய பெருமான் பிரியா திருந்துறையு மென்னெஞ்சத்தின்று" (47 – 5) என்றும், "களித்தனனுன்னைக் கண்ணுறககண்டுகொண்டு இன்றே (22 - 6) என்றும், "இன்று எனக்கு ஆரமுதானாய்போற்றி" (4 - 93) என்றும் அடிகள் பிறவிடங்களிலும் அந்நாளைக்குறிப்பிட்டருளியது காண்க. எழுகின்ற ஞாயிறேபோன்று — எழுகின்ற என்றசொல் உலகில் என்றசொல்லை அவாவி நிற்றலால் உலகில் எழுகின்ற என்று பொருள் உரைக்கப்பட்டது. பகுத்தறிவுடைய மாந்தர் எளிதில் உண்மையை அறிந்துகொள்ளுமாறு இயற்கைத்தன்மையில் அமைந்துள்ள உலக இயற்கைப்பொருள்களையே சைவசித்தாந்த உண்மைகளை விளககுதறகு மெய்கண்டார் முதலிய ஆசிரியர்கள் உவமானமாகக்கூறியிருககிறார்கள். நாம் புறக்கண்ணாற் காண முடியாத இறைவனோடு வேறறவிளஙகும் அருட்பேரொளியைப் புறக்கண்ணாற் காணக்கூடிய பகலவனினின்றும்வேறாகாத பகலவன் ஒளிஉவமையினல் அறிகின்றோம். மாந்தருக்குக் கட்டுநிலையில் கருவியால் விளஙகும் ஒருபுடை அறிவு, இரவிலுள்ள விளக்கொளிக்கும் வீட்டுநிலையில் அருளால்விளங்கும் அகவொளி அறிவு பகலிலுள்ள பகலவன் ஒளிக்கும் ஒப்புமைசெய்து விளக்கப்படுகின்றன. உள்ளத்து இருள்கடிந்து நின்ற நின்தன்மை — இருள் என்பது மல இருள். மலத்தினலுண்டாகும் அறியாமை. நின்ற என்பது எப்பொழுதும் நிலையான ஒருதன்மைத்தாய் நிற்கிற என்ற பொருள்

பட நின்றது. இயல்பு பற்றி 'நிற்கின்ற' எனக்கூறற்பாலது 'நின்ற' என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது. தன்மைஎன்ற சொல் அருட்பண்பை அல்லது சிவத்தன்மையைக் குறிக்கின்றது. அருள் ஆற்றலைக் குறிக்கின்றதெனினும் பொருந்தும். தன்மை—தன்மையால்; அதாவது சிவத்தனமை அடைந்ததனல். நீயல்லால் பிறிதுமற்று இன்மை — பிறிது என்ற ஒருமைப் பெயர்சசொல் இங்கே சாதி ஒருமைப்பெயராய்ச் சிவபெருமானினின்றும் வேறாயுள்ள உயிர்ப் பொருளையும் உயிரில் பொருளையும் குறிககிறது. நீ எல்லாமாயிருக்கிறாய் என்பது கருத்து. மற்று—அசைநிலை. இன்மை—விளங்காமை என்ற பொருள் குறிக்கிறது. நினைப்பற நினைந்தேன்—மல முற்றிலும் நீங்கி முழுஅருள் விளங்கப்பெற்ற உயிர் அறிதலும் அறியாமலிருத்தலுமின்றி எப்பொழுதும் ஒரேதன்மையில் இறைவனையேநினைந்து அறிந்துகொண்டிருத்தலால் நினைப்பற நினைந்தேன் என்றார். நினையாமல் நினைந்து என்ற சொற்றொடரும் இப்பொருளையே குறிக்கின்றது. இந்த முற்றறிவு நிலையில் நினைதலும் நினைதலால் அறிதலும் ஒன்றுபடுதலின் நினைந்தேன் என்பதற்கு அறிந்தேன் என்ற பொருள் கூறப்பட்டது. அணுவாய்ச்சென்று செனறு அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து — அணுவாய் என்ற சொல் சிங்க நோக்காய்ச சென்று சென்று எனற சொற்றொடருடனும் தேய்ந்து தேய்ந்து எனற சொற்றொடருடனும் இயைந்து பொருள்தர நிற்கின்றது. 'உம' சென்று சென்று என்பதன் பின்னும் தேய்ந்து தேய்ந்து என்பதன் பின்னும் தொக்கி நிற்கிறது. அணு — உயிர், ஆன்மா. சென்று சென்று என்ற அடுக்கு வினையெச்சச் சொல் மாந்தர், தங்கள் கட்டுநிலையில் அவரவர் ஒருபுடை அறிவுவிளக்கத்துக்குத் தக்கவாறு, முதலாவது ஒருவகை உலகபோகத்திற்குச் செனறு துய்த்து அதில் அமைதிபெறமல், பிறிதொருவகை உலக போகத்திற்சென்று துய்த்து அதிலும் அமைதிபெறமல், அவ்வாறே ஒவ்வொருவகை உலகபோகத்திலுஞ் சென்று சென்று துய்த்தலைக் குறிக்கிறது.இவ்வாறு ஒவ்வொரு வகை உலகபோகத்திலுஞ்சென்று துய்க்கும் மாந்தருடைய ஒருபுடையறிவு விளக்கத்துக்குத்தக்க அள

வில் ஒன்றாய் நின்று அவர்களுடைய வேட்கையை விளக்கி வேட்பித்தும், வேறாய் நின்று அறிவை விளக்கி அறிவித்தும், உடனாய் நின்று செயலை விளக்கிச் செய்வித்தும், அத்துவிதமாய் நின்று என்றும் ஒருநிலைத்தாயிருக்கிற இறைவனை ஆந்தந்த உயிராய்ச் சென்று சென்று என்று அடிகள் கூறியருளினர். இக்கருத்தை இருபாவிருபஃது 18-வது பாட்டில் "என்னுட் கரந்தென் பின்வந்தருளி—என்னையுந்தன்னையுமறிவினறியற்று — மென்னதியானெனு மகந்தையுங்கண்டி யாவ ரியாவை மியாகணுஞ் சென்று புக்குழிக்குப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்த்து — மிககபோகம் விதியால் விளைத்திட் — டெற்பணியாளா யெனைப்பிரியாதே— யோடி மீள்கெனவாடல்பார்த்திட்—டென்வழி நின்றன னெந்தை" என்று அருணந்தி சிவாசாரியார் கூறியருளினது காண்க. தேய்ந்து தேய்ந்து என்ற அடுக்கு வினையெச்சச்சொல், மாந்தர் வீட்டுநிலையில் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் ஆகிய நிலைகளைத் தங்கள் அறிவில் எய்தத்தொடங்கித் தங்களை இதுவரையுஞ் சேர்ந்திருந்த மலவலி தேய்ந்து தேய்ந்து படிமுறையில் சிவத்தன்மை அடையும்பொழுது மலவலிதேய்ந்து சிவத்தன்மை அடைந்த அளவுக்குத்தக்க பருவம் நோக்கி அவ்வுயிர்களேயாய் அவர்களறியும்படி தனைக்காட்டி அவர்களோடு ஒன்றாய் நின்று அவர்கள் வேட்கையை விளக்கி வேட்பித்தும், வேறாய்நின்று அறிவை விளக்கி அறிவித்தும், உடனாய்நின்று செயலைவிளக்கிச செய்வித்தும் உயர்போகம் படிமுறையில் நுகரச் செய்து முடிவில் சிவபோகம் நுகரசசெய்துவரும் இறைவனுடைய அருட்செயலைக் குறிக்கிறது. மலவலிதேய்ந்து சிவத்தன்மை அடையும அளவுக்குத்தக்கபடி வீட்டுநிலையிலுள்ள மாந்தர் உயர்போகம் துய்த்துவருதலால் தேய்ந்து தேய்ந்து எனறார். "என்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமாகிய ஈசனுக்கே" என்று சேரமான்பெருமாள் நாயனார் பொன்வண்ணத்தந்தாதி முதலாவது பாட்டிற் கூறியருளியது காண்க. ஏகனாயிருக்கிற இறைவன பல்லுயிர்கள்தோறும் அதனதன பருவத்துக்குத் தக்கவாறு அவ்வுயிரேயாய்த் தோன்றுதல்பற்றி அநேகன் என்றும் கூறப்படுகின்றான. சென்று

சென்று என்பது மாந்தருடைய உலகப்பற்றுநிலையையும் தேய்ந்து தேய்ந்து என்பது அவர்களுடைய சிவனருட்பற்று நிலையையும் குறிக்கின்றன. உலகப்பற்று நிலையில் இறைவன் உயிரேயாய் விளங்கவும், உயிர் அதனை மலமறைப்பினாலறியாது தன் முனைப்புக் கொண்டு முன்செல்லத்தான் அதன்பின் அது அறியாதவண்ணம் சென்று படிமுறையில் உலகபோகம் துய்ப்பிக்கின்றான் ஆதலின் இறைவனைச் சென்று சென்று என்று கூறுதல் பொருத்தமாயி ருத்தலையும், அருட்பற்று நிலையில் இறைவன் தன்னை உயிரின்பரு வததுகருத்தககபடி காட்டிக்கொடுத்து முன்செல்லவும், உயிர் அத னையறிந்து பின்செல்லவும் அது மலவலி தேயப்பெற்றுப் படிமுறை யில் உயர்போகம் துய்க்கும்படி செய்தலால் இறைவனைச் சென்று சென்று என்று சொல்லாமல் தேய்ந்து தேய்ந்து என்று சொல்லு தல் பொருத்தமாயிருத்தலையும் நோக்கியறிக. ஒன்று ஆம் திருப் பெருந்துறையுறை சிவனே — ஒன்று என்பது இங்கே உயிரோடு அத்துவிதமாய்க கலந்து ஒருபொருள் எனும்படி நிற்றலைக் குறிக்கி றது. ஆகும் என்பது ஆம் என இடைகுறைந்து நிற்கிறது திருப்பெருந்துறை யென்ற ஊரப்பெயருக்கு உள்ளுரைப் பொரு ளாய் மாணிக்கவாசக அடிகளைச சிவபெருமான் திருவடிகளை அடை யச்செய்த "மிருசைவத்துறை" யாகிய பேரருட்டுறை என்று கூறு தலுமாகும். உயிர்களுககுப் பேரின்பம கொடுககிற பேரின்பனாகிய சிவன பேரருளுடையன் ஆதலின் அவன் உறையுமிடம் திருப்பெ ருந்துறையாயது. ஒன்றும் அல்லை — ஒன்றும் — உயிர்ப்பொருள களில் ஒன்றும், உயிரில் பொருள்களில் ஒன்றும் எனறும் பொருள் பட நிற்கிறது. அல்லை என்ற குறிப்பு வினைமுற்று பொருட்டன் மையால் அவற்றினின்றும் வேறு என்ற பொருள்பட நிற்கிறது. நீ அன்றி ஒன்றில்லை — அன்றி என்ற சொல்லுக்குமுன் ஒன்றும் அல்லை என்பதற்குமுன் நிற்கிற 'நீ' வருவித்துப் பொருள் உரைக் கப்பட்டது. இல்லை என்பது இங்கேயும் விளங்குதலில்லை என்ற பொருள்பட நிற்கிறது. ஆருன்னை அறியகிற்பார்—அறியகிற்பார்' என்பதில் 'கில்' என்பது ஆற்றல் உணர்த்தும் இடைநிலை. இப்

பாட்டும் இதனோடு சேர்ந்த ஒன்பது பாட்டுக்களும் அடங்கிய கோயிற் றிருப்பதிகம் அநுபோக இலக்கணங் கூறுகிறது. இப்பாட்டில் அடிகள் தாம் அடைந்த அத்துவிதப் பேரின்பநிலையைக் கூறுகின்றார். முதல் இரண்டு அடிகளில் அடிகள் தாம் அடைந்த அருளொளி விளக்கத்தினால் அத்துவிதநிலையைஅநுபூதியில் அறிந்ததையும் மூன்றாவது அடியில் எல்லா உயிர்களும் தாம் அடைந்தவாறு அத்துவிதப் பேரின்பநிலையை அடைதற்கு இறைவன் சலிப்பின்றி ஓயாது செய்துவரும் பேரருட் செயலையும் கூறுகின்றார். அடிகள் தமது உள்ளத்தில் ஞாயிறுபோன்று இறைவன விளங்கி நிற்கின்ற அருட்பெருந்தன்மையையும, அவனோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்கின்ற தமது நிலையையும் காணும்பொழுது பிறவுயிர்களின் நிலையையும் காண்கினறார் ஆதலின் தமது அத்துவித நிலையை முன் இரண்டு அடிகளிலும் கூறியபின்பு மூன்றாவது அடியில் பிற உயிர்கள் பல்வேறு படிமுறைகளில் இறைவனோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையைக்கூறுகின்றார். நான்காவது அடியில் அடிகள் சதசத்தாயுள்ள உயிர், சத்தாயுள்ள இறைவனை சார்ந்து நின்றே அறியமுடியும் என்ற உணமையைக் கூறுகின்றார். அசத்தாகிய உலகம் விளங்கித் தோன்றாமையாலும் சதசத்தாகிய உயிர் தன் முனைப்பின்றி மடங்கி நிற்றலாலும் சத்தாகிய சிவமொன்றே காட்சிப்படுதல் சிவானுபவநிலைககு இலககணமென்பது இப்பாட்டில் கூறப்பட்டது.

---

395. பார்பதம் அண்ட மனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீருறு தீயே நினைவாதே லரிய
நின்மலா நின்னருள் வெள்ளச்
சீருறு சிந்தை யெழுந்ததோர் தேனே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாருற வெனக்கிங் காரய லுள்ளார்
ஆனந்த மாக்குமென் சோதி. கூO.

[ப-ரை] பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்து (உம்) — (இந்த) நிலஉலகமும் (ஏனைய) உலகஙகளுமாகிய பேருலகம் முழுவதுமாய்த் தோன்றியும்; பரந்தது (உம்) ஓர்படர் ஒளிப் பரப்பே — (அங்ஙனம் தோன்றியபின) அவ்வுலகங்களில் பரந்திருத் தலுமாகிய ஒப்பற்று எங்கும் நிறைந்திருககின்ற ஒளிப்பரப்பே; நீர்உறுதீயே — வெந்நீர்முழுவதும் பரந்து நிறைந்திருக்கின்ற வெம்மைபோல; புறக்கண்ணுக்குப்புலப்படாமல் உலகமுற்றும் பரந்து நிறைந்திருக்கின்ற நுண்ணியபொருளே; நினைவதேல் அரிய நின்மலா — அங்ஙனம் உலகில்பரந்து நிறைந்திருக்கின்ற உன்னை அவ்வுலகினோடேத்துவிதமாயும் உன்னின்வேறாயும் நின்று பசுபாச ஞானஙகளால் ஒருவர் அறியப்புகின் அவரறிவுககு எட் டாது கடந்திருக்கின்ற மலங்களினின்று நீங்கிய அநாதிமுத்தனே; நின் அருள் வெள்ளம் சேர்உறுசிந்தை எழுந்தது ஓர்தேனே—உனது அருள் முழுவதும்பதிந்து தீவிரதரசத்திநிபாதச் சிறப்புவாய்ந்துள்ள உள்ளத்தினை உடையவர்கள் (உன்னோடேத்துவிதமாய்நின்று உன் னைப் பதிஞானத்தாலுணர்தல்பற்றி) அவர்களுடைய உள்ளத்தில் எழுவதாயுள்ள தேன்போன்ற இன்பப்பொருளே; திருப்பெருந் துறை உறை சிவனே — திருப்பெருந்துறையில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே; ஆநந்தம் ஆக்கும் என்சோதி — (எனது உள்ளத் திலும் நீ அஙஙனம் தீவிரதரசத்திநிபாதத்தை நிரம்பச்செய்து திருப் பெருந்துறையில்வைத்து என்னை ஆண்டருளி) எனனைப்பேரின்ப வடிவமாகச்செய்த பேரொளிப்பொருளே; எனக்கு இஙகு உறவு உள்ளார் யார் அயல்உள்ளார் யார் — அவ்வாறு உன்னல் பேரின்ப மளிக்கப்பெற்ற எனக்கு இந்நில உலகில் உறவினராயுள்ளார் யார், பகைவராயுள்ளார் யார் (ஒருவருமில்லை என்றபடி).

[வி-ரை] பார்பதம் அண்டம் அனைத்தும்ஆய் முளைத்து — பார் = இந்நில உலகம். பதம் — இடம். அது இஙகே சாதி ஒரு மைப்பெயராய் ஏனைய உலகஙகளைக்குறிக்கிறது. அண்டம் இந்த நிலவுலகமும் பிறவுலகஙகளும் சேர்ந்தபேருலகம். பார் என்ற சொல்

லுக்கு மண் (பிருதிவி) என்று பொருளும், அண்டம் என்ற சொல் லுக்கு வான் (ஆகாயம்) என்ற பொருளும்கொண்டும், பார்பதம் அண்டம் என்ற சொற்றொடரைப்பார் அண்டம் பதம் என மாற்றி யும், மண்முதல் வான வரையுள்ள ஐந்துபூதங்களும் நிறைந்திருக்கிற இடங்கள் என்று பொருள்கொள்ளினும் பொருந்தும். "பாரொடு விண்ணாய்ப் பரந்தவெம்பரனே" என்று அடிகள் (28 - 1) கூறியி ருத்தல் காண்க. அனைத்தும் = முழுவதும். முளைத்து = தோன்றி. உம் தொக்கி நின்றது. மாயை கலந்திருக்கிற தூவெளி (ஞானாகாசம்) யிலிருந்து உலகங்கள் முழுவதும் தோன்றியதால் அடிகள் 'பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்து' என்ற சொற்களால் சத்திகள் அடங்கியிருக்கிற ஒரு விதையிலிருந்து மரம்ஒன்று தோன்றுதல் போல, சத்தித்தொகுதிகளாயுள்ள தூவெளியிலிருந்து உலகங்கள் தோன்றின என்ற கருத்து குறிப்பிடப்பட்டது. பரந்தது ஓர்படர் ஒளிப்பரப்பே—பரந்தது வினையாலணையும் பெயர். படர்—எங்கும் நிறைந்திருக்கின்ற பரப்பு = எள்ளில் எண்ணெய்போல் ஓரிடமும் ஒழியாது நிறைந்திருத்தல் இந்தத்தூவெளியிலிருந்து மாயையின் காரியமாய் உலகங்கள் தோன்றியபின்னும் அத்தூவெளிகாரண ரூபமாய் உலகங்கள் முழுவதிலும் பரந்து நிறைந்திருத்தலால், பரந்தது ஓர் படரொளிப்பரப்பே என்றார். நீருறுதீயே — தீ என் பது இங்கே ஆகுபெயராய் அதன்குணமாகிய வெம்மையைக்குறிக் கிறது. நினைவதேல் அரியநின்மலா — பின்னே கூறுகிறபடி பதி ஞானத்தாலன்றி சிவபெருமான் பசுபாசஞானங்களால் அறியப் படான் என்பார், நினைவதேலரிய நின்மலா என்றார். நினைவதேல் — ஏல் — வருங்கால வினையெச்சவிகுதி. 'நினைவதேலறிய' என் பதைச் சிந்தை நினைவதேல் நினைவரிய எனவிரிக்க. "நினைப்பதாகச் சிந்தைசெல்லுமெல்லை—நினைத்தனையுமாவதில்லை" என்று அடிகள் (5 – 76) கூறியது காண்க. சீர்உறுசிந்தை எழுந்தது ஓர் தேனே — சீர் – சிறப்பு; தீவிரதரசத்திநிபாதம் நிரம்பப்பெற்ற சிறப்பு. தீவிரதரசத்திநிபாதம் நிரம்பப்பெற்ற சிந்தை சீவகரண

மொழிந்து சிவகரணமாகமாறிச் சிவமேயாதலால் 'சீருறுசிந்தை எழுந்ததோர்தேனே' என்று அடிகள் சிவபெருமானை விளித்தார். "சிந்தையதென்னச் சிவனென்னவேறில்லை" என்றார் திருமூலரும் (2853). தேன் என்பது இங்கே தேன்போன்ற இனிமையைக்குறிக் கிறது. எழுந்தது — வினையாலணையும் பெயர். சீருறுசிந்தை எழுந்ததோர் தேன் என்பது உயிரில் விளங்கும் அருளொளியைக் குறிக்கிறது. மேலேகூறப்பட்ட தூவெளிவிளங்கப்பெறுதலால் உலகமுழுவதும் தனக்குவேறாய் தன்கண்ணடங்கப்பெற்ற உயிர், பின்னர் தனக்குத்தரிசனமான அருளொளியில் அடங்கி அங்ஙனம் அடங்கியதானுந்தோன்றாது அவ்வருளொளியில் சிவமாகிய முதலைக் காண்கிறது. இதுவே சிவதரிசனமாம். ஆநந்தம் ஆக்கும் என் சோதி — மேலே கூறப்பட்டவாறு அருளொளியில் சிவதரிசனஞ் செய்த உயிர், பின்னர் அச்சிவன் திருவடிகளை அடைந்து அச்சிவனி லடங்கிப் பேரின்பவாழ்வு அடைகிறது. இங்கே கூறப்பட்ட சோதி சிவனுடைய தனி ஒளியாகிய இன்பவொளி. இந்த இன்ப வொளி தம்மிடம் விளங்கப்பெறுதலால் அடிகள் பேரின்பமடைதல் பற்றி ஆநந்தம் ஆக்கும் என்சோதி என்றார். எனக்கு இங்கு உறவு உள்ளார் யார் அயல் உள்ளார் யார் — இங்கு – இவ்வுலகம். உள் ளார் என்பதை உறவு என்பதோடும் கூட்டுக. சிவபெருமான் திரு வடிகளை அடையப்பெற்றவர்கள் எல்லா உயிர்களையும் சிவன் எனவே காண்டலால் யாருறவெனக்கிங்கு யார் அயலுள்ளார் என் றார். அடிகள் இந்தப்பாட்டில் சிவபெருமானைப் பார்பதமண்ட மனைத்துமாய் முளைத்துப்பரந்ததோர் படரொளிப்பரப்பே" என்று விளித்தலால் தூவெளியும் நின்னருள்வெள்ளச் சீருறுசிந்தை யெழுந்ததோர்தேனே என்று விளித்தலால் அருளொளியும், ஆநந்தமாக்குமென்சோதி என்று விளித்தலால் சிவனுடைய தனிப் பேரின்ப ஒளியும் கூறப்பட்டன. தூவெளி அருளொளியில் அடங்கி அருளொளி சிவனுடைய தனிப்பேரின்ப ஒளியில் அடங்கு கின்றது. சிவனிடத்தில் விளங்குவதாயுள்ள இந்த மூன்று ஒளி களையும் திருமூலர்,

ஒண்சு டரானை உலப்பிலி நாதனை
ஒண்சு டராகியென் னுள்ளத் திருக்கின்ற
கண்சு டரோனுலகேழுங் கடந்தவத்
தண்சு டரோமத்தலைவனு மாமே.

என்று திருமந்திரம் 221-வது பாட்டிலும்,

தானந்தமா மென நின்ற தனிச்சுடர்
ஊனந்தமா யுலகாய் நின்ற வொண்சுடர்.

என்று திருமந்திரம் 2081-வது பாட்டிலும் கூறியருளியது நோக்குக.

முதலாவது கூறப்பட்ட தூவெளி ஒளி தன்னிடம் விளங்கப் பெறுதலால் உயிர், மலநீக்கம் செய்கிற ஒளிவிளக்கமாகிய அறிவு விளக்கத்தையும், இரண்டாவது கூறப்பட்ட அருளொளி விளங்கப் பெறுதலால் பசுத்துவ நீக்கத்தையும் சிவத்துவ விளக்கத்தையும் அடையச்செய்கின்ற அன்பு விளககத்தையும், மூன்ருவது கூறப் பட்ட தனிப்பேரொளி விளங்கப்பெறுதலால் திருவடிப்பேற்றை அடையச்செய்கின்ற செயலாகிய இன்பவிளக்கத்தையும் பெறுகின் றது. அறிவு, அன்பு, செயல் மூன்றும் பேரின்ப அநுபோக இலக்கணங்களாக ஏனைய கோயிற்றிருப்பதிகப் பாட்டுக்களிற்போல இந்தப்பாட்டிலும் கூறப்பட்டன.

---

396. சோதியாய்த் தோன்று முருவமே யருவாம்
ஒருவனே சொல்லுதற் கரிய
ஆதியே நடுவே யந்தமே பந்தம்
அறுக்குமா னந்தமா கடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் னிணையடி தந்தே. சுக.

[ப-ரை] சோதியாய்த்தோன்றும் உருவமே (சிறப்பு இயலில்) — ஒளியாய் (அடியார்களுக்கு)த் தோன்றுகின்ற வடிவமுடைய வனே; சொல்லுதற்கு அரியஅருவாம் ஒருவனே — அவ்வொளி வடிவமுமின்றி உருவமுடையவனென்று எவராலும் சொல்லமுடி யாத ஒப்பற்ற தனிப்பொருளே; பந்தம் அறுக்கும் மா ஆநந்தம் கடலே — உயிர்களுடைய மலக்கட்டினை ஒழிக்கின்ற பேரின்பக் கடலே; ஆதியே நடுவே அந்தமே — (பொது இயலில்) உலகத் தைத்தோற்றுதற்கு முதலாயும் காத்தற்கு நடுவாயும் அழித்தற்கு முடிவாயுமிருப்பவனே; தீதிலாநன்மைத் திருவருட்குன்றே-(உயிர் களுக்குப் பேரின்பமளித்தற்கண்) தீதுகலவாத நலமே செய்தற்குக் காரணமாயமைந்துள்ள திருவருள்மலையே; திருப்பெருந்துறை யுறை சிவனே — திருப்பெருந்துறையில் திருக்கோயில்கொண் டருளியிருக்கும் சிவபெருமானே; வந்து நின்இணை அடி தந்து— (திருப்பெருந்துறைக்கு நீ அந்தணன்வடிவில்) வந்து உன் இரண்டு திருவடிகளையும் (எனது தலைமேல்) வைத்து ஆண்டருளியபின்; நீபோவதோர் வகையானது எனக்கு அருளாய் — நீ என்னைத் தனியேவிட்டுப்பிரிந்து போவதற்குரிய முறைமை என்ன என்று எனக்குச்சொல்லியருளாய்.

[வி-ரை] சோதியாய்த்தோன்றும் உருவமே — மெய்யுணர் வுடைய அடிகளுக்கு உருவம் ஒளிக்குள் சூக்குமசத்தியாய் மறைந்து ஒளிமாத்திரம் அவரது அகக்கண்ணுக்குத்தோன்றுதலால் சோதியா முருவமே என்னுது சோதியாய்த்தோன்றும் உருவமே என்றார். புறக்கண்ணால் உலக உருவங்களை நோக்குவார்க்கு அவ்வுருவங்கள் பூதாகாச ஒளியால் காணப்படுகின்றன. அகக்கண்ணால் நோக்கும் அடிகளுக்கு உலகஉருவங்களெல்லாம் தூவெளியில் (ஞானஆகாசத் தில்) சூக்குமசத்திகளாக அடங்கித்தோன்றுமேயன்றி உலகஉருவங் களாகத்தோன்ரு. இக்கருத்தைத் திருமூலர் திருமந்திரம் 2681-வது பாட்டில்,

ஒளியை யறியி லுருவு மொளியும்
ஒளியு முருவ மறியி லுருவாம்
ஒளியி லுருவ மறியி லொளியே
ஒளியு முருக வுடனிருந் தானே

என்று கூறியருளினர்.

அருவாம் ஒருவனே — அருவம் என்றசொல் இங்கே உருவ மின்மையைக்குறிக்கிறது. மேலே கூறப்பட்ட தூவெளிஒளியும் (ஞானாகாச ஒளியும்) அதற்கு உள்ளொளியாய் இறைவனோடு பிரியாமலிருக்கிற அருட்சத்திக்குள் அடங்கும் இயல்புடையது. அவ்வாறு தூவெளி ஒளியானது அருட்சத்திகுளடங்கியிருக்குங்கால் இறைவன் அருட்சத்தியோடு அத்துவிதமாய்க்கலந்து ஒருவனேயாய் இருத்தலால் அருவாம் ஒருவனே என்றார். அருட்சத்தியோடு அத்துவிதமாய்க்கலந்திருக்கிற இறைவன் இன்ன உருவமுடையவன் என்று சொல்லப்படாதவன் ஆதலின், சொல்லுதற்கரிய அருவாம் ஒருவனே என்றார். அருட்சத்தியாகிய பராசத்தி தூவெளிஒளிக்கு உள்ளொளியாயிருக்கிறது என்பதைத் திருமூலர் திருமந்திரம் 2388-வது பாட்டில்,

"அண்டங்க ளேழுங் கடந்தகன் றப்பாலும்
உண்டென்ற பேரொளிக் குள்ளா முள்ளொளி
பண்டுறு நின்ற பராசத்தி யென்னவே
கொண்டவனன்றி நின்றா னெங்கள் கோவே"

என்று கூறியருளினார்.

பந்தம் அறுக்கும் மா ஆநந்தக்கடலே— தூவெளிஒளி தன்கண்ணடங்கியிருக்கும் அருட்சத்தியினொளியிலொடுங்கிய உயிர்கட்டு முழுவதும் ஒழிந்து இறைவனில் அடங்கிப் பேரின்பமுணர்தலால் பந்தமறுக்கும் மா ஆநந்தக்கடலே என்றார். ஆநந்தமானது அளவிலடங்காததாதலின் மா ஆநந்தக்கடலே என்றார். ஆதியே நடுவே அந்தமே — ஆதி நடு அந்தம் என்பன இறைவன் உலகத்தைத்

தோற்றுவித்துக்காத்து அழிக்கும் முத்தொழில்களையும் குறிக்கின் றன. முத்தொழில்களைச்செய்தல் இறைவனுடைய பொதுவியல். "ஆதியனுயந்தம் நடுவாகியல்லானே" என்றும் (1 - 73), "முந்திய முதல் நடுஇறுதியுமானாய்" என்றும் (20 - 8), அடிகள் கூறியருளி னமைகாண்க. நீதிலாநன்மைத் திருவருட்குன்றே — இஃது இறைவன் தீவிரதரசத்திநிபாதமடைந்த உயிர்களுக்குப் பேரின்ப மளித்தலாகிய அநுக்கிரகத்தொழிலைக்குறிக்கிறது. இத்தொழிலை உயிர்களுக்குசசெய்தலில் அவன்மறக்கருணை சிறிதுமின்றி அறக் கருணையே உடையனாதலான் நீதிலாநன்மைத் திருவருள் என்றார். அவனது கருணை உயிர்களுக்கு அருள்செய்தலில் என்றும்மாறாது சலிப்பில்லாத நிலையை உடையது ஆதலின் திருவருட்குன்றே என்றார். இணை அடி தந்து — தந்தபின என்பது தந்து எனத் திரிந்து நின்றது. ஏ — அசை. நீ போவதோர் வகையாது எனக் கருளாய் — வகை என்பது இங்கே முறைமையைக்குறிக்கிறது. அடிகள் தம்மை இறைவன் திருப்பெருந்துறைக்குவந்து ஆண்டரு ளியபின் தம்மை அடியார்கூட்டத்தோடு உடன்கூட்டிச் செல்லாது உலகிலிருக்கும்படி விட்டுவிட்டுப்பிரிந்து போனது என்ன முறைமை என்று அடிகள் இறைவனைக் கேட்கின்றார். தமது பிரி வாற்றாமையை அடிகள் வாழாப்பத்து முதலிய பலபதிகப்பாட்டுக் களிற் கூறியிருக்கின்றார். இந்தப்பாட்டிலும் அவர் தமது பிரிவாற் றாமையைக்கூறுகின்றார். 'பார்பதமண்டமனைத்துமாய்' என்ற முதற்குறிப்புப்பாட்டிற்போல இந்தப்பாட்டிலும் அடிகள் மூன்று ஒளிகளையுங் கூறுகின்றார். அடிகள் இறைவனைச் சோதியாய்த் தோன்றும் உருவமே என்று விளித்தலால் சத்தின் ஒளியும், அரு வாம் ஒருவனே என்று விளித்தலால் சித்தின் ஒளியும், பந்தம் அறுக்குமானந்தமாகடலே என்று விளித்தலால் ஆநந்தத்தின் ஒளி யும் கூறப்பட்டன. இம்மூன்று ஒளிகளும் முறையே மலம்நீங்கி ஒளிவிளங்கிய அறிவையும், பசுத்துவம்நீங்கிச் சிவத்துவம் விளங் கிய அன்பையும், பேரின்பமடைதலாகிய செயலையும் குறிக்கின்றன. இவை பேரின்ப அநுபோக இலக்கணங்களாம்.

397. தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா வுடலிடங் கொண்டாய்
யானிதற் கிலனொர்கைம் மாறே. கூஉ.

[ப-ரை] எந்தையே — எனது தந்தையே; ஈசா — என்னை ஆளுமிறைவனே; உடலிடங்கொண்டாய் — என்உடலை உனது திருமேனியாகக்கொண்டவனே; சிந்தை கோயில்கொண்ட எம்பெருமான் — (என் உடலை நீ திருமேனியாகக்கொண்டதுமல்லாமல்) எனது உள்ளத்தையும் நீ இருக்கும் வீடாகக்கொண்டு அதில் எப்பொழுதும் வீற்றிருக்கிற எமது தலைவனே; திருப்பெருந்துறையுறை சிவனே — (என்பொருட்டு) நீ எனது உடலிலும் உள்ளத்திலும் வீற்றிருப்பதல்லாமல் (எல்லாமக்கள் பொருட்டும்) திருப்பெருந்துறையிலும் கோயில்கொண்டு வீற்றிருக்கின்றவனே; தந்தது உன்தன்னை — (நீயும் நானும் பண்டமாற்றுச்செய்ததில்) நீ எனக்குக்கொடுத்தது உனது மெய்யறிவை (சிவபோதத்தை); கொண்டது என்தன்னை — (நீ என்னிடம் பெற்றுக்கொண்டது) எனது உயிரறிவை (சீவபோதத்தை); அந்தம் ஒன்று இல்லா ஆநந்தம்பெற்றேன் — (இவ்வாறு நாம் பண்டமாற்றுச்செய்ததன் பயனாக நான் உன்னிடமிருந்துபெற்ற மெய்யறிவினால்) முடிவில்லாத பேரின்பம் பெற்றேன்; என்பால் நீ பெற்றது ஒன்றுயாது—என்னிடமிருந்து உயிரறிவால் நீ பெற்றதொரு பொருள்யாது (ஒன்றுமில்லை என்றபடி); சங்கரா — சங்கரனே; சதுரர் யார் கொல் — நம்மிருவரில் சமர்த்தன் யார் (என்னிடத்திலொருபயனும் பெறாதநீயா, அல்லது உன்னிடத்திலிருந்து எல்லாப்பயன்களுக்கும் மேலாகிய பேரின்பமாகிய பெரும்பயன்பெற்ற நானா) யான் இதற்கிலன்

ஓர் கைம்மாறு — இங்ஙனம் நீ எனக்குப் பேரின்பங் கொடுத்த தற்குப் பதிலாக யான் செய்யுஞ்செயலொன்றுமில்லை.

[வி-ரை] எந்தையே — அடிகள் தமக்குச் சிவபெருமான் பேரின்பமளித்தது உயிர்த்தந்தை என்னும் கேண்மைபற்றி என்பதைக் குறிப்பிப்பார் முதற்கண் 'எந்தையே' என்றார். ஈசா — ஈசன் என்ற வடமொழிச்சொல் ஆளுகிறவன் என்று பொருள்படும். சிவபெருமான் திருப்பெருந்துறைக்கு வந்து தம்மை ஆண்டருளினதைக்குறிப்பிப்பார் ஈசா என்றார். உடல்இடம்கொண்டாய் — உடல் என்றசொல் சாதிஒருமையாய்ப் பருஉடல், நுண்ணுடல், காரண உடல் ஆகிய மூன்று உடல்களையுங்குறிக்கிறது. ஐம்பூத தத்துவங்களாகிய உடல்களை உபாதிகளாகக்கொண்டிருக்கிற உயிரானது தத்துவஙகளிடத்து இருவினைகளைச்செய்து அதுவதுவாய்ச சேராது, உடற்பிணிப்பினின்று நீங்கியபருவத்தில் அத்தத்துவங்களெல்லாம் தூவெளி (ஞானகாசம்) அருளொளியிலடங்கி நிற்கும் பொழுது சிவபெருமான் அவற்றைத்தனது திருமேனியாகக்கொள்கிறான் என்ற கருத்தை அடிகள் 'உடலிடஙகொண்டாய்' என்றதனாற்கூறினார். இங்ஙனம் சிவபெருமான் அடிகளுடைய உடலை இடமாகக்கொண்டது அடிகள் மலநீக்கம்பெற்று ஒளிவிளக்கமுடையராய் உடற்பற்றினின்றும் பொருட்பற்றினின்றும் நீங்கிச்சிவபெருமானது சத்துத்தன்மையைச் சார்ந்திருத்தலைக்குறிக்கிறது. சிந்தைகோயில்கொண்ட எம்பெருமான் — மும்மலப்பிணிப்பினின்று நீஙகிய உயிர்தானே, சிந்தைஎனும்படி சிவனோடொன்றியிருக்கிற சிந்தையானது சீவகரணத்தன்மை நீங்கிசசிவகரணத்தன்மையடைந்து விளங்குதலால் அத்தூயசிந்தையில் சிவபெருமான் எப்பொழுதும் நீங்காதுவிளங்கி வீற்றிருக்கின்றான் என்ற கருத்தைக் கூறுவார், அடிகள் 'சிந்தைகோயில்கொண்ட எம்பெருமான்' என்றார். திருநாவுக்கரசு அடிகள் (5 - 48 - 5) பாட்டில் "சிந்தையுட் சிவமாய்நின்ற செம்மையோடு" என்றும் (6 - 55 - 7, 10)-வது பாட்டுக்களில் முறையே "என் சிந்தைநீஙகா இறைவா" என்றும், "கோயிலா என்சிந்தை கொண்டாய்" என்றும் கூறியருளினமை

காண்க. சிவபெருமான் அடிகளது சிந்தையைக்கோயிலாகக்கொண்டது அடிகள் பசுத்துவம் நீங்கப்பெற்று சிவத்துவவிளக்கமுடையவராய் உயிர்ப்பற்றினின்று நீங்கிச்சிவத்தினது சித்துத்தன்மையைச் சார்ந்திருத்தலைக்குறிக்கிறது. அடிகள் (33 - 7) பாட்டில் "அன்றே யென்றனாவியு முடலுமுடைமையெல்லாமுங் குன்றேயனையா யென்னை யாட்கொண்டபோதே கொண்டிலையோ" எனறு கூறியதனால் சிவபெருமான் அடிகளது சிந்தையைக் கோயிலாகக்கொண்டது அவர் ஆவியைக்கொண்டதனாலும் உடலை இடமாகக்கொண்டது அவர் உடலைக்கொண்டதனாலும் பெறப்படுகின்றன. உடைமையைக்கொண்டது உடலைக்கொண்டதிலடங்கும். சிவபெருமானுக்கு உயிர் அடிமைப்பொருளாயும் உடலும் பொருளும் உடைமைப்பொருள்களாயும் எப்பொழுதுமிருத்தலால் உயிரானது தான் மலப்பிணிப்பினின்று நீங்கி வீடு அடையும்பொருட்டு அவனாற் கொடுக்கப்பெற்ற உடல்பொருள்களை அவனிடமொப்புவித்துத் தானும் தன்முனைப்பினின்று நீங்கினாலன்றி அவனிடத்துமீளா அடிமையாய்த் தாம் பின் கூறும் அந்தமொன்றில்லா ஆநந்தம் பெறுதல்முடியாது என்று தாம் உணர்ந்த உண்மையை மக்களுக்கு அறிவுறுத்தும்பொருட்டு அடிகள் சிந்தைகோயில்கொண்ட எம்பெருமான் என்றும், உடலிடங்கொண்டாய் என்றும் கூறினார். இந்த உண்மையையே அடிகள் இத்திருப்பதிகம் 5-வது பாட்டில் "சிறைபெறுநீர்போல் சிந்தைவாய்ப்பாயும் திருப்பெருந்துறையுறை சிவனே" என்றும், "இறைவனே நீ யென்னுடலிடங்கொண்டாய்" என்றும் கூறியருளினர். "அவை (பாசங்கள்) உடைமை ஆளாம் நாமங்கு" என்று சிவஞானபோதம் இரண்டாவது சூத்திரம் ஈற்றுவெண்பாக்கூறும் பொருளையும் நோக்கி இவ்வுண்மையை நன்கு அறிக. தந்தது உன்தன்னை கொண்டது என்தன்னை — 'தந்தது', 'கொண்டது', இரண்டும் அஃறிணை ஒன்றன்பால் இறந்தகாலவினையாலணையும் பெயர்கள். தந்தது — தந்தபொருள். கொண்டது — கொண்டபொருள். தன் இரண்டும் அசைகள். மக்களிருவர் தத்தம்மிடத்துள்ள பொருளை ஒருவரோடொருவர் மாற்றி

பயனடைதலாகிய உலகவழக்கில்வைத்து அடிகள் தமக்குச் சிவ பெருமான் மெய்யறிவை (சிவபோதத்தை)த் தந்தருளியதையும், அம்மெய்யறிவைப் பெற்றதனால் தாம்தம்மிடத்து முன்னிருந்ததன் னறிவு (சீவபோதம்) முற்றும் நீங்கியதையும் உருவகப்படுத்தி ஓது வோருக்கு நகைச்சுவைபயக்கும்படி தந்தது உன்தன்னை கொண்டது என்தன்னை என்று கூறினர். இதனால் சிவஞானபோதம் 10-ம் சூத்திரம் முதலதிகரண வெண்பாவில் "நானெனவொன்று — இல் லென்று தானே எனுமவரைத் தன்னடிவைத் தில்லென்று தானு மிறை" என்று கூறப்பட்ட உண்மை இங்கே கூறப்பட்டது. அறிவு சிவனுக்கும் உயிர்க்கும் பொதுப்பொருளாயிருத்தலால் உன்னை யென்பதற்கு உன் அறிவு (மெய்யறிவு) என்றும், எனனை என்பதற்குத் தன்னறிவு (உயிரறிவு) என்றும் பொருள் உரைக்கப் பட்டது. இருவருக்கும் அறிவு பொதுப்பொருளாயிருப்பினும் சிவ னறிவு மலப்பிணிப்பில்லாது நிறைந்த அறிவாயும், உயிரறிவு மலப் பிணிப்புடைய குறைந்த அறிவாயுமிருத்தலால் உயிர்வீடடைதலுக் குச் சிவனைச்சார்ந்து அவனோடு அத்துவிதமாய்க்கலந்து சிவனு டைய நிறைந்த அறிவைப்பெறுதல் இன்றியமையாமை நன்கு தெளிவாகும். இதுபற்றியன்றோ அடிகள் இத்திருப்பதிகம் 4-வது பாட்டில் "குணங்கடாமில்லாவின்பமே உன்னைக்குறுகினேற்கினி யென்னகுறையே" என்று கூறினர். உலகவழக்கில் பண்டமாற்றுச் செய்கிற இருவரும் தத்தமிடத்துள்ள புறப்பொருளையேகொடுத்து மற்றொருவரிடத்திலுள்ள புறப்பொருளொன்றைப் பதிலாகப் பெற் றுப் பயனடைதலானும், சிவபெருமான் உயிரினிடத்துப் பெறத் தக்கதும் பெறுவதுமாகிய பொருளொன்றுமில்லையாதலானும், உயிர் தன்னிடம் சிவனுக்குக்கொடுக்கும் பொருள் ஒன்றுமில்லாது அவ னிடமிருந்து பெரும்பயனாகிய வீட்டின்பத்தை அடைதலானும் இப்பண்டமாற்று உவமை ஒருவாறு ஏகதேச உவமையாகக் கொள் ளத்தக்கது. கட்டுநிலையிலும், கட்டுநீங்கிய நிலையிலும் மலப்பிணிப் புடைய உயிரானது என்றுஞான்றும் நீங்காத புகலிடமா யிருக்கிற சிவபெருமானை அடைந்து தான், முறையே சிற்றின்ப

வாழ்வையும் பேரின்பவாழ்வையும் பெறுதற்கு உரியது என்ற கருத்து இதனாலே கூறப்பட்டது. சிவபெருமான் தன்னை உயிர்க்கு ஈதல் அவனது பேராற்றலையும் பேரருளையுங்குறிக்கின்றது. இவ்வுண்மையை உய்யவந்த தேவநாயனார் திருவுந்தியார் 6-வது பாட்டில் "நஞ்செயலற்றிந்த நாமற்றபின்னாதன் தன்செயறானே யென்றுந் தீபற—தன்னையே தந்தானென்றுந்தீபற" என்று கூறியருளினார். அந்தம் ஒன்று இல்லா ஆநந்தம்பெற்றேன்—வீடுபெற்ற உயிர் சிவபெருமானைச் சேருந்தோறும் பெறுஞ்சிவபோகம் புதிதுபுதிதாய் வளர்ந்துகொண்டே இருத்தலால் அடிகள் 'அந்தமொன்றில்லா வாநந்தம்பெற்றேன்' என்று தமது சிவாநுபவத்தைக் கூறியருளினார். இதனால் அடிகள் சிவத்தினது ஆநந்தத்தன்மையைச்சார்தல் கூறப்பட்டது. 'உடலிடங்கொண்டாய்' என்றும், 'சிந்தையே கோயில்கொண்ட வெம்பெருமான்' என்றும் முறையே சத்துத்தன்மையைச் சார்தலையும் சித்துத்தன்மையைச் சார்தலையுங்கூறின அடிகள் 'அந்தமொன்றில்லா ஆநந்தம்பெற்றேன்' என்றுகூறியதை நோக்குக. இதனால் சிவனுக்கே உரிய ஆநந்தத்தன்மையை உயிர் அவனிடத்திலிருந்தே பெறல்வேண்டும் என்ற உண்மைகூறப்பட்டது. என்பால் நீ பெற்றது ஒன்றுயாது — ஒன்று – ஒருபொருள். சிவபெருமான் யாதொரு குறைவுமில்லாது நிறைந்தபொருள் (பரிபூரணப்பொருள்).உயிர்மலப்பிணிப்பினாலே குறைவுடையபொருள். சிவபெருமான் அடிகளிடத்துப் பெறத்தக்கபொருள் ஒன்றுமில்லை என்பது கருத்து. சங்கரன் — இன்பஞ்செய்கிறவன். எல்லா உயிர்களுக்கும் இன்பஞ்செய்கிற வரம்பிலின்பமுடைய நீயே 'சதுரார் யார்' என்பதனை அறிந்து சொல்லுதற்குத்தக்கவன் என்பதைக் குறிப்பிப்பார் 'சங்கரா' என்று விளித்தார். உண்மையில் யாவன் பொருட்பற்றில்லாது எல்லாப் பொருள்களையு மிழக்கின்றானோ அவனே எல்லாப்பொருள்களையுமுடைய வாழ்வுச்சிறப்பை அடைகின்றான். இதுபற்றி ஆசிரியர் திருவள்ளுவா "நத்தம்போற்கேடு முளதாகும்சாக்காடும் — வித்தகர்க்கல்லாலரிது" என்று கூறினார். யார்கொலோ என்பதில் கொல் ஐயப்பொருளை உணர்த்துகின்றது.

ஓ — அசை. யான் இதற்கு ஓர் கைம்மாறு இலன் — அடிகள் தாம் சிவபெருமானிடத்துத்தம்முடைய உயிர் உடல் உடைமை எல்லாம் ஒப்புவித்து அவனாலாட்கொள்ளப்பெற்றபின், சிவபெருமான் தமக்குச்செய்த கைம்மாறில்லாத உதவிக்குப்பதிலாகக்கொடுப்பதற்கு ஒருபொருளும் தம்மிடம் இல்லை என்பார் யானிதற்குக்கைம்மாறிலன் என்று கூறினார். ஓர் என்பது ஓர் எனக்குறுகி நின்றது. கைம்மாறே என்பதிலுள்ள ஏ — அசை.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# உரு. செத்திலாப்பத்து.

---

செத்திலாப்பத்து என்பதில் பத்து என்பது பத்துப்பாட்டுக்களடங்கிய பதிகமாகும். செத்திலாப்பத்து என்பது உடலுமுயிரும் சீவித்துநில்லாது செத்திடல்வேண்டும் என்று இறைவனைநோக்கி அடிகள் வேண்டிக்கொள்கிற பத்துப்பாட்டுக்களடங்கியதோர் பதிகமாகும். இது பொருளென்பது அடிகள் முதலாவது பாட்டில் செத்திலேன் என்றும், இரண்டாவது பாட்டில் உடல் தன்னைச் செற்றிலேன் என்றும், மூன்றாவது பாட்டில் எனைச்செத்திடப் பணியாய் என்றும், ஐந்தாவது பாட்டில் காயமாயத்தைக்கழித் தருள் செய்யாய் என்றும், ஆறாவது பாட்டில் உடல்போக்கிடங்காணேன் என்றும், இறக்கிலேன என்றும் கூறுதலினால் விளங்கும். உடல் செத்திடல் எனதென்னும் புறப்பற்று நீங்குதலையும், உயிர்செத்திடல் நானென்னும் அகப்பற்று நீகுதலையும் குறிக்கும். இருவகைப்பற்றுக்களினாலாகிய மலவாதனை தாக்குதலுககு இடமாயிருக்கிற இவ்வுலகில் வாழாமல் இறைவனோடு தொண்டர்கூட்டத்தில் வாழ்ந்து அளவறுக்கொணாத சிவானந்தம் அடைதல்வேண்டுமென்று அடிகள் இறைவனை வேண்டிக்கொள்கின்றார். இது அவர் வேண்டுகோள் என்பது அவர் ஏழாவது பாட்டில் சேயனாய் நின்றலறுவ

தழகோ என்றும் எட்டாவது பாட்டில் தொண்டரிற்கூட்டாய் என்றும், ஒன்பதாவது பாட்டில் வந்திடப்பணியாய் என்றும், பத்தாவது பாட்டில் களிப்பெலாமிகக் கலங்கிடுகின்றேன் என்றும கூறுதலினுல் விளங்கும்.

## சிவானந்தம் அளவறுக்கோணுமை.

சிவம் என்ற தமிழ்ச்சொல்லோடு ஆனந்தம் என்ற வடமொழிச் சொல் சேர்ந்தாகிய சொற்ருெடரோடு அளவறுக்க, ஒண்ணுமை என்னும் இரண்டு தமிழ்ச்சொற்களாகிய சொற்ருெடர் சேர்ந்து சிவானந்தம் அளவறுகொணுமை என்ருகியது. சிவானந்தம் என்பது உயிர், தனிமுதற்பொருளாகிய சிவத்தோடு இரண்டறக்கலந்து ஒற்றித்து நின்றுணரும் பேரின்பவுணர்வு. அளவறுக்க ஒண்ணுமை என்பதில் இடையில் ககரஉயிர்மெய்யிலுள்ள அகரமும் ஒகரத்துக்குப்பின்னுள்ள ணகரஒற்றும் தொக்கிநிற்ப அளவறுக்கொணுமை என்ருகியது. சிவானந்தமளவறுக்கொணுமை என்பது சிவானந்தமாகிய பேரின்பம் இன்னதென்றும் இவ்வளவினதென்றும் வரையறுத்துச் சொல்லமுடியாமை. பேரின்பமடைந்தவொருவர் அதனைத்தம்முள்ளத்திலுணருந்தோறும் மேலும் மேலும் பெருகிவளர்தலால், அப்பேரின்பம் அளவுபடாததாயிற்று (Infinite bliss).

[எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

399. புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
யுண்டி யாய யண்ட வாணரும் பிறரும்
வற்றி யாருநின் மலரடி காணு
மன்ன வென்னையோர் வார்த்தையுட் படுத்துப்
பற்றினுய் பதையேன் மனமிக வுருகேன்
பரிகி லேன்பரி யாவுடல் தன்னைச்

## செத்திலாப்பத்து.

செற்றி லேனின்னுந் திரிதரு கின்றேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே சுசு.

[ப-ரை] திருப்பெருந்துறை மேவியசிவனே— (திருப்பெருந் துறையில் (குருந்தமரத்தடியில் திருக்கோயில்கொண்டு) வீற்றிருக் கின்ற சிவபெருமானே; அண்டவாணரும் — விண்ணுலகில் வாழ் கின்ற விண்ணவரும்; பிறரும் - மண்ணுலகிலுள்ள மாந்தரும்; யாரும் — ஆகிய எவரும்; புற்றுமாய் மரமாய் — (அசைவற்றிருந்து நெடுங்காலம் தவஞ்செய்தலினாலே அவர்களின்மேல் புற்றுவளர்ந்து) புற்றாயும் (மரம்வளர்ந்து) மரமாயும் இருந்து; புனல் காலே உண்டியாய் — நீரையும், காற்றையும் உணவாக அருந்தியும்; வற்றி — தங்கள் உடல்வற்றும்படியாய் அருந்தவஞ்செய்தும்; நின்மலரடி காணா — உன்னுடைய திருவடிகளைக்கண்டு பேரின்பமடைய முடி யாதபடி (நீ அரும்பேரொளிப்பொருளாயிருந்தும்); மன்ன — (எனக்கு மிக எளியனாய்த் திருப்பெருந்துறைக்குவந்து என்னை அடிமையாக ஆண்டருளிய) ஆண்டவனே; என்னை ஓர் வார்த்தை யுட்படுத்து — எளியேனாகிய எனக்கு (வேதாகமம் முதலிய கலைக ளெல்லாங்கூறுகிற பொருளைத் தன்னுள்ளடக்கிக்கொண்டிருக்கிற) ஓரெழுத்தொரு மொழியாகிய பேசாமந்திரத்தை அறிவுறுத்தி என் னறிவை அதனுள்ளடங்கும்படிசெய்து; பற்றினாய் — (எனதறி யாமையைக்கெடுத்து ஆண்டருளி என்னோடத்துவிதமாய்க்கலந்து) பொருந்தி நின்று நான் பேரின்பமடையும்படிசெய்தாய்; மனம்பதை யேன் — (அங்ஙனம் நீ என்னை ஆண்டருளியபின் என்னைவிட்டுப் பிரிந்து போனமைக்கு) மனம்துடித்து நடுங்கமாட்டேன்; மிக உரு கேன் — அன்பினால் மிகவும் உருகமாட்டேன்; பரிகிலேன் — பிரி வாற்றாமையால் உயிர் உடலிலிருந்து நீங்கமுடியாதவனாயிருக்கி றேன்; பரியாவுடல் தன்னைச்செற்றிலேன் — அங்ஙனம் உயிர் நீங் காதவுடலை அழித்து ஒழிக்கமாட்டேன்; இன்னுந் திரிதருகின்றேன் — இறைவன் என்னைவிட்டுப் பிரிந்தபின்னும் இவ்வுடலோடு உல கில் வாழ்ந்து திரிந்துகொண்டிருக்கின்றேன்.

[வி-ரை] அண்டவாணரும் பிறரும் — பிறரும் என்பது அண்டவாணருக்குப்பின் வருதலால் தவஞ்செய்கிற மாந்தரைக்குறிக்கிறது. புற்றுமாய் மரமாய் புனல்காலேயுண்டியாய்வற்றி — இதனால் மண்ணவரும், விண்ணவரும் தங்கள் பிராணவாயுவை இடைகலை, பிங்கலை நாடிகளிற் செல்லாமற்றடுத்து சுழுமுனை நாடிவழியாய்ச் செலுத்தி நீண்டகாலம் தொடர்ந்து செய்யும் அருந்தவம் குறிக்கப்படுகின்றது. மன்ன — விளிப்பெயர்; அரசன், தலைவன் என்று பொருள்படும். மன்னன் என்ற சொல் இங்கே ஏற்புழிக்கோடலால் ஆண்டவன் என்னும் பொருளில் வந்தது. என்னை ஓர் வார்த்தையுட்படுத்து — அடிகள் இந்த ஊமையெழுத்தாகிய பேசா மந்திரத்தைப் பற்றி,

> பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த
> மாசின் மணியின் மணிவார்த்தை—பேசிப்
> பெருந்துறையே யென்று பிறப்பறுத்தேன் நல்ல
> மருந்தினடி யென் மனத்தே வைத்து. (48–7)

என்ற பாட்டிலும் "ஓங்காரத் துட்பொருளை ஐயனெனக் கருளியவாறார்பெறுவார்" என (51 - 7)லும் கூறியிருக்கின்றார். திருமூலரும், "உரையற்றதொன்றை உரைத்தான் எனக்கு," என்று திருமந்திரம் 2648-வது பாட்டிலும்,

> அங்கமும் ஆகம வேதம தோதினும்
> எங்கள் பிரானெழுத் தொன்றில் இருப்பது
> சங்கைகெட் டவ்வெழுத் தொன்றையுஞ் சாதித்தால்
> அங்கரை சேர்ந்த அருங்கல மாமே

என்று திருமந்திரம் 2720-வது பாட்டிலும் பேசாமந்திரத்தைப் பற்றிக் கூறியருளினார். பற்றினய்-பற்றுதல்—பேரின்ப வுணர்வுறும்படி அவரை இறைவன் அத்துவிதமாய்ப் பொருந்துதல். மனம் பதையேன் மிக உருகேன் — பதைத்தலும், உருகுதலும் பிறிவாற்றாமை

பற்றி மனத்தினுள் நிகழும் நிகழ்ச்சிகள். பரிகிலேன் — பரிதல் பிரிவாற்ருமை பற்றி உயிர் இயல்பாகவே உடலைவிட்டு நீங்குதல்; இது தலைமையன்பு காரணமாக நிகழுவது. பரியாவுடல் தன்னைச் செற்றிலேன் — செற்றுதல் என்பது அங்ஙனம் உயிர் நீங்காத உடலை வலுவில் நீக்குதல். இன்னுந்திரி தருகின்றேன் — திரிதருதல் — திரிதல் அடிகள் இந்தப்பாட்டில் இறைவன் தமக்குத் திருப்பெருந்துறைக்கு வந்து பேரின்பமருளியபின் இறைவனோடும், அடியாரோடும் கயிலைக்குச்சென்று பேரின்பம் நுகராதபடி இவ்வுலகிலிருக்கச் செய்து தம்மைவிட்டுப் பிரிந்துபோன ஆற்ருமை பற்றி தம்முடைய மனவருத்தம் கூறுகின்ருர்.

---

திருப்பெருந்துறையிலருளிய

# உச. அடைக்கலப்பத்து.

---

அடைக்கலப்பத்தென்பது அடைக்கலம், பத்து என்னும் இரண்டு தமிழ்ச்சொற்களாலாகி அவை புணரும்போது நிலைமொழியீற்றிலுள்ள மகரவொற்றுக்கெட்டும், பகரவொற்றுத்தோன்றியும் அடைக்கலப்பத்து என்ருகியது. அடைக்கலம் என்பது சிறியோனொருவன், பெரியோனொருவனிடஞ்சென்று தானடைந்துள்ள துன்பத்தை நீக்கிக்காப்பாற்றும்படி வேண்டிக்கொண்டு அவனிடம் சரண்புகுதலாகும். இங்கே அடிகள் தம்மை இறைவனுண்டருளிய பின் அவனைப்பிரிந்து உலகில்வாழும்பொழுது தம்மைப்பிராரத்துவ வினைமலவாசனைகாரணமாக உலகவாதனை தாக்காதிருக்கும்படி வேண்டி இறைவனிடம் சரண்புகுதலாகும். எப்பொழுதும் உயிர்களுக்கு இறைவனே ஒழியாப்புகலிடமாகும் என்னும் சித்தாந்தவுண்மைபற்றி சீவன்முத்த நிலையையடைந்த அடிகளும் தமக்கு இறைவன் புகலிடமென்று கூறுகின்ருர். 4, 5, 6, 7 பாட்டுக்களில் கூறுகிறபடி பெண்ணிடம் மயக்கமுண்டாவது உலகவாதனைபற்றி

யாகும். 1, 4 பாட்டுக்களில் அடிகள் தாம் இறைவனாலாட்கொள்ளப்பட்டவுடனே இறைவனுடன் கயிலைக்குச்செல்லாது, உலகிலிருப்பதற்குக்காரணம் தமது பக்குவமின்மையென்று கூறுகினார். இறுதிப்பாட்டில் தமது மலபரிபாகத்தின் தகுதியையறிந்துகொண்டு தமக்கு அருளார் அமுதத்தை வழங்கும்படி அவர் இறைவனை வேண்டிகொள்கின்றார்.

## பக்குவ நிண்ணயம்.

பக்குவம் என்பது தகுதி. அது இங்கே மலபரிபாகத்தினாலுண்டாகும் தகுதியைக்குறிக்கிறது. மலபரிபாகம் என்பது ஒருவர் தாம் அருளைச்சார்தலினாலே மலம் அவரைச் சார்தற்கு வலியிழந்து நிற்குந்தன்மையில் அவருக்குண்டாகும் பக்குவம். நிண்ணயம் என்ற சொல் நிர்ணயம் என்றும், நிருணயம் என்றும் எழுதப்படுவதுண்டு; நிச்சயித்தல் என்பது பொருள். பக்குவநிண்ணயம் என்பது தகுதி இவ்வளவினதென்று நிச்சயித்தலாகும்.

[ கலவைப் பாட்டு ]

திருச்சிற்றம்பலம்.

408. செழுக்கமலத் திரளனநின் சேவடிசேர்ந்தமைந்த, பழுத்தமனத் தடியருடன் போயினர்யான் பாவியேன், புழுக்கணுடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல்வி ஞானமிலா, அழுக்குமனத் தடியே னுடையாயுன் னடைக்கலமே. சா௪.

[ப-ரை] உடையாய் — என்னை யடிமையாகக்கொண்ட ஆண்டவனே; செழுக்கமலத் திரளென — செழுமையான செந்தாமரைப் பூக்களின் செறிவுபோன்ற; நின்சேவடி சேர்ந்து அமைந்த

— நின்னுடைய செவ்விய திருவடிகளை அடைந்து (பேரின்பம் பெறுதலினாலே) அமைதியுள்ள; பழுத்த மனத்து அடியர்—கனிந்த பக்குவமுற்ற மனத்தையுடைய அடியார்கள்; உடன்போயினர் — திருப்பெருந்துறையிலிருந்து நின்னோடு கயிலைக்குச்சென்றனர்; பாவியேன்யான் — முன்பாவஞ்செய்த காரணத்தால் பக்குவமில்லாத யான்; புழுகண் உடை — புழுக்கள் தமக்கிடமாகக்கொண்ட; புன்குரம்பை — இழிவான உடம்பையும்; பொல்லாக்கல்வி—நான் கற்ற தீமையைத்தருங்கல்வியினால்; ஞானமிலா — நின்னையறியும் மெய்யறிவில்லாத; அழுகுமனத்தடியேன்—மலம்சேர்ந்தமனத்தை உடையவனாகிய எளியேன்; உன் அடைக்கலம் — நின்னுடைய திருவடிகளைப் புகலிடமாகச் சார்ந்தேன் (என்னைக்காப்பாற்றி அருளாய்). நானுலகிலிருக்கும்போது என்னை உலகவாதனை தாக்காமலிருக்கும்படிசெய்து நீ என்னைக்காப்பாற்றியருளல் வேண்டுமென்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] உடையாய் — அடிகள் தாம் இறைவனிடம் அடைக்கலம்புகுதற்கு அவன் தம்மைத் திருப்பெருந்துறையில்வைத்து அடிமையாகக்கொண்டதைக் காரணமாகக் குறிப்பிப்பார் உடையாய் என்று விளித்தார். செழுககமலத்திரளன — செழுங்கமலத்திரளன்பது செழுக்கமலத்திரள் என எதுகைநோக்கித்திரிந்தது. கமலம் என்பதிங்கே செந்தாமரையைக் குறிக்கிறது. நின்சேவடி சேர்ந்தமைந்த — செம்மை + அடி = சேவடி. செம்மை — நேர்மை. இறைவன் தன்னை வேட்கையறிவு செயல்களை நேர்மையான முறையில் நிகழ்த்தி செம்மைமனத்தால் வழிபடும அடியவர்களைத், தானும் நேர்மையாய்த்தனது திருவடிகளால் பேரின்பத்தில் அழுத்துவித்தலால் சேவடி எனறா. சோந்து என்பது காரணப்பொருளில் வந்த வினையெச்சம்; சேர்தலால்; அதாவது சேர்ந்து பேரின்பம் பெறுதலால். அமைந்த — அமைதியாகிய திருப்தியுற்ற. பக்குவப்பட்ட உயிர்கள் இறைவன் திருவடிகளையடைதலினாலே முன் பெறாதிருந்த இன்பவமைதியைப் பெறுதலால் சேவடிசேர்ந்தமைந்த என்றார். பழுத்தமனத்தடியர் உடன்போயினர் — பழுத்தமனம்

என்பது உருவகம். ஓர் புளிப்பானகாயானது கனிந்திருக்கிற பக்குவமடைந்த பொழுது எவரும் விரும்பியுண்ணும்படியான தீங்கனியாயிருத்தல்போல, உலகவின்பப்பற்றுடைய மனமானது உலகவனுபவமுதிர்ச்சியினாலே திருவடியின்பத்தை யடைவதற்குப் பக்குவப்பட்ட மனத்தை பழுத்தமனம் என்றார். அடியார் என்பது இங்கே கயிலையிலிருந்து இறைவன் திருப்பெருந்துறைக்கு வந்த பொழுது அவருடன்வந்த சிவகணங்களாகிய அடியார்களைகுறிக்கிறது. பூமியில் வந்து பிறத்தற்கு முன், கயிலையில் இறைவனுடைய சிவகணஙகளுள் ஒருவராயிருந்த அடிகள் தம்மைவிட்டு அவர்கள் திரும்பவும் கயிலைக்குசசென்றபின், பிரிவாற்றாமையால் மனம்வருந்தி அவர்கள் கூட்டத்தில் ஒருவனாயிருததல்வேண்டுமென்று இறைவனைப் பலவிடங்களில் வேண்டிககூறுகின்றார். புழுக்கணுடைப் புன்குரம்பை — இதனால் உடற்பற்றை விடுதற்குக் காரணங்கூறப்பட்டது. கண் — இடம். பொல்லாக்கல்விஞானமிலா — கல்விக்குப்பின் மூன்றும் வேற்றுமையுருபு 'ஆல்'விரித்துரைக்க. பொல்லாக்கல்வி என்பது உலகவினபத்தைமட்டும் பெறுதற்கேதுவாகிய கல்வி. இக்காலத்தில் உலகில் நடைபெறுங்கல்வி பேரின்பப்பேற்றுக்கு ஏதுவாயல்லாமலிருத்தலோடு மக்களுள் ஒருவர்க்கொருவர் அன்புடனொழுகும் நல்லொழுக்கம் பெரும்பாலுமில்லாததால் சிற்றின்பப்பேற்றிற்கும் பெரும்பான்மையும் ஏதுவாயில்லை. இக்கல்வியைப்பற்றித் திருமூலர், "கற்றுஞ் சிவஞானம் இல்லாக்கலதிகள்" என்று திருமந்திரம் 318-வது பாட்டிற் கூறுகின்றார். ஞானம் என்பது இங்கே இறைவனுடைய திருவடிகளை யடைதற்கு ஏதுவாயிருக்கிற மெய்ஞ்ஞானமாகிய பதிஞானம் (மெய்யறிவு). இல்லாத என்பது இலாஎன்று இடைகுறைந்தும், கடைகுறைந்தும் நின்றது. அழுக்குமனத்தடியேன் — மேலே இரண்டாவது வரியில் பழுத்தமனத்தடியார் என்று அடியாரை உயர்த்திக்கூறியதற்கு எதிரிடையாக அழுக்கு மனத்தடியேன் என்று அடிகள் தம்மை இழித்துக்கூறுகின்றார். முன் இரண்டடிகளில் போயினர் என்பது வரை அடியார்களை உயர்த்தியும், பின்னிரண்டடிகளில் அடியேன்

என்பதுவரைத் தம்மைத் தாழ்த்தியும் அடிகள் கூறுகின்றார். இத ஞல் அடிகள் தாம் அடியார்களுடன் கயிலைக்குச் செல்வதற்குப் பக் குவமில்லாதவனென்று கூறுகின்றார். அடைக்கலமே என்பதி லுள்ள 'ஏ' அசை.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# உரு. ஆசைப்பத்து.

---

ஆசைப்பத்து என்பது ஆசை, பத்து என்ற இரண்டு சொற் களாலாகி அவை புணர்ந்து ஆசைப்பத்தென்றாகியது. ஆசை என் பது அடிகள் தாம், இந்த உலகில் வாழும் நிலையில்லாத உடலை விடுத்து கைலைமலையாகிய சிவபுரநகருக்குச்சென்று இறைவனையும் அவனுடனிருக்கின்ற அடியார்களையும் காணவேண்டுமென்று விரும்புதல். இப்பொருள் இதன் கீழ்க்கூறப்பட்டிருக்கிற பாட்டுக் கள் ஒவ்வொன்றின் இறுதியில் அடிகள் ஆசைப்பட்டேன் கண்டா யம்மானே என்று இறைவனை விளித்துக் கூறியதனுல் விளங்கும்.

---

## ஆத்தும விலக்கணம்.

---

ஆத்துமவிலக்கணம் என்பது ஆத்துமா, இலக்கணம் என்னும் இரண்டுசொற்களாலாகி அவைசேரும்போது ஆத்துமவிலக்கணம் என்றாகியது. ஆத்துமா என்பது உயிர். இங்கே அது பக்குவப் பட்ட மக்களுயிரைக்குறிக்கிறது. இலக்கணம் என்பது அடை யாளம். ஆத்தும இலக்கணம் என்பது பக்குவப்பட்ட மக்களுயிர் களுக்கு உரியனவாகிய அடையாளங்கள். (1) ஆன்மா அறி வுருவமாய்த் தத்துவங்களுக்கு வேறாயிருந்து தத்துவங்களை அறி கிறவனென்று அறிதல். (2) தத்துவங்களாலாகிய உடலினது வாழ்க்கையை வெறுத்தல். (3) இறைவனுடைய திருவடிப்பேற்றை

அடையவிரும்புதல். ஒருவருடைய உள்ளத்தில் உலகவாழ்க்கையில் வெறுப்பு நிகழ்ந்தாலன்றித் திருவடிப்பேற்றில் விருப்புண்டாகாது.

---

[அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.]

திருச்சிற்றம்பலம்.

---

426. செடியா ராக்கைத் திறமற வீசிச் சிவபுர நகர்புக்குக், கடியார் சோதி கண்டு கொண்டென் கண்ணிணை களிகூறப், படிதா னில்லாப் பரம்பர னேயுன் பழவடியார்கூட்டம், அடியேன் காண ஆசைப் பட்டேன் கண்டாயம்மானே. கூ௫.

[ப-ரை] படிதானில்லாப் பரம்பரனே — எவருக்கும் ஒப்புமை கூறவொண்ணாத மேலான பரம்பொருளே; அம்மானே — எனது தந்தையே; செடிஆர் ஆக்கைத்திறம் — தீமைபொருந்திய உடலினது வலிமையை; அறவீசி — முற்றிலும் நீக்கி எறிந்து; சிவபுரம் நகர்புக்கு — கயிலைமலையாகிய சிவலோகநகருக்குப்போய்; கடியார் சோதிகண்டுகொண்டு — அங்கே ஒளிர்கின்ற காவல்பொருந்திய ஒளியைக்கண்டு; என்கண் இணை — எனது இரண்டு கண்களும்; களிகூற — மகிழ்ச்சி மீக்கூறும்படி; உன்பழ அடியார்கூட்டம் — உன்னுடைய பழையதொண்டர்களுடைய கூட்டத்தை; அடியேன் காண—உனதடிமையாகிய எளியேன் கண்டுவணங்கும்படி; ஆசைப் பட்டேன்—பெருவிருப்பமுடையவனுயிருக்கிறேன். எனது விருப்பம் நிறைவேறும்படி நீ அருள்செய்தல்வேண்டுமென்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] படிதானில்லாப் பரம்பரனே — தான் – அசை. பரம்பரனே — இறைவன் எவ்வகையான மேலோர்க்கும் மேலான பொருளாதலால் பரம்பரனே என்முர். செடியாராக்கைத்திறம் — உடலின் கண்ணுள்ளமனம் இறைவனை நோக்காது ஐம்பொறிகளின் வழியேசென்று உலகவைம்புலநுகர்வுகளை நுகரவிரும்பும் தீமைவலி

யினையுடையதாதலால் செடியாராக்கைத்திறம் அறவீசி என்றார். அறவீசி — அருகில் நின்று பயிரைக்கெடுக்கும் களையை வேரோடு களைந்தெறிதல்போலப் பேரின்பப்பேற்றிற்குத் தடையாயிருந்து உயிரையடுத்து ஐம்புல நுகர்வுகளை விரும்பச்செய்யும் உடலினது வலியை முற்றிலும் நீக்கி என்று பொருள்படும். அங்ஙனம் உடலினது தீமைவலியை முற்றிலும் நீக்கினாலொழிய பின்கூறுகிறபடி சிவபுரநகர் புகுதற்கு விருப்பமுண்டாகாதாதலின் அறவீசி யென்றார். கடியார் சோதிகண்டுகொண்டு — கடி என்பது காவல். அருளைச்சார்ந்திருக்கிற மக்களை அவர்கள் தீங்கடையாது அருளொளி காக்கின்றதாதலின கடியார் சோதி என்றார். உன்பழ அடியார் கூட்டம் என்பது அடிகள் உலகில்வந்து பிறத்தற்குமுன் தம்முடன் சிவகணங்களாயிருந்த அடியார்களைக்குறிக்கிறது. இதனால் அடிகள் தாமவர்கள் கூட்டத்தில் முன் கயிலையிலிருந்தபடி இருத்தல்வேண்டும் என்னும் ஆசையைக்கூறுகின்றார்.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# உசு. அதிசயப் பத்து.

---

அதிசயப்பத்து என்பது அதிசயம், பத்து என இரண்டு சொற்களாலாகி அவை புணரும்போது நிலைமொழி யீற்றிலுள்ள மகரவொற்றுக்கெட்டு பகரவொற்றுத் தோன்றி அதிசயப்பத்து என்றாயது. அதிசயம் என்பது முன்னனுபவியாததொன்றை யனுபவித்தலாலுண்டாகும் வியப்பு; அதாவது அடிகள் தாம் திருப்பெருந்துறையில் இறைவனாலாட்கொள்ளப்பெற்றபின் முற்றிலும் மலவிருள் நீங்கப்பெற்றதனாலடைந்த அருளொளி விளக்கத்தாலாகிய பேரின்பத்தை அனுபவித்தறிந்து அவ்வனுபவத்தைத் தமக்கு இந்த மண்ணுலக வாழ்விலிருந்த பழைய நிலையோடு ஒப்பிட்டுப்பார்த்து வியப்படைதல். அதிசயப் பத்து என்பது அடிகள் அங்ஙனம் வியப்

படைந்து இறைவனுடைய அருளின் மிகுதியைக்கூறும் பத்துப் பாட்டுக்களடங்கியதோர் பதிகமாகும்.

---

## முத்தி இலக்கணம்

முத்தி இலக்கணம் என்பது முத்தியாகிய வீடடைதற்கு ஏது வாயுள்ள வழியாகும். அது மும்மலப்பிணிப்பு முற்றிலும் நீங்கி அருளொளி விளங்கப்பெற்று வீட்டின்பம் அடைகிறவொருவர், முன் அங்ஙனம் பேரின்பவனுபவம்பெற்ற அடியார் கூட்டத்தோடு கூடி மகிழ்ந்திருத்தலாகும். இக்கருத்து திருவாசகம் (21 - 9) பாட்டால் விளங்கும்.

---

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

428. வைப்புமா டென்று மாணிக்கத் தொளியென்று மனத்திடை யுருகாதே, செப்பு நேர்முலை மடவர லியர்தங்க டிறத்திடை நைவேனை, ஒப்பி லாதன வுவமனி லிறந்தன வொண்மலர்த் திருப்பாதத், தப்ப னண்டுதன் னடியாரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. கஅ.

[ப-ரை] வைப்பு மாடு என்றும் — ஒருவன் தானிருக்கிற இடத்திலே முன் மறைவாய்ப் பூமிக்குள்ளே புதைத்து வைக்கப் பட்டு நேராய் காணப்படாதிருக்கும் புதையற் பொருள்போல, தத்துவங்களாலாகிய எனது உடலிலே எனது கண்ணுக்குக் காணப் படாது மறைந்திருக்கும் பொருள் என்றும்; மாணிக்கத்து ஒளி என்றும் — மாணிக்கத்தைச் சாணைவைத்துத் தேய்த்தால், அதனி டத்து விளங்கும் ஒளிபோல, எனது உடலின்கண்ணுள்ள உயிர் தற்போதம் கெட்டுத் தூய்மைஅடைதலால் அதனிடத்து விளங்கும் ஒளிப்பொருள் என்றும்; அப்பன்—எனது தந்தையாகிய சிவபெரு மானை (அறிந்து); மனத்திடை உருகாதே — எனது உள்ளத்தில் (அவன் எனக்கு இடைவிடாது செய்துவருகின்ற அருட்செயலை

நினைந்து) கரைந்து உருகி அவன்மேல் அன்புமீதூர்ந்து வழிபட்டுத் தவம் செய்யாமல்; செப்பு நேர்முலை மடவரலியர் தங்கள் திறத்திடை நைவேனை — செப்புக்களுக்கொப்பான இரண்டு தனங்களையுடைய இளம் பெண்கள்சார்பிற் பெறப்படுவதாகிய சிற்றின்பத்திலே உழன்று வருந்துகிறவனாகிய என்னை; ஒப்பிலாதன — வேறு எந்தப் பொருளுக்கும் ஒப்புச்சொல்லக் கூடாதனவாயும்; உவமனில் இறந்தன — வேறு எந்தப் பொருளுடனும் உவமித்துக் கூறுதல் முடியாதனவாயும் உள்ள; ஒண்மலர்த் திருப்பாதத்து ஆண்டு— பேரொளியாய் அடியார்களுடைய இருதயதாமரை மலரில் விளங்கும் அருள்வடிவாகிய இரண்டு திருவடிகளையும் எனது தலைமேல்வைத்துத் தீக்கைசெய்து எனைத்தனக்கு அடிமையாகக்கொண்டு ஆண்டருளி; தன்னடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாம் — தன்னோடு வந்த அடியார் கூட்டத்துடன சேர்த்தருளிய புதுமையைக்கண்டோம்.

[வி-ரை] வைப்புமாடென்றும் மாணிக்கத்தொளி என்றும்— மாடு—செல்வப்பொருள். வைப்புமாடு—பூமிக்குள் ஒருவனுக்கு தெரியாது அவனிருக்கிற இடத்தில் புதைத்து வைக்கப்பட்டிருக்கிற புதையற் பொருள். அப்புதையற் பொருளை யறியாமல் பொருள் தேடுவான் புறத்தின்கண் அலைந்து திரிந்துங்கிடையாமல் வறுமை காரணமாகப் பசிநோயால் வருந்துதல்போல, அடிகள் தமது உடலின்கண் தத்துவங்களை அடிப்படையாகக்கொண்டு அவைகளில் மறைவாயிருக்கும் சிவபெருமானை அறிந்து அவனை நுகராது புறத்தின்கண்ணுள்ள சிற்றின்பம்தேடி உழன்றதாகக்கூறுவார், வைப்புமாடு என்று மனத்திடை உருகாதே என்றார். வைப்புமாடு என்றதனால் சிவபெருமான் தத்துவங்களுக்கு ஆதாரமாய் விளங்குதற்கும் அவைகள் இயங்குதற்கும் இன்றியமையாத பொருளாய் உள்ளவன் என்று கூறப்பட்டது. மாணிக்கத்து ஒளியாய் எனறதனால் சிவபெருமான் அத்தத்துவங்களைக் கடந்து நின்று அத்தத்துவங்களை உடலாகக்கொண்டு விளங்குகிற உயிருக்கு உயிராய், அவ்வுயிரினது வேட்கை, அறிவு, செயல்கள் விளங்கப்பெறுதற்கு இன்றியமையாத

பொருளாய் உள்ளவன் என்பது பெறப்பட்டது. அறிவில் பொருளாகிய தத்துவத்தை வைப்புமாடு என்றும் அறிவுள்ள உயிர்ப்பொருளை மாணிககத்தொளி என்றும் அடிகள் உவமித்தார். சிவபெருமான தனனை ஆன்மா அறிதற்கு ஆன்மாவினது உடலின்கண் மறைவாயிருக்கும பொருள என்பது "வைசசபொருள் நமககு ஆகும் என்றெண்ணி நமச்சிவாய அச்சமொழிந்தேன்" என்று தேவாரம் (4-80-4) பாட்டிலும், "எவ்வுயிர்க்கும் வைப்பினை" என்று தேவாரம் (7-83-7) பாட்டிலும் கூறியருளினமை காண்க. மனத்திடை யுருகாதே — சிறிய அணடமாகிய உடலுக்குக் காரணமாயிருக்கிற தத்துவங்களை ஆசனமாகக்கொண்டு அவைகளுககு ஆதாரமாய் அவைகளில் நிறைந்து விளங்கியும் அவற்றைக்கடந்தும் நிற்கிற சிவபெருமானது பொதுவியலை அடிகள் தாம் முதற்கண் தத்துவங்களில் வைத்துக்கருவி அறிவினுல் ஆராய்ந்து அறிந்தும், பின் அருளறிவாய் அத்தத்துவங்களில் விளங்கும் ஒளியை அறிந்து தத்துவவாதனையை மாற்றிச சிவபெருமானது சிறப்பியலை அறிந்தும், தமது மனத்தில் உருகவில்லை என்பதை வைப்பு மாடு என்றும் மனத்திடை உருகாதே என்றும், ஆனமாவின்கண் அறிவுக்கு அறிவாயும ஆன்மஅறிவைக கடந்தும விளஙகும் சிவபெருமானது பொதுவியலை அடிகள் தாம் முதற்கண தமது அறிவில் கருவியறிவால் துவிதமாய் அறிந்தும், பின தமது ஆன்மஅறிவு சிவபெருமானுடைய நிறையறிவில் அடங்கி ஆன்மபோதமிழந்து சிவபெருமானது சிறப்பியலை அருளறிவால் அவனுடன் அததுவிதமாய்க்கலந்து பேரின்பம் உணர்ந்து தமது மனததில் உருகவில்லை என்பாா. மாணிக்கத்தொளி என்று மனத்திடை யுருகாதே என்றும் கூறினுா. திருவடித் தீககை செய்யப்பெற்றபின் நன்குணர்ந்த இந்த அனுபவஙகளை அடிகள் இங்கே கூறினுர்.

மனத்திடை யுருகாது —

"உள்ள முருகி லுட னுவரல்லது
தெள்ள வரியரென்றுந் தீபற
சிற்பரச் செல்வரென்றுந் தீபற"

என்று உய்யவந்த தேவர் பாடிய திருவுந்தியார் ஏழாவது பாட்டுக் கூறுகிறபடி ஆன்மா சிவத்துடன் இரண்டறக் கலத்தற்கு அன்பினுல் உருகுதல் இன்றியமையாது வேண்டப்படும் என்பது கூறப்பட்டது. ஏ — அசை.

ஒப்பிலாதன உவமனில் இறந்தன —

"ஒப்புடைய னல்லன......ஓர் உவமனில்லி"

என்று தேவாரம் (6 - 97 - 10) பாட்டில் கூறியது காண்க.

ஒப்பிலாதன உவமனிலிறந்தன — இரண்டும் பலவின்பாற் படர்க்கைவினையாலணையும் பெயர்கள். ஒப்பிலாதனவும் உவமனிலிறந்தனவும ஆகிய பாதம் என இரண்டு பாதங்களையும் குறிக்கும் அடைமொழிகளாய் வந்தன. ஒண்மலர்த் திருப்பாதத்து — திருப் பாதம் + அத்து — திருப்பாதத்து. அத்து — சாரியை. திருப் பாதம் — என்பது அருளாகிய பாதம். மலர்த்திருப்பாதம் என்பது அடியார்களுடைய இருதய தாமரைமலரில் விளங்கும் பாதம் ஒண்மை என்ற அடைமொழி பாதத்தைத் தழுவுகின்றது. ஒண் பாதம் என்பது பேரொளியோடு விளங்கும் பாதம் ஆகும். பாதம் என்பது இங்கே இரண்டு திருவடிகளையுங் குறிக்கிறது. பாதத்து ஆண்டு — பாதங்களால் ஆளுதல் என்பது மானுடவடிவில் குருவாய்வந்த சிவபெருமான, அடிகள் தலைமேல் தனது இரண்டு திருவடிகளைவைத்துத் திருவடிதீக்கைசெய்து மும்மலங்களையும் நீக்கித் தனது அருட்சத்தியை முற்றிலும் பதியவைத்தல் ஆகும்.. அடிகள் இவ்வாறு திருவடிதீக்கை செய்யப்பெற்றபின், முன் சிவபெருமானது அருளை அடைந்த அடியார்கூட்டத்துடன் சேர்க்கப்படுதலால் "அடியரிற்கூட்டிய" என்றார். திருவடிதீக்கைசெய்யப் பெற்றபின் அடிகள் அடைந்த பேரின்ப உணர்வு முன் இல்லாதிருந்து இப்பொழுது உணரப்படுதலால் அதனை முன்னில்லாதிருந்த (புதுமை) 'அதிசயம்' என்றார். கண்டாமே — ஏ — அசை. அடிகள் திருவடிதீக்கை செய்யப்பெற்று அடியார்கூட்டத்துடன்

சேர்க்கப்பட்டபொழுது அவர்களோடும் அத்துவிதமாய்க் கலந்தும் அதிசயத்தை உணர்தலால் கண்டாம் என்று பன்மையிலே கூறினர்.

---

435. நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து, நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து நுகமின்றி விளாக்கைத்துத், தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத் தெழுதரு சுடர்ச் சோதி, ஆக்கி யாண்டுதன் னடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. கூஎ.

[ப-ரை] எழுதரு சுடர்ச்சோதி — காலையிலெழுகின்ற ஞாயிற்றைப்போல பேரொளிப்பொருளாயிருக்கிற சிவபெருமான்; முன்— கயிலையில் நான் அவனோடு சிவகணங்களிலொருவனாயிருந்த காலத்தில்; என்னைத்தன்னொடு நிலாவகை நீக்கி — (அவன் உத்தரகோசமங்கைக்குவந்து அங்கே தன்னோடு வந்த சிவகணங்களுக்கு ஆகமப்பொருளையுணர்த்தத் தொடங்கியபொழுது அங்கேவந்த வானவர் கோனுடைய ஆடம்பரத்தோற்றத்தில் மனம் மயங்கின குற்றத்திற்காக) என்னைத் தன்னொடு இராமல் நீங்கும்படி ஆணைசெய்து; குரம்பையிற் புகப்பெய்து — திருவாதவூரில் எனது உடலுக்குத் தாயாருடைய கருப்பத்தில் புகுவித்து உடலோடு பிறக்கும்படிசெய்து; நோக்கி— (நான் அங்ஙனம் பிறந்து வளர்ந்து முதிர்ந்த அறிவுடையவனான பொழுது) எனது பக்குவத்தையறிந்து; முன்செய்த பொய்யற — முன் நானடைந்திருந்த உலகவாழ்வு மயக்கம் முற்றிலும் ஒழியும்படி; துகள் அறுத்து — மலக்குற்றத்தை நீக்கி; நுண்ணிய நொடியன சொற்செய்து — (திருப்பெருந்துறைக்கு அந்தணன் வடிவில்வந்து) கேட்கக்கூடாதபடியாயுள்ள நுண்ணிய ஓசையாயிருக்கிற ஓரெழுத்து மந்திரத்தை எனக்குபதேசஞ்செய்து; நுகமின்றி — நான் உலகிற்கு அடிமையாயில்லாமல்; தூக்கி — (என்னைப் பிறவிக்கடலினின்று நீந்தும்படி) எடுத்தருளி; ஆக்கி ஆண்டு

— என்னைத் தன்னுடைய மீளாவடிமையாகச்செய்து ஆண்டருளி; விளாக்கைத்து — தன்னோடு அத்துவிதமாய்க் கலந்து இன்புறும் படி செய்து; தன் அடியரிற்கூட்டிய அதிசயங்கண்டாம் — தன்னோடுவந்த சிவகணங்களாகிய அடியார்களோடு சேர்த்த புதுமையை நானும் அடியார்களும் சேர்ந்து அறிந்தோம்.

[வி-ரை] எழுதரு சுடர்ச்சோதி — எழுதரு சுடர் என்பது உலகிலுள்ள புறவிருளை நீக்க காலையில் எழுகின்ற ஞாயிறு. சுடர் சோதி — சுடர்போலுள்ள சோதி. தமது உள்ளத்திலுள்ள மல விருளைப் பேரொளிப்பொருளாகிய சிவபெருமான் முற்றிலும் நீக்கு தலால் அடிகள் சிவபெருமானை ஞாயிற்றுக்கு ஒருபுடை உவமையாக உவமித்துக்கூறினர். "இன்றெனக்கருளி இருள்கடிந்து உள்ளத் தெழுகின்ற ஞாயிறேபோன்று நின்றநின்றன்மை" என்று (22 - 7) அடிகள் கூறியருளினமை காண்க. முன் எனைத்தன்னொடு நிலா வகை நீக்கி குரம்பையிற் புகப்பெய்து — இது வேம்பத்தூர் நம்பி இயற்றிய திருவாலவாயுடையார் புராணத்தில் கூறப்பட்டிருக்கிற படி அடிகளுடைய வரலாற்றிற் கண்டுள்ளது. இதைப்பற்றி அடிகள் (32 - 1) பாட்டில் "கலந்து நின்னடியாரோடு அன்று வாளா களித்திருந்தேன், புலர்ந்துபோன காலங்கள் புகுந்துநின்ற திடர் பின்னாள்" என்றும், (33 - 4) பாட்டில் "மானேர் நோக்கி மண வாளா மன்னே நின்சீர் மறப்பித்திவ், வூனே புகஎன் தனை நூக்கி உழலப் பண்ணு வித்திட்டாய்" என்றும் கூறியருளினர். முன்செய்த பொய்யற — பொய்என்பது நிலையில்லாத உலகம். அது இங்கே அடிகள் முன்னடைத்திருந்த உலகவாழ்வு மயக்கத்தைக்குறிக்கிறது. துகளறுத்து — துகள் என்பது மலக்குற்றம், அதாவது வானவர் கோனுடைய ஆடம்பரத்தோற்றத்தைககண்டு மயங்கினதற் கேது வாகிய மலக்குற்றம். அக்குற்றத்திற்காக இறைவனது ஆணைப்படி அடிகள் நிலவுலகத்திலே வந்து பிறந்ததனாலே மீளவும் அவரைக் கயிலையிலிருந்த சிவகணங்களாகிய அடியார்களோடு கூட்டுதற்கு அக்குற்றதனை நீக்கித் தீக்கைசெய்து ஆண்டருளியது கூறப்பட்

டது. இதனால் நிலவுலகவாழ்வு மயக்கமாவது வானுலகவாழ்வு மயக்கமாவது அணுவளவும் கைலையிலிருக்கும் அடியார்களிடத்தி லிருத்தல் கூடாதென்பது பெறப்படுகின்றது. கைலையில் இறைவ னுக்கு அணுக்கத்தொண்டராயிருந்த சுந்தரமூர்த்தி அடிகள் இறை வனது ஆணைப்படி நிலவுலகத்திலே வந்து பிறந்த காரணத்தை இத ேைடாப்பிட்டு நோக்குக. நுண்ணிய நொடியன சொற்செய்து— நொடியன என்பதில் 'அன' சாரியை. நொடி—ஓசை. சொல் என் பது ஓரெழுத்து மந்திரத்தைக் குறிக்கிற சொல். அச்சொல்லானது கேட்கும்படி உச்சரிக்கப்படாததாய் சூக்குமமாய் பரநாதத்தில் அடங்கியிருத்தலின அதனை நுண்ணிய நொடியன சொற் செய்து என்றார் சொற்செய்தலாவது மனத்திலே பதியும்படி அழுத்தி உணர்த்துதல். இச்சொல்லைப்பற்றி அடிகள் (23 - 2) பாட்டில் "என்னையோர் வார்த்தையுட்படுத்துப் பற்றினாய்" என்றும் (48-7) பாட்டில் " பேசிறந்த மாசின் மணியின மணிவார்த்தை, – பேசிப் பெருந்துறையே என்று பிறப்பறுத்தேன்" என்றும் கூறியருளினார். இந்தச்சொல் ஊமை எழுத்தென்றும், பேசா எழுத்தென்றும் அருள் நூல்களில் கூறப்படுகின்றது. நுகமின்றி—நுகம் என்பது நிலத்தை உழுவதற்காக மாட்டின் கழுத்தில் கயிற்றினாற் பூட்டப்படும் மரத் தடி (yoke). அது இங்கே உருவகமாய் உலகவாழ்வில் கட்டுப்பட் டிருக்கும் பொய்யடிமைப் பண்பைக்குறிக்கிறது. இறைவனோடத்து விதமாய்க் கலத்தற்கு அவனிடம் மெய்யடிமைப்படிருத்தல் வேண் டப்படுவது. அம்மெய்யடிமைப்படுதல் உலகவாழ்வில் பற்றுவைத் திருக்கும் பொய்யடிமை நீங்கினாலொழிய வுண்டாகாதாதலின் நுக மின்றி என்றார். சுந்தரமூர்த்தி அடிகள் பொய்யடிமையில்லாத புல வர்க்குமடியேன (7–39–7) என்று கூறியருளினார். தூக்கி — தூக்கி என்பது உருவகமாய்ப் பிறவிக்கடலினின்று நீக்குதலைக் குறிக்கிறது. ஆக்கி ஆண்டு — ஆக்கி என்ற சொல்லுக்குமுன் அவாய் நிலையாய் தொக்கிநிற்கிற அடிமை என்ற சொல்லை வருவித்துப் பொருளுரைக் கப்பட்டது. விளாக்கைத்து – இதுவிளா – கைத்து என்னு மிரண்டு சொற்களும் சேர்ந்து ஒரு சொன்னீர்மைப்பட்டு வழங்கப்பட்டு

வந்ததோர் அரிய பழஞ்சொல். விளா விளாவுதல் — தொழிற்பெயர் — கலத்தல். கைத்து என்ற சொல் செயல் என்று பொருள்படும் கை என்ற பெயர்ச்சொல்லினடியாகப் பிறந்த வினையெச்சம். அது செய்து என்று பொருள்படும். விளாக்கைத்து—கலத்தலைச்செய்து; அதாவது அத்துவிதமாய்த் தன்னோடு கலந்து இன்புறும்படிசெய்து தன்னடியரிற் கூட்டிய — அடியர் என்பதிங்கே கைலையிலிருந்த சிவகணங்களாகிய அடியார்களைக் குறிக்கிறது. முன் அடியார் கூட்டத்திலிருந்து தம்மை நீக்கிய இறைவன் பின் கூட்டியருளினமையை அடிகள் இங்கே கூறுகின்றார். அதிசயம் கண்டாம்—அடிகள் அதிசயத்தை அடியாரோடு சேர்ந்து அறிந்ததனாலே கண்டாம் என்று பன்மையிற் கூறினார். நீக்கி, பெய்து, நோக்கி, அறுத்து, சொற்செய்து, தூக்கி, ஆக்கி, ஆண்டு, விளாக்கைத்து ஆகிய ஒன்பது வினையெச்சங்களையும் அவை குறிக்கும் செயல்களின் முறைமைபற்றி வரிசைப்படுத்தி பதவுரையிற் பொருள் உரைக்கப் பட்டது. இப்பாட்டில் நாம் தோன்றா எழுவாய்,கண்டாம்-பயனிலை அற்புதம் - செயப்படுபொருள்.

---

436. உற்றஆக்கையி னுறுபொருள் நறுமல ரெழுதரு நாற்றம்போற், பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொரு ளப்பொருள் பாராதே, பெற்ற வாபெற்ற பயனது நுகர்ந் திடும் பித்தர்சொற் றெளியாமே, அத்த னாண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. சா அ.

[ப-ரை] நறுமலர் எழுதரு நாற்றம்போல் — மணம்பொருந்திய பூவின்கண் உண்டாகிற மணம்போல; உற்ற ஆக்கையின் உறு பொருள் — நான் முற்பிறப்புக்களிற் செய்த வினையின் பயனாக எனக்குக்கிடைத்திருக்கிற இந்த உடலில் உள்ளும்புறமும் நிறைந்திருக்கிற பொருளானது; பற்றல் ஆவதோர் நிலையிலாப் பரம் பொருள் — அவ்வாறு உடலில் நிறைந்திருப்பினும் அந்த உடலை

அதுவதுவாய் நின்று பற்றித் தொடக்குணாமலிருக்கிற மேலான பொருளாகிய சிவனுயிருக்கிறான்; அப்பொருள் பாராது (உம்) — (அவ்வாறு சிவனிருப்பதை நான் அருணூலால் அறிந்திருந்தும்) அப்பேர்ப்பட்ட சிறப்புப் பொருளாயுள்ள சிவனை (என்னுடைய உடலின்கண் உள்ளத்தில் வைத்து அகநோக்கினால், அறியாமலும்) பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்சொல் தெளியாமே (உம்)-சிவஞானப்பித்தர்கள் தாங்கள்(சரியை கிரியை யோகம் ஞானம் என்கிற நான்கு வழிபாட்டு வழிகளில்) எந்த வழியில் சிவனை வழி பட்டு அவ்வழிபாட்டு உறைப்பினால் தங்களுடைய உள்ளத்திலு ணர்ந்து சிவனுடைய இன்பத்தை நுகருகின்றார்களோ, அந்த வழி யில் தாஙகள் நுகருகின்ற இன்பத்தைப்பற்றி எனக்குச் சொல்லி நான் கேட்ட அறிவுரைகளை (ச்சிந்தித்து)த் தெளியாமலும்; அத்தன் ஆண்டு தன் அடியரிற் கூட்டிய அதிசயங்கண்டாம் — (அசட்டை யாயிருந்த என்னை) எனது ஆருயிர்த் தந்தையாகிய சிவபெருமான் அடியார் கூட்டத்தோடு மானிடகுருவடிவில் திருப்பெருந்துறைக்கு வந்து எனக்கு ஞானதீக்கை செய்து என்னை அடிமையாக ஆண்டு பேரின்பம் அருளிய புதுமையைக் கண்டாம் (சிவபெருமான் என் மேல் வைத்த பேரிரக்கம்தான் என்னே!)

[வி-ரை] நறுமலர் எழுதரு நாற்றம்போல்—நறுமலர் நாற்றம் ஏழாம்வேற்றுமைத்தொகை; நறுமலரின்கண் நாற்றம். எழுதரும்— எழும், உண்டாகும். நறுமலர் எழுதரு நாற்றம் என்ற உவமையால் நாற்றமானது அம்மலர் அரும்பாயிருக்கும்பொழுது தனது நாற் றத்தை அகத்தே முற்றிலும் அடக்கி வைத்திருத்தலும், விரியாது குவிந்திருக்கும் மொட்டாயிருக்கும்பொழுது தன்னை மூக்கில் வைத்து மோந்து பார்க்கிறவர்களுககுத் தனது நாற்றத்தை சுருஙகிய அளவில் காட்டுதலும் விரிந்திருக்கும்பொழுது தனது நாற்றத்தை விரிந்த அளவில் நன்கு விளங்கக்காட்டுதலும் செய்தல்போல எல்லா மாந்தருடைய உடலிலும் உடலின்கண்ணுள்ள உயிரிலும் எப்பொ ழுதும் பிரியாது நிறைந்திருககும் இறைவன் அவர்களுடைய அறியா மைக்காலத்தில் முற்றிலும் மறைந்தும், அவர்கள் அருள் நூல்களைக்

கற்றுக் கேட்டு நுணுகி ஆராயுங்காலத்தில் தனது உண்மையையும் பொது இயலையும் அவர்கள் கருவி அறிவில் விளக்கியும் சரியை, கிரியை, யோகம், ஞானவழிகளில் தவஞ்செய்து அதனால் அருள் அறிவு கிடைக்கப் பெறுகிறவர்களுக்குத் தனது சிறப்பு இயலை அவர்கள் அருள் அறிவில் விளங்கச்செய்தும் அருள்செய்கின்றான் என்பது கூறப்பட்டது. "பூவினிற் கந்தம் பொருந்தியவாறுபோல் சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது" என்றும் "கந்தமலரிற் கமழ்கின்ற நந்தியை" என்றும் திருமூலர் திருமந்திரம் 1459, 1460-வது பாட்டுக்களிற் கூறியருளினமை காண்க. இங்கே மலர் உடலுக்கும் நாற்றம் இறைவனுக்கும் உவமப்பொருள்களாயின. உற்ற ஆக்கையின் உறுபொருள் பாராது— "உடம்பினுலாய பயனுவதெல்லாம், திடம்படவீசனைத்தேடு "என்று ஔவையாரும், உடம்பினுள்ளே யுறுபொருள் கண்டேன்"(திருமந்திரம் பாட்டு 725)என்று திருமூலரும் கூறியருளினமை காண்க. அடிகள் தாம் உடலை அதுவதுவாய் அழுந்தி அறிந்து உடலையே தாம் என்று அறிந்ததுமல்லாமல் அவ்வுடலைவிட்டு உடலின்கண்ணுள்ள உயிரினுள் விளங்குவதாகிய சிவத்தை நாடித்தேடிக் காணவில்லை என்பார் 'உற்ற ஆக்கையின் உறுபொருள் பாராது' என்றார். பற்றலாவது ஓர் நிலையிலாப்பரம் பொருள் — சிவபெருமான் உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருப்பினும் அவற்றினடங்காமல் அவற்றின் வேறாயும் விளங்குவார் என்பார் 'பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்' என்றார். சிவன் யாதொரு பொருளையும் பற்றாது நிற்கின்ற தன்மையை உடையவன் என்பதைப் பண்டைத் தமிழ்நூல்கள் 'கந்தழி' என்ற பெயராற் கூறுகின்றன. பற்றலாவது ஓர் நிலை—பற்றுதலால் உண்டாவதொரு நிலை—உடலைப்பற்றி அதுவதுவாய் அதனுள் அடங்கி நில்லாத மேலான பொருளாதலின் அதனைப் 'பரம்பொருள்' என்று கூறினர். 'உண்மையுமாய் இன்மையுமாய்' (5 - 15) என்றும், உன்னை அன்றி ஒன்றில்லை' 'ஒன்றும் நீயல்லை, (22 - 7) என்றும் அடிகள் பிற இடங்களிற் கூறிய கருத்தும் இதுவே. நறுமலரெழுதரு நாற்றம்போல் உற்றவாக்கையினுறு பொருள் பற்ற

லாவதோர் நிலையிலாப் பரம்பொருள் என்று இலக்கண முடிவு செய்க. உறுபொருள் — எழுவாய். பரம்பொருள் — பயனிலை. அப்பொருள் — அப்பேர்ப்பட்ட சிறப்புடையபொருள். பாராதே (உம்) பார்த்தல் — நுணுகிப்பார்த்தல்; அதாவது நுணுகிப்பார்த்த லாகிய கருவியறிவு. அறிவு நூல்களில் கற்றறிந்ததை ஆராய்ந்து அவற்றிலுள்ள பொருள்களை நுணுகி ஆராயாதவர்களுக்குச் சிவ னுடைய பொதுவியல் விளங்காது என்பது கருத்து. அடிகள் "ஓராதாருள்ளத்தொளிக்கு மொளியானே" என்று (1 - 68) கூறி யருளினார். ஏ — அசை. தொக்கு நிற்கிற உம் விரித்துப் பொருள் உரைக்கப்பட்டது. பெற்றவா பெற்றபயன் — பெற்ற வாறு எனபது பெற்றவா என ஈற்றுயிர் மெய்கெட்டது. ஆறு — வழி. ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானததில யோகம், ஞானத்தில் ஞானம் என்னும் வழிகள். பெற்றபயன் என்பது ஞானச்சரியை முதலிய நான்குவழிகளிலும் பிராணாயாமம், அஞ் செழுத்தோதல், சிவோகம்பாவனை முதலிய பயிற்சி உறைப்பினால் உள்ளத்திலே தோன்றுவதோர் அருளொளியாற் பெறப்படும் இன்ப உணர்ச்சி. பித்தர் சொல்தெளியாமே (உம்)-பித்தர் — ஞானப்பித் தர்; அதாவது, உலகப்பற்றுக்களை விட்டுச் சிவனை அடைதலிலேயே நாட்டமுடையவர்களாய் அவனிடத்திற் பற்றுவைத்திருக்கிற மெய்ஞ்ஞானிகள். இந்த மெய்ஞ்ஞானிகள் தங்கள் சுவாநுபூதி நிலை யில் உணர்ந்த அறிவுரைகளை தமக்கு சொன்னபொழுது அவ் வுரைகளைக்கேட்ட தாம் அவைகளின் உண்மையைச் சிந்தித்துத் தெளியவில்லை என்று கூறுவார் 'பித்தர் சொல்தெளியாமே' என்றார். தெளியாமே என்பதிலுள்ள'மே' எதிர் மறையிடத்து வரும் எதிர்கால வினையெச்சவிகுதி. உம் விகாரத்தாற்றொக்கது. 'பாராது' எனறத னால் கற்றல், கேட்டல், சிந்தித்தல்களால் சிவனுடைய பொது இயலை அறியும் ஆராய்ச்சி அறிவும், தெளியாமே' என்பதனால் அறிந்தார்பாற் கேட்டல், சிந்தித்தல், தெளிதல்களால் சிவனுடைய சிறப்பு இயலை அறியும் மெய்யறிவும் கூறப்பட்டன. "கற்றல் கேட்டலுடை யார்பெரியார்கழற் கையாற்றொழுதேத்த" என்று

## அதிசயப் பத்து.

(1 - 1 - 2) கூறியிருத்தல் காண்க. ஆண்டு — ஆண்டு என்ற சொல்லுக்குமுன் 'அசட்டையாயிருந்த என்னை', என்ற சொற்கள் அவாய்நிலையால் தொக்கிநிற்கின்றன. அவற்றை வருவித்துப் பொருள் உரைக்கப்பட்டது. அடியரிற் கூட்டிய—சிவபெருமான் தீக்கைசெய்து அவனால் அடிமையாக ஆண்டுகொள்ளப் பெற்ற வர்கள் அடியார்கூட்டத்திற் சேர்க்கப்படுதலால் ஆண்டு 'அடியரிற் கூட்டிய' என்றார். அதிசயம் கண்டாம் — அதிசயம் – புதுமை; முன்காணுதிருந்த ஒன்றைக்காணும்புதுமை. சிவபெருமான் ஆண்டு அருளப்பெற்றபின் அடிகளுக்கு உண்டான பேரின்ப உணர்ச்சி யானது முன் இல்லாதிருந்து இப்பொழுது புதுமையாயிருத்தலால் அதிசயம் என்றார். அடியார்களுக்குத் தமது உள்ளத்திலுண்டான பேரின்ப உணர்ச்சியானது தாம் சேர்க்கப்பட்ட அடியார்கூட்டத் துடன் சேர்ந்து உணரப்படுதலால் 'கண்டாம்' என்று பன்மையிற் கூறினர். ஏ - ஈற்றசை. உடம்புவழியில் ஆன்மா சிவனைக் காண லாம் என்பது.

> உடம்பெனு மனையகத்து ளுள்ளமே தகளியாக
> மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
> இடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்துநோக்கிற்
> கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே.

என்று தேவாரம் (4 - 75 - 4) பாட்டிற் கூறியிருத்தல் காண்க.

ஆன்மாவானவன் அசத்தாகிய உலகத்தைச்சாராது சத்தாகிய சிவத்தைச்சார்ந்து பக்குவமடைந்தபொழுது ஞானதீக்கையால் மும் மலங்களும் நீங்கப்பெற்று ஆன்மபோதம் தோன்றாபடி பேரொளிச் சிவசொரூபத்திலடங்கிச் சிவமே தானாய் நிற்றல் முத்தி என்பது இந்தப்பாட்டிற் கூறப்பட்டது.

---

## திருப்பெருந்துறையில் அருளிய
# உஎ. புணர்ச்சிப் பத்து.

புணர்ச்சிப் பத்தென்பது அடிகள் தம்மை இறைவன் குருவாய் வந்து ஆண்டருளியபின் அவனைப் பிரியாது அவனோடு இரண்டறக் கலந்து சேர்ந்திருத்தலைத் தமது விருப்பமாக கூறும் பத்துப் பாட்டுக்களையுடைய பதிகமாகும்.

## அத்துவித இலக்கணம்.

அத்துவிதம், இலக்கணம் என்னும் இரண்டு சொற்களாலாகி அவை புணரும்போது அத்துவிதவிலக்கணம் என்றாகியது. அத்துவிதம் என்ற சொல் அ, துவிதீயம் என்ற வடமொழிச் சொல்லின் திரிபு: அத்விதீயம் என்பது தமிழில் அத்துவிதம் என வழங்கப்படுகின்றது. அத்துவிதம் என்ற சொல்லில், 'அ', என்ற முன் அடை (உபசர்க்கம்) அன்மைப்பொருளை உணர்த்தும். துவிதம், இரண்டு. அத்துவிதம் இரண்டு அன்மை. அதாவது உயிரும் இறைவனும் இருவேறு அறிவுப்பொருள்களா யிருந்தும் இரண்டென்றும், ஒன்றென்றுங் கூறப்படாது பிரிவற வேற்றுமையின்றி ஒன்று பட்டு நிற்கும் தன்மை. சுருக்கமாகக் கூறின் அது இறைவன் உயிரோடு கலந்திருக்கும் தன்மையால் ஒன்றாயும், உயிருக்கு அறிவிக்கும் தன்மையால் வேறாகியும், செயலால் நுகர்விக்கும் தன்மையால் உயிருடன் உடனாயும் நின்று வேட்கை அறிவு, செயல்களை நிகழ்த்துவித்து உயிரை இன்பம் நுகரும்படி செய்யும் அவனது அருட்டன்மையாகும். அது சைவசித்தாந்தத்தில் சுத்தாத்வித உண்மை என்று கூறப்படும். இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பைக்குறிக்கும் இந்த உண்மையிலிருந்தே பிற சித்தாந்த உண்மைகள் பெறப்படும். இந்த உண்மை சிவஞானபோதம், சிவஞான சித்தியார் 2, 11 சூத்திரங்களில் விரிவாகக கூறப்பட்டிருக்

கின்றது. அத்துவித இலக்கணம் என்பது பதியாகிய இறைவனும் பசுவாகிய உயிரும் ஒன்றுமல்ல, இரண்டுமல்ல, ஒன்றிரண்டுமல்ல என்று கூறும் இருபொருள்களின் தொடர்பைக்கூறும் இலக்கணம் ஆகும்.

---

438. சுடர்பொற் குன்றைத் தோளா முத்தை
 வாளா தொழும்பு கந்து
கடைபட் டேனை யாண்டு கொண்ட
 கருணா லயனைக் கருமால் பிரமன்
தடைபட் டின்னுஞ் சார மாட்டாத்
 தன்னைத் தந்த வென்னா ரமுதைப்
புடைபட் டிருப்ப தென்றுகொல் லோவென்
 பொல் லாமணியைப் புணர்ந்தே. கூ௯.

[ப-ரை] சுடர்பொற் குன்றை — ஒளிர்கின்ற பொன்மலைக்கு ஒப்பானவனும்; தோளாமுத்தை — துளைக்கப்படாத முத்துக்கு ஒப்பானவனும்; தொழும்பு வாளா உகந்து கடைபட்டேனை — (சிவபெருமானுக்கு) அடிமைத்தன்மையை விரும்பி (அதற்குரிய பணி) ஒன்றுஞ்செய்யாது கீழ்ப்பட்டவனாகிய என்னை; ஆண்டு கொண்ட கருணாலயனை — (திருப்பெருந்துறைக்கு ஓர் அந்தணன் வடிவில் குருவாய்வந்து) ஆண்டருளிச்செய்த பேரருள் தங்குமிடமா யிருக்கிறவனும்; என்பொல்லாமணியை — எனக்குக் கிடைத்தற் கரிய பொள்ளாத மாணிக்கத்துக்கு ஒப்பாயிருக்கிறவனும்; கருமால் பிரமன் — கரியநிறமுள்ள திருமாலும் நான்முகனும்; தடைபட்டு இன்னும் சாரமாட்டாத் தன்னைத்தந்த என் ஆர்அமுதை — தாங் கள்கொண்ட செருக்கினால் அடையமுடியாமலிருக்கிற தன்னுடைய இன்பத்தை, தான் என்னோடு அத்துவிதமாய்க்கலந்து என்னை அடையும்படிசெய்த நிறை இன்பமாயிருக்கிறவனுமாகிய சிவபெரு மானை; புணர்ந்து — அத்துவிதமாய்க்கலந்து; புடைபட்டிருப்பது — அவனைச் சேர்ந்திருப்பது; என்றுகொல் — எக்காலமோ அறியேன்

[வி-ரை] சுடர் பொன்குன்று—சுடர்பொற்குன்று – வினைத் தொகை. மலையானது அளக்கலாகாத அளவும் அசைக்கலாகாத நிலையையுமுடையதாதலின், எவராலுமளவிடப்படாத பேரருளையும் விகாரமடையாது என்று மொருதன்மைத்தாய நிலையையுமுடைய சிவபெருமானுக்கு அம்மலையை ஒருபுடை உவமையாகவைத்து அடிகள் கூறினர். தோளா முத்து — துளைக்கப்படாத முத்து. அதாவது இயல்பாயுள்ள நிலையிலுள்ள முத்து. இதனல் சிவபெருமான் இயல்பாயுள்ளவன் என்பது கூறப்பட்டது. அடிகள் திருச்சாழல் 1-வது பாட்டில் "எவ்வுயிர்க்கு மியல்பானன் சாழலோ" என்று கூறியருளினமை காண்க. வாளா தொழும்பு உகந்து கடைபட்டேனை — தொழும்பு – சிவபெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தல். வாளாஉகத்தல் — அடிமைப்பட்டிருப்பதை விரும்புவதல்லாமல் அதற்கு உரியபணி ஒன்றும் செய்யாதிருத்தல். மனத்தின்கண் நிகழும் வேட்கையானது செயற்பட்டாலொழியப் பயனுண்டாகாது. ஆதலின் வாளா தொழும்புகந்து என்றார். அங்ஙனம் மனம் வேறு செயல் வேறுபடுதலினுல் தமக்குக் கீழ்மை உண்டாயிற்று என்பார் "கடைபட்டேனை" என்றார். கருணலயனை — கருணை + ஆலயன் = கருணலயன். வடமொழி இலக்கணமுடிபு. ஆலயம் தங்குமிடம். ஆலயன் — (கருணை) தங்குதற்கு இடமாயிருக்கிறவன். சிவன் தன்மேல்வைத்த பேரருளால் திருப்பெருந்துறைக்கு வந்து தம்மை ஆண்டருளியதால் அவனை அடிகள் கருணலயன் என்றார். என்பொல்லாமணி — பொல்லாப்பிள்ளையார் என்பதிற்போல, பொள்ளா என்பது பொல்லா எனமருவியது. கடையில் தகர உயிர் மெய் தொக்கி நின்றது. செதுக்கிக் கடையப்படாதமணி. இதனுலும், சிவபெருமான் எல்லா உயிர்களுக்கும் இயல்பாக உள்ளான் என்பது கூறப்பட்டது. கருமால் பிரமன் தடைப்பட்டு இன்னும் சாரமாட்டாத் தன்னைத்தந்த என் ஆர் அமுதை — சாரமாட்டாத என்பது சாரமாட்டா என ஈறுதொகக்கி நின்றது. சாரமாட்டாத என்ற பெயரெச்சம் தன்னை என்பதில் அடங்கியிருக்கிற தான் என்ற பெயரைக் கொண்டு முடிந்தது. ஆர்அமுது — நிறைந்த இன்பம், நிரதிசய

இன்பம், இறவாத இன்பம். தன்னைத்தந்த என்ஆர்அமுது — தான் இன்பவடிவினன் ஆதலின் தன்னைப்போல என்னையும் பேரின்பமடையச்செய்தான் என்று பொருள்படும். இந்தநிலை அடிகள் சிவத்தோடு அத்துவிதமாய்க் கலத்தலால் உண்டாகிறது. புடைபட்டிருப்பது — இதனாலே உயிர் சிவத்தோடத்துவிதமாய்ச் சேர்தலால் ஒன்றாய்விடுகிறது என்னும் அபேதவாதிகள் கொள்கை மறுக்கப்பட்டது. உயிர் சிவத்தைச் சேர்தலால் சிவம் வேறு தான் வேறு என்றில்லாது அபேதமாய்க் கலத்தலன்றி ஒன்றாவதில்லை என்னும் சைவசித்தாந்த சுத்தாத்துவிதம் கூறப்பட்டது. என்றுகொல்லோ—கொல், ஒ – அசை நிலை. இதனாலே அடிகள் தாம் சிவபெருமானை விட்டுப் பிரிந்திருத்தற்கு ஆற்றாமையைக் கூறுகின்றார்.

---

439. ஆற்ற கில்லே னடியே னரசே
அவனி தலத்தைம் புலனாய
சேற்றி லழுந்தாச் சிந்தை செய்து
சிவனெம் பெருமா னென்றேத்தி
ஊற்று மணற்போ னெக்குநெக்
குள்ளே யுருகி யோல மிட்டுப்
போற்றி நிற்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. ௭௦.

[ப-ரை] அரசே—தலைவனே; அடியேன் ஆற்றகில்லேன்—(நினது அடிமையாகிய நான் உலக வாழ்விலுள்ள பிறவித்துன்பத்தை) பொறுத்தற்கு வலிமையுடையேனல்லேன்; அவனி தலத்து — நிலவுலகில்; ஐம்புலன்ஆய சேற்றில் — ஓசை, ஊறு ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐம்புலன்கள் ஆகிய சேற்றில்; அழுந்தாச் சிந்தைசெய்து—மூழ்காத சிந்தையின்கண்ணே உன்னைச் சிந்தித்து (நினைத்து), சிவன் எம்பெருமான் என்று ஏத்தி — சிவனே என்றும், எங்கள் தலைவனே என்றும் வாயினாலே வாழ்த்தி; மணல் ஊற்றுப்போல் — ஆற்றுமணலைத் தோண்டுதலினாலே அதி

விருந்து ஊறிவருகின்ற நீர் போல; உள்ளே — மனத்தினுள்ளே (நின்னுடைய அருட்செயலை நினைத்தல்பற்றி எழுகின்ற அன்பினுலே); நெக்கு நெக்கு உருகி — நெகிழ்ந்து உருகி; ஓலம் இட்டு — உனக்கு அடைக்கலம் என்று முறையிட்டு; என் பொல்லா மணியைப் புணர்ந்து நின்று—எனது தொளைக்கப்படாத மாசற்ற மாணிக்கம் போன்று ஒளிரும் நின்னைப் புணர்ந்து நின்று இரண்டற(அத்துவிதமாய்க்) கலந்து நின்று; போற்றி நிற்பது — தொழுது நிற்பது; என்று கொல்லோ— எந்தககாலமோ (அறியேன்).

[வி-ரை] அடியேன் ஆற்றகில்லேன் — ஆற்ற - பொறுகக, சகிக்க. கில்லேன்—கில்லுதல் - வலிமையுடைத்தாதல்; எதிர்மறை வினை; வலிமையுடையேனல்லேன் பிறவித்துன்பம் என்ற சொல் அவாய் நிலையால் வருவித்துப் பொருள் உரைககப்பட்டது. அவனி தலத்து — அவனியாய தலம். அவனி - பூமி. தலம் - இடம். ஐம்புலன் ஆய சேற்றில் அழுந்தாச சிந்தைசெய்து — ஐம்புலன் என்பது இங்கே ஓசை முதலிய ஐந்து உலகநுகர்வுப் பொருளைக் குறிக்கிறது. சேற்றிலே அழுந்தி மூழ்கியிருக்கும் ஒருவன் அதனை விட்டு எழுந்து வெளியே செல்லுதற்கு வலிமையற்றவாறுபோல உலகப்பொருளையே நுகர்தற்கு நினைத்துக்கொண்டிருககிற ஒருவன் அவற்றை விடுத்து இறைவனை நினைத்தற்கு வலியில்லாதவனுய் இருப்பானுதலின் சேற்றில் அழுந்தாச் சிந்தை செய்து எனுர். சிந்தை — மனம். சிந்தைசெய்து — மனத்திலே நினைந்து. சிவன் எம்பொருமான் என்று ஏத்தி — சிவன், எம்பெருமான்; இரண்டு சொற்களும் இறைவனுக்குக்கூறும் விளிப்பெயர்கள். சிவன் என்றதனுலே உயிர்களுக்கு பேரின்பம் அளித்தற்குத் தக்கவன் என்பதும், பெருமான் என்றதனுலே பேரின்பமளித்தற்கு உரியவனென்பதும் குறிப்பிடப்பட்டன. அடிகள் அடியார்களை உளப்படுத்தி எம்பெருமான் எனறு பன்மையிற் கூறினுர். ஏத்துதல் — வாயினுலே வாழ்த்துதல். மணல்ஊற்றுபோல் — ஊற்றுமணல் என்பதனை மணல் ஊற்றுஎன மாறுக. மணல் ஊற்று — (ஆற்று) மணலிலே

ஊறுகின்ற தண்ணீர். நெக்கு நெக்கு — அடுக்குத்தொடர். மிகுதியைக்குறிக்கிறது. "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே — புக்கு நிற்கும் பொன்னார் சடைப்புண்ணியன்" என்று திருநாவுக்கரசு அடிகள் (5 - 90 - 9) கூறியிருத்தலை நோக்குக. நெக்கு நெக்காக உருகுதல், உயிர்கள் இன்பநலமடைதற்கு இறைவன் செய்யும் அருட்செயல்களை நினைத்தல்பற்றி அவ்வுயிர்களது மனத்தினுள்ளே எழும் அன்பினாலுண்டாதலால், உள்ளே நெக்கு நெக்கு உருகி என்றார். ஓலம் இட்டு—ஓலம் இடுதல் என்பது உனக்கு அடைக்கலம் என்று முறையிடுதல். என் பொல்லாமணியைப் புணர்ந்து நின்று—பொல்லாமணி கிடைத்தற்கு அரியபொருளாயிருத்தல்போல அடைதற்கு அரிய பொருளாகிய இறைவனை பொல்லாமணி என்றார். இதற்கு (27 - 1)ன்கீழ் எழுதிய விளக்க உரையைக்கொள்க. அடிகள் (5 - 24) மணிக்குன்றே யென்றும், (37 - 10) "மாசிலா மணியே" என்றும் இறைவனை விளித்துக்கூறுதல்காண்க. புணர்ந்து—சேர்ந்து; அதாவது இரண்டற (அத்துவிதமாக) உயிரானது தன் முனைப்பின்றி இறைவனோடு கலத்தல்பற்றி உயிருக்கு பேரின்ப அனுபவம் உண்டாதலால் புணர்ந்தே என்றார். ஏ - அசை. போற்றி நிற்பது—என்றும் தொழுதுகொண்டே நிற்றல். போற்றுதல் — தொழுதல்; அதாவது தமது வியாப்பிய அறிவு, வேட்கை, செயல்களை இறைவனுடைய வியாபக அறிவு, வேட்கை, செயலுக்குள்ளே அடங்கும்படி தொழுதல். நிற்பது என்பது எப்பொழுதும் தொழுதுகொண்டு நிலையாக நிற்றல் என்று பொருள்படும். என்றுகொல் ஓ—என்று - எந்நாள். கொல் - அசை நிலை. ஓ வினாப்பொருளைத்தரும் இடைச்சொல். இந்தப் பாட்டில் அடிகள் ஆற்றகில்லேன் அடியேன் எனத்தொடங்கி பொல்லாமணியைப் புணர்ந்து போற்றி நிற்பது என்றுகொலோ என்று முடித்தலினாலே இறைவனோடத்துவிதமாய்க் கலந்து போற்றி நிற்பதே பிறவித்துன்பத்தை ஒழித்தற்கு வழியென்று அவர் கூறியவாறாயிற்று. இவ்விரண்டுக்கும் இடையில் வரும் கூற்றுக்களெல்லாம் இறைவனை எப்படி வணங்கல் வேண்டுமென்பதைக் கூறுகின்றன.

திருப்பெருந்துறையில் அருளிய

# உ அ. வாழாப்பத்து.

---

வாழாப்பத்தென்பது வாழாதபத்து எனவிரியும்; அதாவது இறைவன் தம்மை ஆண்டருளியபின், அடிகள் தமக்கு உலகவாழ்வில் யாதொருபற்றும் இல்லாதிருப்பதனாலே தாம் உலகில் வாழ முடியாதென்றும், தம்மை உலகைவிட்டு கயிலைக்கு வருவித்துக் கொள்ளவேண்டுமென்றும் இறைவனை நோக்கிக் கூறுகிற பத்துப் பாட்டுக்கள் அடங்கிய பதிகமாகும். இப்பொருள் இதன் கீழ்வரும் பத்துப்பாட்டுக்களினாலும் இனிதுவிளங்கும்.

## முத்தியுபாயம்.

---

முத்தியுபாயம் என்பது முத்தியாகிய வீட்டினை அடைதற்கு ஏதுவாயுள்ளவழி. வீட்டின்ப நுகர்வை ஒருவன் தன்னுள் உணரலாமே யன்றி, பிறரறியும்படி அதனைச் சொல்லமுடியாது. ஆதலின் வீட்டின்பமானது அதற்கேதுவாயிருக்கும் உபாயமாகிய காரண வகையால் இங்கே கூறப்படுகின்றது. அந்த உபாயங்கள் பாட்டுக்களிற் கூறுகிறபடி உலகவாழ்வில் யாதொரு பற்றுமின்றி அதனிடத்து வெறுப்புக்கொள்ளுதலும் இறைவனுடைய திருவடிப் பேற்றை அடைதற்கு விருப்புக்கொள்ளுதலுமாகும்.

---

[எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

448. பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்

சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாரொடு நோகே னார்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ யருளிலை யானால்
வார்கடலுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. எக.

[ப-ரை] பாரொடுவிண்ணாய் — (இவ்வுலகிலே மண், நீர், தீ, காற்று, வான் ஆகிய ஐம்பெரும் பூதங்களிலும்; பரந்த எம்பரனே— (ஒளியோடு) கலந்து எங்கும் நிறைந்திருக்கின்ற எம்பரம்பொருளே; நான் பற்று மற்று இலேன் — (நான் உன்னுடைய திருவடிகளில் அன்றி) வேறெந்தப்பொருளிலும் சிறிதும் பற்றுவையாதவனாயுள்ளேன்; சிவபுரத்து அரசே — சிவலோகத்துக்கு தலைவனாயிருக்கிறவனே; சீரொடு பொலிவாய் — (அந்தச் சிவலோகத்தில்) நீ சிவகணங்களோடு கூடிச்சிறப்பாய் அருளொளிப்பொலிவோடும் விளங்குகின்றாய், (நானோ மலஞ்சேர்ந்த இம்மாய உலகில் உடலின்கண் வாழ்ந்து உலகவாதனையால் துன்புறுகின்றேன்); ஆண்டநீ—(திருப்பெருந்துறைக்கு வலியவந்து என்னை) ஆண்டுகொண்டருளிய நீ தானே; அருளிலையானால் — (என்னை உன்னுடன் கயிலைக்குக் கூட்டிக்கொண்டு போகும்) கருணை என்னிடத்தில் வைக்காவிட்டால்; ஆர்க்கு எடுத்து உரைக்கேன்—(உன்னுடைய கருணை இன்மையை) எவர்க்கு விளக்கிக்கூறுவேன்; யாரொடு நோகேன் — நீ என்மேல் கருணைவைக்க இல்லையென்று எவரோடுகூறி என்னை நொந்துகொள்வேன்; வார்கடல் உலகில் — நீண்ட கடலால் சூழப்பட்ட இவ்வுலகில்; வாழ்கிலேன் — பற்றுவைத்து இவ்வுடலோடிருந்து வாழ்வதைப் பொறுக்க முடியாதவனா யிருக்கிறேன்; வருக என்று — (ஆதலினாலே, நீ என்பேரில் கருணைவைத்து கயிலைக்கு) வருவாயாக என்றுகூறி; அருள்புரிவாய் — அருள்செய்து காப்பாற்றுவாயாக.

[வி-ரை] பாரொடுவிண்ணாய்ப் பரந்த எம்பரனே — இதனால் உயிர்கள் உய்யும்பொருட்டு இறைவன் ஐம்பூதங்களாலாகிய உலகில்

அருளொளியோடு விளங்கும் அவனுடைய பொதுவியல்புநிலை கூறப்பட்டது. இங்ஙனம் இறைவன் அண்டமாகிய உலகிலும், பிண்டமாகிய உடலிலும் அருளொளியோடு நிறைந்து அவற்றிற்றோய்வின்றி விளங்காவிட்டால் இவ்வுலகில் உடலோடு கூடிவாழும் உயிர்கள் கருவியறிவால் ஏகதேசமாகிய தங்கள் பொதுவியல்பு நிலையை அறிந்து பின் அருளறிவால் உண்டாகும் பேரின்பம் அடையமாட்டார்கள். ஆதலின், அடிகள் தாம் இவ்வாறு இறைவனால் பேரின்ப நிலையை அடைந்ததைக் குறிப்பிப்பார், பாரொடுவிண்ணாய்ப்பரந்த எம்பரனே என்றார். பாரொடுவிண்ணாய் என்று மிக்க தூலமாயுள்ள மணணும், மிக்க நுண்மையாயுள்ள விண்ணும் கூறப்பட்டதால் இடையிலுள்ள மூன்று பூதங்களையும் இனங்களாகச் சேர்த்துப் பொருள் கூறப்பட்டது இவ்வுண்மையை அடிகள் "பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப்பரந்ததோர் படரொளிப்பரப்பே" என்று (22 - 8) பாட்டிலும் கூறியிருக்கின்றார். பற்று மற்றிலேன் கண்டாய் — இதனால் அடிகள் தாம் இவ்வுலகைவிட்டுக் கைலைக்குப் போய் இறைவனோடு சேர்ந்திருத்தற்கு காரணங்கூறினார். கண்டாய் என்பது முன்னிலை அசை. சீரொடுபொலிவாய் — சீரொடு பொலிதலென்பது முழுஅருளொளியோடு விளங்கும் இறைவனது சிறப்பியல்புநிலை. ஆண்ட நீ அருளிலையானால் — அருளில்லையென்று அடிகள் இங்கே கூறியது, இறைவன் தம்மை ஆண்டருளிய உடனே அடியார் கூட்டத்தோடு கைலைக்குக் கூட்டிப் போகாமையைப் பற்றியாகும். தம்மேல்வைத்த பேரருளினாலே தம்மை வலிய வந்து ஆண்ட இறைவன் தம்மைக் கைலைக்குக் கூட்டிப்போகாதது பொருத்தமில்லையென்று குறிப்பிப்பார், ஆண்ட நீ அருளிலையானால் என்றார். யார்க்கெடுத்துரைக்கேன் யாரொடு நோகேன் — இதனால் அடிகள் தமக்கு இறைவனே புகலிடமாயுள்ளவனா யிருப்பதால் அவனைத்தவிர வேறொருவரிடமும் சொல்லுதலாற் பயனில்லையென்று குறிப்பாற் கூறினார். வாழ்கிலேன் — கில் என்பது ஆற்றல் குறிக்கும் இடைநிலை. இது, வாழ்தலைப் பொறுக்கமுடியாதிருத்தலைக் குறிக்கிறது. நீ வருக என்று அருள்புரியாயே — இது,

இறைவனுக்குச்செய்யும் வேண்டுகோள். வருக என்பதில் 'க' வேண்டிக் கோடற்பொருளை உணர்த்தும் வியங்கோள் வினைமுற்று விகுதி; அருள்புரிதல் — இரங்கி அருள்செய்தல். ஏ — ஈற்றசை.

---

திருப்பெருந்துறையில் அருளிய

## உகூ. அருட்பத்து.

---

அருள், பத்து என்ற இரண்டு சொற்களும் சேர்ந்து அருட்பத்தென்றாகியது. அருளென்பது, ஞாயிற்றினின்றும் ஒளி வேறாகாது அதனைப் பிரியாதிருத்தல்போல இறைவனினின்றும் வேறாகாது அவனைவிட்டுப் பிரியாதிருக்கிற சத்தியாகிய ஆற்றல். பகலில் ஞாயிற்றின் ஒளி ஞாயிற்றைவிட்டுப் பிரியாது உலகிலெங்கும் பரந்து நிறைந்து விளங்குதல்போல, இறைவனைவிட்டுப் பிரியாதிருக்கிற அருட்சத்தியும் உலகம் தோன்றிய காலத்து உயிர்களுய்யும்பொருட்டு ஐந்தொழில் செய்தற்கு உலகெங்கும் ஒளிமயமாய் நிறைந்திருக்கின்றாள். அடிகள் தாம் உலகத்துயர்ப்பிறவி நீங்கி இறைவனுடைய திருவடிப்பேற்றுக்கு ஆளாதல் வேண்டுமென்று இறைவனை வேண்டிக்கொள்ளுதலைக் கூறுகிற பத்துப்பாட்டுக்களடங்கிய பதிகம் அருட்பத்து ஆகும்.

---

### மகாமாயா சுத்தி.

---

மகாமாயை என்ற சொற்றொடரும் சுத்தி என்ற சொல்லுஞ் சேர்ந்து மகாமாயா சுத்தி யென்றாகியது. இது வடமொழி இலக்கண முடிபு. மகாமாயை யென்பது பெரியமாயை. இது மாமாயை யென்றுங் கூறப்படும். மாமாயை என்றசொல் பொதுவாய் சுத்த மாயையைக் குறிக்கும். (சிவஞானபாடியம் கழகப்பதிப்பு 163-வது பக்கம்.) ஆனால், மகாமாயை யென்பதற்குப்பின் சுத்தி என்ற சொல்

சேர்ந்து வருவதால் இங்கே அப்பொருள் பொருத்தமில்லை. சிவப்பிரகாசச் சிந்தனையுரையாசிரியர், சிவப்பிரகாசம் 70-வது பாட்டில் வருகிற மாமாயை யென்ற சொல்லுக்கு விந்து, மோகினி, மானென்னும் மும்மாயைகளின் காரியமாகிய பெரியமாயேய மலம் என்று கூறியிருக்கிற பொருளே இங்கே பொருத்தமுடையது. மகாமாயை சுத்தி என்பது சுத்தமாயை அசுத்தமாயை, பிரகிருதிமாயை ஆகிய மூன்று மாயைகளின் காரியமாகிய மாயேய மலத்தை நீக்குதலாகும். இம்மாயேய மலம் அருளொளியால் தூய்மைசெய்யப்பட்டு நீக்கப்படுதலின் அருட்பத்து இதனைக் கூறுவதாயிற்று.

---

[எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்]
திருச்சிற்றம்பலம்.

---

466. மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி
மறுமையோ டிம்மையுங் கெடுத்த
பொருளனே புனிதா பொங்குவா ளரவங்
கங்கைநீர் தங்குசெஞ் சடையாய்
தெருளுநான் மறைசேர் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருளனே யடியே னுதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. எஉ.

[ப-ரை] மருளனேன் மனத்தை — உலகவாழ்வில் மயங்கினவனாகிய எனது மனத்தை; மயக்கு அறநோக்கி — அம்மயக்கம் முற்றிலும் ஒழியும்படியாக (நீ திருப்பெருந்துறைக்குவந்து என்னை ஆட்கொண்டபொழுது) நினது அருட்கண்ணாலே பார்த்து; மறுமையோடு இம்மையும் கெடுத்த பொருளனே — (அங்ஙனம் நீ என்னை நோக்கினதினாலே) இம்மை இன்பவாழ்விலும் மறுமை இன்பவாழ்விலும் நான்வைத்திருந்த பற்றை நீக்கின மெய்ப்பொருளாயுள்ள

யனே; புனிதா — தூய்மையனே; வாள்பொங்கு அரவம் கங்கை ீர் தங்கு செஞ்சடையாய் — ஒளிர்கின்ற சிறுபாம்பும் கங்கைநீரும் ரித்துள்ள சிவந்த சடையை உடையவனே; தெருளும் — (பெரி யார்) தாங்கள் தெளிதற்கு ஏதுவாகிய; நான்மறை — நான்கு வேதங்களின்பொருளை; சேர் சீர் — இடைவிடாது நினைக்கின்ற சிறப்பை உடைய; திருப்பெருந்துறையில் — திருப்பெருந்துறை யில்; மலர்செழும் குருந்தம்மேவிய — பூக்களையுடைய செழுமை யான குருந்தமரத்தினடியின்கீழ் வீற்றிருந்த; அருளனே — அரு ளாளனே; அடியேன் — நினது அடிமையாகிய நான்; ஆதரித்து அழைத்தால் — உன்னை விரும்பி அழைத்தால்; அதெந்துவே என்று அருளாயே — நீ என்னைப்பயப்படாதே என்று சொல்லி அருள்செய்க.

[வி-ரை] மருளனேன் — மருள் – பகுதி. அன் – சாரியை. ஏன்—உயர்திணை ஒருமைத் தன்மை ஆண்பால்விகுதி. மனத்தை— மனமானது ஐம்பொறிகளோடு சேர்ந்துமயங்கி அறிந்து உலகநுகர் ப்புப்பொருள்களைப் பற்றும் கருவியாயிருத்தலால், மருளனேன் மனத்தை என்றார். மயக்கு அறநோக்கி — மயக்கு = மயக்கம், மருள், அவிச்சை, என்பன ஒருபொருட் சொற்கள். நிலையில்லாத இம்மை, மறுமை வாழ்வு இன்பங்களை நிலையுள்ளன என்று மயங்கி அறியும் சுட்டறிவு. இது குருவானவர் அருட்பார்வையால் அவிச்சைகெடும்படி பக்குவப்பட்ட சீடனுக்குச் செய்யும் அருட் பார்வைத் தீக்கை. (நயன தீக்கை) மயக்கற நோக்குதலாவது, பக்குவப்பட்ட சீடனுக்கு அவன் தன்னிடத்துளதாகிய மலமறைப்பி னாலே அநித்தத்தை நித்தமென்றும், அசுத்தத்தைச் சுத்தமென்றும், துன்பத்தை இன்பமென்றும், தானல்லாத பொருளைத் தானென் றும் திரியக்காணும் உணர்வாகிய மயக்க அறிவு ஒழிந்து சிவத் தையே மெய்ப்பொருளெனக் காணும் மெய்யறிவு விளங்கும்படி குருவானவர் அருட்பார்வையாற் பார்த்தல். இது சாதாரணதீக்கைக் குச் சேர்ந்த நயனதீக்கை என்று கூறப்படும். திருநாவுக்கரசு அடி கள் "மருளவாமனத்தனாகி மயங்கினேன் மதியிலாதேன்" என்று

(4 - 76 - 1) லும், சுந்தரமூர்த்தி அடிகள் "மாயமாயமனங்கெடுப் பானை மனத்துளே மதியாயிருப்பானை" என்று (7 - 56 - 8)லும் கூறியிருத்தல் காண்க. மயக்கற நோக்கப்பட்ட மனமானது பசு கரணம் நீங்கிச் சிவகரணமாய்ச் சிவத்தை அறிதற்கு உயிர்க்குக்கருவி யாயிருக்கிறது. மறுமையோடு இம்மையுங்கெடுத்த — உயிரானது இம்மையில் நல்வினை தீவினைகளின் பயனாக இன்பதுன்பங்களையும், மறுமையில் நரக உலகில் துன்பத்தையும், துறக்க உலகில் இன்பத் தையும் நுகர்கின்றது. உயிரானது மெய்யறிவினாலே இறைவனை அறிந்து உணரும்வரை பிறப்பு இறப்பு வட்டத்துக்கு உட்பட்டு உழல்கின்றது. இறைவன், தம்மை இந்தப் பிறப்பு இறப்பு வட்டத்தி னின்று நீக்கிப் பேரின்பம் அருளினான் என்பார், அடிகள் மறுமை யோடிம்மையுங்கெடுத்த என்றார் பொருளனே—என்பது இங்கே மெய்ப்பொருளன் என்னும் பொருள்படவந்தது. பொய் உலகவாழ் வுப்பற்றை நீக்கி மெய்யான வீடுபேற்றை அடையச்செய்ய வல்ல வன், மெய்ப்பொருளனாயிருத்தல் வேண்டுமாதலின் பொருளனே என்றார். புனிதா — இது மல அழுக்கு விரவுதல் இல்லாத இறை வனது தூய்மையைக்குறிக்கிறது. வான்பொங்கு அரவம் கங்கைநீர் தங்கு செஞ்சடையாய் — இது பகீரதன் வானுலகத்திலிருந்து நில வுலகத்துக்கு வரும்படி தனது தவத்தினாலே கொண்டுவந்த கங்கை ஆற்றுவெள்ளத்தை உலகம் அழியாதபடி சிவபெருமான் தன் சடை யிலே ஒரு துளியாக அடக்கிய வல்லமையைக் குறிக்கிறது. மனத்தை மயக்கறநோக்கிப் புனிதமாக்கிப்பேரின்பம் அருளும் இறை வனிடத்தில் புனிதமும் ஆற்றலும் இன்றியமையாது வேண்டப்படு தலின் அடிகள் இறைவனை புனிதா என்றும் வான்பொங்கு அரவம் கங்கைநீர் தங்குசெஞ்சடையாய் என்றும் விளித்துக்கூறினார். தெரு ளும் — இச்சொல்லிற்கு முன் அவாய் நிலையாலே தொகுகி நிற்கிற பெரியார் என்ற சொல்வருவித்துப் பொருளுரைக்கப்பட்டது. நான்மறை — இது, நான்மறையின் பொருள், அதாவது நான்கு வேதங்களிற் கூறப்படுகிற முடிவான பொருளாகிய சிவத்தைக்குறிக் கிறது. அடிகள் (12 - 16) "நன்றாக நால்வர்க்கு நான்மறையினுட்

பொருளை — அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ" என்று கூறுதல் காண்க. சேர்சிர் — சேர்தல் – இடைவிடாது நினைத்தல். திருப்பெருந்துறையில் மலர்செழும் குருந்தம் மேவிய —இங்கே அடிகள் தம்மைச் சிவபெருமான் குருவடிவில்வந்து ஆண்டருளிய தலத்தின் பேரையும் மரத்தின்பேரையும் குறிக்கின்றார். அருளனே — அடிகள் தம்மை சிவபெருமான் ஆண்டருளியதற்கு அவரது பேரருள் காரணமாயிருத்தலால் அருளனே என்றார். அதெந்துவே என்று அருளாயே — எந்து என்பது 'என்ன' என்று பொருள்படும் ஓர் திசைச்சொல். அது இங்கே அஞ்சாதே என்னும் கருத்தில் வந்தது. அடிகள் (4-172)ல் 'அஞ்சேலென்றிங் கருளாய்' என்று கூறிய கருத்தையே இந்தப்பாட்டில் அதெந்துவே என்றருளாயே என்று கூறினார். ஏ — அசை.

---

திருக்கழுக்குன்றத்தில் அருளிய

# ௩௦. திருக்கழுக்குன்றப் பதிகம்.

---

திருக்கழுக்குன்றப் பதிகம் என்பது திருக்கழுக்குன்றம், பதிகம் என இரு சொற்கள் சேரும்போது திருக்கழுக்குன்றப் பதிகம் என வாகியது. திருக்கழுக்குன்றம் ஓர் புண்ணியத் தலம். அடிகள் திருப்பெருந்துறையிலிருந்து திருத்தில்லையாகிய சிதம்பரத்திற்குப்போகும் வழியில் திருக்கழுக்குன்றத்தில் சிலநாள் தங்கியிருந்தபொழுது அங்கே திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் சிவபெருமானைப் பாடிய ஏழு பாட்டுக்களடங்கிய பதிகம் திருக்கழுக்குன்றப் பதிகமாகும்.

---

## குரு தரிசனம்.

---

குருதரிசனம் என்பது குருவினுடைய தரிசனம் என விரியும். தரிசனம் – காட்சி. அடிகள் திருக்கழுக்குன்றத் திலிருந்தபொழுது

அவருக்கு இறைவன் திருப்பெருந்துறையில் வைத்து அவரையாண் டருளிய குருவினுடைய கோலத்தை அவர் தரிசித்து வணங்கும் படி காட்டியருளியதை இப்பதிகப் பாட்டுக்கள் ஒவ்வொன்றினீற் றிலும் 'காட்டினாய்க் கழுக்குன்றிலே' என்று கூறுதலினாலே இப் பதிகம் குருதரிசனம் கூறுவதாகின்றது.

---

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்]

---

திருச்சிற்றம்பலம்.

---

468. பிணக்கி லாதபெ ருந்து றைப்பெரு
மானுன் னாமங்கள் பேசுவார்க்
கிணக்கி லாததோ ரின்ப மேவருந்
துன்பமே துடைத் தெம்பிரான்
உணக்கி லாததோர் வித்து மேல்வினை
யாம லென்வினை யொத்தபின்
கணக்கி லாத்திருக் கோலநீ வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. எகூ.

[ப-ரை] பிணக்கு இலாத — உயிர்கள் எல்லாம் இன்பநல மடைதல் வேண்டுமென்ற நேர்மையான கருத்துடைய; பெருந் துறைப்பெருமான் — திருப்பெருந்துறையில் வீற்றிருந்தருளும் தலைவனே; உன் நாமங்கள் பேசுவார்க்கு—உன்னுடைய திருநாமங் களை (மனத்தாலே நினைந்து நாவினாலே) ஓதுகிறவர்க்கு; இணக்கு இலாதது — உலகத்தை அறியும் சுட்டறிவுக்குப் பொருந்தாதது ஆகிய; ஓர் இன்பம் — ஒப்பற்ற பேரின்பமே; வரும் — உண்டா கும்; (இது நீ எல்லா உயிர்களுக்குஞ் செய்கிற முறைமை). எம் பிரான் — எங்கள் தலைவனே; என்வினை ஒத்தபின்—(அந்த முறை மையின்படி) என்னால் செய்யப்பட்ட நல்வினை தீவினைகள் இரண் டும் நேராக ஒத்து வரும்பருவமும் (அதனுடன் நிகழும் மலபரிபாக

மும், சத்திநிபாதமும்) முற்றியபின்; உணக்கு இலாதது ஓர் வித்து — தீயால் வறுக்கப்படாத விதைபோல முளைத்து வளர்கின்ற ஒப் பற்ற பிறவியாகிய வித்தானது; மேல்விளையாமல் — மேலுமேலும் தொடர்ந்து வராமல்; துன்பமேதுடைத்து — (முன்வினைப்பய ளுகிய) துன்பத்தை முற்றிலும் நீக்கி (பேரின்பம்தந்து); நீ கழுக் குன்றிலே வந்து — நீ, திருக்கழுக்குன்றத்துக்கு வந்து; கணக்கு இலாத்திருக்கோலம் காட்டிஞய் — அளவுபடாத உனது அருட் டிருமேனியை (நான் அகக்கண்ணுலே காணும்படி) எனக்குக் காட்டி யருளினாய்.

[வி-ரை] பிணக்கு இலாத பெருந்துறைப்பெருமான் — பிணக்கு – மாறுபாடு. பிணக்கு இலாத — நேர்மையுடைய. இல் லாத என்பது இலாத எனக்குறைந்து நின்றது. எல்லா உயிர்களும் தாம் இன்பநலமடைதல் வேண்டுமென்ற வேட்கையை உடையன. அவ்வேட்கைக்கு நேர்மையாக அவ்வுயிர்களுக்குத் தலைவனுகிய இறைவனும், அவை இன்பநலமடைதல் வேண்டுமென்ற வேட்கை யுடன் இடையருது ஐந்தொழில்செய்து வருதலால்,அடிகள் அவனை பிணக்கிலாத பெருந்துறைப்பெருமான் என்று விளித்தார். பெரு மான் என்பது அண்மைவிளி. உன் நாமங்கள் பேசுவார்க்கு—சிவ பெருமானுக்கு பல பேர்களுளவாயினும் அவற்றுள் சிறந்த நாமம் அஞ்செழுத்தாகும். இந்த அஞ்செழுத்தில் உயிர்கள் மலத்தினின்று நீங்கி அருளிலொடுங்கிச் சிவப்பேறு அடையும் உண்மை அடங்கி யுள்ளது. அஞ்செழுத்தை, உயிர் சிவபெருமானுக்கு அடிமையாதலை மனத்தால் நினைந்து நாவால் ஓதுதல் முறைமையாதலின், பேசு வார்க்கு என்பதற்கு இனம்பற்றி நினைந்து ஓதுவார்க்கு என்று உரை செய்யப்பட்டது. திருநாவுக்கரசு அடிகள் "எந்தையார் திருநாமம் நமச்சிவாய என்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்கலாமே" என்று (6—93—10) கூறுதல் காண்க. இணக்கு இலாதது ஓர் இன்பமே வரும் — இணக்கு = இணக்கம், பொருத்தம். இணக்கிலாதது — உலகத்தையறியும் சுட்டறிவுக்குப் பொருத்தமில்லாதது; அதாவது அருளைத் துணைக்கொண்டு அறியும் பேரறிவுக்குப் பொருத்தமாயுள்

ளது. ஓர் இன்பம் — ஒப்பற்ற இன்பம்; அதாவது அதற்கு ஒப்பான இன்பம் வேறில்லை. பேரின்பமானது, உலகத்தை அறிகிற சுட்டறிவுக்குப் பொருந்தாததாயும் ஒப்பற்றதாயும் இருத்தலின், இணையிலாததோர் இன்பமே வரும் என்றார். எம்பிரான்—அடிகள், பிற அடியார்களையுஞ் சேர்த்து எம்பிரான் என்று பன்மையில் கூறினார். என் வினை ஒத்தபின் — வினை என்பது நல்வினை தீவினை என்னும் இருவினைகளை. இருவினை ஒத்தலாவது நல்வினையையும் தீவினையையும்—ஒருவர் நல்வினையால் வரும் இன்பப்பயனையும், தீவினையால் வரும் துன்பப்பயனையும் தமது அறிவு நிலையில் அவை இரண்டும் பிறப்பு இறப்புகளுக்கு காரணமாதல்பற்றி ஒப்பாகக் கண்டு உவர்த்தலாகும். இந்த இருவினைபொப்பு அறிவு நிலையானது, ஒருவர்க்கு சரியை, கிரியை, யோகங்களாகிய சிவபுண்ணியங்களின் பயனாக மலவலி தேய்தலாலும் சத்திநிபாதம் தோன்றுதலாலும் உண்டாகிறது. இந்த இருவினையொப்பால் கருவியின் துணையினால் உண்டாகும் சுட்டறிவு ஒழிந்து அருளின் துணையினாலுண்டாகும் மெய்யறிவு விளங்குகின்றது. உணைக்கு இலாதது ஓர் வித்து — இங்கே வித்து என்ற சொல் உருவகமாய் பிறப்பு இறப்புக்களைக் குறிக்கிறது. தீயினால் வறுக்கப்படாத வித்து நீரின் தட்பத்தினாலும் கதிரவன் வெம்மையாலும் முளைத்து வளர்ந்து பெருகுதல் போலத் திருவருளினையே தமக்குக் களைகணாகக்கொள்ளாத உயிர்களுக்கு நல்வினையால் வரும் இனபத்தினாலும், தீவினையால் வரும் துன்பத்தினாலும் பிறப்பிறப்புக்கள் தொடர்ந்து வளர்கின்றன என்பது இந்த உருவகத்திலடங்கியுள்ள உவமான உவமேயங்கள். துன்பமே துடைத்து—நல்வினையால் வரும் இன்பம், தீவினையால் வரும் துன்பம் என்னும் இரண்டில், முன்னையது இருவினையொப்பு முற்றியபின் அருளினால் வரும் இன்பத்தோடு ஒன்றுபட்டு அதனோடு சேர்தலின், எஞ்சிநின்ற துன்பமானது ஒருசேர நீக்கப்படுதலின் துன்பமேதுடைத்து என்றார். அடிகள் (40–3) "எனைபுள்ளுருக்கி யிருவினையை யீடழித்துத்—துன்பங்களை நீத்து" என்றும் (47–11) "இன்பம் பெருக்கி யிருளகற்றி யெஞ்ஞான றுங் — துன்பந்தொடர்

வறுத்து" என்றும் கூறியிருத்தலே நோக்குக. துடைத்தல்—முற்றிலும் நீக்கல். துன்பம்துடைத்தபின் உண்டாவது பேரின்பமாதலால் துன்பம்துடைத்து என்றதற்குப்பின் பேரின்பம் தந்து என்று கூட்டி உரைக்கப்பட்டது. இருவினையொப்புப் பருவம் தொடங்குமுன், அறவொழுக்கத்தால் வருவது இன்பமென்று ஆன்மா அறியும் அறிவு வளர்ந்து நிலைபெறுதற்கு மறவொழுக்கத்தால் வருவது துன்பமென்று ஆன்மா அறியுமறிவு துணையாய் அதனோடுடனிருந்து இருவினையொப்புப் பருவம் முற்றி, அறவொழுக்கமானது அருளொழுக்கமாக மாறியபின் துன்பம் ஆன்மாவை விட்டு அறவே நீக்கப்படுதலால் துன்பமே துடைத்து என்றார். உயிர் உடலைப் பற்றியிருக்கும்பொழுது அதற்கு உடலைப்பற்றிய துன்பமுண்டேயன்றி இறைவனைப் பற்றியிருந்து அருளொளியிலொழுகும்பொழுது தனித்தவினைப முளதாதலன்றி அவ்வின்பத்தோடு துன்பத்தொடர்பு சிறிதுமுளதாகமாட்டாது. துன்பமே என்பதில் 'ஏ' பிரிநிலையை புணர்த்தும் ஏகாரம். கணக்கு இலாத்திருக்கோலம் காட்டினாய் — காணுதல் - அகக்கண்ணால் அகண்ட ஒளி உருவத்தைக் காணுதல்.

---

தில்லையில் அருளிய

# ௩௧. கண்டபத்து.

---

கண்ட — அகக்கண்ணால் நடனதரிசனஞ் செய்த; பத்து — பத்துப் பாட்டுக்களடங்கிய பதிகம். கண்டபத்து என்பது அடிகள் திருப்பெருந்துறையில் இறைவன் தம்மை யாண்டருளியபின் அருளிய ஆணையின்படி திருப்பெருந்துறையிலிருந்து திருத்தில்லைக்கு வந்துசேர்ந்து தாம் பொன்னம்பலத்தில் கூத்தப்பிரானுடைய நடனத்தைக்கண்டு வணங்கியபொழுது அவர் பாடிய பத்துப் பாட்டுக்களடங்கிய பதிகம்.

## நிருத்த தரிசனம்.

*நிருத்தம், தரிசனம் என்ற இரண்டு சொற்களும் சேர்ந்து நிருத்த தரிசனம் என்றாகியது. நிருத்தம் என்பது கூத்தப்பெருமான் உலகில் உயிர்களுய்யும் பொருட்டுச் செய்யும் ஐந்தொழிலைக் குறிக்கிற கூத்தாகிய நடனமாகும். தரிசனம் என்பது காட்சி. அது இங்கே அடிகள், பொன்னம்பலத்தில் ஞானாகாசமாகிய தூவெளியில் கூத்தப்பிரான் செய்கிற நடத்தை அகக்கண்ணால் கண்டு வணங்கும் அகக்காட்சியைக் குறிக்கிறது. நிருத்த தரிசனம் என்பது தில்லையம்பலத்தில் அடிகள் அகக்கண்ணாற்கண்ட கூத்தப்பிரானுடைய நடனக் காட்சி.*

---

475. இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா வானந்த மணிகொள்தில்லை கண்டேனே. எச.

[ப-ரை] *இறப்பதற்கே காரணமாய்—(இந்த அருமை மானுடப்பிறவி யுலகவாழ்வினால் பெறுதற்குரிய பேரின்பப் பெரும் பயனை அடையாமல்) வீணே சாதற்றன்மையை அடைதற்கு ஏற்ற வழியில்; இந்திரியவயம் — மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளின் வயப்பட்டு; மயங்கி—அதனால் உலகவாழ்வு இன்பமே நிலையுள்ளது என மயங்கி அறிந்து; அந்தரம் திரிந்து போய்—(அம்மயக்க அறிவுபற்றிச்) சிந்தை வேறுபாடுடையவனாய்ப் (பலவகை உலகபோகங்களைத் தேடுவதிலும், நுகர்தலிலும்) உழன்று சென்று; அருநரகில் வீழ்வேற்கு — முடிவில் கடத்தற்கு அரிய நிரயத்தில் வீழ்ந்து துன்பமடைய இருப்பவனாகிய எனக்கு; சிந்தை தனைத் தெளிவித்து — (அவ்வாறு நான் இறந்து நிரயத் துன்பம் அடையாதபடி) எனது சிநதையானது மயக்க அறிவினின்று நீங்கிச் சிவமே மெய்ப்பொருள் என்று உணரும் தெளிந்த அறிவை அடை*

யும்படி செய்து; சிவம்ஆக்கி — (அவ்வாறு தெளிந்த எனது சிந்தையில் தன்னுடைய எண்குணங்களையும் பதிவித்து) அதனை மலம் முற்றிலும் நீங்கி சிவத்தன்மையை உடையதாகும்படி செய்து; எனைஆண்ட — ஆண்டவனாகிய தான் என்னைத் தனது அடிமையாகக்கொண்டு பேரின்பம் அருளிய; அந்தம் இலா ஆனந்தம் — முடிவில்லாத பேரின்பப்பொருளாகிய சிவபெருமானை; அணிகொள் தில்லை — அழகுபொருந்திய திருத்தில்லைத் தலத்தில்; கண்டேன்— நான் (எனது அகக்கண்ணினாலே) நேரே பார்த்து உணர்ந்தேன்.

[வி·ரை] இறப்பதற்கே காரணமாய் — பேரின்பப்பேற்றையே நாடிச சிவபெருமானது அருளைத்துணையாகக் கொண்டு ஒழுகாமல் உலகபோக நுகர்வுகளையே தேடி நுகர்ந்தொழுகுதலின் பயனாக, உலகவாழ்வு முடிவில் கூற்றுவனால் தூல உடலினின்று உயிர் பிரிக்கப்பட்டு இறத்தலும், இறந்தபின் சூக்கும உடலோடு நிரய துறக்கங்களிற் சென்று பின்பிறத்தலும் திண்ணமாதலின், இறப்பதற்கே காரணமாய் என்றார். ஏகாரம் தேற்றத்தைக் குறிக்கிறது. இந்திரியவயம் — இந்திரியம் - பொறி, ஐந்து அறிவுக்கருவிகள் (ஞானேந்திரியங்கள்) ஐம்பொறிகள், மனம், அகங்காரம், புத்தி, சித்தம் ஆகிய அந்தக்கரணங்கள் வாயிலாகவும், அந்தக்கரணங்கள் ஆன்மாவினாலும் தொழிற்படுதலினால், இந்திரிய வயப்படுதல் என்பது ஆன்மா மேல்நோக்காது கீழ்நோக்கி அந்தக்கரணங்கள் ஐம்பொறிகள் ஆகிய இவை உலகபோக நுகர்ச்சியைத் தேடிச்செல்லும் வழியே செல்லுதல் ஆகும். மயங்கி—மயக்க அறிவையுடையவனாகி; சிவத்தை அடையும் பேரின்பமே நிலையாயுள்ள மெய்யின்பம் என அறியும் அறிவுக்கு வேறாக உலகவாழ்வுச் சிற்றின்பமே நிலையான இன்பமெனத் திரிவுபட அறிதல், மயக்க அறிவு ஆகும். அந்தரமே திரிந்து — அந்தரம் - வேறுபாடு. அஃது இங்கே மயங்கி அறிதலாகிய வேறுபாடுடைய சிந்தையைக் குறிக்கிறது. பின்னே கூறப்படுகிற தெளிந்த சிந்தைக்கு எதிரிடையான சிந்தை "வேறு சிந்தையிலாதவர் தீவினை — கூறுசெய்த குழகன்" என்று திருநாவுக்கரசு

அடிகள் (5–20–4) கூறியிருத்தல் காண்க. ஆன்மா இறந்தபின் முதலாவது நிரயஞ்சென்று பின் துறக்கம்புகுதல் மரபு ஆதலின், அந்தரம் என்ற சொல்லுக்கு வான் அல்லது வானுலகம் என்று பொருள் கூறுதல் பொருந்தாது. திரிதல் என்பது எந்த உலகபோகம் நிலையான இன்பம் பயக்கும் என்று ஓயாது ஒன்றைவிட்டொன்றுபற்றி உழலுதல். அந்தரமே என்ற சொல்லின் கடையிலுள்ள 'ஏ' அசை. அருநரகில் வீழ்வேற்கு — நிரயத் துன்பத்தினின்று நீங்குதல் அரியது ஆதலின் அருநரகு என்றார். வீழ்வேன் — உயர்திணை ஆண்பால் ஒருமைத்தன்மை எதிர்கால வினையாலணையும் பெயர். வீழ்வேற்கு — விழஇருப்பவனாகிய எனக்கு. சிந்தைதனைத் தெளிவித்து — சிந்தையைத் தெளிவித்தல் என்பது சிவபெருமான் ஆன்மாவுக்குத் தனது அருட்பேரொளியைக் காட்டி அதன்கண் அடங்கி நிற்கும்படி செய்தல். இதனால் ஆன்மாவுக்கு முற்றிலும் மலநீக்கம் உண்டாகிறது. இது சிவபெருமான் ஆன்மாவுக்கு வேறாய் நின்று காட்டும் உதவியாகும். ஆன்மாவினது தெளிந்த சிந்தையில் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து நிற்கிற சிவம், ஆன்மாவினுடன் அத்துவிதமாய்க் கலந்து விளங்கி நிற்றலால் 'சிந்தைதனைத் தெளிவித்து' என்றார். "சிந்தையினுள்ளே தெளியவல்லார்க்குச் சிந்தையினுள்ளே சிவனிருந்தானே" என்று திருமூலர் 2853வது திருமந்திரப்பாட்டிற் கூறியிருத்தல் காண்க. சிவம் ஆக்கி — சிவம் = சிவத்தன்மை. சிவமாக்குதல் - சீவத்தன்மையை நீக்கிச் சிவத்தன்மை அடைவித்தல். மலத்தன்மை முற்றிலும் நீங்கிய ஆன்மாவுக்குச் சிவபெருமான், முற்றுணர்வு முதலிய தன்னுடைய எண்குணங்களையும் ஆன்மாவினிடத்திற் பதியச்செய்தலால் சிவத்தன்மை உண்டாகிறது. ஆன்மா இவ்வாறு சிவத்தன்மை அடைந்தபின்பே சிவனுடைய பேரின்பம் நுகருதற்குத் தகுதியுடையதாகின்றது. இது சிவபெருமான் ஆன்மாவோடு உடனாய் நின்று விடயப்பொருளாகிய தன்னைக்காணச் செய்யும் காணும் உதவியாலுண்டாகிறது. இத்தகைய சிவத்தன்மையைச் சிவபெருமான் தமக்கு உண்டாக்கினான் என்பார், சிவமாக்கி என்றார். எனை ஆண்ட — 'என்னை'

என்ற சொல் 'எனை' எனக்குறுகியது. 'ஆளுதல்' என்பது ஆண்டவன் ஆகிய சிவபெருமான் அடிகளை அடிமையாகக்கொண்டு ஆண்டு பேரின்பம் அருளியதைக் குறிக்கிறது அந்தமிலா ஆநந்தம் — இறவாத பேரின்பம் (நிரதிசய இன்பம்-infinite bliss), அளவில் அடங்காது நுகருந்தோறும் மேலும் மேலும் பெருகி வளர்தலால், ' அந்தமிலா ஆநந்தம்' என்றார். 'ஆநந்தம்' என்ற சொல் இங்கே ஆநந்த உருவன் ஆகிய சிவபெருமானைக் குறிக்கிறது. கண்டேன் — காணுதல் என்பது இங்கே அககண்ணாற் கண்டு தம்முள்ளே உணர்தலைக் குறிக்கிறது. 'ஏ' அசை. இந்தப் பாட்டில் சிந்தை தெளிவித்தல், சிவமாககல், ஆண்டு பேரின்பமளித்தல் ஆகிய மூன்றும் முறையே ஆன்மாவோடு பிரிவறக்கலந்து நிற்கும் சிவபெருமான் ஆன்மாவுக்கு வேறாய் நின்று காட்டும் உதவியையும், உடனாய் நின்று காணும் உதவியையும், ஒன்றாய் நின்று பேரின்பமருளுதலையுங் குறிக்கின்றன. இம்மூன்றும் சிறப்பியல் அத்துவித நிலைகள். இம்மூன்று அத்துவித நிலைகளும் 'இன்றெனக்கருளி' என்ற முதற்குறிப்புப் பாட்டிலும் பல திருவாசகப் பாட்டுக்களிலும் கூறப்பட்டிருத்தல் காண்க.

---

479. சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை யல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம யானெனதென் னுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே. எறு.

[ப-ரை] சாதிகுலம் பிறப்பு என்னும் சுழிப்பட்டு—வருணம், குலம், குடிப்பிறப்பு என்னும் மக்கட் பிரிவுகள்பற்றி உண்டாகும் அகங்காரமாகிய சுழியில் அகப்பட்டு; தடுமாறும்—அறிவுமயங்கும்; ஆதம்இலி நாயேனை — நின்னையன்றி யாதொரு பற்றுக்கோடுமில்லாத நாய்போன்றவனாகிய என்னை; அல்லல் அறுத்து — பிறவித் துன்பத்துக்கு காரணமாகிய மும்மலங்களையும் ஒழித்தருளி; பேதை —அறியாமையும்; குணம் — சாத்துவீக, இராசத, தாமத குணங்

களும்; பிறர் உருவம் — உடலுருவத்தினாலே உண்டாகும் யான் பிறர் என்னும் வேற்றுமையும்; யான் எனது என் உரை — யான் என்னும் அகப்பற்றினாலுண்டாகும் செருக்கு மொழியும் எனது என்னும் புறப்பற்றினாலுண்டாகும் செருக்கு மொழியும்; மாய்த்து— ஆகிய இவையெல்லாம் அறவே யொழியும்படி கெடுத்து; ஆட்கொண்டு—(நான் அறியும்வண்ணம்செய்து) என்னை அடிமையாகக் கொண்டு ஆண்டருள் செய்து; கோதுஇல் அமுது ஆனானை — குற்றம்இலாத இன்பநுகர்வுப்பொருளாயிருப்பவனை; குலாவுதில்லை கண்டேன் — அருள்விளங்குகின்ற தில்லைப்பதியிலே எனது அகக் கண்ணினாலே கண்டு உணர்ந்தேன்.

[வி-ரை] சாதி என்பது பிறப்பு என்று பொருள்படும் வடமொழிச்சொல். சாதி என்பது மக்களுக்குள் பிறப்பு வேற்றுமை யாலுண்டாகும் கூட்டத்தாரை உணர்த்தும். குலம், கூட்டம் என்று பொருள்படும் தமிழ்ச்சொல். குலம் என்பது மக்களுக்குள் தொழில் வேற்றுமையாலுண்டாகும் கூட்டத்தாரை உணர்த்தும். பிறப்பு என்பது குடிப்பிறப்பு. பிறப்பு என்பது மக்களுக்குள் யாதாமொரு தொழில் அல்லது ஒழுக்கம்பற்றிச் சிறப்புப்பெற்ற மக்களின் வழி (பரம்பரை)யில் வந்த கூட்டத்தாரை உணர்த்தும். இந்த மூன்று கூட்டத்தாரும் காலக்கழிவில் பேர்மாத்திரையானே தங்களுக்குத் தாங்களே பிறரிடத்தில் பெருமை கூறிப் பாராட்டும் செருக்குக்கேதுவாகிய, பெருமிதமாகிய சிறுமையுடையவர்களாதலின், அவர்களிடையே கி. பி. மூன்றாவது நூற்றாண்டில் தமிழ்நாட்டில் வாழ்ந்துவந்த அடிகள், அம்மூவகை மக்கட்பிரிவாலாகிய செருக்கு பேரின்பப்பேற்றிற்குத் தடையாயிருப்பதை யுணர்ந்து தம்மைச் சாதி குலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத்தடுமாறும்ஆதமிலி நாயேனை என்று தம்மேல் வைத்துக கூறினார். இவ்வகைச செருக்கு இக்காலத்தும் தமிழ்நாட்டு மககளுள் முற்றிலும் நீஙகவில்லையாதலின், இவ்வுரை அவர்கள் செருககிலிருந்து நீஙகி உய்வதற்கு வேண்டப் படும் அறிவுரையாகும்.

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல். (திருக்குறள் 979)

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவர் கூறியதை யறிக. சுழிப் பட்டு என்றது உருவகம். ஆற்றுவெள்ள நீர்ச்சுழியானது, தன்னிடத்து வருகின்ற பொருளை ஓடுநீரோடு போகவிடாமல் தனக்குள்ளே இழுத்து அகப்படுத்திக் கொள்ளுதல்போல, ஒருவன் தனது சாதிகுலப் பிறப்புக்குறைகளை ஓராது தன்னை உயர்ந்தவனென்று மாத்திரம் மதித்துப் பிற கூட்டமக்களைத் தன்னிலும் தாழ்ந்தவராக அவமதித்து ஒழுகும் செருக்கானது அவனை அறநெறியிற் சென்று ஒழுகவொட்டாது கீழ்மையடையும்படி செய்யும் என்று உருவகத்தின் உவமானமும் உவமேயமும் விரியும். தடுமாறும் — தடுமாறுதலென்பது உள்ளவாறு அறியாது ஒன்றை மற்றொன்றாக நினைத்து மயங்கி அறிதல்; அதாவது, தன்னிடம் நற்குணங்களில்லாத ஒருவன் செருக்கினாலே தனக்கு நற்குணங்களுள்ளனவாக மயங்கி அறிந்து ஒழுகுதல். ஆதம் இலி நாயேனை — ஆதம் - பற்றுக்கோடு. தனக்கு இறைவனல்லாது வேறு பற்றுக்கோடு இன்மையால் ஆதமிலி என்றும், அவ்வாறு பற்றுக்கோடினை நீத்தனித்து நிற்கும் வன்மை தனக்கு இன்மையால் நாயேன் என்றும் அடிகள் கூறினார். அல்லல் அறுத்து — அல்லல் - துன்பம், பிறவித்துன்பம். இங்கே பிறவித்துன்பத்துக்குக் காரணமாகிய மும்மலங்களையும் குறிக்கிறது. காரணமாகிய மும்மலம் பிறவித்துன்பமாகிய காரியமாக உபசரித்துக் கூறப்பட்டது. அடிகள் (51 - 1)ல் "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்" என்று கூறியிருத்தலை நோக்குக. பேதை — பேதமை, அறியாமை. இங்கே பேதமை என்பது அநித்தத்தை நித்தமெனறும், அசுத்தத்தைச் சுத்தமென்றும், துன்பத்தை இன்பமென்றும், தானல்லாத பொருளைத் தானென்றும், சுட்டறிவினாலே திரியக்காணும் மயக்க அறிவாகிய அவிச்சையைக் குறிக்கிறது. இது பிரகிருதிமாயைக் குரியது. இது பஞ்சக்கிலேசங்களிலொன்றாய் அவற்றிற்கு முதலாயும் உள்ளது. குணம் — என்பது பிரகிருதிமாயைக்குரிய சாத்துவிகம் ராசதம் தாமதம் என்னும் மூக்

குணங்களைக் குறிக்கிறது. பேதைக்குணம் என்று இராது பேதை குணம் என்றிருத்தலினாலே பேதமையும் குணமும் என்று உம்மைத் தொகையாகப் பொருள்கொள்ள வேண்டுமேயன்றி பேதைமையாகிய குணம் என்று பொருள்படுதல் பொருந்தாது. பிறர்உருவம்—யான், பிறர் என்னும் வேற்றுமை, உடல் உருவினாலுண்டாவதால் பிறருருவம் என்பதற்கு உடலுருவத்தினாலுண்டாகும் 'யான், பிறர்' என்னும் வேற்றுமையென்று பொருளுரைக்கப்பட்டது. யான், பிறர் என்னும் வேற்றுமையினாலே தன்னலம், மக்கட்பொதுநலம் என்னும் வேற்றுமையும் உலகில் உளதாகின்றது. உடலிலிருக்கும் உயிரையும் உயிர்கள்தோறு மிருக்கும் இறைவனையும் நோக்கும் அருளுடையவர்க்கு இவ்வுடலுருவ வேற்றுமை உண்டாகாது. இவ்வருளுடையவர்க்கு தன்னலம் மக்கட்பொதுநலம் என்னும் வேற்றுமை தோன்றாது. யான் எனது என்உரை — யான் என்பது அகப்பற்றையும், எனது என்பது புறப்பற்றையும் குறிக்கின்றன. யான் என் உரை, எனது என் உரை எனறு இயைத்துப் பொருள் கொள்ளுக. மனத்தில் நினைப்பின்வழி உரையும் உரையின் வழி செயலும் உண்டாதலால் யான், எனது, என்உரை என்றதனாலே, 'யான்,' 'எனது' என்னும் நினைப்பும், அந்நினைப்புப்பற்றி வரும் உரையினாலுண்டாகுஞ் செயலும் உடன் கொள்ளுக. இங்கே உரை என்பது வாக்கினாலுண்டாவது. ஆகவே, மனம், வாககு, உடல் என்னும் மூன்று கருவிகளும் (திரிகரணங்களும்) யான் எனது என்னும் செருக்கு ஒழிந்து தூய்மையாதல் வேண்டும் என்பது கருத்து. மாய்த்து — மாய்த்தல் என்பது மேலேகூறிய மலக் குற்றங்களெல்லாம் சிறிதுமின்றி அறவே ஒழித்தலாகும். அல்லல் அறுத்தலாகிய மும்மலம் அறுதலின் பயனாக, பேதைகுணம், பிறருருவம், யானென தென உரைமாய்தலாலும் அடிமையாக ஆட்கொள்ளப்படுவதற்கு முன் அல்லல் அறுத்லும் பேதைகுணம், பிறருருவம், யானெனதென் உரைமாய்தலும் இன்றியமையாது வேண்டப்படுவனவாதலின், ஆட்கொண்டு என்பதனை 'யான், எனது என்உரைமாய்த்து' என்பதற்குப் பின்னே வைத்து பொருள்கூறப்

பட்டது. ஆட்கொண்டு — ஆண்டவனுகிய இறைவன் அடிகளை அடிமையாக அறியும்படி ஆண்டருள்செய்து. திருநாவுக்கரசு அடிகள் "என்னைத் தன்னடியானென்றறிதலும்—தன்னைநானும் பிரானென் றறிந்தெனே" என்று (5 - 91 - 8) கூறியிருக்கும் உண்மை நோக்கி, ஆட்கொண்டு என்பதற்கு நான் அறியும் வண்ணம் செய்து என்னை அடிமையாகக் கொண்டு ஆண்டருள்செய்து என்று பொருள் கூறப் பட்டது. கோது இல் அமுது ஆனை — கோது - குற்றம். அது இங்கே மலம் விரவுதலின்மையைக் குறிக்கிறது. அமுது - சோறு, இன்பம் அதாவது நுகர்வுப்பொருள். அடிகள் (15 - 7ல்) "பாதகமே சோறு பற்றினவா தோணேக்கம்" என்று கூறியிருத்தல் காண்க. கட்டு நிலையில் உயிர்களுக்கு மலம் விரவுதலுள்ள உலகப்பொருள் நுகர்வுப் பொருளா யிருத்தல்போல, கட்டு விடுதிபெற்ற வீட்டு நிலை யில் மலம் விரவுதலில்லாத இறைவனே நுகர்வுப் பொருளாயிருத்த லின், கோதிலமுதானை யென்ருர். அடிகள் (5-71ல்) கூறிய "புங்கமானபோகமே" என்பதும் இதே கருத்தைக் குறிக்கின்றது. சிவஞானபோதம் 11-ம் சூத்திரம் வெண்பாவில் "ஏகமாய் நின்றே யிணை யடிகளொன்றுணரப் — போகமாய்த்தான விளைந்த பொற்பி ஞன்" என்று இறைவன் கூறப்பட்டிருத்தல் காண்க. தில்லை கண்டேனே — காணுதல் இங்கே கண்டறியாமல் காணுதல். அதாவது உள்ளுணர்வாலறிதல். ஏ - அசை. சிவபெருமான் சிறப் பாகத் தில்லையில் உயிர்கள் பேரின்பம் அடைதற்பொருட்டு ஓவாது நடனஞ்செய்தலால், கோதிலமுதானைக் குலாவுதில்லை கண்டேனே என்ருர். இந்தப் பாட்டில் அடிகள் தம்மைச் சிவபெரு மான் தமது மும்மலக் குற்றங்களையும் நீக்கி அடிமையாக ஆண் டருளிப்பேரா இயற்கைப் பேரின்பமளித்ததைக்கூறுகிருர். ஒருவர் சித்தாந்த முத்தியாகிய பரமுத்தி யடைதற்கு எவ்வுயிர் நலமும் தமது நலமாக எண்ணும் ஒற்றுமையுணர்வுடைய பேரருள் நிலை யுடையராதல் வேண்டுமென்பது இப்பாட்டின கருத்து. "எவ் வுயிரு மென்னுயிர்போல் எண்ணி யிரங்கவுநின் தெய்வவருட் கருணை செய்யாய் பராமரமே"என்று தாயுமானுர் இவ்வுண்மையைக் (700-வது பாட்டு) கூறியிருத்தல் காண்க.

481. பத்திமையும் பரிசுமிலாப் பசுபாச மறுத்தருளிப்
பித்தனிவ னெனவென்னை யாக்குவித்துப் போரமே
சித்தமெனுந் திண்கயிற்றாற் றிருப்பாதங் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே. எசு.

[ப-ரை] பத்திமையும் பரிசுமிலாப் பசுபாசம் — (உயிரினுக்கு இயல்பாய்ச் சிவனிடத்துள்ள) மெய் அன்புடைமையும், (அச் சிவனிடத்தில் வித்துப்போல் அடங்கியுள்ள காரணநிலையாகிய உலகத்தின்) மெய்த்தன்மையும் முறையே விளங்காம லிருக்கும்படி செய்கிற பசுத்தன்மையையும் பாசத்தன்மையையும்; அறுத்தருளி — (என்னிடம் சிறிதும் தோன்றாமலிருக்கும்படி) முற்றிலும் நீக்கி அருளி; பித்தன் இவன் என என்னை ஆக்குவித்து—''இவன் சிவனிடத்தில் முழுப்பற்றுடைய பித்தன் (பைத்தியக்காரன்)'' என்று என்னைக்கண்ட ஊரார் கூறி எள்ளி நகையாடும்படி செய்வித்தும்; போரமே — பெயராது; சித்தம் எனும் திண்கயிற்றால் திருப்பாதம் கட்டுவித்த — எனது உள்ளமாகிய வலிய கயிற்றினாலே என்னைத் தன்னுடைய இரண்டு திருவடிகளோடு என்றும் நீங்காதபடி கட்டித் தன்னையே பற்றும்படி செய்வித்த; வித்தகனார் — பேரறிவாற்றலோடு கூடிய சிவபெருமானுடைய; விளையாடல் — கரணத்தாலன்றிச் சங்கற்ப மாத்திரையானே எளிதாகச் செய்யவல்ல ஐம்பெரும் அருட்செயல்களையும்; விளங்கு தில்லை கண்டேன்—அருள் விளங்குகின்ற தில்லைத் திருப்பதியின்கண்ணே நான் (அகக்கண்ணால் நேரே) பார்த்தேன்.

[வி-ரை] பத்திமையும் பரிசும் இலாப் பசுபாசம் — 'பத்திமை' என்பது 'அன்புடைமை'. அஃது இங்கே உயிருக்குச் சிவனிடத்திலே இயல்பாயுள்ள மெய்யன்புடைமையைக் குறிக்கிறது. 'பரிசு' என்பது 'தன்மை' அல்லது 'பண்பு'. அஃது இஙகே மாயாதத்துவங்களாலாகிய காரிய உலகிற்குக் காரண நிலையிலுளதாகிய சத்தாந்தன்மை (மெய்த்தன்மை)யைக்குறிக்கிறது. 'பாசம்' என்பது

'பாசத்தன்மை' அதாவது உயிர், மாயா தத்துவங்களாலாகிய உலகின் மேல் பற்றுவைக்கும்படி செய்கிற பாசக்கட்டுடையதாம்தன்மை. உயிரானது மாயாதத்துவக் கூட்டங்களாலாகிய உடலைத் தானுகவும் தானே உடலாகவும், அத்தத்துவக் கூட்டங்களுடைய குணங்களைத் தன்னுடைய குணஙகளாகவும் வேற்றுமையின்றி நினைத்தும், உடலையும் உடல் தங்கும் உலகினையும் உலகிலுள்ள நுகர்வுப்பொருள்களையும் நிலையுள்ளவைகளாக மதித்தும் மயங்கி அறிதல் உயிர்க்குப் பாசத்தன்மையாகும். பசுத்தன்மை என்பது உயிர்த்தன்மை (சீவத்தன்மை). அதாவது, உயிரானது அறிவுடைய தான் அறிவில்லாத உயிரில்பொருள்களாகிய உடல் உலகம், நுகர்வுப் பொருள்களினின்று வேறு என்றும், தனக்குக் கீழாயுள்ள அவற்றை அறிவுடைய தான் அறிந்து, மேற்கொண்டு வருவதாகவும் அறிந்தாலும், திருவருளினது துணையின்றித் தன் அறிவாலே தத்துவங்களையும் தன்னையும் அறிந்து பயனருந்தி வருவதாக நினைக்கும் தன் முனைப்பு மயக்க அறிவு. பாசக்கட்டுடைய மயக்க அறிவானது உயிருக்கு மாயையினுலாகிய உடலையும், உலகையும், நுகர்வுப்பொருள்களையும், அவற்றின் காரியநிலையில் கணந்தோறும் தோன்றியும் மறைந்தும், அழிந்தும் வரும் நிலையில்லாத தன்மையில் அறியாமையை உண்டுபண்ணி அவற்றில் முழுப்பற்று வைக்கும்படி செய்தும் அவற்றின் சத்தாந்தன்மையான காரண நிலையை அறியவொட்டாமலு மிருக்கும்படி செய்கிறது. அதனுல் 'பரிசு இலாத பாசம்' என்றூர். பசுத்தன்மையாகிய உயிரின் தன் முனைப்பு அறிவினுல் உயிரானது உண்மையில் தனக்கு எப்பொழுதும் துணையாய் உபகரித்துவரும் திருஅருளினை அறியாதிருத்தல் காரணமாக இறைவனை அறிந்து அவனிடத்து அன்பு செய்யவொட்டாமலிருக்கச் செய்தலினுல் அடிகள் 'பத்திமையில்லாப் பசு' என்றூர். பசு பாசம் என்பது உம்மைத்தொகை. பத்திமையும் பரிசுமிலாப் பசுவையும் பாசத்தையும் எனவிரித்துரைக்க. பத்திமையிலாப் பசு என்றும், பரிசு இலாப் பாசம் என்றும் நிரனிறையாக இயைத்துப் பொருள்கொள்க. அறுத்தருளி — 'அருத்தருளல்'

என்பது உயிரினுடன் இதுவரை பற்றியிருந்த மலத்தொடர்பைச் சிறிதுமில்லாதபடி முற்றிலும் நீக்கி அருளுதல் ஆகும். இவ்வாறு உயிரினுடைய பசுபாசங்களை அறுத்தல் உயிரினது மலநீக்கம் ஆகும். மலநீக்கம் பெறுதல் உயிருக்கு எதிர்மறைப்பயன். காரிய உலகமானது என்றும் அழியாத காரண நிலையில் தன் அருட்பேரொளியில் அடங்கியிருத்தலையும், உயிரின் அறிவுச்சுடர் தனது பேரறிவுச்சுடரில் அடங்கியிருத்தலையும் இறைவன் உயிருக்கு 'இன்றெனக்கருளி' என்ற பாட்டுரையில் விளக்கப்பட்டபடி காட்டுதலால் மலநீக்கம் உண்டாகின்றது. இவ்வாறு இறைவன் உயிருக்குக்காட்டுவதால் உயிரில்உலகம் உயிருலகம் எல்லாம் இறைவனிடத்தில் அடங்கிநின்று இறைவன் தனியே நின்று விளங்குதலை உயிர் அறிகின்றது. இந்த நிலையை அடிகள், 'இன்றெனக்கருளி' என்ற முதற்குறிப்புத் திருவாசகப் பாட்டில் 'இருள்கடிந்து உளளத தெழுகின்ற ஞாயிறேபோன்று நின்ற நின்தன்மை' என்று கூறியருளினர். அடிகள் இந்தப்பாட்டில் 'பசுபாசமறுத்தருளி' என்று கூறிய கருத்தை அச்சோப் பதிகம் முதலாவது பாட்டில் 'சித்த மலமறுவித்து' என்று கூறியருளினர். பித்தன் இவன்என என்னை ஆக்குவித்து — இது மலநீக்கம்பெற்ற உயிருக்கு இறைவன் அருள் விளக்கம் உண்டாகும்படி .செய்தல். இஃது உயிருக்கு உடன்பாட்டுப்பயன். மலநீக்கத்தால் உயிருக்கு இறைவன் ஆகிய பேரின்பப் பொருள் விளங்கித்தோன்றுமேயன்றி அவ்வின்பப்பொருளைப் பற்றும் முயற்சி உண்டாகாது. இந்தப் பற்றும் முயற்சியானது 'இன்றெனக்கருளி' என்றபாட்டுரையில் விளக்கப்பட்டபடி, இறைவன் உயிரோடு உடன்நின்று இன்பப்பொருளாகிய தன்னைக்காணச் செய்யும் காணும் உதவியால் உண்டாகின்றது. இதனால் உயிர் அருள்விளக்கம் உடையதாகி இறைவனைப் பற்றுகின்றது. 'பித்தன் இவன்என என்னை ஆக்குவித்து' என்று இப்பாட்டில் கூறியதை, அச்சோப்பதிகம் முதலாவது பாட்டில் 'சித்தமலம் அறுவித்து' என்றதற்குப்பின 'சிவமாக்கி' எனறு கூறியருளினர். திருமந்திரம் 1820-வது பாட்டில் நின்மலன் (சிவன்) ஆக்கி என்றும் கூறப்

பட்டதும் இதனையே. ஒருவன் யாதாமொருபொருளைச் சார்ந்து அதன்மயமாய் அதனிடத்திலே முழுப்பற்று உடையவனுயின் அதில் அவன் பித்தன் என்று கூறப்படுகிருன். இங்கே அடிகள் தமக்கு உயிர்ப்பற்றிலாவது, பொருட்பற்றிலாவது சிறிதும் தொடர்பு இன்றி இறைவனையே நோக்கிநின்று அவனிடத்திலேயே முழுப்பற்றுடையவரா யிருத்தலை, 'பித்தன் இவன் என என்னை ஆக்குவித்து' என்ருர். உலகிலுள்ளவர்கள் உயிர்ப்பற்றும், பொருட் பற்றும் உடையவாகளாதலின் அப்பற்றுக்கள் சிறிதுமில்லாத அடிகளைத் தங்கள் பார்வையில் பித்தன் எனக்கூறுதல் இயல்பு."வைத்த நிதி பெண்டிர் மக்கள் குலங்கல்வி என்னும் பித்த உலகில்'' என்று அடிகள் திருக்கோத்தும்பி 6-வது பாட்டிற் கூறியதை நோக்குக. சித்தம் எனும் திண்கயிற்ருல் பெயராமே திருப்பாதம்கட்டுவித்த — இறைவனுடைய இரண்டு திருவடிகளும் உயிர்களுக்கு வீடு அளிக் கும் இடம் ஆதலின் திருப்பாதம் கட்டுவித்த என்றும், பசுகரண மாகிய சித்தமே சிவகரணமாக மாறிக் கருவிகரணங்களில் சிறிதும் தாக்கின்றிச் சாக்கிராதீதத்தில் எக்காலமும் இறைவனுடைய திரு வடிகளைப் பற்றி நிற்றலால்'சித்தம் என்னும் திண்கயிற்ருல்'என்றும் அத்திருவடிகளைவிட்டு இனிச் சித்தம் பெயர்ந்து உலகத்தை நோக்கிப் பற்றுதலின்மையால் 'திண்கயிற்ருல் பெயராமே கட்டுவித்த' என் றும் இவ்வாறு தம்மை இறைவன் திருவடிகளைப் பற்றுவித்துப் பேரின்பம் நுகரும்படி செய்தது இறைவன்செயல் ஆதலின் கட்டு வித்து என்று பிறவினையிலும் கூறியருளினர். 'சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்கருணை' என்று திருத்தோணுேக் கம் 6-வது பாட்டிற் கூறியருளினமை காண்க. வித்தகனுர் விளை யாடல் — 'வித்தகன்' என்பது 'அறிவுடையவன்'. ஒன்றில் அறி வுடையவனே அதனைச்செய்யும் திறன் உடையவனுயு மிருத்தலின், அந்த வடமொழிச்சொல் திறமுடையவன் என்ற பொருளிலும் வழங்கப்படுகின்றது. இறைவன் ஐந்தொழில் செய்தற்குப் பேரறி வும், பேராற்றலும் உடையவனுயிருத்தலின் வித்தகன் என்பதற் குப் பேரறிவாற்றலுடையவன் என்பது பொருளாகக் கொள்ளப்

பட்டது. விளையாடல், என்பது இங்கே 'அருள்விளையாடல்'. ஐந்தொழில்களும் உயிருக்கு இறைவனால் சங்கற்பத்தால் மாத்திரம் எளிதாகச் செய்யப்படுதலின் வித்தகனார் விளையாடல் என்றார். விளங்குதில்லைகண்டேனே — தில்லைத்தலமானது இறைவன் சிறப்பாக ஐந்தொழிலைக் குறிக்கிற திருநடம் செய்கிற தலமாதலால் 'விளங்குதில்லைகண்டேன்' என்றார். மூவகைச்சிறப்பு அத்துவித நிலைகள், 'இன்றெனக்கருளி' என்ற முதற்குறிப்புப் பாட்டு முன் இரண்டு வரிகளிலும் கூறப்பட்டிருத்தல் போலவே, இந்தப் பாட்டிலும் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால் 'இன்றெனககருளி' என்ற பாட்டில் இறைவனுடைய அருட்செயல்களின் பயனாகத் தம்முடைய அறிவு இச்சை செயல்களெல்லாம் இறைவனுடைய அறிவு இச்சை செயல்களில் அடங்கித் தமது உள்ளத்தில் விளங்கினதைக் கூறியருளினர். இந்தப்பாட்டில் அவர் இறைவன் தமக்குச்செய்த அருட்செயல்களையே வியந்து துதித்துக்கூறுகின்றார்.

482. அளவிலாப் பாவகத்தா லமுக்குண்டிங் கறிவின்றி
விளைவொன்று மறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனுக்கு
அளவிலா ஆனந்த மளித்தென்னை யாண்டானைக்
களவிலா வானவருந் தொழுந்தில்லை கண்டேனே. ௭௭.

[ப-ரை] இங்கு — இந்த உலகவாழ்வில், அளவிலாப் பாவகத்தால் — நான் என்புத்தியிலே எண்ணுகிற எண்குணப்பாவகங்களிலிருந்து பல்வேறு வகைப்பட விரியும் அளவில்லாத எண்ணங்களால்; அமுக்குண்டு - அழுத்தப்பட்டு; அறிவுஇன்றி—அங்ஙனம் அழுத்தப்படுதலினாலே இறைவனையறியும் மெய்யறிவில்லாமல்; விளைவு ஒன்றும் அறியாதே — பின் உண்டாகும் தீயபயன்களை அறியாமல்; வெறுவியனாய்க் கிடப்பேனுக்கு - யாதொரு பயனற்றவனாய் இருந்த இயல்புடைய எனக்கு; என்னை ஆண்டு அளவிலா ஆனந்தம் அளித்தானை — என்னைத் திருப்பெருந்துறையில்வைத்து ஆண்டு அருளி எல்லையில்லாத பேரின்பமளித்த சிவபெருமானை;

களவிலா வானவரும் தொழும் — வஞ்சனையில்லாத தேவர்களும் வந்து தொழுகின்ற; தில்லைகண்டேன் - தில்லையிலே நான் (அகக்) கண்ணாலே கண்டு உணர்ந்தேன்.

[வி-ரை] அளவிலாப் பாவகத்தால் — பாவகம் என்பது எண்ணம். பாவகமாவது ஒருவன் புத்தியிலே தோன்றுகின்ற எண்குணபாவகங்களும், அவற்றினின்றும் பல்வேறு வகைப்பட விரிகின்ற அளவில்லாத எண்ணங்களுமாகும் (ideas); எண்ணங்களாவன:— (1) சாத்துவிக குணத்தாலுண்டாகும் அறிவு, அறம், வெறுப்பு, செல்வம் நான்கும்; (2) இராசத குணத்தாலுண்டாகும் விருப்பு ஒன்றும்; (3) தாமதகுணத்தாலுண்டாகும் பாவம், அறியாமை, வறுமை மூன்றுமாகிய இவை எட்டும் புத்திகுணபாவகங்களாம். இவை பொதுவகையால் எட்டாகி இன்னும் பல்வேறுவகைப்பட விரிவனவாம். இப்புத்திகுணபாவகங்கள் பல்வேறு வகைப்பட விரிந்த புத்திதத்துவ விருத்தி தொகையால் அறுநூற்றுப்பன்னிரண்டு. இவற்றின் விரிவையெல்லாம் சிவஞானபாடியம் (கழகப் பதிப்பு) புத்திகுணபாவகங்கள் என்ற தலைப்பின்கீழ் (பக்கம் 202 முதலாக) கூறியிருப்பனவற்றை ஓதியறிக. அழுக்குண்டு என்பது இப்பாவகத்திற்கு அடிமைப்பட்டு அதன் வயப்பட்டுக் கிடப்பதைக் குறிக்கிறது. அழுக்குண் - உண் ஈற்றுச்செயப்பாட்டு வினைப் பகுதி. அறிவு என்பது இங்கே இறைவனையுணரும் மெய்யறிவைக் குறிக்கிறது. உலகவாழ்வைப் பற்றிய அளவிலாப் பாவகம் மெய்யறிவை அறியவொட்டாது தடுத்தலால் அழுக்குண்டு அறிவின்றி என்றார். விளைவு ஒன்றும் அறியாதே — பாவகத்தால் அழுக்குண்ணல் பிறவித்துன்பத்துக்குக் காரணமாயிருத்தலால் விளைவொன்றும் அறியாதே என்றார். இங்கே விளைவு என்பது பின்வரும் பிறவித்துன்பத்தைக் குறிக்கிறது. வெறுவியனாய்க் கிடப்பேனுக்கு — வெறுவியன் - வெறுமை என்னும் பண்படியாகப்பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர். இங்கே அடிகள் வீடுபேற்றிற்கு நேராய் ஆகாதனவெல்லாம் பயனற்றனவென்று குறிப்பிப்பார்

வெறுவியனாய் என்றார். கிடப்பேனுக்கு — இயல்புபற்றி எதிர் காலத்தாற் கூறப்பட்டது. என்னை ஆண்டு அளவிலா ஆனந்தம் அளித்தானை — ஆண்டபின் பேரின்பம் அளித்தல் நிகழ்தலால், அளவிலா ஆநந்தம் அளித்தென்னை ஆண்டானை என்பதை என்னை ஆண்டு அளவிலா ஆநந்தம் அளித்தானை என உரைநடை செய்து பொருள் கூறப்பட்டது. அளவிலா ஆநந்தம் — புணருந்தோறும் சிவபெரும்போகம் புதிதாய் மேலும் மேலும் நிகழ்தலால் அளவிலா ஆநந்தம் என்றார். களவிலா வானவரும் — களவு - வஞ்சனை; அதாவது பொய் (அசத்து). களவிலா வானவர் — மெய்த்தன்மை (சத்துத்தன்மை) யுடைய வானவர். வானவரும் என்பதிலுள்ள உம் உயர்வுச் சிறப்பு. கண்டேனே—காணுதல் - அகக்கண்ணால் கண்டு உணர்தல். ஏ – அசை.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# ௩௨. பிரார்த்தனைப் பத்து.

பிரார்த்தனை என்பது வேண்டுகோள். பிரார்த்தனைப் பத்து என்பது அடிகள் தாம் உலகில் வாழ்ந்திராமல் பேராவியற்கையுடைய ஆரா முத்தியின்பத்தை அளித்தல் வேண்டுமென்று இறைவனிடத்தில் வேண்டிக்கொள்ளுகிற பதினொரு பாட்டுக்களடங்கிய பதிகமாகும்.

## சதாமுத்தி.

சதாமுத்தி என்னும் வடமொழிச் சொற்றொடர் என்றும் பேராநிலையையுடைய அளவில்லாத வீட்டின்பம் என்று பொருள் படும். இதனால் அபரமுத்தியாவது பதமுத்தியாவது குறிக்கப்படாமல் அவற்றிற்கு மேலான பரமுத்தி குறிக்கப்பட்டது. இந்தப் பரமுத்தியை அடிகள் 1-வது பாட்டில் ‘உலவா இன்பச்சுடர்’ என்றும், 5-வது பாட்டில் ‘பரமானந்தப் பழங்கடல்’ என்றும், 6-வது

பாட்டில் 'மறவா நினையா அளவிலா மாளா இன்ப மாகடல்' என்றும், 8-வது பாட்டில் 'தளிர் பொற்பாதந் தாராயே' என்றும், 9-வது பாட்டில் 'பேரானந்தம் பேராமை வைக்கவேண்டும்' என்றும் கூறியருளினார். ஏனைய பாட்டுக்களில் அடிகள் அந்தப் பரமுத்திக்கு ஏதுவாயிருக்கிற குணங்களைக் கூறுகின்றார்.

---

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

485. கலந்து நின்னடியா ரோடன்று வாளா களித்திருந்தேன், புலர்ந்து போன காலங்கள் புகுந்து நின்ற திடர்பின்னாள், உலர்ந்து போனே னுடையானே யுலாவ வின்பச் சுடர்காண்பான், அலந்து போன னருள்செய்யா யார்வங் கூர அடியேற்கே. எஅ.

[ப-ரை] அன்று — (பூமியில் வந்து பிறத்தற்குமுன் நான் கையிலையிலிருந்த) அக்காலத்தில்; நின்னடியாரோடு கலந்து—உன்னுடைய சிவகணங்களாகிய அடியாரோடு நானும் ஒருவனாய்க் கூடி; வாளா களித்திருந்தேன் — யாதொரு உலகப்பற்றுமின்றிப் பேரின்பமுற்றுக் களித்திருந்தேன்; காலங்கள் புலர்ந்துபோன — பிறகு நின் ஆணைப்படி நான் பூமியிலே வந்து பிறந்து இதுவரை நீண்ட காலம் கழிந்தது; பின்னாள் — நீ திருப்பெருந்துறைக்கு வந்து என்னை வலிய வந்து ஆட்கொண்ட நாளுக்குப்பின்; இடர்புகுந்து நின்றது—(பாண்டிய மன்னன் என்னை ஒறுத்ததனால்) நான் துன்பங்களையடைந்தேன்; உடையானே — (திருப்பெருந்துறையில் என்னை அடிமையாகக்கொண்ட) ஆண்டவனே; உலர்ந்து போனேன் — (நான் நின்னுடனும், அடியார்களுடனும் கயிலைக்கு வராதிருந்ததினாலே) உலகில் வாழ்ந்துகொண்டிருந்து வருந்தினேன்; உலவா இன்பச்சுடர் காண்பான் — (கைலையிலிருந்து நின்னைப்

பிரிந்து நீண்டகாலமாய் விட்டதனாலே) என்றுங்கெடாத நினது பேரின்பப்பேரொளியை அகக்கண்ணால் காணும்பேறருட்டு; அலந்துபோனேன் — (போவாக்கொண்டு அது கிடைக்கப் பெறாமையினாலே) துன்பமுற்றேன் (துன்பமுறுகின்றேன்); அடியேற்கு — ஆதலால் உனதடிமையாகிய எளியேனுக்கு; ஆர்வங்கூற அருள் செய்யாய் — (நான் உலகத்திலிருக்கும் வரையும்) நின்னிடத்தில் எனக்கு மெய்யன்பு மேலும் மேலும் மிகும்படி அருள் செய்வாயாக. அங்ஙனம் நீ அருள் செய்தால் என்னைப் பிராரத்துவ வினைமலவாசனை தாக்காது என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] அன்று — இது கயிலையில் அடிகள் சிவகணங்களுள் ஒருவராயிருந்த காலத்தைக்குறிக்கிறது. திருப்பெருந்துறையில் இறைவனாலாளப்பெற்ற பின்பு அடிகள் மதுரைக்குப் பாண்டிய அரசனிடம் போய்விட்டதாலும், மதுரையிலிருந்து திரும்பி திருப்பெருந்துறைக்கு வந்தபொழுது சிவகணங்களாகிய அடியார்கள் இறைவன் ஆணைப்படி மடுவிலே தோன்றிய தீப்பிழம்பில் மூழ்கிக் கயிலைக்குப் போய்விட்டதாலும், அடிகள் திருப்பெருந்துறையில் அவ்வடியாரோடுகூடிக் களித்திருந்ததாக நாம் அடிகளுடைய வரலாற்றிலிருந்து சொல்லமுடியாது. இதனாலும் நாட்கள் சென்றன என்று கூறாமல் புலர்ந்துபோன காலங்களென்று நீண்ட காலத்தைக் குறித்தலாலும் 'அன்று' என்பது கயிலையிலிருந்த காலத்தைக் குறிக்கிறதென்று நாம் கொள்ளவேண்டியிருக்கிறது. இந்தப் பாட்டைப்போல (26 - 8) (32 - 4) பாட்டுக்களிலும் அடிகள் தாம் கயிலையிலிருந்த காலத்தைக் கூறுகின்றார். நின்னடியாரோடு கலந்து வாளா களித்திருந்தேன் — அடியார் என்பது இங்கே கைலையிலுள்ள சிவகணங்களைக் குறிக்கிறது. அவர்கள் இறைவனுடைய திருவடிகளிலன்றி வேறொன்றிலும் பற்றுவையாது அத்திருவடிகளையே சிந்தித்துக்கொண்டிருப்பவராதலின் அடியார் என்று கூறப்பட்டார். வாளா — சும்மா; அது இங்கே சிறிதும் தடையின்றி என்னும் பொருளுணர்த்தி நின்றது. வாளா களித்திருத்தலாவது,

யாதொன்றினாலும் தடைப்படாது இடையீடின்றி இன்பமுற்றிருத்தல். காலங்கள் புலர்ந்துபோன — உலகிலே பிறந்து குழந்தைப் பருவமடைந்திருத்தல், கல்விபயிலுதல், பாண்டிமன்னனிடம் அமைச்சராயிருந்து பணிசெய்தல் முதலிய பல நிகழ்ச்சிகளைக்குறிப்பிட்டுக் காலங்கள் என்று பன்மையிற்கூறினார். இரவுப்பொழுது கழிந்து பகற்பொழுது வருதல்போலத் தமது குழந்தைப் பருவம் கழிந்து கல்விபயிலும் இளமைப்பருவம் வந்தும், இளமைப்பருவங் கழிந்து அரசனிடம் பணிசெய்யும் காளைப்பருவம் வந்தும், காலங்கள் பலவாய்க் கழிந்ததனாலே காலங்கள் புலர்ந்துபோன வென்றார். பின்னாள் இடர் புகுந்து நின்றது — அடிகள் தாம் பாண்டிமன்னனுக்குக் கூறியபடி குதிரைகள் வாராமையினாலே அவன் தம்மை ஒறுத்துத் துன்பம் செய்ததை, பின்னாள் இடர்புகுந்து நின்றது என்று கூறுகின்றார். உடையானே உலர்ந்து போனேன்—நின்னாலாட்கொள்ளப்பெற்றுப் பேரின்ப நிலையையடைந்தபின்பும் மன்னனால் ஒறுக்கப்பட்டு வாடலாமா? என்று கூறுவார் உடையானே உலர்ந்துபோனேன் என்றார். உலவாவின்பச் சுடர்காண்பான் அலந்துபோனேன்—உலவாவின்பச் சுடர் காணுதல், என்றுமழியாத துரியாதீதப் பேரின்ப நிலையையடைதலாகும். உலவாவின்பச், சுடரானது, 'பரஞ்சோதி' (6–15–2) என்றும், 'பரஞ்சுடர்', (49-8) என்றும் தமிழ்மறைநூல்கள் கூறுகின்றன. இதனை, அடிகள் ஆனந்தமாக்குமென் சோதீ (22 - 8) என்றும் கூறுகின்றார். சோதி, சுடர், ஒளி, விளக்கு, என்பன ஒரு பொருட்சொற்கள். இறைவன் தனது சிறப்பியல்புநிலையில் மெய் (சத்து), அறிவு (சித்து), இன்பம் (ஆனந்தம்) என்னும் முக்கூற்றுச் சச்சிதானந்தப் பொருளாயிருப்பதற்கேற்ப மெய்ச்சோதி, ஞானச்சுடர், இன்பச்சுடர் என்னும் முக்கூற்று ஒளிகளையுமுடையவனாயிருக்கின்றான். சோதியே சுடரே சூழொளிவிளக்கே என்ற (29 - 1) பாட்டில் அடிகள் இந்த முக்கூற்றொளிகளையுமுடைய பொருளேயென்று இறைவனை விளித்துக் கூறுகின்றார். இந்தவிடத்தில் அவர் இன்பச்சுடர் என்று கூறியது போல, அவனை அறிவுச்சிறப்பியல்பு நிலையில் ஞானச்சுடரே என்

றும் (25 - 10), அருளுடைச்சுடரே என்றும் (37 - 4), மெய்ச்சிறப்பு இயல்புநிலையில் தெளிந்ததூவெளியே (ஒளி) (22 - 4) என்றும் கூறுகின்றார். திருநாவுக்கரசு அடிகள் இந்த மூக்கூற்று ஒளிகளை யும் சேர்த்து இறைவனை (1) சோதியுட் (2) சோதியாய் நின்ற (3) சோதியே (5 - 97 - 3) என்று கூறுகின்றார். மெய்ச்சிறப்பியல்பு நிலையில் இறைவனை மெய்ச்சோதி (2 - 67 - 7) என்று திருஞான சம்பந்த அடிகள் கூறுகின்றார். மூவகை ஒளிகளுள் மெய்ச்சிறப் பியல் ஒளியானது அறிவுச்சிறப்பியல் ஒளியுள் வியாப்பியமாயடங் கியும், அறிவுச்சிறப்பியல் ஒளியானது இன்பசசிறப்பியல் ஒளியுள் வியாப்பியமாய் அடங்கியுமுள்ளன. இந்த இன்பசசுடரை அடிகள் துரியமுமிறந்தசுடர், (4 - 195) அதாவது, துரியாதீதச்சுடர் என்று கூறுகின்றார். காண்பான் என்பதில் பான் வினையெச்சவிகுதி. முன் அனுபவித்த பொருளொன்றைச் சிலகாலம் அனுபவியாதி ருந்த ஒருவன், அப்பொருளை அனுபவித்தற்குத் தேட்டமுறுதல் போல, உலவாவின்பச்சுடரைக் காணுதற்கு அடிகள் தாம் அலந்து போனதாகக் கூறுகின்றார்.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# ௩௩. குழைத்த பத்து.

---

குழைத்தபத்து என்பது இரண்டு சொற்களாலாகிய ஓர் சொற் றொடர். குழைத்தல் — வாட்டுதல், வருந்தச்செய்தல்; பிறவினை. அடிகள் தாம் இறைவனலாட் கொள்ளப் பெற்ற பின்னும் உலகில் தம்மை பிராரத்துவ வினைமலவாசனை தாக்குதற்கு இடமாய் வாழ்ந்து இறைவன் தன்னைப் பிரிந்து வருந்தும்படி செய்தலைக் குழைத்தல் என்று அடிகள் கூறுகின்றார். குழைத்த பத்து என்பது அடிகள் தாம் ஆட்கொள்ளப் பெற்றபின் இறைவனோடும் மற்றும் அடியார்களோடும் கைலைக்குச் செல்லாது உலகில் வாழ்ந்து பிராரத் துவ மலவாசனை பற்றுதலுக்கு இடமாயிருந்து வருந்துதலைக் கூறும்

பத்துப் பாட்டுக்களடங்கிய பதிகமாகும். முதலாவது பாட்டில் அடிகள் தம்மைக் கொடியவினை குழைத்தலினின்றும் காப்பாற்றல்வேண்டுமென்று இறைவனை வேண்டிக்கொள்ளுகின்றார். கடைசிப் பாட்டில் இறைவன் திருமேனி காட்டித் தம்மை ஆண்டபின் தமக்குப் பெரிய பதந்தந்து அருளாததனால் தாம் உலகில் வாழ்ந்து வாட்டமுறுதல்பற்றி அடிகள் கூறுகின்றார். நாலாவது பாட்டில் அவர் தம்மைக் கயிலையிலிருந்து நீக்கி உலகிலே வந்து பிறக்கச்செய்து குழைத்தலைக் கூறுகின்றார். 6, 7, 8, 9 பாட்டுக்களில் ஒவ்வோருயிர்க்கும் தக்க பதவியை யறிந்து அருள் செய்யும் இறைவனிடத்தில் தாம் ஒன்றை வேண்டிக் கேட்டலும் தகாதது என்று அடிகள் கூறுகின்றார். இதனால் அடிகள் இறைவனைப் பிரிந்து உலகில் தாமிருந்து வருந்துதலை நோக்கும்போது முன்னையதைக் கூறினாரென்றும், இறைவனுடைய பேரருட் செயலை நினைக்கும்போது பின்னையதைக் கூறினாரென்றும் நாம் கொள்ளவேண்டியதாயிருக்கிறது.

## ஆத்தும நிவேதனம்.

ஆத்துமா, நிவேதனம் என்ற இரண்டு வடமொழிச் சொற்களும் சேர்ந்து ஆத்தும நிவேதனம் என்றாகியது. ஆத்துமா—உயிர், ஆன்மா என்றும் தமிழிற் கூறுவதுண்டு. நிவேதனம் — ஒப்புவிக்கை. ஆத்தும நிவேதனம் என்பது இறைவனிடத்தில் உயிரை ஒப்புவிக்கை. கேவல நிலையில் ஆணவமலவிருளில் மூழ்கிக் கிடந்த உயிருக்கு அது அறியாமை நீங்கி இன்பநலமடைந்து உய்யும்படி, இறைவன் அதன்மேல்வைத்த பேரருளினாலே, மாயையின் வடிவங்களாகிய தனு கரண புவன போகங்களை அதற்குக் கூட்டிச் சகல நிலையில் அதனை உலகில் வாழும்படி செய்தான். உயிர் தனது சகல நிலையில் பல பிறவிகளையுற்று உலகில் வாழ்ந்து, அவ்வாழ்வின் அனுபவ முதிர்ச்சியால் சுத்தநிலையை யடைந்து, இறைவனைச்சேர்ந்து இன்பமடையும் பருவம் வந்தபொழுது தான் இறைவனிடமிருந்து முன் கடனாகப் பெற்றுக்கொண்ட உயிர், உடல்,

பொருள் மூன்றையும் இறைவனிடம் ஒப்புவிக்க வேண்டுமென்னும் நியமப்படி ஒப்புவித்தல் ஆத்தும நிவேதனமாகும். இவ்வுண்மையை அடிகள் (33 - 7) பாட்டில் கூறுகின்றார்.

---

[அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

501. வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தருவோய்நீ, வேண்டு மயன்மாற் கரியோய்நீ வேண்டி யென்னைப் பணிகொண்டாய், வேண்டி நீயா தருள்செய்தா யானு மதுவே வேண்டினல்லால், வேண்டும் பரிசொன் றுண்டென்னி லதுவு முன்றன் விருப்பன்றே. எக.

[ப-ரை] வேண்டத் தக்கது நீ அறிவோய் — எவ்வுயிரும், இன்பநலமடைவதற்கு அதன் பருவம்நோக்கி, எது விரும்பத் தக்கதாயிருக்கிறதென்று முற்றறிவுடைய நீயே நன்கு அறிவாய்; வேண்டமுழுதும் நீ தருவோய் — அங்ஙனமாயினும் எந்த உயிராவது தானாகவே ஒரு பொருளை விரும்பி நின்னைக் கேட்டபின் நீ அப்பொருளைக் குறைவின்றி நல்குவாய்; வேண்டும் அயன்மாற்கு நீ அரியோய்—(நின்னைத் தன்முனைப்பினால் காண) விரும்பும் நான்முகனுக்கும் மாலுக்கும் (அவர்களாற் காணக்கூடாதபடி) அரிய பொருளாயிருக்கிறாய்; (இங்ஙனம் கூறப்பட்டபடி முறையே பேரறிவும் பேரன்பும் பேராற்றலும் நின்னிடத்தில் இயல்பாக உள்ளன என்பதை நான் அறிந்திருக்கிறேன்.) வேண்டி என்னைப் பணி கொண்டாய் — (அங்ஙனம் நினது அருட்டன்மை யிருத்தலால் நான் விரும்பிக் கேளாதிருக்கவும்) நீயே விரும்பித் திருப்பெருந்துறைக்கு வந்து என்னை அடிமையாகக்கொண்டு ஆண்டருள் செய்தாய்; வேண்டி நீ யாது அருள் செய்தாய் — ஆதலின் நீ எனக்கு விரும்பத்தக்கது எதுவென்று அறிந்து நல்குவாயோ; யானும் வேண்டின் அதுவே அல்லால் — நானும் விரும்பினால் அதனையே

பெற விரும்புவதல்லாமல்; ஒன்று வேண்டும் பரிசு உண்டு என்னில் — நானாகவே ஒரு பொருளை விரும்பும் குணம் எனக்கு உள்ளது என்று நான் சொல்வேனாயின்; அதுவும் உன்றன் விருப்பு அன்று — அக்குணமும் எனக்கு உளதாதலும் நினது விருப்பமாயிருக்கமாட்டாது. (ஏனெனில் அக்குணம் நின் கருத்துப்படி நான் பேரின்பமடைதலுக்குத் தடையாயிருக்கும்.)

[வி-ரை] வேண்டத்தக்கது நீ அறிவோய் — அறிவாய் என்பதில் ஈற்றயல் ஆகாரம், செய்யுளாதலின் ஓகாரமாய்த் திரிந்தது. பின்வருகிற தருவோய் என்பதற்கும் இக்குறிப்பைக்கொள்க. (நன்னூல் 353-வது சூத்திரம்) அறிவாய் தருவாய் என்னும் எதிர்கால வினைமுற்றுக்கள் அறியும் இயல்பினை யுடையதாய், தரும் இயல்பினை யுடையதாய் என்னும் பொருளில் வந்தன. வேண்ட முழுதும் நீ தருவாய் — திருநாவுக்கரசு அடிகள் திருமறைக்காட்டுப் பதிகம் முதலாவது பாட்டில் "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்று இக்கருத்தைக் கூறியருளினார். வேண்ட என்னும் வினையெச்சம் வருங்காலம் குறித்துக் கேட்டபின் என்னும் பொருள்பட வந்தது. அது தருவோய் என்னும் வினைமுற்றைக் கொண்டு முடிந்தது. மழை பெய்யக் குளம் நிறைந்தது என்றாற்போல. வேண்டும் அயன் மாற்கு நீ அரியோய் — வேண்டும் என்பதற்குமுன், காண என்பது சொல்லெச்சம். அரியோய் என்பதில் அருமை, இன்மை என்னும் பொருளில் வந்தது. வேண்டத்தக்கது நீ அறிவோய் என்றதனால் இறைவன் உயிரின் பக்குவமறிந்து அதன் நலத்துக்கு வேண்டத்தக்கது செய்யும் பேரறிவுடையன் என்பதும்; வேண்டமுழுதும் நீ தருவோய் என்றதனால் இறைவன் பேரன்புடையன் என்பதும், வேண்டும் அயன்மாற்கு நீ அரியோய் என்றதனால் இறைவன் பேராற்றல் உடையவனென்பதும் குறிப்பாகக்கூறப்பட்டன. உயிருக்கு இன்ப நலஞ்செய்தற்கு இம்மூன்று குணங்களும் இறைவனுக்கு இன்றியமையாது வேண்டப்படுவன வாதலின் அடிகள் அவற்றை முதற்

கண் பொதுவாகக் கூறினர். வேண்டி என்னைப் பணிகொண்டாய் —வேண்டி—நான் உன்னைக் கேளாமல் இருக்க, நீயாகவே என்னை ஆட்கொள்ள விரும்பி. பக்குவப்பட்ட உயிரை ஆட்கொள்ளுதல் இறைவனுடைய கடமை என்பது இங்கே குறிப்பாய்க் கூறப்பட்டது. பணி என்ற சொல் இங்கே அடிமை என்னும் பொருள்பட வந்தது. வேண்டி நீ யாது அருள்செய்தாய் யானும் வேண்டின் அதுவே அல்லால் — எனக்கு வேண்டத்தக்கதை நீ நன்கு அறிவாயாதலின் நீ எதனை எனக்கு விரும்பி நல்குவாயோ அதனையேபெற நான் விரும்புகிறேன் என்பது இந்த மூன்றாவது வரியின் கருத்து. அருள் செய்தாய் என்பது நல்குவாய் என்னும் பொருள்பட வந்தது. செய்வாய் என்று எதிர்காலத்தாற் கூறற்பாலது தெளிவு பற்றி இறந்த காலத்தாற் கூறப்பட்டது. யானும் வேண்டின் என்றதனாலே நீ விரும்பும் பொருளைப் பெறுவதன்றிப் பிறிதொன்றையும் பெறுவதற்கு விரும்பமாட்டேன் என்று அடிகள் கூறியவாறாயிற்று. ஒன்று வேண்டும் பரிசு உண்டு என்னில்—என்னில் என்றதனாலே, அடிகள் தாமாகவே பிறிதொரு பொருளை விரும்பும் குணம் தமக்கு இல்லையென்பது கூறியவாறாயிற்று. அதுவும் உன்றன் விருப்பு அன்றே — அது என்ற சுட்டுப்பெயர் ஒன்று வேண்டும் பரிசு, அதாவது உன் கருத்துக்கு மாறாக ஒரு பொருளை விரும்பும் குணம் என்பதைக் குறித்து நின்றது. அடிகள் தம்மைச் சிவபெருமான் ஆட்கொண்ட பிற்பாடு தமக்கென அறிவு வேட்கை செயல்கள் நிகழ்தலின்றித் தமது வியாப்பிய அறிவுவேட்கை செயல்கள் தம்மை ஆட்கொண்டவனது வியாப்பிய அறிவு வேட்கை செயலுள் முழுவதும் அடங்கி நிற்றலால் அதுவும் உன்றன் விருப்பு அன்றே என்று கூறினர். அன்றே என்பதில் ஏ - அசை. அடிகள் 504-வது பாட்டில் "கண்ணார் நுதலோய் ... ... ... அண்ணா எண்ணக் கடவேனோ அடிமைசால அழகுடைத்தே" என்று இக்கருத்தைக் கூறியருளினர். இந்தப் பாட்டில் அடிகள் முதற்கண்முறையே இறைவனுடைய பேரறிவையும் பேரன்பையும் பேராற்றலையும் பொதுவாகக் கூறியபின், அவ்வியல்புள்ள இறைவன் தம்மைத்

திருப்பெருந்துறையில் வந்து ஆண்டருளினதைக்கூறிப் பின் அத்தகைய இறைவனுடைய விருப்பத்துக்கு மாறாக ஒன்றையும் பெற விரும்புவதில்லை என்றும் கூறினார்.

---

502. அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லா முங், குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ, இன்றோ ரிடையூ றெனக்குண்டோ வெண் டோண் முக்க ணெம்மானே, நன்றே செய்வாய் பிழைசெய் வாய் நானோ இதற்கு நாயகமே. ௩௰.

[ப-ரை] என்னைஆட் கொண்டபோது — நீ திருப்பெருந் துறைக்குக் குருவாகவந்து என்னை அடிமையாகக்கொண்டு ஆண்டருளியபோது; அன்று—அந்த நாளிலேயே; என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும் — என்னுடைய உயிர், உடல், பொருள்கள் எல்லாம்; குன்றே அனையாய் — அருட்குணத்தில் மாறாத நிலைமையுடைய மலைபோல்வானாகிய நீ; கொண்டிலையோ — ஏற்றுக் கொள்ளவில்லையோ (ஏற்றுக்கொண்டாய் என்றபடி); எண்தோள் முக்கண் எம்மானே — எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையும் உடைய எங்கள் தந்தையே; இன்று ஓர் இடையூறு எனக்கு உண்டோ — இன்றையத்தினம் உன்னுடைய திருவடிகளை நான் அடைதற்கு யாதாமொரு தடை எனக்கு உளதாமோ; நன்றேசெய் வாய் பிழைசெய்வாய் — நீ எனக்கு உன்னுடைய திருவடிகளை அடைதலாகிய நலத்தைச் செய்தாலும் அல்லது இந்த உடலோடே இவ்வுலகிலே வாழும்படி செய்தாலும் நீ செய்ததனை நான் ஏற்றுக் கொள்ள வேண்டியவனாயிருக்கிறேன்; நானோ இதற்கு நாயகமே — ஏனெனில், எனக்கு இன்னது செய்யவேண்டுமென்பதைத் தீர் மானிக்கிற தலைமை உனக்கு உளதன்றி எனக்கு இல்லை.

[வி·ரை] 1, 2 வரிகள் — கொண்டிலையோ என்பது கொண்டாய் என்னும் பொருள்படவந்தது. ஓ எதிர்மறைப் பொருளைத் தந்து நின்றது. இறைவன் ஆவியைக் கொள்ளுதலாவது தன்

முனைப்பில்லாத உயிரைத் தனனுடைய திருவடி வியாபகத்துள் அடக்குதலாகும். "நாமெனனவொன், றில்லென்று தாமே யெனு மவரைத் தன்னடிவைத் — தில்லென்று தானு மிறை" என்று சிவ ஞானபோதம் 10-ம் சூத்திரம் கூறுதல் காண்க. இறைவன் உடலைக் கொள்ளுதலாவது, தத்துவங்களாகிய உடலை இறைவன் உயிருக்குக் கருவியாகக் கொடுத்தும், அதனை இயக்கியும் உதவுகின்றானென்று அறிந்து, அதனைத் தன்வசம் ஒப்புவித்த உடலைச் சிவகரணமாக்கி, அதனைத் தான் உறையும் திருமேனியாகக்கொண்டு வியாபித்து விளங்குதலாகும். அடிகள் "புன்புலால்யாக்கை புரைபுரைகனியப் பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென் — னென்பெலா முருக்கி யெளியையாயாண்ட வீசனே" என்று (37 - 10) கூறுதல் காண்க. இறைவன் உடைமையைக் கொள்ளுதலாவது, எனது என்னும் உணர்வு இல்லாத உயிரின் பொருளை ஏற்றுக்கொள்ளுதலாகும். அடி களுக்குத் தம்கையிலுள்ள பாண்டிமன்னனால்கொடுக்கப்பட்ட பொற் றிரளெல்லாம் இறைவனது உடைமை யென்னும் உணர்வுபற்றி அவர் அதனையெல்லாம் தம்மைத் திருப்பெருந்துறையில் குருவாக வந்து ஆண்டருளிய இறைவனுக்கு ஒப்புவித்து அவன் ஆணைப்படி அடியார்கள் வறியவர் முதலியோர்களுக்குக் கொடுத்தலினாலும், கோ யிற்றிருப்பணிக்குச் செலவுசெய்தலினாலும் அறியப்படும். உலகவாழ் வுக்குவேண்டப்படும் ஆவி,உடல்,உடைமையெல்லாம் தன்னுடைய திருவடி அடைதற்கு கருவியாக ஓர் உயிருக்கு இறைவனால் கொடுக் கப்பட்டன ஆதலின், தன்னுடைய திருவடிகளை அடையும் பருவம் வந்த அடிகளுக்கு அவை வேண்டப்படாதன ஆயின. அடிகளை இறைவன் ஆளுதற்குமுன்னே அவற்றைத்திரும்ப பெற்றுக்கொள்ள வேண்டுமாகலின் "ஆட்கொண்டபோதே அன்றே என்றனுவியும் உடலும் உடைமையெல்லாமும் கொண்டிலையோ" என்றார். அன்று தம் ஆவி, உடல், உடைமை எல்லாம் கொண்ட அருட்குண முடையஇறைவன் இன்று அதனினின்று சிறிதும் விலகான என்று குறிப்பிப்பார் அடிகள் குன்றேயனையாய் என்று இறைவனை விளித் தார். இன்று—இறைவன் பிட்டுவாணிச்சிக்குக் கூலியாளாய் வந்து

## குழைத்த பத்து.

வைகைக்கரை உடைப்பை அடைக்க மண்சுமந்த திருவிளையாடல் காட்டியபின், அடிகள் பாண்டிமன்னனிடம் விடைபெற்று மதுரையி னின்று திருப்பெருந்துறைக்கு மறுபடியும்வந்து குருந்தமரத்தடி யின் கீழ் தவஞ்செய்துகொண்டிருந்த காலத்தில், குழைத்தபத்துப் பாடினாராதலின் அக்காலம் ஆவணி மூலத்துக்குப் பின்னும் மார் கழித் திருவாதிரைக்கு முன்னுமாக இருக்கவேண்டும். ஆதலால் இன்று என்பது ஆட்கொண்டநாளுக்குப்பின் ஒரு திங்களுக்குமேல் இரண்டு திங்களுக்குள்ளாக இருக்கலாம். ஓர் இடையூறு — இறைவ னுடைய திருவடிகளைச் சேர்தற்குத்தடை. எண்டோள் முக்கண் எம்மானே — எண்டோள் இறைவனது ஆற்றலையும் முக்கண் அவ னது அருளையும் எம்மான் உயிர்களுக்கெல்லாம் தந்தையாகிய உற வையும் குறிக்கிறது. பேராற்றலும் தந்தைபோலப் பேரருளும் உடைய இறைவன் தாம் அவருடைய திருவடிகளைச் சேர்தற்கு யாதொருதடையும் செய்யமாட்டானென்று குறிப்பிப்பார் எண் டோள் முக்கண் எம்மான் என்று இறைவனை விளித்தார். நன்றே செய்வாய் பிழைசெய்வாய் — நன்று என்பது இறைவனுடைய திருவடிகளை அடைதலாகிய இன்பநலத்தைக் குறிக்கிறது. பிழை என்பது எடுத்த உடலோடு உலகிலிருந்து வாழுதலைக் குறிக்கிறது. நன்றேசெய்வாய் பிழைசெய்வாய் என்றதனாலே முழுமுதற்றலைவ னாகிய இறைவன் அடிமையாகிய தம்பொருட்டு இரண்டில் யாதானு மொன்றைச் செய்தற்கு உரிமையுடையவனென்பதை அடிகள் குறிப் பித்தார். நானோ இதற்கு நாயகமே — நானோ என்பதில் ஓ எதிர் மறைப் பொருளில்வந்தது. இதற்கு நாயகம் நானல்ல நீயே என் பது பொருள். நானோ இதற்கு நாயகமே என்றது நன்றே செய் வாய் பிழைசெய்வாய் என்பதற்குக் காரணம் கூறப்பட்டதாயிற்று. இந்தப்பாட்டில் அடிகள், இறைவன் தம்மை ஆட்கொண்டு பல நாளாகியும் தாம் அவனுடைய திருவடிகளைச் சேராமல் உலகில் எடுத்த உடலோடு வாழ்ந்திருக்கின்ற மனவருத்தத்தைக் கூறு கின்றார்.

---

504. கண்ணார் நுதலோய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர, எண்ணா திரவும் பகலுநா னவையே யெண்ணு மதுவல்லால், மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும், அண்ணா எண்ணக் கடவேனோ அடிமை சால அழகுடைத்தே. அக.

[ப-ரை] கண்ணார் நுதலோய் — கண்பொருந்திய நெற்றியை உடையவனே (அதாவது நெற்றிக் கண்ணனே); கழலிணைகள் — (திருப்பெருந்துறைக்கு அந்தணனுருவில் வந்து நீ என்னை ஆண்டருளியபோது) உன்னுடைய இரண்டு திருவடிகளையும்; களிகூர— எனக்கு இன்பம் மீதூர; கண்கள் கண்டேன் — எனது இரண்டு ஊனக் கண்களாலும் பார்த்தேன்; நான்—அங்ஙனம் பார்த்த நான்; இரவும் பகலும் — இடையீடின்றி எப்பொழுதும்; அவையே — அந்தத் திருவடிகளையே; எண்ணாது எண்ணும் அது அல்லால் — சுட்டறிவால் நினையாது நினைப்பு மறப்புமின்றி நினைத்துக்கொண் டிருப்பதல்லாமல்; மண்மேல் யாக்கை விடுமாறும் — மண்ணுலகில் நான் உடலைவிட்டு நீங்கும் வகையையும்; வந்து உன் கழற்கே புகு மாறும் — அங்ஙனம் உடலைவிட்டு உன்னிடம் வந்து உன்னுடைய திருவடிகளை அடையும் வகையையும்; அண்ணா — எனது தந்தையே; எண்ணக்கடவேனோ — நான் நினைத்தற்குத் தகுதியு டையவனாவேனோ; அடிமைசால அழகு உடைத்தே — அவ்வாறு நினைப்பேனாகில், உனக்கு ஆட்பட்ட எனது அடிமைத்தன்மையா னது மிகவும் அழகுடையதா யிருக்கும் (அழகுடையதாயிராது என்றபடி)

[வி-ரை] கண்ணார் நுதலோய்—நுதலார் கண்ணோய் என்பது கண்ணார் நுதலோய் என இல்முன் என்பது முன்றில் என வருதல் போல மாறிவந்தது. கண்ணனது அருளுடைமைபற்றிச் சிறப்பு டைய பொருளாதலையறிக. நுதலான் என்னும் எழுவாய்ப் பெயர் ஈற்று னகர ஒற்று யகர ஒற்றாய் நுதலாய் என விளிப்பெயராய் வந்

தது. அவ்விளிப்பெயரில் ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாய்த் திரிந்தது. கழலிணைகள்—கழல் ஆகுபெயராய் அடியைக் குறிக்கிறது. இணை—இரண்டு. களிகூர — உலகவாழ்வை உவர்த்து, வீட்டினை அடையச்செய்யும் குருவைக்காணுதற்கு பேரவாவுடனிருந்த அடிகளுக்குக் குருவைக் கண்டவுடன் இன்பம் மிகுதல் இயல்பாதலின், களிகூரக் கண்டேன் என்றார். கண்கள் கண்டேன் — அடிகள் தமது ஊனக் கண்களால் மானுடவடிவில் குருவாய் வந்தவருடைய திருவடிகளைக் கண்டமையால் கண்கள் கண்டேன் என்றார். ஆல் உருபு விரித்துரைக்க. எண்ணாது எண்ணும் அது அல்லால் — சுட்டறிவால் நினையாமல் நினைப்பும் மறப்புமின்றி இறைவனுகிய குருவோடு இரண்டறக் கலந்துநின்று அவனையே நினைத்தல் வேண்டுமென்பார் எண்ணாது எண்ணும் அதுவல்லால் என்றார். மறைக்குமியல்புடைய மலப்பிணிப்பு அற்றவாகளுக்கு நினைப்பு மறப்பு மாறி மாறி வருதல் இல்லையாதலின், எண்ணாது இரவும் பகலும் எண்ணும் அதுவல்லால் என்றார். அது என்பது எண்ணுஞ்செயலைக் குறிக்கிறது. சுட்டறிவினுல் எண்ணும் செயலிலிருந்து பிரித்தற்கு சுட்டறிவினுல் எண்ணுஞ் செயலைப்போலக் கூறப்படாது என்பார் எண்ணும் அது என்றார். சுட்டியறியக்கூடாத பிரமப்பொருளை அது என்று கூறுதல்போல. அண்ணு எண்ணக்கடவேனே — தந்தையாயிருக்கிற முறைமைபற்றித் தந்தை செய்ததை மகன் நினைந்து மறக்கத் தகாதது என்பார், அண்ணு எண்ணக்கடவேனே என்று கூறினுர். இறைவன் உயிர்களுக்கெல்லாம் தந்தையாதலின் அண்ணு என்றார். எண்ணுதல் என்பது இங்கே இறைவனுக்கு வேறாய் நின்று சுட்டறிவால் நினைத்தலைக் குறிக்கிறது, அருளறிவால் அங்ஙனம் எண்ணுதல் முடியாதாகலின். அடிமைசால அழகு உடைத்தே — அடிமையாகத் தம்மை ஆட்கொண்ட இறைவனுக்கு அங்ஙனம் எண்ணுதல் தகாதது என்பார் அடிமைசால அழகுடைத்தே என்றார். அழகுடைத்து என்றது சொல்லாற்றலால் இங்கே அழகுடையதன்று என்ற பொருளில் வந்தது. ஒரு பொருளில் பல பகுதிகள் ஒன்றுக்கொன்று பொருத்தமுடையதாய் விளங்கினுல் அது பார்

வைக்கு அழகுடையது என்று சொல்லப்படும். இங்கே ஆண்டவன் எண்ணப்படி அடிமை நடப்பது அழகுடையதென்று அடிகள் கூறு கின்றார். ஏ — அசை.

---

திருப்பெருந்துறையில் அருளிய

## ௩௪. உயிருண்ணிப் பத்து.

---

உயிருண்ணிப் பத்து என்பது உயிர், உண்ணி என்ற இரு சொற்றொடரும் பத்து என்ற சொல்லுஞ் சேர்ந்து ஆகியது. உயி ருண்ணி என்ற சொற்றொடர் உயிர், உண்ணி என்னும் இரண்டு சொற்களாலாகியது. உயிர் = ஆன்மா, சீவன் என்றும் கூறப்படும். உண் + இ = உண்ணி; இ, வினைமுதற்பொருள் விகுதி. உண்ணி —உண்கிறவன். உயிர் உண்ணி என்பது உயிரை உண்ணி என விரி யும். உயிரை, அதாவது சீவபோதத்தை உண்கின்ற இறைவன் என்பது பொருள். சீவபோதம், தற்போதம் என்றும் தன்முனைப்பு என்றுங் கூறப்படும். வீடடையும்போது உயிரினுடைய நான் என்னும் சீவபோதத்தை இறைவன் தன்னிடம் அடங்கச் செய்து தனது சிவபோதத்தை உயிரினிடம் நிறைவித்து மேலிடச்செய் தலால் இறைவனை உயிருண்ணி என்று அடிகள் கூறினார். உயி ருண்ணிப்பத்து என்பது அங்ஙனம் உயிர் சீவபோதத்தை இழந்து சிவபோதம் நிறைந்து மேலிட்டிருக்கும் தன்மையைக்கூறும் பத்துப் பாட்டுக்களடங்கிய பதிகமாகும். உயிரானது சீவபோதம் இழந்து சிவபோதம் மேலிட்டிருக்குந் தன்மை மூன்றாவது பாட்டிற் றெளி வாய்க் கூறப்பட்டிருக்கிறது.

### சிவானந்தம் மேலிடுதல்.

---

சிவானந்தம் மேலிடுதல் என்பது சிவானந்தம் என்னும் இரு சொற்றொடரோடு மேலிடுதல் என்ற சொல் சேர்ந்து ஆகியது.

## உயிருண்ணிப் பத்து.

*சிவம் என்ற தமிழ்ச் சொல்லும், ஆனந்தம் என்ற வடமொழிச் சொல்லும் சேரும்பொழுது மகரவொற்றுக் கெட்டு, சிவானந்தம் என்றாகியது. இது வடமொழித் தீர்க்கசந்தி. சிவானந்தம் என்பது உயிர் சிவம் என்னும் தனிமுதற் பொருளோடு இரண்டறக்கலந்து ஒற்றித்து நின்று தன் சீவபோதங்கெட்டுச் சிவத்தினிடம் அடங்கி நிற்றலால் உணரும் பேரின்பவனுபவமாகும். சிவம் மேலேகூறிய படி உயிரையுண்ணுதலால் இந்தச் சிவானந்தமுண்டாகிறது. ஆதலால் உயிருண்ணிப் பத்து சிவானந்தம் மேலிடுதலைக் கூறுவதாயிற்று. சிவானந்தம் மேலிடுதல் என்பது உயிரானது தனது சீவ போதங்கெட்டுச் சிவத்தில் வியாப்பியமாயடங்கி நிற்றலால் மேலே கூறியபடி சிவானந்தம் உயிரில் நிறைந்து மேலும் மேலும் பெருகி வளர்தலாகும்.*

---

[கலிவிருத்தம்]

*திருச்சிற்றம்பலம்.*

---

507. *நானாரடி யணைவானொரு நாய்க்குத்தவி சிட்டிங்*
*கூனாருடல் புகுந்தானுயிர் கலந்தானுளம் பிரியான்*
*தேனார்சடை முடியான்மன்னு திருப்பெருந்துறை யுறைவான்*
*வானோர்களு மறியாததோர் வளமீந்தன னெனக்கே.* ௮௨.

[ப-ரை] *அடி அணைவான் நான் ஆர் — சிவபெருமானுடைய திருவடிகளை எய்துதற்கு நான் தகுதியுடையவனா (நான் தகுதியுடையவனல்லன் என்றபடி); தேனார் சடைமுடியான் — (நான் தகுதியுடையவனல்லனா யிருப்பினும்) வண்டுகள்பொருந்திய சடையோடுகூடிய தலையையுடையவனாய்; மன்னு திருப்பெருந்துறை உறைவான் — நிலைபெற்ற திருப்பெருந்துறையில் வீற்றிருக்கின்றவனாகிய சிவபெருமான்; இங்கு — இவ்வுலகில்; ஒரு நாய்க்குத் தவிசு இட்டு — ஒரு நாய்போல இழிவுள்ளவனாகிய எனக்கு இருக்கை அளித்து; ஊனார் உடல்புகுந்தான் — ஊன் பொருந்திய எனது உடலிலே புகுந்தவனாயும்; உளம் பிரியான் —*

என் உள்ளத்தைவிட்டுப் பிரியாதவனும்; உயிர் கலந்தான் — உயி ராகிய என்னைத் தன்னுளடக்கி அதனோடு இரண்டறக்கலந்து பேரின்பமளித்தான்; எனக்கு — (அங்ஙனம் சிவபெருமான் என் னோடு இரண்டறக்கலந்து பேரின்பமளித்தமையால்) அடிமையாகிய எனக்கு; வானோர்களும் அறியாததோர் வளம் ஈந்தனன் — தேவர் களுக்கும் கிட்டாத பேரின்பப் பதவியை நல்கினான்.

[வி-ரை] அடி அணைவான் நான் ஆர் — அடி – சிவபெருமா னுடைய இரண்டு திருவடிகளை. அணைவான் — வான் – வினை யெச்சவிகுதி. எய்துதற் பொருட்டு அதாவது எய்துதற்கு. அடி அணைதல் — பேரின்பமெய்துதல். நான் ஆர் — இந்த வினா நான் தகுதியுடையனல்லன் என்பதைக் குறித்து நின்றது. தேனார் சடை முடியான்—முடி என்பது இங்கே தலையைக்குறிக்கிறது. முடியான் —குறிப்பு வினைமுற்று. வினையெச்சப் பொருளில் வந்தது. மன்னு திருப்பெருந்துறை உறைவான் — உறைவான் – வினையாலணையும் பெயர். அடிகள் திருப்பெருந்துறை உறைவான் என்றதனாலே இங்கே இறைவன் தமக்குக் குருவடிவில் வந்து தீக்கைசெய்து ஆண் டருளிய இடத்தைக் குறிக்கின்றார். ஒரு நாய்க்குத்தவிசு இட்டு— அடிகள் மேலே தாம் சிவபெருமானுடைய திருவடியை அடைதற்குத் தகுதியுடையவனல்லனென்று கூறியதற்கு இணங்க இங்கே தம்மை நாயென்று இழித்துக் கூறினார். இங்ஙனம் கூறியது அவருடைய தன்முனைப்பில்லாத தாழ்மையாந்தன்மையைக் குறிக்கிறது. இறை வன் தமக்குத் தீக்கை செய்தற்குமுன் ஒரு இருக்கை அளித்து உட் காரவைத்ததைக் குறிப்பிட்டு நாய்க்குத் தவிசிட்டு என்று கூறினார். ஊனார் உடல் புகுந்தான் உளம் பிரியான் உயிர் கலந்தான் — உட லின் இழிவைக் குறித்தற்கு ஊனார் உடல் என்றார். புகுந்தான் என்னும் வினைமுற்று வினையெச்சப்பொருளில் வந்தது. உடல் புகு தலாவது இறைவன் அடிகள் உடலைத் தூவெளியொளியால் நிரப்பி அதனுள் சிவகரணமாய் விளங்குதலாகும். உளம் புகுதல்—உள்ளம் என்பது உளம் எனக் குறுகியது. உளம் பிரியான் என்னும் வினை

முற்று வினையெச்சப்பொருளில் வந்தது. உளம் பிரியான் என்பது சிவபோதம் நீங்கின உள்ளத்தில் சிவம் நிலையாய் விளங்குதலாகும். "சிவமான சிந்தையிற் சீவன் சிதைய" என்று திருமூலர் 2539-வது பாட்டில் கூறியிருத்தல் காண்க. உயிர் கலந்தான் என்பது உயிரி ேைடு சிவம் அத்துவிதமாய்க் கலந்து பேரின்பமளித்தலாகும். ஊனூர் உடல்புகுந்தான் என்றதனாலே பாசத்தன்மை நீக்கமும், உளம் பிரியான் என்றதனாலே பசுத்தன்மை நீக்கமும், உயிர் கலந்தான் என்றதனாலே பேரின்பப்பேறும் குறிக்கப்பட்டன. பாசத்தன்மையும் பசுத்தன்மையும் நீங்கிய உயிர் பேரின்பப்பேறு அடைதலால், அடிகள் உடல்புகுந்தான் உளம்பிரியான் உயிர்கலந் தான் என்று முறையே கூறினார். எனக்கே — எனக்கே என்பதி லுள்ள ஏ—அசை. வானோர்களும் அறியாததோர் வளம் ஈந்தனன் — வளமானது இங்கே பேரின்பப் பதவியைக் குறிக்கிறது. அடிகள் இந்தப் பாட்டில் இறைவன் திருப்பெருந்துறைக்கு வந்து தமக்குத் தீக்கை செய்து ஆண்டருளிப் பேரின்பமளித்ததைக் கூறுகின்றார்.

---

508. எனைநானென்ப தறியேன்பக லிரவாவது மறியேன்,
மனவாசகங் கடந்தானெனை மத்தோன்மத்த னாக்கிச்,
சினமால்விடை யுடையான்மன்னு திருப்பெருந்துறை யுறை
யும், பனவனெனைச் செய்தபடி றறியேன்பரஞ் சுடரே. அ௯.

[ப-ரை] பரஞ்சுடர் — பேரொளிப் பொருளாயிருப்பவனும்; மனவாசகம் கடந்தான் — பசு ஞானத்தினாலும் பாச ஞானத்தினா லும் அறியப்படாதிருப்பவனும்; சினமால் விடையுடையான் — வலிமையுடைய திருமாலை எருது ஊர்தியாகக் கொண்டவனும்; மன்னுதிருப்பெருந்துறை உறையும் பனவன் — நிலைபேறுடைய திருப்பெருந்துறையிலிருப்பவனும் அந்தணன் வடிவில் வந்தவனு மாகிய சிவபெருமான்; எனை மத்தோன்மத்தன் ஆக்கி — என்னைக் களிப்புடைய பித்தனாகச்செய்து; எனைச்செய்தபடிறு அறியேன் — எனக்கு, என்னை அறியாமல் அருளினால் செய்த வஞ்சனையை

இன்னதென்று அறியக்கூடாதவனா யிருக்கிறேன்; எனை நான் என்பது அறியேன் — (சிவபெருமான் எனக்கு, நான் அறியாதபடி தான் செய்த அருட்டன்மையினாலுண்டாகிய பயன்களை மாத்திரம் நான் அறிகின்றேன் அவை யாவையெனில்) என்னை அவன் ஆண்டருளியதற்கு முன்பிருந்த தன்முனைப்பைப் பின்பு அறியமாட்டேன்; பகல் இரவு ஆவதும் அறியேன் — (பூமியானது தன்னைச் சுற்றியும் திங்களைச் சுற்றியும் கதிரவனைச் சுற்றியும் வருதலினாலுண்டாகும்) பகற் காலத்தையும் இரவுக் காலத்தையும் நான் அறியமாட்டேனை.

[வி-ரை] பரஞ்சுடரே—சுடர் என்பது இங்கே ஒளியைக்குறிக்கிறது. ஏ - அசை. பேரொளி. மாணிககவாசக அடிகள் தம்மை ஆண்டருளிய சிவபெருமான் அருளொளியோடு கூடிய மானுட வடிவில் வந்து அருள் செய்ததினாலே அவரைப் பரஞ்சுடர் என்றார். அடிகள் (5 - 91) தம்மை ஆட்கொள்ளவந்த சிவபெருமானை "ஒளி செய் மானுடமாக நோக்கியும்" என்று கூறியிருத்தல் காண்க. மனவாசகம் கடந்தான் — இதனை மனம் கடந்தான், வாசம் கடந்தான என்று இயைத்துக் கூறுக. இங்கே மனமானது ஆன்மாவுக்குப் பொருளைச சுட்டியறிதலுக்குச் சிறந்த கருவியாயிருத்தலால் பசு ஞானத்தைக் குறிக்கிறது. வாசகமானது சுட்டறிவுப் பொருளைப் பிறருககு அறிவித்தற்குக் கருவியாயிருத்தலால் பாச ஞானத்தைக் குறிககிறது. மனவாசகங் கடந்தான் என்பது சிவபெருமான் பசு ஞானத்தினாலும் பாசஞானத்தினாலும் உயிர்களால் அறியக்கூடாதவனென்பதையும் பதிஞானம் ஒன்றினாலேயே உணரப்படுகிறவன் எனபதையும் குறிக்கினறது. சிவஞானபோதம் 6 ம் சூத்திரம் 2-வது அதி கரணத்தில் மனம் என்பதற்கு பசு ஞானம் என்றும் (வாக்கு) வாசகம் எனபதற்கு பாச ஞானம் என்றும் சிவஞான சுவாமிகள் பொருள் கூறியிருத்தல் காண்க. அடிகள் தமக்குச் சிவபெருமான் பதி ஞானத்தை நல்கித் தன்னை உணரும்படி செய்தார் என்பதைக் குறிப்பிப்பார் சிவபெருமானை மனவாசகங் கடந்தான் என்றார்.

சினமால் விடை உடையான் — சினம் என்பது இங்கே வலியைக் குறிக்கிறது. சினமானது சேர்ந்தாரைக் கொல்லும் வலியுடையதாதலின் அது அப்பொருளில் வந்தது. சினம் என்னும் அடைமொழியைப் பின்வரும் மாலுக்காவது விடைக்காவது சேர்த்துப் பொருள் கொள்ளலாம். சிவபெருமான் விடையை ஊர்தியாகக்கொண்டு ஏறிச்செல்லுதல் அவன் ஆன்மாவை அடிமையாகக்கொண்டு ஆண்டருளுதலைக் குறிக்கிறது. திருமூலர் திருமந்திரம் 2411வது பாட்டில் " ஆயபசுவும் அடலேறென நிற்கும் " எனக் கூறியிருத்தல் காண்க. அடிகள் தம்மைச் சிவபெருமான் திருப்பெருந்துறைக்கு வந்து ஆண்டருளுதலைக் குறித்தலால் சினமால் விடை உடையான் எனக்கூறினர். மால்விடை என்பதற்கு பெரிய விடை எனவும் பொருள் கொள்ளலாம். மன்னு திருப்பெருந்துறை உறையும் பனவன் — பனவன் என்பது அந்தணனைக்குறிக்கிறது. அடிகள் தம்மைத் திருப்பெருந்துறையில் சிவபெருமான் ஓர் அந்தணன் வடிவில் வந்து ஆட்கொண்டருளியதனாலே அவனைத் திருப்பெருந் துறை உறையும் பனவன் என்றார். எனை மத்தோன்மத்தன் ஆக்கி — உன்மத்தன் - பித்தன்; மத்தன் - களிப்புடையவன், ஆநந்தக் களிப்புள்ளவன். மத்தன் + உன்மத்தன் - மத்தோன் மத்தன். வடமொழிக்குணசந்தி. களிப்புடைய பித்தன். அடிகள் சிவபெருமான் தம்மிடத்தில் முன் இருந்த உயிர்ப் பற்றையும் பொருட்பற்றையும் அறுத்தருளித் தன்னிடத்திலேயே பற்றுடையவனாகச்செய்து ஆண்டருளியதால் உன்மத்தன் ஆக்கி என்றும், அங்ஙனம் ஆக்கியதால் தமக்குப் பேரின்பக்களிப்பு (ஆநந்தக்களிப்பு) உண்டாதலால் மத்தன் ஆக்கி என்றும் கூறினர். அடிகள் (31 - 7)ல் "பத்திமையும் பரிசுமிலாப் பசுபாசம் அறுத் தருளிப் — பித்தனிவ னெனவென்னை ஆக்குவித்து" என்றும் (47 - 6) ல் "பித்தென்னை யேற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம் மத்தமே யாக்கும்" என்றும் கூறியிருத்தல் காண்க. எனைச்செய்த படிறு அறியேன் — எனை - எனக்கு. உருபுமயக்கம், படிறு - வஞ்சனை. அடிகள் தமக்குச் சிவபெருமான் தம்மேல்வைத்த கருணையினாலே

தாம் அறியாமல்செய்த மாறுதலை இங்கே வஞ்சனை என்று பொருள்படும் 'படிறு' என்றார். தாயுமானசுவாமிகள் 56-வது பாட்டில் "உள்ளத்தி னுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற - கள்ளக் கருணையையான் காணுந் தரமாமோ" என்று கூறியிருத்தலை நோக்குக. அந்த மாறுதல்களை அடிகள் எனை நானென்பதறியேன் என்றும் பகல் இரவாவதும் அறியேன் என்றும் கூறியருளினார். எனை நான் என்பது அறியேன் — எனை நான் என்பது - தன் முனைப்பு, அகங்காரம், நான் என்னுஞ் செருக்கு. அதாவது தன் முனைப்பின்றி அருளிலடங்கியிருத்தல். சுட்டறிவு முற்றிலும்நீங்கிய தால் அறியேன் என்றார். பகல் இரவு ஆவதும் அறியேன் — இது முப்பத்தாறு தத்துவங்களோடு கூடிய சகலாவத்தையைக் கடந்து சுத்தாவத்தையிலுள்ளதன்மை. இந்த நிலையில் உள்ள ஆன்மாவுக்கு ஞானாகாச ஒளி (துவெளியொளி) தோன்றுதலால் இரவும் பகலும் தோன்றா. "இராப்பகல் அற்ற இறையடி இன்பத்து" என்று திருமந்திரம் 331-வது பாட்டுக் கூறுதல் காண்க. அறியேன் என்றதனாலே எனை நான் என்பதையும் பகல் இரவாவதையும் சிவபெருமான் தம்மை ஆண்டருளியதற்குமுன் அடிகள் ஏகதேசமாயாவது அறிந்திருந்ததாகக் கூறியவாறாயிற்று. இந்தப் பாட்டில் அடிகள் தம்மைச் சிவபெருமான் திருப்பெருந்துறைக்கு வந்து அடிமையாகக்கொண்டு ஆண்டருளியதையும் அங்ஙனம் ஆண்டருளியபின்பு தாம் அடைந்த பேரின்பநிலைகளையுங் கூறுகின்றார்.

---

514. எச்சம்மறி வேனுனெனக் கிருக்கின்றதை யறியேன்
அச்சோவெங்க ளரனேயரு மருந்தேயென தமுதே;
செச்சைமலர் புரைமேனியன் திருப்பெருந்துறை யுறைவான்
நிச்சம்மென நெஞ்சின்மன்னி யானாகிநின் றானே. அச.

[ப-ரை] திருப்பெருந்துறை உறைவான் — திருப்பெருந்துறையிலே இருக்கின்றவனும்; செச்சைமலர் புரைமேனியன்— வெட்சிமலர்போலும் சிவந்த திருமேனி உடையவனும் (இருந்து)

எங்கள் அரனே — (நீ செய்த தீக்கையினலே) எங்கள் மலத்தைக் கெடுத்தவனே; அருமருந்தே— (எனது தன் முனைப்பைக் கெடுத்த அருளாகிய) அருமருந்தே; எனது அமுதே — நான் நுகரும் பேரின்பமாயிருப்பவனே; நிச்சம் என நெஞ்சில் மன்னி யாஞகி நின்ருனே — (அங்ஙனம் நீ திருப்பெருந்துறையில் தீக்கை செய்து என்னை ஆண்டருளியதனலே) எப்பொழுதும் என் நெஞ்சில் பிரிப் பின்றி அத்துவிதமாய்க் கலந்து யானக நிலைபெற்று நிற்கின்ற வனே; நான் எச்சம் அறிவேன் — (இதனலே அங்ஙனம் நீயே என்நெஞ்சில் யானக நிலைபெற்று நிற்றலினலே) உனக்கு நான் சுதந்தரமில்லாத சேடனென்று அறிவேன்; எனக்கு இருக்கின் றதை அறியேன் — என்னை அநாதியே பற்றியுள்ள ஆணவமலத் தினது பிணிப்பை அறியமாட்டேன்; அச்சோ — இஃது என்ன வியப்பு.

[வி-ரை] திருப்பெருந்துறை உறைவான் செச்சைமலர்புரை மேனியன் — இதனலே சிவபெருமான் திருப்பெருந்துறைக்கு அருட்குரவனய் வந்து தம்மை ஆண்டருளியதை அடிகள் குறிக் கின்ருர். சிவபெருமான் சிவந்தநிற மேனியை உடையவனய்த் திருப்பெருந்துறைக்கு வந்து தமக்குத் தீக்கைசெய்து தம்மை ஆண் டருளியதை “செந்தாமரைக் காடனைய மேனித்தனிச் சுடரே” என்று (5 - 26)ல் கூறியிருத்தலுங் காண்க. திருப்பெருந்துறை உறைவான் என்றதனலே தீக்கைசெய்த இடமும் செச்சைமலர் புரைமேனியன் என்றதனலே தீக்கை செய்யவந்த குரவன் கோல முங் கூறப்பட்டன. திருப்பெருந்துறை உறைவான் என்பதும் செச்சைமலர்புரை மேனியன் என்பதும் வினையெச்சப் பொருளில் வந்தன. எங்கள் அரனே — அரன் – பாசத்தை அரிக்கிறவன். அதாவது ஆணவம் வினை மாயை என்னும் மும்மலங்களையும் அழிக் கிறவன். அடிகள் அடியார்களைச் சேர்த்து எங்கள் அரனே என்று பன்மையில் கூறினர். இதனலே சிவபெருமானை அடிகள் தமக்கு மலவிருள் நீக்கஞ்செய்தவனென்று விளித்துக் கூறினர். அரு

மருந்தே — உயிர்களுக்கு மல இருள் நீங்கினாலும் அருளொளி விளக்கம் இல்லாவிடின் உயிர்முனைப்பு (சீவபோதம்) நீங்காதாத லின், அடிகள் எங்கள் அரனே என்று விளித்தபின் சிவபெருமானைத் தமக்கு அருளொளிவிளக்கஞ்செய்த அருமருந்தே என்று விளித்தார். உயிர்களுடைய மலநோய் நீங்குதற்கும் 'யான், எனது' என்னுஞ் செருக்கு நீங்குதற்கும் இறைவனுடைய அருள் மருந்தாயிருக்கிறது. இங்கே 'யான், எனது' என்னுஞ் செருக்கு நீங்குதற்கு ஏதுவா யுள்ள அருளாகிய மருந்தைச் சிறப்பித்துச் சிவபெருமானை அரு மருந்தே என விளித்தார். அடிகள் (47 - 6)ல் "ஆட்கொண்டு பேரருளால் நோக்கு மருந்து" என்று சிவபெருமானைக் கூறியதை நோக்குக. எனது அமுதே — சாவை நீக்கும் அமுதம் என்ற சொல் இங்கே அழியாத பேரின்பத்தைக் குறிக்கிறது. பேரின் பத்தை ஒவ்வோர் உயிரும் தனித்தனியே நுகர்தலால் எனது அமுதே என்று ஒருமையில் கூறினார். எங்கள் அரனே என்றத னாலே மலவிருள் நீக்கமும் அருமருந்தே என்றதனாலே அருளொளி விளக்கமும் எனதமுதே என்றதனாலே சிவப்பேறும் அளித்தவன் சிவபெருமான் என்பது கூறப்பட்டது. இவை மூன்றும் முறையே சிவஞானபோதம் 9, 10, 11 சூத்திரங்களில் கூறப்பட்டிருக்கின் றன. நிச்சம் என நெஞ்சில்மன்னி யானாகி நின்றானே — நிச்சம்— நித்தம் என்பதின் போலி. எப்பொழுதும். நெஞ்சு என்பது இங்கே அருளொளி விளக்கம் பெற்றதினாலே யான் எனது என்னுஞ் செருக்கு நீங்கித் தூய்மைபெற்ற மனம். அருமருந்தே என்பதன் விளக்கவுரையில் கூறியபடி, யான் என்னும் தன்முனைப்புணர்வு சிறிதுமின்றித் தெளிந்த அறிவு எய்திய அடிகளைச் சிவபெருமான் தனது திருவடி வியாபகத்துள் அடக்கித் தானென அடிகளாகிய உயிரெனப் பிரித்தறிய வாராத அத்துவித நிலையில் முழுதும் தானே யென அடிகளை உணரச்செய்தல்பற்றி அடிகள் யானாகி நின்றானே என்றார். "நானெனவொன் — றில்லென்று தானே யெனுவரைத் தன்னடிவைத்—தில்லென்று தானா மிறை" என்று சிவஞானபோ தம் 10ம் சூத்திரம் கூறுதல் காண்க. இந்த நிலையில் காலஅள

வையைக் கடந்து எப்பொழுதும் உள்ளதாதலும் பேரா இயற்கைத் தாதலும் இருத்தல்பற்றி நிச்சம் என நெஞ்சில்மன்னி யானுகி நின்றனே என்றார். தெளிவுபற்றி நின்றனே என இறந்த காலத் தால் கூறப்பட்டது. நான் எச்சம் அறிவேன் — எச்சம் என்ற தமிழ்ச்சொல் யாதாமொரு முழுப்பொருளில் அதற்குப்பாகமாயுள்ள ஒரு குறையைக் குறிக்கிறது. வடமொழியில் இது சேடமென்று குறிக்கப்படுகின்றது. உயிர் சிவபெருமானோடு நீரை அடைந்த உப்பைப்போல இரண்டறக்கலந்த அத்துவித நிலையில் சிவபெரு மான் சேடியப்பொருளாயும் உயிர் சேடப்பொருளாயும் உள்ளன. அடிகள் சிவபெருமானோடு அத்துவிதமாய்க்கலந்து தமக்கென ஒரு சுதந்திரமின்றி அவனுடைய திருவடி வியாகபத்துளடங்கி நின்று தம்மைச் சிவபெருமானுக்குச் சேடப்பொருளென்று உணர்தலின், நான் எச்சம் அறிவேன் என்றார். "யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்திரமின்றி நிற்கும், அஃது அதற்குச் சேடப்பொருள்" என்று சிவஞான சுவாமிகள் சிவஞான பாடியம் (கழகப் பதிப்பு பக்கம் 500-ல்) கூறியருளினர். இதனை மெய்கண்டதேவர் சிவஞானபோதம் 11-வது சூத்திர வெண்பாவில் "நசித்துமல, மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாம்" என்று கூறியிருத்தல் காண்க. அடிகள் தாம் சிவபெருமானுக்குச் சேடனாகிய அடிமை என்று அறியும் அத்துவிதநிலை ஆணவமலம் முழுவதும் நசித்தலாலுண்டாகிறது. நான் அறிவேன் என்றதனாலே அடிகள் பொருட்டன்மையால் (individuality) சிவபெருமானுக்கு வேறா யிருந்து பேரின்பம் நுகர்தல் குறிப்பிக்கப்பட்டது. எனக்கு இருக் கின்றதை அறியேன் — என்பது இங்கே ஆணவமலப்பிணிப்பைக் கூறுகின்றது. ஆணவமலப்பிணிப்பை நசித்தலாலேயே எச்சமறி வேனென்று சொன்ன அடிகள் தாம் அறியாமலிருப்பது ஆணவ மலப்பிணிப்பு என்பது தெளிவு. அத்துவித நிலையில் ஆணவமலப் பிணிப்பு நீங்குமேயன்றி என்றுமுள்ள ஆணவமலம் நீங்காதாதலின் எனக்கு இருக்கின்றது என்று முக்காலத்தையுங் குறிக்கும் நிகழ் காலத்தால் கூறினர். "முத்திதனின்மூன்று முதலுமொழியக்கேள்"

என்று உண்மை விளக்கம் 50-வது பாட்டில் மனவாசகங்கடந்த தேவ நாயனார் கூறியிருத்தல் காண்க. அச்சோ—என்னும் இடைச் சொல் வியப்பைக் குறிக்கிறது. அடிகள் தாம் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பெற்ற பின்பு அடைந்த நிலையை அதற்குமுன்னுள்ள நிலையோடு ஒத்துப் பார்த்து வியப்படைகின்றார். அடிகள் (51 - 1)ல் "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட, அத்த னெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே" என்றுகூறியருளினார். இந்தப் பாட்டில் அடிகள் தமக்குச் சிவபெருமான் அருட்குரவனாய்த் திருப்பெருந்துறைக்கு வந்து தீக்கை செய்து மலவிருளை நீக்கியும் அருளொளியை விளக்கியும் சிவப்பேறு அளித்ததையும் பேரின்பம் நுகர்ந்துகொண்டிருத்தலையும் கூறுகின்றார்.

---

தில்லையில் அருளிய

# ௫௫. அச்சப்பத்து.

---

அச்சம், பத்து என்னும் இரண்டு தமிழ்ச்சொற்கள் சேர்ந்து அச்சப்பத்து என்றாகியது. அச்சம் – அஞ்சுதல், அதாவது சிவனே தனிமுதற்பொருளென அறிந்து, அவனிடத்தில் அன்பில்லா தாரைக் காணில் அவருடைய கூட்டுறவு உலகவாதனையைப் பயக்கு மென்றஞ்சி விலகுதல். இக்கருத்தை மெய்கண்டதேவர் சிவஞான போதம் 12-வது சூத்திரத்திற் கூறியிருத்தல் காண்க. பிராரத்துவ வினை மலவாசனை ஒரோவழி தாக்குமியல்புடைய சீவன்முத்த அடி யார்கள் உலகில் வாழும்பொழுது சிவபெருமானிடத்து அன்பில் லாத அடியார்களைக் காணில் அக்காட்சி தாம் எப்பொழுதும் இடை விடாது சிவன் திருவடிகளிலழுந்தியிருக்கும் சிந்தையை வேறுபடச் செய்யுமென்று அஞ்சி விலகுதல் இங்கே அச்சம் என்று கூறப்

பட்டது. அச்சப்பத்தென்பது அடிகள் மேலே கூறப்பட்டபடி அஞ்சுதலைக்கூறும் பத்துப் பாட்டுக்களையுடைய பதிகமாகும்.

## ஆனந்தமுறுதல்.

ஆனந்தமுறுதல் என்பது பேரின்பமடைதலாகும். உலகில் சிவனடியாரல்லாதாரைக் காணாது சிவனடியாரையே காணுதல் சீவன்முத்த அடியார்களைச் சிவன் திருவடிகளில் அழுத்திநிற்றலி னின்று விலகச்செய்யா தாதலின், அச்சப்பத்து அத்திருவடிகளி லழுந்திநின்று ஆனந்தமுறுதலைக் கூறுவதாயிற்று.

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

520. பிணியெலாம் வரினு மஞ்சேன் பிறப்பினோ டிறப்பு மஞ்சேன், துணிநிலா அணியி னான்றன் தொழும்பரோ டழுந்தி யம்மால், திணிநிலம் பிளந்துங் காணாச் சேவடி பரவி வெண்ணீ, றணிகிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே. அ-கு.

[ப-ரை] பிணியெலாம் வரினும் அஞ்சேன் — மக்கள் உடலை யணுகும் நோய்களெல்லாம் எனது உடலை யணுகினும் (நான் அவற் றால் அடையும் துன்பத்திற்கு) அஞ்சமாட்டேன்; பிறப்பினோடு இறப்பும் அஞ்சேன் — (மக்களுக்கு உலகவாழ்வில் வரும் துன்பங் களுக்கெல்லாம் பெரிய துன்பங்களாகிய) பிறப்புத் துன்பத்திற்கும், இறப்புத் துன்பத்திற்கும் நான் அஞ்சமாட்டேன்; துணிநிலா அணியினான் — (திங்களைக் காக்கும் பொருட்டு) இளம்பிறைத் திங் களைத் தனது தலைமேல் தரித்திருக்கிற பெருமையை உடையவனை;

தன் தொழும்பரோடு அழுந்தி — அவனடியார் கூட்டத்தோடு கூடி இன்பத்தில் மூழ்கி; அம்மால் — தேவர்களிற் சிறந்தவனுகிய திரு மால்; திணிநிலம் பிளந்தும்காணு — (முன்னொருகாலத்தில் தனக் கும் நான்முகனுக்கும் இடையே சிவபெருமான் தழற்பிழம்பாய் நின்றபொழுது அப்பிழம்பின் அடியைக் காண்பேன் என்று பன்றி உருவம் எடுத்துக் கொம்பினாலே) கடினமான மண்ணை (பாதாளம் வரையில்) அகழ்ந்தும் காணமுடியாதிருந்த; சேவடிபரவி - சிவ பெருமானுடைய செவ்விய இரண்டு திருவடிகளையும் தொழுது; வெண்ணீறு அணிகிலாதவரை—வெண்மையான திருநீற்றைத் தங்க ளுடம்பிலே அணியமாட்டாத அடியாரல்லாதாரை; கண்டால் - காண நேர்ந்தால்; நாம் அஞ்சும் ஆறு – (அங்ஙனம் காணுதல்) நாம் அஞ்சத்தக்கவையாகும்.

[வி-ரை] பிணியெலாம் வரினும் அஞ்சேன் — உடலைப் பிணித்துத் துன்பஞ்செய்தலால் நோய் பிணியெனப்பட்டது; பிணி யெலாம் சேர்ந்து உடலையணுகினும் அடியாரல்லாதாரைக் காணுதல் போலச் சிவன் திருவடியை மறக்கச்செய்யாதாதலின், பிணியெலாம் வரினும் அஞ்சேன் என்றார். பிறப்பினோ டிறப்புமஞ்சேன் — தாயார் கருப்பப்பையில் கட்டுண்டுகிடத்தல் முதலியன பிறவித்துன் பங்கள்; சாகுங்காலத்தில் சிலேப்பனம் வருதல் முதலியன இறப் புத் துன்பங்கள். சிவன் திருவடியை மறத்தலினாலடையும் துன்பம் பிறப்பிறப்புத் துன்பங்களுக்கு மிக்கதானதால், பிறப் பினோ டிறப்பும் அஞ்சேன் என்றார். துணிநிலா அணியினான் — துணி – துண்டம். துணிநிலாவென்பது இளம்பிறையைக் குறிக் கிறது. மூன்றும் பிறைத்திங்கள் தோன்றும்பொழுது திங்களின் பிற பகுதிகள் தோன்றாமையால், இளம்பிறைத்திங்கள் மூன்றும் பிறைத் திங்கள் என்று கூறப்படுகின்றது. அணி என்பது இங்கே பெருமையைக் குறிக்கிறது. அணியினான், பெருமையையுடைய வன், இன் – சாரியை. திங்கள் தன் 16-கலைகள் ஒவ்வொன்றாய்த் தேய்ந்துபோவதைக் கண்டு அஞ்சி இறைவனிடம் அடைக்கலம் புகுந்தபொழுது, இறைவன், தேய்ந்துபோகாது எஞ்சி நின்ற கலை

யோடு திங்களைத் தன் தலைமேலணிந்து அவனைக்காத்தருளிய பெருமையைக்கூறி இறைவன் தன்னையடைந்தவர்களைக் காத்தருளுவன் என்பதை அடிகள் குறிப்பிட்டார். தன் தொழும்பரோடழுந்தி — தொழும்பு - அடிமை, தாம் இறைவனுக்கு மீளா ஆட்பட்டிருக்கும் அடிமைத்தனத்தை உணர்ந்தவர் தொழும்பர் ஆவர். அழுந்துதல் - இன்பத்திலே பரவசப்பட்டு மூழ்குதல். அம்மால் திணிநிலம்பிளந்தும்காணா — அ + மால் = அம்மால்; அ் என்பது அறிசுட்டாய்த் திருமால் தேவர்களிற் சிறந்தவன் என்னும் பொருளை யுணர்த்துகிறது. இதனாலே, இறைவனுடைய திருவடிகளின் சிறப்புக் கூறப்பட்டது. வெண்ணீறு அணிகிலாதவரை — அருளைக் குறிக்கும் திருநீறு அணிதல் தற்போதமிழந்து அருளிலடங்கியிருக்கும் அடியார்களுக்கு அடையாளமாகக் கூறப்படுகின்றது. திருநீற்றை அணிந்திருக்கும் அடியார்கள் தங்களைக் காண்கிறவர்களுக்கு இறைவன் திருவடியாகிய அருளை நினைப்பூட்டித் திருவடியை மறக்கச் செய்யாதிருத்தல்பற்றித் திருநீறணியாதவரைக் காணுதல் அச்சத்திற்கிடமாயிற்று. கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே — கண்டால் - காணநேரிட்டால், கண்டால் என்ற சொல்லுக்குப்பின், காணுதல் என்ற சொல் தொக்கி நின்றது. இது சொல்லெச்சம். அஞ்சும் ஆறு – அஞ்சும் வகைகளில் ஒன்று. ஏ – ஈற்றசை. காணுதல் அஞ்சுமாறு என முடிக்க.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# ௩௬. திருப்பாண்டிப் பதிகம்.

---

திருப்பாண்டிப் பதிகம் என்பது அருளைக்குறிக்கும் திரு என்ற அடைமொழியோடு பாண்டி, பதிகம் என்ற இரு சொற்கள் சேர்ந்து ஆகிய முச்சொற்றொடர். பாண்டி என்பது பாண்டிநாடு. தமிழ் நாட்டிலுள்ள மூன்று நாடுகளில் பாண்டிநாடு ஒன்று. பாண்டி

என்பது இங்கே பாண்டியன் அல்லது பாண்டிநாட்டரசனைக் (
கிறது. அச்சொல் இங்கே அடிகள் இறைவனை மூன்ருவது
டில், பரிமேற்கொண்ட பாண்டியனுரென்றும், ஐந்தாவது பாட
ஆலமுண்டானெங்கள் பாண்டிப்பிரான் என்றும், ஆருவது
டில் பாண்டியனுர் என்றும், ஒன்பதாவது பாட்டில் பாம்
டியனுர் என்றும் கூறுதலால் இறைவனை உணர்த்துகிறது. இ
வன் ஒரு காலத்தில் மலையத்துவச பாண்டியன் மகளை மண
சோமசுந்தர பாண்டியனுய் வந்து பாண்டிநாட்டை ஆண்டதி
பாண்டியன் என்ற பெயரும் அவனுக்கு வழங்கப்படுகிறது. ஈ
பாண்டி என்ற சொல்லானது பாண்டிமன்னனைக் குறியாது இ
வனையே குறிக்குமென்பது அடிகள் மேலேகூறியபடி இறைவ
குறிக்கும் பெயர்களால் விளங்கும். இப்பதிகத்தில் 1, 2, 3
7,9 பாட்டுக்களில் தம்பொருட்டுப் பாண்டிமன்னனுக்குக் குதிர
கொண்டுவந்த இறைவன் ஒற்றைப்பரிமேல் பாண்டியன்முன்
அவனுடைய பேரின்ப உருவத்தை அடியார்களுடைய உள்ள
கும் உருவம் என்று அடிகள் கூறுகின்ருர். திருப்பாண்டிப் ப
என்பது மேலே கூறுகிறபடி பாண்டிப்பிரானுகிய இறை
பாண்டிமன்னன் முன் ஓர் குதிரையின்மேல் கண்டவர்மனங்க
வனப்புடன் வந்த திருவுருவச் சிறப்பைக் கூறுகின்ற பத்துப்
டுக்களடங்கிய பதிகமாகும்.

## சிவானந்த விளைவு.

---

சிவானந்த விளைவு என்பதற்கு உயிருண்ணிப் பத்தி
சிவானந்தம் மேலிடுதல் என்பதற்கு நானெழுதிய விளக்கவுரை
கொள்க. இப்பதிகம் கூறுகின்ற பரிமேல் வந்த இறைவனுடை
திருவுருவமானது பக்குவப்பட்ட அடியார்களுக்குச் சிவானந்த
விளைத்தலால் சிவானந்த விளைவைக் கூறுவதாயிற்று. இவ்
மையானது இப்பதிகப் பாட்டுக்களிற் கூறப்பட்டிருக்கின்றது.

---

## திருப்பாண்டிப் பதிகம்.

### [கட்டளைக் கலித்துறை]

திருச்சிற்றம்பலம்.

528. நீரின்ப வெள்ளத்துள் நீந்திக் குளிக்கின்ற நெஞ்சங் கொண்டீர், பாரின்ப வெள்ளங் கொளப்பரி மேற்கொண்ட பாண்டியனார், ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு தொண்டரை யுள்ளங்கொண்டார், பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ லேசென்று பேணுமினே. அ௬.

[ப-ரை] பார் இன்பவெள்ளம் கொள — இவ்வுலக மக்கள் பேரின்பத்தை அடையும் வண்ணம்; ஓரின்ப வெள்ளத்து உருக் கொண்டு — ஒப்பற்ற பேரின்ப உருவமே தனதழகிய திருவுருவ மாகக்கொண்டு; பரிமேற்கொண்ட பாண்டியனார் — குதிரைமே லேறி வந்த இறைவனார்; தொண்டரை உள்ளங் கொண்டார் — பக்குவப்பட்ட அடியார்களுடைய உள்ளத்தைக் கவர்ந்து கொண் டார்; இன்பவெள்ளத்துள் நீந்திக்குளிக்கின்ற நெஞ்சங்கொண்டீர் நீர்— (ஆதலால்) பேரின்பமாகிய வெள்ளநீரில் மூழ்கித்திளைக்கின்ற உள்ளக்கருத்துடைய அடியார்களாகிய நீங்கள்; பேரின்ப வெள் ளத்து — பேரின்பமாகிய வெள்ள நீரில்; பெய்கழலே — அழுத் துகின்ற வீரக்கழலையுடைய திருவடிகளிலேயே; சென்று பேணு மின் — சேர்ந்து வழிபடுங்கள்.

[வி-ரை] இந்தப் பாட்டில் அடிகள், முதற்கண் மதுரைக்குப் பரிமேல் வந்த இறைவன், பக்குவப்பட்ட அடியார்களுடைய உள் ளத்தைக் கவர்ந்துகொண்டாரென்ற செய்தியைப் பக்குவப்பட்ட அடியார்களை நோக்கி, அவர்கள் இறைவன் திருவடிகளிற் சென்று சேர்தல் வேண்டுமென்று கூறுதலினாலே, பதவுரையிற் கண்டிருக் கிறபடி உரைநடை செய்யப்பட்டது. பாரின்ப வெள்ளங்கொள— பார் — இடவாகுபெயராய் உலகிலுள்ள மக்களைக் குறிக்கிறது. இன்பவெள்ளம்— எல்லையற்ற பேரின்பம். ஓர் இன்பவெள்ளத்து உருக்கொண்டு — இன்பவெள்ளத்து உரு - இது இறைவனுடைய

சிறப்பியல்பு நிலைக்குரிய பேரின்ப சொரூபம், உலகிலுள்ள உருவமல்ல.

இன்பதனை எய்துவார்க் கீயும் அவர்க்குருவம்
இன்பகன மாதலினால் இல்

என்று திருவருட்பயன் 73-வது பாட்டில் உமாபதி சிவாசாரியார் இறைவனை இன்பவுருவன் என்று கூறுதல் காண்க. இறைவன் இன்பவுருவா யிருத்தலினாலேதான் அவனுடைய திருவடிகளை அடைந்தவர் இன்பமடைகிறார்கள். இறைவன் பரிமேல் வந்த ஒளியையும் அழகையும் பார்த்த காட்சி தமது மனத்தில் ஊன்றி யிருத்தலால், அதனை அடிகள் பலவிடங்களிற் கூறுகின்றார். தொண்டரை உள்ளங்கொண்டார் — தொண்டராவார் இங்கே இறைவனுடைய திருவடிகளைச்சேர்தற்குப் பக்குவமுடையவர்கள் நிகழ்காலத் தாற் கூறற்பாலதைத் தெளிவுபற்றி 'கொண்டார்' என்று இறந்த காலத்தாற் கூறினார். இன்பவெள்ளத்துள் நீந்திக்குளிக்கின்ற நெஞ்சங் கொண்டீர் நீர் — இன்பவெள்ளத்துள் நீந்திக்குளித்தல் உருவகம். ஒருவர் வெள்ளநீரில் கரைகாணாது நீந்திக்குளித்தல் போல, எல்லையற்ற இன்பவெள்ளத்தில் திளைத்து இன்புறுதல் கூறப்பட்டது. நெஞ்சு என்பது நெஞ்சிலுள்ள கருத்தைக் குறிக்கிறது; ஆகுபெயர். பேரின்ப வெள்ளத்துப் பெய்கழலே சென்று பேணுமின் — இது பேரின்ப வெள்ளத்துள் நீந்திக்குளிக்கின்ற நெஞ்சங்கொண்டவரை நோக்கி, அடிகள் கூறிய அறிவுரையாகும். கழல் என்பது இங்கே ஆகுபெயராய் வீரக்கழலை யணிந்திருக்கிற திருவடிகளைக் குறிக்கிறது. கழலே என்பதிலுள்ள 'ஏ' தேற்றம். இறைவன் தனது திருவடிகளைச் சேர்ந்தவர்களை பேரின்பத்தில் அழுத்துவித்தலால், பேரின்பவெள்ளத்துப் பெய்கழலே யென்றார். அடிகள், ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள், என்று (12 - 10) பாட்டில் கூறுதல் காண்க. பேணுதல் — விரும்புதல்; அதாவது விரும்பி வழிபடுதல்; மின் — முன்னிலைப் பன்மை ஏவல் விகுதி. 'ஏ' — ஈற்றசை.

திருத்தோணிபுரத்தில் அருளிய

# ௩௭. பிடித்தபத்து

பிடித்தபத்து என்பது பிடித்த, பத்து என்னுமிரண்டு சொற்களாலாகிய சொற்றொடர். பிடித்தல் — பற்றுதல்; அதாவது உயிர் தனது சிறப்பியல்பு நிலையில் தனக்கும் இறைவனுக்குமுள்ள பிரிப்பில்லாத அத்துவிதத் தொடர்பை யறிந்து பற்றுதல். இப்பற்றுதலானது, உயிர் தனது உள்ளத்தில் மலவிருள் முற்றிலும் நீங்கி, அருளொளியோடு விளங்கி, தற்போதமிழந்து, எங்கும் நிறைந்து காணும் வியாபக அறிவடைந்து சிவத்திலடங்கி நிற்கும்பொழுதுண்டாகிறது. இங்ஙனம் பற்றும் பேரின்ப நிலையைத் தாமடைந்ததாக அடிகள், பிறரறிந்துய்யும் பொருட்டு ஒவ்வொரு பாட்டினிறுதியிலும் 'உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளுவதினியே' என்று கூறுகின்றார். இங்ஙனம் அடிகள் கூறுகிற பத்துப் பாட்டுக்களடங்கிய பதிகம் பிடித்த பத்தாகும்.

## முத்திக் கலப்புரைத்தல்.

முத்திக் கலப்புரைத்தல் என்பது முத்திநிலையில் அடிகள் இறைவனோடொன்றாயும், வேறாயும், உடனாயும் இரண்டறக் கலந்து நிற்றலைக் கூறுதல். அடிகள் தாமே தனித்து தம்முள்ளுணரும் பேரின்பவனுபவத்தைப் பிறரறியும்படி கூறமுடியாததலின் அப்பேரின்ப வனுபவத்திற்கு ஏதுவாய் இறைவனைப் பிரிப்பற நின்று பற்றுந்தன்மையை முத்திக்கலப்பாகப் பிறரறியும்படி கூறுகின்றார்.

[எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

536. உம்பர்கட் கரசே ஒழிவற நிறைந்த
யோகமே ஊற்றையேன் றனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. அஎ.

[ப-ரை] உம்பர்கட்கு அரசே — விண்ணுலகத்தார்க்குத் தலைவனே; ஒழிவு அற நிறைந்த யோகமே — உலகில் எங்கணும் இடையீடின்றிக் கலந்து நிற்கின்ற யோகப்பொருளே; ஊற்றையேன் தனக்கு — மல அழுக்குள்ளவனாகிய எனக்கு; வம்பு எனப் பழுத்து — புதுமையாகத் தோன்றும்படி நான் நுகரும் இனிய கனிபோல (என்முன்னே திருப்பெருந்துறையில் வந்து) தோன்றி; என் குடி முழுது ஆண்டு — எனது குடியைச் சேர்ந்த அடியார் கூட்டம் அனைத்தையும் ஆண்டருள் செய்து; வாழ்வு அற — அவர்களுடைய பிறவித்துன்ப வாழ்வு ஒழிய; வாழ்வித்த மருந்தே — பேரின்பவாழ்வில் வாழும்படி செய்த மருந்தே; துணி செம்பொருளே — மெய்யறிவர்கள் (ஐயந்திரிபின்றி) அறுதியிட்டுக் கூறும் மெய்ப்பொருளே; சீருடைக் கழலே—சிறப்பினையுடைய அருட் செல்வமே; செல்வமே — இன்பச் செல்வமே; சிவபெருமானே — சிவபெருமானே; எம்பொருட்டு — அடியார்களாகிய எங்கள் பொருட்டு; உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் — உன்னை

உறுதியாகப் பற்றிப் பிடித்துக்கொண்டேன்; இனி நீ எங்கு எழுந்து அருளுவது — இங்ஙனம் நான் உன்னை இறுகப் பற்றிப்பிடித்துக் கொண்டபின், என்னை விட்டு நீ எங்கே செல்வாய் (நீ என்னை விட்டுப்போக முடியாது என்றபடி)

[வி-ரை] உம்பர்கட்கு அரசே — உம்பர் – மேலிடம், விண்ணுலகம். அது இங்கே ஆகுபெயராய் 'விண்ணுலகத்திலுள்ளவர்களைக் குறிக்கின்றது. சிவபெருமான் நம்மனோர் காணுதற்கு அரிய பொருளாயிருத்தல் குறித்து உம்பர்கட் கரசே என்றார். ஒழிவற நிறைந்த யோகமே — அங்ஙனம் சிவபெருமான் விண்ணுலகத்தவர்க்கும் அரியபொருளா யிருப்பினும், நில உலகத்திலுள்ள மானிடரும் தாங்கள் செய்யும் தியானயோகத்திற் காணும் எளிய பொருளாயிருக்கின்றான் என்பார், ஒழிவற நிறைந்த யோகமே என்றார். ஊற்றையேன் தனக்கு வம்பு எனப்பழுத்து — ஊத்தை - ஊற்றை எனத்திரிந்தது – அழுக்கு, அது இங்கே மல அழுக்கைக் குறிக்கிறது. ஊற்றையேன் தனக்கு — தன் - அசை. வம்பு - புதுமை. பழுத்து - நான் காத்திராமல் முதிர்ந்த பழம்போல நுகர்தற்கு எளிதினில் கிடைக்கப்பெற்று என்ற பொருளில் வந்தது. காரியம் பழுத்துப்போயிற்று என்றால் காரியம் பலனுக்கு வந்தது என்று உலக வழக்கில் பொருள்படுதல் காண்க. அடிகள் தாம் முன் எதிர்பாரா திருக்கத் தமக்கு முன்னே சிவபெருமான் திருப்பெருந்துறைக்குக் குருவடிவில் வந்து ஆண்டருளி இன்பமளித்தலால் வம்பெனப் பழுத்து என்றார். என் குடிமுழுது ஆண்டு—முழுது என்பதற்குப் பின் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. குடி என்பது ஒருவகை மக்கட் கூட்டம். என்குடி என்று அடிகள் இஙகே கூறியது தம்மோடு சேர்ந்த அடியார் கூட்டத்தை. இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற அடியார்களை எல்லாம் குறிப்பிட்டு அடிகள் இங்கே "குடி முழுது" என்று கூறினார். உலக நிலையிலுள்ளவர்கள் தங்கள்குடியிற் பிறந்தவர்களைத் தங்கள் தமர் என்று கூறுதல்போலச் சிவபெருமானுக்கு ஆட்பட்ட அடிகள் அடியார்கள் எல்லாரையும் தமர் என்று

கூறுகிறார். ''நாடி நந்தமராயின தொண்டர்கள்'' என்று திருநாவுக்கரசு அடிகள் (5 - 63 - 8)லும், திருஞானசம்பந்த அடிகள் ''நமரங்காள்'' என்று (1- 99 - 1) லும் கூறியிருத்தலேயும் நோக்குக. இக்கருத்துபற்றி அடிகள் நான்காவது அடியில் ''எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்'' என்றார். வாழ்வு அற — வாழ்வு என்பது இங்கே உலகிலுள்ள மலக்கட்டுடைய உலகவாழ்வைக் குறிக்கிறது. வாழ்வித்த மருந்தே — வாழ்வித்த - பிறவினை. வாழும்படி செய்த. அடிகள் தாம் உலகச் சிற்றின்பவாழ்வில் வாழ்ந்தது தமதுவேட்கைப்படி ஆதலின்,அதனைத்தாமாக வாழ்ந்த வாழ்வு என்று பொருள்படத் தன்வினையிலும், தாம் சிவபெருமானுடைய அருளைப்பெற்றுப் பேரின்ப வாழ்வை வாழ்தலினுல் வாழ்வித்த என று பிறவினையிலும் கூறினுர். நோயினுற் பிணிக்கப்பட்டவர்களுக்குத் தகக மருத்துவன் ஒருவனுற் கொடுக்கப்பட்ட மருந்தானது அந்நோயை ஒழித்து உடலின்பம் பெறும்படி செய்தல்போல, மல நோயினுற் பிணிக்கப் பட்டு அப்பிணிப்பை உணர்ந்து சிவபெருமானை அன்பினுலே தொழுகிறவர்களுக்கு அவன் தன்னையே சார்ந்து பேரின்பம் நுகரும்படி செய்தலால், சிவபெருமானை அடிகள் வாழ்வித்த மருந்தே என்று விளித்தார். யோகிகள் தமதுள்ளத்திற் காணுதற்குச் சிவபெருமான் எளிய பொருளாயிருப்பதை மெய்ப்பித்தற்கு அடிகள் தமக்குச் சிவபெருமான் திருப்பெருந்துறையில் காணுதற்கு எளியனுயிருந்ததல்லாமல், பிறவித் துன்பத்தை ஒழித்துப் பேரின்பத்தை அளித்த மருந்தாயுமிருந்தான் என்று தமக்கு நிகழ்ந்ததை ஓர் எடுத்துக்காட்டாகக் கூறினுர். செம்பொருள் துணிவே—செம்பொருள் துணிவே என்பதை துணிகொள் செம்பொருளே என மாற்றி மெய்அறிவர் என்பதை அவாய் நிலையால் வருவித்துப் பொருளுரைக்கப்பட்டது. செம்மை + பொருள் = செம்பொருள். மை விகுதிகெட்டுச் செம்பொருள் என நின்றது. செம்மை - நேர்மை - உண்மை. அநாதி நித்தப்பொருள்களென்று கூறப்படும் பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருள்களில், பதியாகிய சிவமே எவ்வாற்ருலும் என்றும் மெய்யாகிய (சத்தாகிய) பொருளாயுள்ளது. மலப்பிணிப்பினின்று

நீங்கிய அடிகள் தமது மெய்யறிவில் நேர்மையால் உணர்ந்து காண்பது சிவமாகிய பொருளல்லது பிறிதொரு பொருளும் இல்லையாதலின், "செம் பொருட்டுணிவே" என்று விளித்தார். "பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும், செம்பொருள் காண்பதறிவு" என்று திருவள்ளுவ நாயனார் மெய்யுணர்தல் என்ற அதிகாரத்தில் இறைவனைச் செம்பொருள் என்று குறித்திருத்தல் காண்க. சீருடைக் கழலே—கழல் என்பது இங்கே ஆகுபெயராய்ச் சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளையும் குறிக்கிறது. திருவடி அருளாதலின், அருட்செல்வமே என்று உரை செய்யப்பட்டது. செல்வமே — செல்வம் என்பது இங்கே இன்பச்செல்வத்தைக் குறிக்கின்றது. சிவபெருமான் உயிர்களுக்கு அவர்கள்மேல் வைத்த அருளினாலே இன்பத்தைத் தருதலின் அடிகள் அவனைச் சீருடைக் கழலே என்று அழைத்தற்குப்பின் (இன்பச்) செல்வமே என்று அழைத்தார். அடிகள் "அருணிதி தரவரு மானந்த மலையே"என்று (20 - 2) கூறுதலை நோக்குக. சிவபெருமானே — செம்பொருட்டுணிவே ,என்றதனாலே சிவபெருமான் பேரறிவன் என்பதும், சீருடைக் கழலே என்றதனாலே அவன் பேரருளாளன் என்பதும், செல்வமே என்றதனாலே அவன் பேரின்பன் என்பதும் அடிகள் கூறி, அவை மூன்றினுக்குப்பின் சிவபெருமானே என்றார். எம் பொருட்டு — எம்பொருட்டு என்றதனாலே அடியார்களையும் தம்மோடு சேர்த்துக்கூறினார் என்றறிக. அடிகள் சிவபெருமானைத் தொடர்ந்து பற்றியது தம்பொருட்டு மட்டுமன்று, சிவபெருமானை அடைதற்குத் தவஞ்செய்து கொண்டிருக்கும் அடியார்கள் எல்லாரின் பொருட்டும் என அறிக. அடியார்களெல்லாரும் உலகிலுள்ள எல்லா உயிர்களின் நலங்கருதிப் பணிசெய்து வாழ்கின்றவர் ஆதலின், அடியார்கள் பொருட்டு என்றது எல்லா உயிர்களும் அடியார்கள் மூலமாய் நலமடைதலையும் அடிகள் கருதியவாறாயிற்று.

---

544. பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. ௮௮.

[ப-ரை] நினைந்து பால் ஊட்டும் தாயினும் — (உன்னை நான் அறியாதிருக்கும் கட்டு நிலையில் [பெத்த நிலையில்], தனது அறிவிலா இளங்குழந்தை பசியினால் அழுதற்கு முன் தானாகவே அதற்குப் பசி உண்டாயிருக்குமென்று) எண்ணித் தனது பாலை உண்பிக்கும் தாயைப் பார்க்கிலும்; சாலப்பரிந்து — (எனக்கு உன்னை அடையும் அருள்நாட்ட முண்டாகு முனனே அவ்வருள் நாட்டம் என்னிடம் உண்டாதல் வேண்டுமென்று எண்ணி) அன்பினால் மிக இறங்கி; பாவியேனுடைய — தீவினையாளனாகிய என்னுடைய; ஊனினை உருக்கி (யும்)—எனது உடலினுள்ளொளியாய் விளங்காது மறைந்திருக்கும் நீ உடலை உருகும்படி செய்வித்தலாலும்; (உடலோடு கூடிய உயிரையும் அவ்வுயிருக்கு அறிகருவியாயிருக்கும் உள்ளத்தையும் உருகும்படி செய்வித்தலாலும்) உள்ஒளி பெருக்கி (யும்) — அவ்வுடலிலு முள்ளத்திலு முயிரிலு முள்ள மலவிருளைச் சிதைக்கும் வண்ணம் அவற்றினுள் மறைந்திருக்கும் உள்ளொளியை விளக்கிப் பெருக்குதலாலும்; உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து (சொரிய) — என்றும் கெடாத பேரின்பமாகிய தேனினை நான் நுகரும் வண்ணம் நீ நினைந்து முயன்றபொழுது; புறம்புறம் திரிந்த — (உன்னுடைய அருட்செயலை அறியாமையினாலே மறுத்து நான் உலக நுகர்வுப் பொருள்களை இடங்கடோறும் நாடித்தேடி நுகர்ந்துதிரியவும்) நான் அவ்வாறு

உலக நுகர்வு நுகர்ந்துதிரியுமிடங்கள் பலவற்றிலும் நீயும் என்னுடனுய்த்திரிந்த; செல்வமே — அருட்செல்வமே; சிவபெருமானே — சிவபெருமானே; யான் உனைத் தொடர்ந்து — (உன்னை நான் அடைந்து இன்புறுதற்கு நீ என்பொருட்டு இடைவிடாது செய்து வரும் அருட்செயல்கள் இன்ன என அறியும் பருவம் வந்த வீட்டு நிலையில் (முத்திநிலையில்), கட்டுநிலையில் நீ என்னைப்பின்தொடர்ந்து என் பின்னே சென்றதுபோல) உன்னை நான் பின்தொடர்ந்து; சிக்கெனப் பிடித்தேன் — உன்னை விடாதபடி இறுகப் பற்றிப்பிடித்துக் கொண்டேன்; இனி நீ எங்கு எழுந்து அருளுவது — இங்ஙனம் நான் உன்னை இறுகப்பற்றிப் பிடித்துக்கொண்டபின் என்னை விட்டு நீ எஙகேசெல்வாய் (நீ என்னை விட்டுப்போக முடியாது என்றபடி).

[வி-ரை] நினைந்துபால் ஊட்டும் தாயினும் — உலகில் ஒன்றினையும் வேண்டாது செய்யும் மேலான அன்புக்கு, தாய் ஒருத்தி தனது இளங்குழவியினிடத்து வைக்கும் அன்பு எவருமறியும் எடுத்துக் காட்டாயிருத்தலின், 'பாணினைந்தூட்டுந் தாயினும்' என்றார். இஃது ஏகதேச உவமை. உவமை இதன் பதவுரையிலும் உவமைவிளக்கும் பொருள் 'சாலப் பரிந்து' என்பதற்கு எழுதிய பதவுரையிலும் விரித்து விளக்கப்பட்டது. 'தாயினும் நல்ல சங்கரனுக் கன்பர்' என்று திருநாவுக்கரசு அடிகள் (5 - 100 - 9)ல் இந்த உவமையைக் கூறியிருத்தல் காண்க. சாலப்பரிந்து — சால - மிகவும், உரிச்சொல். பரிதல் - இரங்குதல். பாவியேனுடைய — சிவபெருமான் தமக்குச் செய்துவந்த அருட்செயலை அறியாது மறுத்தலின் அடிகள் தம்மைப் 'பாவியேன்' என்றார். "மறுத்தனன் யானின் னருளறி யாமையின்" என்று (6 - 6)லும், "மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப யானுன் மணிமலர்த்தாள், வேறுபட்டேனை" என்று (6 - 11)லும் அடிகள் கூறியிருத்தல் காண்க. ஊனினை உருக்கி (யும்) — ஊன் இங்கே உடலைக்குறிக்கின்றது. ஆகுபெயர். உள் ஒளிபெருக்கி (யும்) — பேரொளிப் பொருளாயிருக்கிற சிவ

பெருமான், உயிரின்மேல் வைத்த தனது பேரருளால் உயிர் தன்னை அறிந்து உணர்ந்து உய்யும்பொருட்டு உயிரினுடலையும் அவ்வுயிருடனாய் நின்று அறிதற்குக் கருவியாயிருக்கிற உள்ளத்தையும் கோயிலாகக்கொண் டெழுந்தருளியிருக்கின்றான் என்றும், உள்ளத்தையும் உயிரையும் சிவலிங்கமாகவும் கொண்டெழுந்தருளியிருக்கின்றான் என்றும், அன்பினால் தன்னை நினைக்கிறவர்களுடைய உள்ளத்தில் நீங்காது விளங்கித்தோன்றுகின்றான் என்றும், அங்ஙனம் அவன் உயிரிலும் உடலிலும் உள்ளத்திலும் எழுந்தருளித் தூண்டிக்கொண்டே யிருத்தலால் அவ்வுயிரையும் உயிரிருக்கிற உடலையும் உள்ளத்தையும் மறைத்துக் கொண்டிருக்கிற மல இருளை நீக்கி வெளியாக்கி, உயிர் தன்னை அறிந்து பேரின்பம் அடையும்படி செய்கின்றான் என்றும், சைவநூல்கள் கூறுகின்றன. இந்த உண்மை இங்கே மிகச்சுருங்கிய சில சொற்களாற் கூறப்பட்டிருக்கின்றது. திருநாவுக்கரசு அடிகள் "காயமே கோயிலாகக் கடிமனமடிமையாக — மனமணி யிலிங்கமாக" (4 - 76 - 4) என்றும். "நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்" (5 - 2 - 1) என்றும், "உள்ளமா யுள்ளத்தே நின்றாய் போற்றி" (6-32-8) என்றும் "சிந்தைதனை மயக்கம் தீர்க்குஞ் சோதி" (6 - 11 - 1) என்றும் கூறியனவும், " உள்ளம் பெருங்கோயி லூனுடம்பு ஆலயம், தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம் " திருமந்திரம் 1823 லும், "உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்" திருமந்திரம் 725 " உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் " திருமந்திரம் 725 என்றும் " உண்ணின்ற சோதி யுறநின்ற வோருடல் " திருமந்திரம் 445 என்றும் கூறியனவும், திருமாளிகைத் தேவர் " இடர்கெடுத் தென்னை யாண்டுகொண் டென்னு ளிருட் பிழம் பறவெறிந்து எழுந்த—சுடர்மணி விளக்கி னுள்ளொளி விளங்குந் தூய நற் சோதி யுட் சோதி" (திருவிசைப்பா 2-வது பாட்டு) என்றும் கூறியனவும் காண்க. அடிகளும் "உடலிடங் கொண்டாய்" (22 - 10) என்றும் "உடல்புகுந்தா னுயிர்கலந்தா னுளம்பிரியான்" (34 - 2) என்றும் " உடலு மெனதுயிரும் புகுந்தொழியா வண்ணம் நிறைந்தான் "

(34 - 6) என்றும் "உள்ளொளி உத்தமன்வந்து உளம்புகலும்" (15-14) என்றும், "புன்புலால் யாக்கை புரைபுரை கனியப் பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென், என்பெலா முருக்கி" (37-10) என்றும் இவ்வுண்மையைப் பிறவிடங்களிற் கூறியருளினர். 'ஊனினை யுருக்கி' என்று உடல் மட்டும் கூறப்பட்டிருப்பினும், இனம் பற்றி உள்ளத்தையுருக்கி உயிரையுருக்கி என்பனவற்றிற்கும் சேர்த்துப் பதவுரையிற் பொருள் கூறப்பட்டது. உருக்கி என்பதற்குப் பின்னும் பெருக்கி என்பதற்குப் பின்னும் 'உம்மைகள்' தொக்கி நிற்கின்றன. உள்ளொளி என்பது கதிரவன், திங்கள், தீ ஆகிய புறவொளிகளுக்கு ஒளிதந்துதவும் அகவொளியாகிய அருட்சத்தியின் ஒளி. புறவொளிகள் உலகிலுள்ள புறவிருளை நீக்குதல்போல, இந்த அருட்சத்தியின் ஒளி உயிரினிடத்து மலத்தினுலுள்ளதாகிய அகவிருளை நீக்குதலால் உள்ளொளி என்று அதனை அடிகள் கூறினர். இந்த உள்ளொளியைத் திருமந்திரம் 1237-வது பாட்டில் "நின்றனள் நேரிழை யாளொடு நேர்பட,ஒன்றிய வுள்ளொளி யாலே யுணர்ந்தது, சென்ற பிராணிகள் சிந்தையில் வேண்டிய, துன்றிடு ஞானங்கள் தோன்றிடுந் தானே" என்று கூறியருளினர். இதனை உரையற்ற பிரணவத்தின் உள்ளொளி என்று அவர் "உரையற்ற தாரத்தின் உள்ளொளி யாமே" என்று திருமந்திரம் 2844-ல் கூறியருளினர். இந்த உள்ளொளி பெருகுதலாலே உயிருக்கு மலவிருள் நீங்கி, எனது என்னும் புறப்பற்றும் நான் என்னும் அகப்பற்றும் நீங்கி, மேலான அருளறிவு அல்லது மெய்யுணர்வு உண்டாகின்றது. ஊனினை யுருக்கி உள்ளொளி பெருக்கி — என்ற சொற்றொடரில் உருக்கி என்ற வினையெச்சமும் பெருக்கி என்ற வினையெச்சமும் ஒன்றுக்கொன்று முறையே காரண காரியப் பொருளில் வந்தன. உடலையும் உள்ளத்தையும் உயிரையும் உருக்குதலே உள்ளொளி பெருக்குதற்கு இடமாகியது. உடலும் உள்ளமும் உயிரும் உருகாவிட்டால் அவற்றில் அருளொளி விளங்கித்தோன்றிப் பெருகாது. உடல் முதலியன உருகுதலும், உள்ளொளி விளங்கிப் பெருகுதலும் பின்வருகிற உலப்பிலா ஆநந்தம் உண்டாதற்குக் காரணமா

யிருத்தலால், உடல் உருகும்படி செய்வித்தலாலும், உள்ளொளியை விளக்கிப் பெருக்குதலாலும் என்று பதவுரையிற் பொருள் கூறப் பட்டது. உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து (சொரிய) — பேரின்பமானது உலக இன்பம்போலல்லாது என்றும் போரா இயற்கையதாதலின், அதனை அடிகள் 'உலப்பிலா ஆனந்தத்தேன்' என்றார். உலகவழக்கில் தேனானது நோய்க்கு மருந்தாயும் நாவுக்கு மிக்க சுவையின்பந் தரத்தககதாயு மிருத்தல்போல, பேரின்பமா னது பிறவிநோய்க்கு மருந்தாயும் முடிவிலாது நுகரப்படும் சிவபோ கமாயுமிருத்தல்பற்றி 'ஆநந்தமாய தேன்' என்றார். "தேனந்த மாய் நின்ற சிற்றின்பம் நீ யொழி" என்றார் திருமூலரும் (திருமந்திரம் 2081-வது பாட்டு). அப்பேரின்ப வுணர்வானது உள்ளத்திலிருந்து ஊற்று நீர்போல மிகுதியாய்ப் பொழிதலால், சொரிந்து என்றார். சொரிய என்பது சொரிந்து எனத் திரிந்துநின்றது. இங்ஙனம் கொள்ளாக்கால், பின்னே வருகிற 'புறம் புறம் திரிந்த' என்ற சொற் றொடரின் பொருளுக்கும், 'யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்' என்ற வசனத்தின் பொருளுக்கும் மாறுபாடான பொருள் விளங்குகின்றது. புறம் புறம் திரிந்த செல்வமே — புறம் —இடம். புறம் புறம் - இடங்கடோறும் அதாவது நான் உலகவின்ப நுகர்வின் பொருட்டு எந்த எந்த விடயத்தை நாடித்தேடி எந்த எந்த இடத்துக்குச் செல்வேனோ, அந்த அந்த இடத்திலெல்லாம் அங்ங னம் உலக விடயங்கள் பலவற்றிலும் உயிர் செல்லுதலால் அதற்கு அமைதி உண்டாகாதாதலின், 'திரிந்த' என்றார். உயிருக்கு முடிவில் பேரின்பமடைதலிலே அமைதி உண்டாகி, அதனாலே திரிதலாகிய செயலும் நிகழாமல் நிற்கின்றது. உயிர் உலகவிடயங் களை நுகருதற்கு இறைவன் உயிருக்குக் காட்டுமுதவியாகிய உலக விடயங்களை அறிவித்தலோடு, அவற்றோடுடனாய் நின்று காணு முதவியாகிய அவற்றைப் பற்றச்செய்தலும் இன்றியமையாது வேண்டப்படுதலின், அடிகள் இறைவனைப் 'புறம் புறம் திரிந்த செல்வமே' என்றார். செல்வம் என்பது இங்கே அருளாகிய செல் வத்தைக் குறிக்கிறது. பொருட் செல்வமானது உலக இன்பத்

திற்கு ஏதுவாயிருத்தல்போல, இறைவனது அருட்செல்வமானது உயிர் பேரின்பம் நுகர்தற்கு ஏதுவாயிருத்தலின் (அருட்) செல்வமே என்று இறைவனை விளித்தார். உயிர் இறைவனை அறியாத கட்டு நிலையில் இறைவன், உயிர் உலகவிடயம் நுகருமிடங்களெல்லாஞ் சென்று அதனுடனுய் நின்று காணுமுதவி செய்தலை அருணந்தி சிவாசாரியர் பாடியருளிய இருபாவிருபஃது 18-வது பாட்டில் "என்னுட் கரந்தென் பின்வந் தருளி — என்னையுந் தன்னையு மறி வின் றியற்றும் — என்னதி யானெனு மகந்தையுங் கண்டு—யாவரி யாவையு மியாங்கணுஞ் சென்று—புக்குழிப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்த்து—மிக்க போகம் விதியால் விளைத்திட்—டெற்பணி யாளா யெனைப்பிரி யாதே—ஓடி மீள்கென வாடல் பார்த்திட்டு—நின்றனை னெந்தை என்வழி" என்று கூறியிருத்தல் காண்க. இதுவரையும் உயிருக்கு அதன் கட்டுநிலையில் நிகழும் நிகழ்ச்சிகள் கூறப்பட்டன. யான் உனைத்தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன் — உயிர் இறைவனை அறியும் பருவம்வந்த வீட்டுநிலையில் உயிர் இறைவனைப் பின் தொடர்ந்து பற்றல் நிகழ்கின்றது. இந்த நிக்ழ்சசி மேலே கூறப் பட்ட இருபாவிருபஃது பாட்டில் 14-வது வரிமுதல் 21-வது வரி வரை கூறப்பட்டிருத்தல் காண்க. இதனைத் திருநாவுக்கரசு அடிகள் (6 - 95 - 4)ல் "நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந் தன்னுள் நிலா வாத புலாலுடம்பே புகுந்து நின்ற, கற்பகமே யானுன்னை விடுவே னல்லேன் கனகமா மணிநிறத்தெங் கடவு ளானே" என்று கூறி யருளினர். இனி நீ எங்கு எழுந்து அருளுவது — உண்மையில் இறைவன் உயிரோடு பிரிக்கமுடியாதவண்ணம் கலந்திருக்கின்முன். கட்டுநிலையில் உயிர் இந்த உண்மையை மலமறைப்பினுலே அறி யாது உலக விடயங்களைத் தொடர்ந்து நுகருகின்றது. உயிர் தனது மலமறைப்பு நீங்கி இந்த உண்மையையறிந்து இறைவனைப் பிரியாதிருக்கின்ற உணர்வோடு பேரின்ப வாழ்வடைகின்றது. இந்த உண்மையை அடிகள் இனி நீ எங்கு எழுந்தருளுவது என்று கூறுகின்முர். இனி – நான் உனக்கும் எனக்குமுளதாகிய அத்து விதத் தொடர்பை அறிந்தபின். இனியே என்பதிலுள்ள ஏ - அசை.

அடிகள் இந்தப் பாட்டில் முன் மூன்று வரிகளில் உயிருக்கு அதன் கட்டுநிலையில் அது தன்னையடையும்படி இறைவன் செய்யுமருட் செயல்களையும், பின் ஒரு வரியில் வீட்டுநிலையில் உயிர் இறைவனை அறிந்து செய்யுஞ் செயலையும் உலகறியும்வண்ணம் தன் அநுப வத்தின்மேல் வைத்துக் கூறுகின்றார். அடிகளுக்குத் தமது வியா பக அருளறிவில் முன்னையுள்ள பல பிறப்பு அநுபவ நிகழ்ச்சிக ளும் விளங்கித் தோன்றுதலின் அவர் இங்ஙனம் கூறுகின்றார். நம்மனோர்க்கு ஒருபுடைக்கருவி அறிவில் விளங்கித் தோன்றுதல் போல, அடிகளுக்குத் தமது வியாபக அருளறிவில் அவர் தம் கடைசிப் பிறவியிலுள்ள அநுபவ உண்மைகளே விளங்கித் தோன் றுகின்றன என்றும், அவர் அவ்வநுபவ உண்மைகளை மட்டுமே திருவாசகப் பாட்டுக்களிற் கூறுகின்றார் என்றும் கூறுதல் பொருந் தாதென அறிக. ஊனினை (உடம்பினை) உருக்கி என்றதனால் உடம்பில் தூவெளியொளி விளங்குந்தன்மையும், உள்ளொளியைப் பெருக்குதலினால் உயிரில் அருளொளி விளங்குந்தன்மையும், உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிய என்றதனால் இன்ப வொளி விளங்குந்தன்மையும் கூறப்பட்டன.

---

545. புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலா முருக்கி யெளியையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்பொடு மயக்காந்
தொடக்கெலா மறுத்தநற் சோதீ
இன்பமே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. அகூ.

[ப-ரை] (நீ என்பொருட்டு இடைவிடாது செய்துவரும் அருட்செயல்கள் இன்னவென்று அறியும் பருவம்வந்த வீட்டுநிலை

யில்) புன்புலால்யாக்கை — புலால் நாற்றமுடைய எனது இழிவான உடலானது; புரைபுரை கனிய — உட்டுளைதோறும் உருகும்படி; பொன்னெடும் கோயிலாப் புகுந்து — நீ அதனைப் பொன்னாலாக்கப்பட்ட நீண்ட கோயிலாகக் கருதி அதனுட்புகுந்து; என் என்பு எலாம் உருக்கி — அவ்வுடம்பிலுள்ள எனது கடினமான எலும்புகளுங்கூட உருகும்படி செய்து; எளியையாய் ஆண்ட ஈசனே — (வானவர்க்கும் அரிய பொருளாகிய நீ என்பொருட்டுத் திருப்பெருந்துறைக்கு) நான் காணும் எளியபொருளாய் வந்து என்னை அடிமையாக ஆண்டருளிய ஆண்டவனே; மாசிலாமணியே — குற்றமில்லாத மாணிக்கம் போன்றவனே; துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காம் தொடக்கு எலாம் — உலகத்துன்பமும் பிறப்பும் இறப்பும் அவற்றிற்குக் காரணமாகிய அவிச்சையுமாகிய கட்டுக்களையெல்லாம்; அறுத்த — (வாசனையுங்கூட இல்லாதிருக்கும்படி) வேரோடு ஒழித்த; நற்சோதீ — மலங்கலவாத ஒளிப்பொருளே; இன்பமே — உயிர்களெல்லாம் பேரின்பமடைதற்குக் காரணமாயிருக்கிற இன்பப்பொருளே; உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் — உன்னை விடாதபடி இறுகப் பற்றிப் பிடித்துக்கொண்டேன்; இனி — இங்ஙனம் நான் உன்னை இறுகப் பற்றிப் பிடித்துக்கொண்ட பின்; நீ எங்கு எழுந்து அருளுவது — என்னை விட்டு நீ எங்கே செல்வாய் (நீ என்னைவிட்டுப் போகமுடியாது என்றபடி).

[வி-ரை] புன்புலால் யாக்கை — இதனால் உடலின் இழிவு கூறப்பட்டது. யாக்கை—யாத்தல்-கட்டுதல். தசை நரம்பு எலும்பு முதலியவற்றால் உடம்பு கட்டப்பட்டிருத்தலால், யாக்கை என்ற சொல் உடம்புக்குப் பெயராய் வந்தது. யாக்கைக்குப் பின் உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. புரைபுரைகனிய — புரை - உட்டுளை, புரைபுரை - உட்டுளைதோறும், கனிய என்பது இங்கே காரியப்பொருளில் வந்த செயவென்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம். அது புகுந்து என்னும் காரணப்பொருளில் வந்த வினையெச்சத்தைக் கொண்டு முடிந்தது. பொன் நெடும் கோயிலாப்

புகுந்து — புன்மையாக்கைக்கு எதிரிடையாக நீண்டகோயிலாயும், புலால்யாக்கைக்கு எதிரிடையாகப் பொற்கோயிலாயுங் கருதி இறைவன் வீற்றிருக்கின்றான் என்பார், பொன்னெடுங்கோயிலாப் புகுந்து என்றார். கோயிலாக என்பது கோயிலா எனக் கடை குறைந்து நின்றது. என் என்பு எலாம் உருக்கி — என்புகள் எல்லாம் உருகும்படி உருக்கி என்றதனாலே, கடினமில்லாத தசை, நரம்பு, மச்சை, குருதி முதலிய பிற உடற்பொருள்களும், அவற்றாலாகிய உறுப்புகளும், மன முதலிய தத்துவங்களும் உருகுதல் கூறாமலே உடன் கொள்ளப்படும். எளியை — ஐ - ஒருமை முன்னிலைவிகுதி. மாசிலாமணியே — இறைவன் அடைதற்கு அரிய பொருளாயிருத்தலினாலே மணியே என்றும், மலமிம்லாதவனா யிருத்தலினாலே மாசிலாமணியே என்றும் இறைவனை விளித்துக்கூறினார். துன்பமே பிறப்பே இறப்பொடுமயக்காம் தொடக்கெலாம் — துன்பமே பிறப்பே - ஏ இரண்டும் எண்ணுப் பொருளில் வந்தன. மயக்கமென்பது பஞ்சக்கிலேசங்களிலொன்றாயும் அவற்றிற்குக்காரணமாயுமுள்ள அவ்விச்சையைக் குறிக்கிறது. இது துன்பம், பிறப்பு, இறப்புக்களாகிய கட்டுகளுக்குக் காரணமாயிருத்தலால் அதனைக் கடையில்வைத்துக் கூறினார். கட்டுகளுக்கெல்லாம் காரணமாகிய அவிச்சை கூறப்படவே, இங்கே கூறப்படாத பிறகட்டுகளும் (பந்தங்களும்) உடன்கொள்ளப்படும். தொடக்கு — கட்டு, பந்தம். அதாவது உயிரை உடலிலே பிணித்துச் சிறைப்படுத்தும் கட்டு. எல்லாம் என்பது எலாம் எனக்குறுகியது. அறுத்த — வேரோடும் அறுத்தொழித்த. அதாவது வாசனையுங்கூட இல்லாமல் ஒழித்த என்னும் பொருள்பட வந்தது. நற்சோதீ—இருள்கலவாத தனிப்பேரொளிப் பொருளைக் குறிக்கிறது. சோதீ என்பதிலுள்ள ஈகாரம் விளியுருபு. இன்பமே — அடிகள் தமக்கு இறைவன் இன்பமளித்ததை அநுபவத்தில் உணர்ந்ததினாலே அவனை இன்பமே என்று விளித்தார். உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் இனி நீ எங்கு எழுந்து அருளுவது என்பதற்கு, பாணிலனைந்தூட்டும் என்ற முதற்குறிப்புப் பாட்டுக்கு எழுதிய உரையைக் கொள்க. இந்தப் பாட்டில் அடிகள் தமக்கு

## பிடித்தபத்து.

இறைவனால் ஆண்டருளப்பெறும் பருவம் வந்தபொழுது இறைவன் திருப்பெருந்துறைக்கு வந்து தமது மலக்கட்டுகளை முழுமையும் ஒழித்து அடிமையாக ஆண்டருளிப் பேரின்பமளித்ததைக் கூறுகின்றார்.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# ௩அ. திருவேசறவு.

---

திருவேசறவு என்பது திரு என்ற அடைமொழியோடு ஏசறவு என்ற சொல் சேர்ந்து ஆகியது. ஏசறவு — அன்பு, விருப்பம். அது இங்கே உயிர் அன்பினால் இறைவனது பேரருளை நினைத்திரங்குதலைக் குறிக்கிறது. அடிகள், தம்பொருட்டு இறைவன் செய்த பேரருளை நினைந்து இரங்குதலைப் பத்துப் பாட்டுக்களிலும் கூறுகின்றார். அங்ஙனம் அடிகள் கூறுகிற பத்துப் பாட்டுக்களடங்கிய பதிகம், திருவேசறவு என்று கூறப்படுகிறது.

## சுட்டறிவொழித்தல்.

---

சுட்டறிவு, ஒழித்தல் என்னும் இருசொற்கள்சேர்ந்து சுட்டறிவொழித்தல் என ஆகியது. சுட்டறிவு என்பது சுட்டியறியுமறிவு. அதாவது ஒருவன் பிற வுயிர்ப்பொருள்களையும் உலகப்பொருள்களையும் அவற்றிற்கு வேறாக நின்று மனமுதலிய கருவிகளால் ஒன்றொன்றாயறிதல். ஒளித்தல் என்பது நீக்குதல். சுட்டறிவு ஒழித்தல் என்பது மேலே கூறியபடி, கருவி அறிவை நீக்குதல். அதாவது, அடிகளுக்கு இறைவன் அவருடைய உலகவாழ்வை வெறுக்கும்படி செய்து பேரின்பமளித்தல் காரணமாக அக்கருவியறிவை நீக்குதல். இப்பொருள் இப்பதிகப் பாட்டுக்களின் கருத்தால் பெறப்படும்.

---

[ கொச்சகக்கலிப்பா ]

திருச்சிற்றம்பலம்.

---

555. நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப்பெற் றேன், தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெரு மான், தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய் தான், ஊனாரு முயிர்வாழ்க்கை யொறுத்தன்றே வெறுத் திடவே. கூ௦.

[ப-ரை] தேனாய் இன்னமுதமுமாய் — (தனது சிறப்பியல்பு நிலையையறிந்து தன்னையடைந்த அடியார்களுக்கு) தேன்போலவும், இனிய அமுதம் போலவும்; தித்திக்கும் சிவபெருமான் — இனிய பேரின்பப் பொருளாயிருக்கும் சிவபெருமான்; அன்று — அவ னென்னைத் திருப்பெருந்துறையில் வைத்து அடிமையாக ஆண்ட காலத்தில்; ஊனாரும் உயிர்வாழ்க்கை — (உலகவின்பம் நுகர்ந்து) நான் உடலோடு கூடி உலகில் வாழுகின்ற உயிர்வாழ்க்கையை; ஒறுத்து — ஒடுக்கி; வெறுத்திட — அதனை வெறுக்கும்படி செய்ய; தானேவந்து — தானாகவே திருப்பெருந்துறைக்கு வலிய வந்து; எனதுள்ளம் புகுந்து — எனதுள்ளத்தில் (மலவிருள் முற்றிலும் நீங்கும்படியாக) அருளொளிமயமாய் விளங்கி; அடி யேற்கு அருள்செய்தான் — அடிமையாகிய எளியேனுக்குப் பேரின் பப் பேற்றைப் பேரருளினால் அளித்தான்; நானே தவஞ்செய் தேன் — இங்ஙனம் சிவபெருமான் எனக்குப் பேரருள் செய்ததா லே அவன் திருவடிகளை யடைதற்கு நான் முன்செய்த தவப் பயனை அடைந்தேன்; சிவாயநம எனப்பெற்றேன் — நான் நீண்ட காலம் அவனை அன்பால் நினைந்து நுண்ணிய அஞ்செழுத்து மந் திரத்தை ஓதிக்கொண்டிருந்ததினால் விளைகிற பெறும்பயனையும் அடைந்தேன்; நான் இனிப் பெறும்பேறு என்னவிருக்கிறது? (ஒன்றுமில்லை என்றபடி) என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] தேனாய் இன்னமுதாய்த் தித்திக்கும் சிவபெருமான் — தேன், அமுதம் என்பன கூறவொண்ணாததா யிருக்கிற பேரினபவனுபவத்தை உலகருக்கு அவர்கள் ஒருவாறு அறிந்து உய்யும்படி அடிகள் கூறுகிற எடுத்துக்காட்டுவமைகள். ஆய் இரண்டும் உவமையுருபுகள். இதனாலே, சிவபெருமானுடைய பேரருட்குணம் கூறப்பட்டது. அன்று — திருப்பெருந்துறையில் அடிகளை ஆட்கொண்டருளிய நாளைக் குறிக்கிறது. ஊனாரும் உயிர் வாழ்க்கை ஒறுத்து வெறுத்திட — ஊன் என்பது இங்கே ஆகுபெயராய் உடலைக்குறிக்கிறது. உயிர் உடலை யியக்காமல் உலக வாழ்க்கை யமையாதாதலால், ஊனாரும் உயிர்வாழ்க்கை என்றார். உயிர்வாழ்க்கை இருவகை. ஒன்று, உயிர் மனத்திளேடுகூடி ஐம்பொறிகளின் வழியாய் உலகில் ஐம்புலப்பொருள்களைப்பற்றி உலகவின்பம் நுகரும் உலகவாழ்க்கை. மற்றொன்று, உயிர் மனத்திேைடு சேர்ந்து உலகவின்பப்பொருளை விரும்பாது வெறுத்துச் சிவநுகர்வை விரும்பிச் சிவனையே நோக்கிநின்று வழிபடும் இறை வாழ்க்கை. ஒருவன் உடல்வாழ்க்கையை வெறுத்தாலொழிய அவனுக்கு இறைவாழ்க்கையில் விருப்பமுண்டாகாதாதலின் இங்ஙனம் கூறினார். ஒறுத்தல் என்பது தண்டித்தல். இங்கே அது உயிரை, மனம் ஐம்பொறிகளுடன் உலக ஐம்புலப்பொருளை விரும்பாது, ஒடுங்கும்படி செய்தலைக்குறிக்கிறது. உயிரை அங்ஙனம் ஒடுங்கச் செய்தாலொழிய அது உலக ஐம்புலப்பொருளை வெறுக்காதாதலின், ஒன்றுக்கொன்று காரணகாரிய மாகும்படி, ஒறுத்து வெறுத்து என்று கூறினார். வெறுத்திடவே என்பதிலுள்ள ஏ - அசை. தானேவந்து எனதுள்ளம் புகுந்து அடியேற் கருள்செய்தான்—இதனால் அடிகள் தமக்கு இறைவன் திருப்பெருந்துறைக்கு வந்து தம்மை ஆட்கொண்டருளியதைக் கூறுகின்றார். இங்ஙனம் இறைவன் அருள்செய்ததற்கு, நான்காவது வரியிற்கூறப்பட்ட இறைவனதுசெயல் காரணமாயிருத்தலின், அதனை முனவைத்துப் பதவுரையில் உரைநடைசெய்து பொருள்கூறப்பட்டது. போக்கும் வரவும் புணர்வுமில்லாது எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் உளம்புகுத

லென்பது, அடிகளுடைய உள்ளத்தில் மலவிருள் முற்றிலும்நீங்கும் படி அருளொளியோடு விளங்குதலாகும். இங்ஙனம் அருளொளி உள்ளத்தில் விளங்கி உலகெங்கும் விளங்குதலை அகக்கண்ணாற்காணு தல் வியாபக அறிவாகும். அடிகள் அருளொளியிலடங்கித் தற்போ தங்கெட்டு வியாபகவறிவு விளங்கப்பெற்றுச் சிவத்தோடு இரண் டறக்கலந்து அடங்குதலே தாமடைந்த பேரின்பப்பேறுதலின், உள்ளம்புகுந்து அடியேற் கருள்செய்தான் என்றார். அடியேற்கு — அடிமைப்பட்டவனாகிய எனக்கு. பேரின்பப்பே றடைந்தபோதும் அடிகளுக்கு இறைவனாகிய ஆண்டவனிடத்து அடிமைப்படுந் தன்மையுண்டாதலால், அடியேற்கு அருள்செய்தான் என்றார். நானே தவஞ்செய்தேன் — தவம் என்பது இங்கே இறைவனைச் சேர்ந்து இன்புறுதல்வேண்டுமென்று எண்ணிச்செய்யும் மெய்ஞ் ஞான நிட்டை. தவஞ்செய்தேன் என்பது தவஞ்செய்ததனாலுண் டாகும் பயனைப்பெற்றேன் என்னும் பொருளில் வந்தது. எத் தனையோ தவசிகள் தவஞ்செய்யவும், அவர்கள் தவப்பயனை அடை யாதிருக்க, நான் அடைந்தேன் என்றபொருளில் நானே தவஞ் செய்தேன் என்றார். அடிகள் (23 - 2) பாட்டிற்கூறிய கருத்தை நோக்குக.

> எண்ணா யிரத்தாண்டு யோக மிருக்கினும்
> கண்ணா ரமுதினைக் கண்டறி வாரில்லை
> உள்நாடி யுள்ளே யொளிபெற நோக்கினாற்
> கண்ணாடி போலக் கலந்துநின் றானே.

என்று திருமந்திரம் 603-வது பாட்டில் திருமூலர் இவ்வுண்மை யைக் கூறியிருத்தல் காண்க. ஓ — அசை. சிவாயநம எனப் பெற்றேன் — 'சிவாயநம' என்பது பேரின்பப்பேறு விரும்புவோர் ஓதும் நுண்ணிய அஞ்செழுத்து (சூக்கும பஞ்சாக்கரம்). நுண்ணிய அஞ்செழுத்தோதுதலைப் பேரின்பப் பேற்றையடைவிக்கும் சிறப் பான தவமாக, அடிகள் தவமென்று பொதுவாய்க்கூறியபின் கூறு கின்றார். இந்த அஞ்செழுத்தில் சித்தாந்தவுண்மைப் படியுள்ள உயிர்வளர்ச்சி முறைமை (Soul - evolution) கூறப்பட்டிருக்கின்

றது. சி – சிவம்; வா – அருட்சத்தி; ய – உயிர்; (soul); ந – திரோதானசத்தி; ம – மலம். சகலநிலையில் மலத்தில் மறைப்புண்டு அறிவு விளங்காதிருக்கிற உயிர், அதன் உள்ளத்தில் அருட்சத்தி திரோதானசத்தியா யிருந்து உண்மையை உணர்த்திக்கொண்டே பல பிறவிகளிலும் வருதலால், படிமுறையில் அறிவு விளங்கப்பெற் றுக்கொண்டேவந்து, முடிவில் அறிவுமுழுதும் விளங்கப்பெறு கிறது. அந்த நிலையில் (ய) ஆகிய உயிர், (ம) ஆகிய மலத்தையும், (ந) ஆகிய திரோதமலத்தையும் முற்றிலும்விட்டு நீங்கி, (வ) ஆகிய அருட்சத்தியிலடங்கி நானென்னும் தற்போதங்கெட்டு அவ்வருட் சத்தியாகிய தாயோடுய் தந்தையாகிய சிவத்திலடங்கிநின்று பேராப் பேரின்பவாழ்வை அடைகிறது. இதனை விரித்தெழுதப்புகில் அது ஒரு நூலாக விரியும். சிவபுராணம் முதல்வரியில் நமச்சிவாய என்பதற்கு நானெழுதிய விளக்கவுரையையும் ஓதியறிக.

---

திருவாரூரில் அருளிய

## ௩௧. திருப்புலம்பல்.

---

திரு என்ற அடைமொழியும் புலம்பல் என்ற சொல்லுஞ் சேர்ந்து திருப்புலம்பல் என்றாகியது. புலம்பல் என்பது சொல் லுதல், இரங்குதலுமாகும். திருப்புலம்பல் என்பது, அடிகள் தம்மை ஆண்டருளிய இறைவனுடைய திருவடிகளே தமக்குத்துணையென் றுகூறி அத்திருவடிகளைச்சேர, மெய்யன்பினால் மனங்கசிந்து உருகல்வேண்டுமென்னும் தமது விருப்பத்தைக்கூறும் மூன்றுபாட் டுக்களடங்கிய பதிகமாகும்.

### சிவானந்த முதிர்வு.

---

சிவானந்தமுதிர்வு என்பது சிவானந்தவிளைவு. திருப்பாண் டிப்பதிகத்தின்கீழ் சிவானந்தவிளைவு என்பதற்குக்கூறப்பட்ட விளக்

கவுரையைக் கொள்க. மெய்யன்பினாலே இறைவனது திருவடிகளையே மனங்கசிந்துருகி வழிபடுதல் சிவானந்தமுதிர்வுக் கேதுவாதலின், திருப்புலம்பல் சிவானந்தமுதிர்வைக் கூறுவதாகின்றது.

---

[கொச்சகக் கலிப்பா]

திருச்சிற்றம்பலம்.

---

558 உற்றாரை யான்வேண்டே னூர்வேண்டேன் பேர்வேண்டேன், கற்றாரை யான்வேண்டேன் கற்பனவு மினியமையுங், குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே, கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. சுகக.

[ப-ரை] குற்றாலத்து அமர்ந்து உறையும் கூத்தா — திருக்குற்றாலத்தில் திருக்கோயில்கொண்டு வீற்றிருந்தருளும் கூத்தப் பெருமானே; யான் உற்றாரை வேண்டேன் — நான் என்னோடு உடற்றொடர்புடைய சுற்றத்தாரிடத்துப் பற்றுவைத்து அவர்களை விரும்புவேனல்லேன்; ஊர்வேண்டேன் — உடற்றொடர்பில்லாது ஊரிலேவாழ்கின்ற பிறமக்களிடத்தில் பற்றுவைத்து அவர்களையும் விரும்புவேனல்லேன்; பேர்வேண்டேன்—மக்கள் என்னைப்பற்றிக் கூறும் பொய்ப்புகழையும் விரும்புவேனல்லேன்; யான் கற்றாரை வேண்டேன் — சுட்டறிவைத்தருவதாயுள்ள கலைநூல் கற்றவரோடும் சேரவிரும்புவேனல்லேன்; இனிக் கற்பனவும் அமையும் — இனிக் கற்றுப்பெறத்தக்க கலைநூலறிவுவகைகளும், நானறிந்திருக்கிற மெய்ஞ்ஞானத்தில் அடங்குவதாயுள்ளது; உன் குரைகழற்கே — வீரக்கழல்கள் ஒலிக்கின்ற உன்னுடைய திருவடிகளிலேயே (பற்று வைத்து); கன்று ஆ மனம்போல — கன்றை ஈன்ற தாய்ப்பசு தன் இளங்கன்றினிடத்தில் அன்புவைத்துருகும் இயல்பான மனத்தை யுடையதாயிருத்தல்போல; கசிந்துருக வேண்டுவனே

— என் மனமும் அத்திருவடிகளையே மெய்யன்பினால் நினைந்து கசிந்துருகுதலையே விரும்புவேன்.

[வி·ரை] உற்றாரை யான்வேண்டேன்—உற்றார்-சேர்ந்தார், அதாவது உடற்றொடர்புடையராய்ச் சேர்ந்திருக்கும் சுற்றத்தார். ஊர்வேண்டேன் — ஊரென்பது ஆகுபெயராய் ஊர்களில் வாழும் சுற்றத்தாரல்லாத மக்களைக் குறிக்கிறது. யான் கற்றாரைவேண்டேன் — கற்றார்-உலகப்பொருளைச் சுட்டியறியும் கலைநூல் கற்றவர். மெய்யறிவடைந்த அடிகளுக்குக் கலைநூலறிவுடையார் உறவு வேண்டியதில்லை யாதலின், கற்றாரை யான்வேண்டே னென்றார். இனிக் கற்பனவும் அமையும் — கற்பனவும் என்பதில் உம் இறந்ததுதழீஇய எச்சவும்மை. முன்கற்ற கலைநூலறிவல்லாமல், இனிக் கற்றறியும் கலைநூலறிவு வகைகளும். அமைதல்-அடங்குதல். முன் கற்றறிந்த கலைநூலறிவோடு இனிக் கற்றறியும் கலைநூலறிவு வகைகளும், தாம் அடைந்திருக்கிற மேலான பதிஞானமாகிய மெய்யறிவுளடங்குதலின், இனிக் கற்பனவும் அமையுமென்றார். மெய்யறிவுடையார் தம் அகக்கண்ணால் உற்றுநோக்கின், எந்தக் கலைநூலறிவும் கல்லாதே அவர்களுக்கு விளங்குமென்ற சித்தாந்தவுண்மை இதனாற் கூறப்பட்டது. கற்பன — அஃறிணைப் பன்மைத் தெரிநிலை எதிர்கால வினையாலணையும் பெயர். கற்கும் கலைநூலறிவுகள் பலவுளவாதலின் கற்பனவென்று பன்மையிற் கூறினார். கன்று ஆ மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே — கன்று + ஆ = கற்றா. எதுகை நோக்கி மெல்லொற்று வல்லொற்றாகத் திரிந்தது. கன்று என்பது இங்கே ஈன்றபின் சில நாட்கள் வரையுள்ள இளங்கன்று. தாய்விலங்குகள் தங்கள் குட்டிகளுக்குத் தங்களுதவி வேண்டியிருக்குமளவில் இயல்பாகவே உதவிசெய்யும் அன்புடைய மனப்பான்மை [Instinct] யுடையனவா யிருத்தல்போலத் தாமும் இறைவனிடத்தில் ஒன்றும் வேண்டாது இயல்பாகவே மெய்யன்புடையவரா யிருத்தல்வேண்டுமென்று அடிகள் இறைவனை வேண்டிக்கொள்ளுகின்றார்.

ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோல்
நான்கன்றாய் நாடி யழைத்தேனென் நாதனை

என்று திருமந்திரம் 2627-வது பாட்டில் திருமூலர் மெய்யன்புக்கு இவ்வுவமை கூறியிருத்தல் காண்க. அடிகள் இறைவனிடத்தில் இந்த மெய்யன்பைத் தாம் உடையவராயிருத்தல் வேண்டுமென்று இந்நூலில் பலவிடங்களிற் கூறுகின்றார். அன்பே சிவம் என்று திருமூலர் கூறுகிறபடி (திருமந்திரம் 270) மெய்யன்புதானே ஒருவரை மனமிளகிக் கசிந்துருகச்செய்து உடலையும் மனத்தையும் அருளொளி மயமாககிச் சிவப்பேற்றை யடைவித்தலால் அவர் அங்ஙனம் கூறினார். வேண்டுதல் — விரும்புதல்; வேட்கையுடையதாதல். ஒருவருக்கு வேட்கைவழி அன்போடு அறிவுநிகழ்ந்து அன்பறிவு நிகழ்ச்சிவழிச் செயலாகிய சிவப்பேறு முண்டாதலின், அடிகள் அறிவு செயல்களைக் கூறாது வேண்டுவனேயென்று மட்டும் கூறினார்.

---

தில்லையில் அருளிய

# ௩௦. குலாப்பத்து.

---

குலாப்பத்து என்பது குலாவு பத்து என விரியும். குலாவுதல் — மகிழ்தல்; அதாவது தொண்டர்கள் கொண்டாடிமகிழ்தல். ஒவ்வொரு பாட்டிலும் குலா என்ற சொல் தில்லையென்ற சொல்லுடனே சேர்த்துக் கூறப்பட்டிருக்கின்றது. குலாத்தில்லை யென்பது தொண்டர்கள் தாங்கள் கூத்தப்பிரானிடத்து வைத்திருக்கும் மெய்யன்பினாலே அவனை வழிபட்டு மகிழ்ந்திருக்கும் தில்லையாகும். குலாப்பத்து என்பது அடிகள் இறைவனாணைப்படி திருத்தில்லைக்குச் சென்று கூத்தப்பிரானை மெய்யன்பினாலே வழிபட்டு இன்பத்தேன் பருகிக்களித்து மகிழ்ந்திருத்தலைக் கூறும் பத்துப் பாட்டுக்களடங்கிய பதிகமாகும்.

## அநுபவம் இடையீடு படாமை.

அநுபவம் இடையீடு படாமை என்ற சொற்றொடர், அநுபவம், இடையீடு, படாமை என்ற மூன்று சொற்களாலாகியது. அநுபவமென்பது சிவாநுபவம்; அதாவது உயிர் சிவனோடு இரண்டறக்கலந்து ஒன்றெனும்தன்மை பொருந்திப் பேரின்பநுகர்தலாகும். இடையீடு என்பது இடை, ஈடு என்ற இரண்டு சொற்கள் சேர்ந்து ஒருசொல்நீர்மைப் பட்டுநிற்குஞ் சொல். இடையீடு — இடைவிட்டிருத்தல், அதாவது தொடர்பில்லாதிருத்தல்; படாமை — பொருந்தாமை. இடையீடுபடாமை என்பது தொடர்பில்லா திருத்தல் பொருந்தாமையாகும்; அதாவது எப்பொழுதும் தொடர்ந்திருத்தல். அநுபவ மிடையீடுபடாமை என்பது, உயிர் சிவனோடு இரண்டறக்கலந்து நுகரும் நுகர்வு உயிருக்கு என்றும் ஒழிவின்றி நிலைபெற்றிருத்தலாகும். அடிகள் மேலேகூறியபடி திருத்தில்லையில் தாமடைந்துகொண்டிருக்கும் சிவாநுபவத்தைப் பத்துப் பாட்டுக்களிலுங் கூறுதலால், குலாப்பத்து அநுபவம் இடையீடுபடாமையைக் கூறுவதாயிற்று.

[கொச்சகக் கலிப்பா]

திருச்சிற்றம்பலம்.

561. என்புள் ளுருக்கி யிருவினையை யீடழித்துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து
முன்புள் ளவற்றை முழுதழிய வுள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. ௬௨.

[ப-ரை] என்பு உள் உருக்கி (யும்) — (வீட்டுநிலையில் நான் இறைவன்வயப்பட்டு அவனைத்தொடர்ந்து நிற்கிறகாலத்தில்)எனது உடலிலுள்ள எலும்புகள் முழுவதும் (தசை நரம்பு முதலியவைக

ளோடு) உருகும்படி செய்தும்; இருவினையை ஈடுஅழித்து (ம்) — 'யான், எனது' என்னுஞ் செருக்கினுல் உண்டாகின்ற நல்வினை தீவினைகள் இரண்டும் இனித்தோன்றாதபடி அவற்றின்வலியை முற்றிலும் கெடுத்தும்; துவந்துவங்கள் தூய்மை செய்து (ம்) — அங்ஙனம் நல்வினை தீவினைகள் தோன்றாதபடி கெடுத்தலினுலே, விருப்பு வெறுப்பு, இன்பம் துன்பம், அறிவு அறியாமை, பொய் மெய், முதலிய இரட்டைகளாகிய மயக்கங்களிலிருந்து நீக்கி என்னைத் தூய்மை செய்வித்தும்; துன்பங்களைந்து (ம்) — (உலகவாழ்விலிருந்த இன்பத்தோடு கலந்திருந்த) துன்பத்தொடர்பை முற்றிலும் நீக்கி (இன்பமே உண்டாகச்செய்தும்); முன்புள்ளவற்றை முழுது அழிய — முன் பலபிறவிகளில் என்னுல் ஈட்டப்பட்டுப் புத்திதத்துவம் பற்றுக்கோடாகக் கிடந்த என்னுடைய சஞ்சிதவினைகள் முற்றும் (தீக்கையின்போது செய்த தனது அருட்பார்வையினுல்) ஒழியும்படி; உள்புகுந்த — எனது உள்ளத்தினுள்ளே தன் முழு அருளொளியோடு விளங்கின; அன்பின்குலா—(உயிர்களின் மேலுள்ள) அன்பினுலே மகிழ்ந்து நடனஞ்செய்கின்ற; தில்லை ஆண்டானை — திருத்தில்லையிலுள்ள எனது ஆண்டவனுகிய கூத்தப்பிரானை; கொண்டு — அவனோடு இரண்டறக்கலந்து பிறிவற்றிருக்கும்படி) நான் பற்றிகொண்டேனே.

[வி-ரை] என்பு உள் உருக்கி (யும்)— உம் என்பது உருக்கி என்பதற்குப்பின் தொக்குநிற்கிறது. அவ்வாறே ஈடழித்து, தூய்மைசெய்து என்பனவற்றிற்கும் கொள்க. 'புன்புலால் யாக்கை புரை புரை கனியப் பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென், என்பெலாம் உருக்கி யெளியையாய் ஆண்ட ஈசனே' (37 - 10) என்று அடிகள் கூறுகிறபடி, என்பு உள் உருக்கி என்றதனுலே உடல் முழுவதும் தூவெளியொளியால் நிரம்பப்பெற்றுச் சிவகரணமாய் மாறுதல் கூறப்பட்டது. இதனுலே ஒளிவிளக்கத்தா லுண்டாகும் மாயை மலநீக்கம் (பாசநீக்கம்) கூறப்பட்டது. இருவினையை ஈடழித்து (ம்) — இருவினையை ஈடழித்தலென்பது - எடுத்த உடற்

பிறவியில் தற்போதமின்றி வினை செய்யப்படுதலினாலே, ஆகாமிய வினை ஏறுதல் இலதாய்ப் பிறப்பு இறப்புக்கள் விளையாமலிருக்கும் படிசெய்தல். துவந்துவங்கள் தூய்மை செய்து (ம்) — துவந்துவங் கள் – இரட்டைகள். அவை விருப்பு வெறுப்பு, இன்ப துன்பங்கள் முதலியன. அவை நல்வினை தீவினைகள் செய்தல்பற்றி விளையும் மயக்க அறிவால் (illusion) உண்டாவன ஆதலின், இருவினையை ஈடழித்து என்பதற்குப்பின் துவந்துவங்கள் தூய்மைசெய்தல் என்பது, ஆன்மாவைத் துவந்துவங்களினின்று நீக்கித் தூய்மை செய்தல். துவந்துவங்கள் நீங்குவது காரணமாகத் துன்பங்களைதல் உண்டாதலின் துன்பம் களைந்து என்றார். இருவினையை ஈடழித் தல், துவந்துவங்கள் தூய்மைசெய்தல், துன்பங்களைதல் ஆகிய இவை மூன்றும் ஒன்றுக்கொன்று ஏதுவும் பயனுமாய் ஆன்மாவுக்கு உண்டாதலின், இந்த முறையில் வைத்துப் பதவுரையில் பொருள் கூறப்பட்டது. இருவினை யீடழித்தல் கூறுதலால் இருவினை யொப்புக் கூறப்பட்டது. இனம்பற்றி இருவினையொப்பின்வழி நிகழும் மலபரிபாகமும், மலபரிபாகத்தின்வழி நிகழும் சத்திநிபாத மும் உடன்கொள்க. இம்மூன்றினாலும் அருள் விளக்கத்தா லுண்டாகும் பசுத்துவ நீக்கம் கூறப்பட்டது. முன்புள்ள வற்றை முழுது அழிய — இதனால் அருட்குரவன் செய்த தீக்கை யில், தீயின்முன் பஞ்சுப்பொதிபோல, முன் ஈட்டப்பட்டு இருப்பு வினையாய் ஆன்மாவினுடைய புத்திதத்துவம் பற்றுக்கோடாகக் கிடக்கிற சஞ்சிதவினை நீக்கம் கூறப்பட்டது. அழிய என்பது காரி யப்பொருளில் வந்த 'செய' என்வாய்பாட்டு எதிர்கால வினையெச் சம். பின்கூறப்படும் உள்புகுதல் முன்புள்ளனமுழுதும் அழிதற்குக் காரணமாகக் கூறப்பட்டது. உள்புகுந்த — உள், உள்ளம். புகுதல் — முழு அருளொளியோடு விளங்குதல். சிவபெருமான் தானே வந்து என் உளம்புகுந்து அடியேற்கு அருள்செய்தான், ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே என்று (38 - 10) அடிகள் உளம்புகுதலைப்பற்றி விளக்கிக்கூறுதல் காண்க. இறைவன் ஆன்மாவின் உள்ளம் புகுதலாலே உள்ளத்தோடு ஒற்றுமைப்பட்டு

நிற்கிற ஆன்மா இறைவனோடு இரண்டற ஒற்றுமைப்பட்டு நிற்கிறது. ஊனுருடல்புகுந்தான் உளம்பிரியான் உயிர்கலந்தான் என்று (34 - 2) இக்கருத்தை அடிகள் கூறியிருக்கிறார். இங்ஙனம் இறைவன் ஆன்மாவின் உளம்புகுந்து பிரியாதிருந்து உயிரோடு இரண்டறக்கலந்து நிற்பதனாலாகும் இன்பவிளக்கத்தினால் முழு ஆணவ மலநீக்கம் கூறப்பட்டது. அன்பின் குலாத்தில்லை ஆண்டான் — அன்பின் - இன், ஏதுப்பொருள் குறிக்கும் ஐந்தாம் வேற்றுமையுருபு. குலாவு என்றது குலா எனக்குறைந்து நின்றது. குலாவுதல் – மகிழ்தல் – அதாவது மகிழ்ந்து நடனஞ்செய்தல் — அடிகள் தம்மை இறைவன் திருப்பெருந்துறையில் வைத்து ஆண்டருளியதை நினைந்து கூத்தப்பிரானை இங்கே ஆண்டானே என்று கூறினார். கொண்டு—கொண்டேன். டு, இறந்தகாலம் காட்டும் விகுதி. அன்று, ஏ — அசைகள். கொண்டு என்பதனாலே அடிகள் தாம் இறைவனோடு பிறிவற நின்று பேரின்பம் நுகர்தலைக் கூறுகின்றார். இப்பேரின்ப நுகர்வுக்குக் காரணங்களாக மாயைமல நீக்கமும், வினைமலநீக்கமாகிய பசுத்துவநீக்கமும், ஆணவமலநீக்கமும் முறையே ஒன்றன்பின ஒன்றாக மேலே கூறப்பட்டன.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# ௩௪. அற்புதப்பத்து.

---

அற்புதம் என்பது ஆச்சரியம். அது மக்கள் தங்கள் உலகவனுபவத்திலுள்ளபடி காரணம் அறியக்கூடாததாயும், மகிழுதற்கேதுவாயுமுள்ள தோற்றக்காட்சி. அடிகள் இந்தப்பிறப்பில் தையலார் மையலுக்குள் அகப்படவில்லையென்பதை அவருடைய வரலாற்றினால் நாமறிகிறோம். அதனாலே இப்பதிகத்தில் அவர் தமக்கிருந்ததாகக் கூறுகிற தையலார்மையல், அவர் மெய்யறிவுக்குத் தென்

படுகிற தம்முடைய முற்பிறப்புக்களில் எய்தியதோர் செய்தியா யிருக்கலாம். உலகில் மெய்யறிவுடையவர்களுக்கு அவர்கள் முன் பல பிறவிகளில் வாழ்ந்த நாட்களெல்லாம் சேர்ந்து ஒரு வாழ்நாளே யாகும். தையலார் மையல் ஆண்களுக்கு உலகவின்பத்தின் பொருட்டு நிகழும் எல்லா மையல்களையும் தன்னுள் ளடக்கிநிற்ப தாகும். அவ்வாறு உலகபோக நுகர்வில் ஈடுபட்டிருந்த தம்மை இறைவன் அதனை முற்றிலும் வெறுக்கும்படிசெய்து திருப்பெருந் துறையில் வைத்துத் தன்னுடைய திருவடிகளைக்காட்டிப் பேரின் பம் நுகரும்படிசெய்தலை அடிகள் இங்கே அற்புதம் என்று கூறு கின்றார். அற்புதப்பத் தென்பது மேலேகூறியபடி இறைவன் தமக்குத் தன்னுடைய இரண்டு திருவடிகளையும் காட்டிப் பேரின்ப மளித்ததை அற்புதம் என்று அடிகள் கூறும் பத்துப் பாட்டுக்க ளடங்கிய பதிகமாகும்.

---

## அநுபவமாற்றாமை.

---

அநுபவம், ஆற்றாமை என்னும் இரண்டு சொற்களும் சேர்ந்து அநுபவமாற்றாமை என்றாகியது. அநுபவமென்பது சிவாநுபவம், அதாவது உயிர் சிவனோடு இரண்டறக்கலந்து ஒன்றெனும் தன்மை பொருந்திப் பேரின்பம் நுகர்வுற்றிருத்தலாகும். ஆற்றாமை என் பது தாங்கமுடியாமை. அடிகள் தாம் தாங்கமுடியாத அளவில் மேலும்மேலும் பெருகிவளரும்படி பேரின்பமநுபவித்தல், அநுபவ மாற்றாமையாகும். அத்தகைய அநுபவமாற்றாமையை அடிகள் அற்புதம் என்று கூறிப் பத்துப்பாட்டுக்களும் பாடியிருத்தலால் அற்புதப்பத்து அநுபவமாற்றாமையைக் கூறுவதாயிற்று.

---

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்]
திருச்சிற்றம்பலம்.

---

576. ஊச லாட்டுமிவ் வுடலுயி ராயின இருவினை யறுத் தென்னை, ஓசை யாலுணர் வார்க்குணர் வரியவ னுணர்வுதந் தொளியாக்கிப், பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன் பரம் பெருங் கருணையால், ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய அற் புத மறியேனே. சுசு.

[ப-ரை] ஓசையால் உணர்வார்க்கும் உணர்வரியவன் — சுத்த மாயா காரியமாகிய சிவதத்துவம் சத்திதத்துவங்களில் விளங்கும் சூக்குமை பைசந்தி வாக்குக்களாகிய ஓசையாலும் அறியப்படாம லிருக்கிற இறைவன்; உயர்ந்த தன் பரம்பெருங் கருணையால் — என்மேல்வைத்த ஒப்புயர்வற்ற மேலான தன்பேரருளினாலே; என்னைப் பாசமானவை பற்றறுத்து(ம்) — என்னைப் பற்றியிருந்த சுத்தமாயை அசுத்தமாயை மலப்பிணிப்புகளை முற்றிலும் நீக்கியும், — உடல் உயிராயின — உடலோடு சேர்ந்து இயங்கும் உயிரால் விளைந்த; ஊசலாட்டும் — துவந்துவமாகிய இரட்டைகளில் ஒன் றுக்கும் மற்றொன்றுக்கும் ஓடியலைந்து உழலுதலைச்செய்யும்; இரு வினை அறுத்து(ம்)—நல்வினை தீவினைகளாகிய வினைமலப் பிணிப்பை முற்றிலும் நீக்கியும்; ஒளியாக்கி (யும்) — நானாகிய உயிரொளியில் தனது வியாபக அருளொளியை நிறைவித்து என்னை வியாபகவறி வுடையவனாக்கி அதனால் ஆணவமலப்பிணிப்பை நீக்கியும்; உணர்வு தந்து — என்னைத் தன்போல் எங்கும் நிறைந்திருக்கிற வியாபக மெய்யுணர்வை யடையும்படி செய்து; ஆசைதீர்த்து(ம்)—அம்மெய் யுணர்வில் எனக்கிருந்த திரிபுடியை நீக்கியும் (அதாவது தனது இரண்டு திருவடிகளைக்காட்டி); அடியார் அடிக்கூட்டிய — தன் னோடு கயிலையிலிருந்து வந்த சிவகணங்களாகிய அடியார்களோடு என்னையும் அடிமையாகக்கூட்டிப் பேரின்பமடைவித்த; அற்புதம் அறியேனே — ஆச்சரியம் இன்னதென்று நான் அறியக்கூடாம லிருக்கின்றேன்.

[வி-ரை] ஓசையால் உணர்வார்க்கு உணர்வரியவன் — ஓசை யென்பது இங்கே சுத்த மாயைக்குச்சேர்ந்த சாந்தியாதீத கலையி லுள்ள சூக்குமைவாக்கு எழுத்தோசை. இந்த ஓசை சொல்லுலகில் (சொற்பிரபஞ்சம்) முதற்கண் அருட்சத்தியால் விளங்கும் ஓசை. இது செவிக்குப் புலப்படாது உள்ளடங்கியிருக்கும் பிரணவ எழுத் தோசை. மலபந்தம் சிறிதுடையராய்ச் சூக்குமவய வாசனையும் தூலவய வாசனையும் மாத்திரமுடையவர்களாய்ச் சிவதத்துவ சத்தி தத்துவ புவனபோகங்களை நுகர்ந்துகொண்டு அவ் விருபுவனங்களி லும் வாழ்கின்ற முத்தான்மாக்கள் ஓசையால் உணர்பவராவர். 36-தத்துவங்களையும் கடந்துநிற்கிற நிலையில் முத்தர்கள் அடைந்திருக் கிற பதிஞானமாகிய மெய்யுணர்வினுல்மட்டும் இறைவன் உணரப் படுகிறவனுதலின் அந்நிலைக்குக்கீழ் அடுத்தபடியிலுள்ள சிவதத்துவ சத்திதத்துவ புவனங்களில் இருக்கிற முத்தர்களா லறியப்படுகிறவ னல்லன் என்று அடிகள் கூறினர். 36-வது தத்துவமாகிய நாததத் துவவொளியாலும் ஆன்மாக்களுக்கு விளங்கும் ஞானம் பாசஞான மாதலின் அவர் அங்ஙனம் கூறினர். இந்த ஓசையைப்பற்றித் திரு மூலர் திருமந்திரம் 1751-வது பாட்டில்,

> ஆரும் அறியார் அகாரம் அவனென்று
> பாரும் உகாரம் பரந்திட்ட நாயகி
> தாரம் இரண்டுந் தரணி முழுதுமாய்
> மாறி யெழுந்திடும் ஓசைய தாமே.

எனக் கூறியருளினர். இந்த ஓசை 'சிவ' எழுத்தோசை யென்றும், அது தானே உலகெங்கும் நிறைந்துநிற்பதால் உலகில் திருவருள் நிலைபெற்று விளங்குகிற செம்மை யுண்டாகிறதென்றும் திருநாவுக் கரசு அடிகள் (4 - 8 - 1) பாட்டில் "சிவனெனு மோசையல்ல தறையோ வுலகிற் றிருநின்ற செம்மையுளதே" எனக்கூறியிருக் கின்றார். இந்த ஓசையினின்றும் முற்றிய பரிணமமான தூல வைகரிவாக்கே நிவிர்த்திகலையைப் பற்றுக்கோடாகக்கொண்டு நம்ம னோர்க்கு உலகவறிவு விளங்கும்படி செவிக்குப் புலனுகின்றது. எழுத்தோசை ஐவகைவாக்குகளாய் நிவிர்த்திகலை முதலிய ஐவகைக்

கலைகளையும் பற்றுக்கோடாகக் கொண்டு, சவிகற்ப உணர்வுக்கு ஏது வாயிருத்தலைப்பற்றிச் சிவஞானபாடியம் (கழகப் பதிப்பு) 165—166வது பக்கங்களை ஓதியறிக. உயர்ந்த தன் பரம்பெருங்கருணை யால் – உலகில் எவர் காட்டுங்கருணைக்கும் இறைவன் கருணை ஒப் புமையில்லாது உயிர்களிடத்தில் அவையறியாது பொதுவாக மிக் குக் காட்டப்படுதலால், உயர்ந்தகருணை யென்றும்; ஒவ்வோருயிரும் தன்னையறிந்து சிறப்பாகக் காட்டும் அன்புக்குத் தான் காட்டுங் கருணை பன்மடங்கு மேலானதன்மை ( quality ) யையுடைய தாயிருத்தலால், பரங்கருணையென்றும்; பன்மடங்கு அளவுடை (quantity) யதாயிருத்தலால், பெருங்கருணையென்றும் அடிகள் கூறினர். என்னைப் பாசமானவை பற்றறுத்து — பாசமானவை யென்பது சுத்தமாயை அசுத்தமாயை களினலாய மலப்பிணிப் புக்களைக் குறிக்கிறது. மாயை இரு வகையாதலின் பன்மையாற் கூறினர். உடலுயிராயின ஊசலாட்டும் இருவினையறுத்து — உடலுயிர் என்பதற்குப்பின் ஆல் உருபு விரித்துரைக்க. ஆயின — விளைந்த; ஆயின என்னும் பெயரெச்சம் வினையென்னும் பெயரைக்கொண்டு முடிந்தது. உயிர் உடலோடுகூடி மனம் ஐம்பொறிகளின் வழியாய் உலகவிடயங்களை விருப்பு வெறுப்புப் பற்றி நுகர்தலால், உடலுயிரான இருவினை என்றார். உயிர் உடலை விட்டுச் சிவபோகம்நுகர்தற்கு இறைவனை நோக்கிநிற்கும்பொழுது விருப்பு வெறுப்புக்கள் அற்று, இருவினையொப்புப் பருவமடைந்து இருவினைகளையும் கடந்துநிற்கிறது. உயிரானது நல்வினை தீவினை களாலுண்டாகும் இன்பத் துன்பங்களும், விருப்பு வெறுப்புக்களும் பற்றி ஒருவன் அங்குமிங்கும் உழன்று அமைதியின்மை யடைத லால், ஊசலாட்டும் இருவினை என்றார். உடலுயிரான என்பதை யும் ஊசலாட்டும் என்பதையும் இருவினைக்கு அடைமொழிகளாகக் கொள்க. நல்வினை தீவினைப் பாகுபாடின்றி வினைமலமின்மையால் இருவினையறுத்து என்று கூறினர். மேலே (40 - 1) பாட்டின்கீழ் 'இருவினையை ஈடழித்து' என்பதற்கும், 'துவந்துவங்கள் தூய்மை செய்து' என்பதற்கும் கூறப்பட்டிருக்கிற விளக்கவுரையைக்

கொள்க. ஊசலாட்டும் என்பதற்குத் தேவார அருள்முறைத் திரட்டு 77-வது பாட்டில் (உறுகயிறூசல்போல் என்ற முதற்குறிப்புடைய தேவாரப்பாட்டு) நானெழுதியிருக்கிற விளக்கவுரையைக் கொள்க. ஒளியாகி — ஒளியென்பது இங்கே எங்கும் ஒழிவற வியாபகமாய் நிறைந்திருக்கிற அருளொளி. இந்த ஒளியானது உயிரொளியில் வியாபகமாய் நிறைந்து விளங்கி அதனோடு ஒன்றுபட்டிருத்தலால், உயிர் அவ்வொளியில் வியாப்பியமாய் அடங்கி வியாபக அறிவடைகிறது. அப்பொழுது உயிர் பசுஞானம் நீங்கித் தற்போதத்தை யிழக்கிறது. அடிகள் தம்மிடத்தில் இறைவன் இந்த வியாபக அறிவை விளங்கச்செய்தலை, ஒளியாக்கி என்று கூறினார். இந்த வியாபக அறிவொளி அடிகளிடம் விளங்கும்பொழுது, அவருடைய வினைமலம் முற்றிலும் நீங்குகிறது. உணர்வுதந்து — உணர்வென்பது இங்கே இறைவனையுணரும் மெய்யுணர்வு; இது உயிருக்கு முன்கூறிய மாயை வினைமலங்களோடு ஆணவமல வலியும் நீங்குதலாலுண்டாகிறது. ஒளியாக்கி உணர்வுதந்து என்பதற்கு மேற்கோளாக "இறைஞானந் தந்துதா னீதல்சுட ரிழந்த, துங்கவிழிச் சோதியுமுட் சோதியும் பெற்றாற்போற், சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே" என்று சிவஞானசித்தியார் 8-வது சூத்திரம் 38-வது பாட்டிற் கூறப்பட்டிருத்தலைக் கொள்க. ஆசை தீர்த்து — ஆசை என்பது இங்கே இறைவனிடத்திலேயுள்ள மெய்யன்பைக் குறிக்கிறது. ஆசைதீர்த்தலென்பது, அன்பு செய்கிறவன், அன்பு, அன்பு செய்யப்படுகிறவன் என்னும் பாகுபாடுகளாகிய திரிபுடியைப் போக்குதல். நான் அன்பு செய்கிறேன் என்ற நானென்னும் நட்பவுணர்ச்சியும் முழுப்பேரின்ப வுணர்வுக்குத் தடையாயிருத்தலின், உணர்வுதந்து என்றதற்குப்பின் ஆசைதீர்த்து என்றார். அதனாலேதான் 'அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்' என்று திருமூலர் கூறியருளினார். திருமந்திரம் 2615-வது பாட்டில் 'ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்' என்று திருமூலர் கூறுகிறதற்கும் இதுவே பொருள். அடியார் அடிக்கூட்டிய — அடியார் என்பது இங்கே இறைவனோடு கயிலையிலிருந்து திருப்

பெருந்துறைக்குவந்த சிவகணங்களைக் குறிக்கிறது. அடிமை என்ற சொல்லில் 'மை' கெட்டு அடி என நின்று, அடிமை என்னும் பொருளை உணர்த்திநின்றது. இது கடைக்குறை. இறைவனுகிய உடையானுக்கு அடிகள் தாம் அடிமையாதலன்றி இறைவன் திருவடியடைந்த அடியார்களுக்கும் தாம் அடிமையெனக் கூறுவார், அடியார் அடிக்கூட்டிய என்றார். சிவஞானபோத அவையடக்கத்தில், "தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார், எம்மையுடைமை எமையிகழார்" என்றுகூறியதும் இவ்வுண்மைபற்றியேயாகும். இறைவனுடைய நிறைவறிவில் (Universal consciousness) கலந்த அடியார்களெல்லாரும் ஒருமைப்பட்ட பேரறிவுடைய பெருவாழ்வின ரென்பது சித்தாந்த உண்மைக் கருத்து. அடியார் அடிக்கூட்டிய என்று அடிகள் இங்கேகூறியதும், அடியாரிற்கூட்டிய என்று அதிசயப்பத்துப் பாட்டுக்களிற் கூறியதும் ஒரு பொருளையே குறிப்பனவாகும். அற்புதம் அறியேனே — அடிகள் தம்மை இறைவன் ஆட்கொண்டதற்குமுன் அடைந்திருந்த பேரின்பவநுபவத்தை ஒத்துப்பார்த்து, பின்னையது எண்ணிலாதவளவில் முன்னையதைப் பார்க்கிலும் சிறந்ததாயிருக்கிற அநுபவத்தை அற்புதமென்று கூறுகின்றார். அடிகள் தாம் இறைவனுக்கு வேறாயிருப்பினும் ஒன்றெனும்படி இறைவனோடு அத்துவிதமாய்க்கலந்து பேரின்பவநுபவ முறுதலின், அந்த அற்புதமான பேரின்பவநுபவத்தைத் தாம் வேறாக நின்றறியவில்லையாதலின், அறியேனே என்றார். பாசமானவை பற்றறுத்து என்றதனாலே ஒளிவிளக்கத்தினாலே மாயைமல நீக்கமும், இருவினைப்பற்றறுத்து ஒளியாக்கி என்றதனாலே அருளறிவு விளக்கத்தினாலே வினைமல நீக்கமும், உணர்வு தந்து என்றதனாலே ஆணவமலவலி நீக்கமும், ஆசைதீர்த்து என்றதனாலே இம்மெய்யுணர்விலுள்ள திரிபுடிநீக்கமும், அடியார் அடிக்கூட்டிய என்றதனாலே பரமுத்திப்பேறும் வரிசையாக ஒன்றுக்குப் பின் ஒன்று காரணகாரியமா யிருக்கிற முறையில் உலகிலுள்ளாரறிந்துய்யும்படி அடிகளாற் கூறப்பட்டன. செய்யுளாதலால் இவற்றிற் சில காரண காரியமுறை பிறழ்ந்துங் கூறப்பட்டன.

திருப்பெருந்துறையில் அருளிய

# சஉ. சென்னிப் பத்து.

---

சென்னி — என்பது தலை; அடிகள், தமது தலைமேலே இறைவன் திருப்பெருந்துறையில் தனது இரண்டு திருவடிகளையும் வைத்துத் தீக்கை செய்து, ஆண்டருளியதை நினைந்து, மெய்யடியார்களைப் பேரின்பத்தில் அழுத்துவிக்கும் அத்திருவடிகள் தமது தலைமேலே மிளிர்ந்து ஒளியாய் விளங்கும் என்றுகூறும் பத்துப் பாட்டுக்களையுடைய பதிகம் சென்னிப்பத்தாகும். அடிகள் தலைமேலே இறைவனுடைய திருவடிகள் மன்னிச்சுடரும், மன்னிமலரும், மன்னிப்பொலியும், மன்னித்திகழும் என்று சொல்லுவது உலகர் அறியக்கூடிய மொழியில்வைத்துக் கூறப்படும் உருவகம். அடிகளது தலைமேலே இறைவனுடைய இரண்டு திருவடிகளும் விளங்குவனவாகக் கூறுவது அடிகளைத் தன்னுள் தன்முனைப்பின்றி அடங்கிநிற்கும் அடிமையாகக்கொண்டு அடிகளைத் தானாகச்செய்து வியாபித்திருந்து ஆளுந்தன்மையுடைய ஆண்டவன் என்பதை உணர்த்துகிறது. இறைவனுடைய வலது திருவடி அறிவையும், இடது திருவடி செயலையும் குறிக்கும். மக்களுடைய தூலவுடலின் உச்சியிலிருக்கும் தலை அறிதற்கருவியாகிய மூளையை உடையதாய் அம்மூளையால் கைகால்களை யியக்குவிக்கும் செயலையும் உடையது. அடிகளுடைய தலைமேலே எங்கும் நிறைந்துள்ள அருளொளியாய் விளங்குகிற இறைவனுடைய திருவடிகளை வைத்தல், அடிகளுடைய அறிவு செயல்கள் வியாப்பியவொளியாய், வியாபகவொளியாய் விளங்குகிற இறைவனுடைய அறிவுசெயல்களுக்குள் அடங்கியிருத்தலை யுணர்த்தும். வேட்கையானது அறிவில் அடங்குதலால், உயிரினுடைய வியாப்பியமான வேட்கை அறிவு செயல்கள் இறைவனுடைய வியாபகமான வேட்கை அறிவு செயல்களுக்குள் அடங்கித் தம் செயலற்றிருத்தலே இறைவனுக்கும் உயிருக்கும் என்றுமுளதாயிருக்கிற ஆண்டானடிமைத் தொடர்பாகும். இங்ஙனம் உயிர்

ஆண்டானடிமைத் தொடர்புநிலையில் இறைவனோடு அத்துவித மாய்க் கலந்து ஒன்றெனும்படி பிரிப்பற நிற்றலாலே பேரின்ப மடைகின்றது.

## சிவ விளைவு.

சிவம், விளைவு என்ற இரண்டு தமிழ்ச்சொற்களும் சேர்ந்து சிவவிளைவென்றாகியது. மரம், வேர் மரவேர் என்றாற்போல. சிவம் – இன்பம், விளைவு – மேலுமேலும் பெருகிவளர்தல். திருப் பாண்டிப்பதிகத்தின்கீழ்ச் சிவானந்த விளைவென்பதற்குக் கூறப் பட்ட விளக்கவுரையை இதற்கும் கொள்க. அடிகள் பத்துப் பாட்டு களிலும் கூறுகிறபடி தமது தலைமேல்மிளிரும் இறைவனது திருவ டிகள் பேரின்பத்தை விளைவித்தலால், சென்னிப்பத்து சிவவிளை வைக்கூறுவதாகின்றது.

[ஆசிரிய விருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

579. தேவ தேவன் மெய்ச் சேவகன் தென்பெ ருந்துறை நாயகன், மூவ ராலும் அறியொ ணாமுத லாய வானந்த மூர்த்தியான், யாவ ராயி னும் அன்ப ரன்றி யறியொ ணாமலர்ச் சோதியான், தூய மாமலர்ச் சேவ டிக்கணஞ் சென்னி மன்னிச் சுடருமே. கூச

[ப-ரை] தேவ தேவன் — தேவர்களெல்லாருக்கும் தலைவ னாகிய மகாதேவனும்; தென்பெருந்துறை நாயகன் — அழகிய தல மாகிய திருப்பெருந்துறையில் வீற்றிருந்தருளும் ஆத்துமநாதனும்; மூவராலும் அறி ஒணா முதலாய ஆனந்த மூர்த்தியான் — அயன் அரி உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளாலும் அறியமுடியாத முழு முதற்கடவுளாகிய இன்பவுருவனும்; யாவ ராயினும் — உலகில்

எத்தகைய சிறப்புக்களை யுடையவராயிருப்பினும்; அன்பர் அன்றி அறி ஒண்மலர்ச் சோதியான்—(அகப்பற்று புறப்பற்றுக்களை விடுத்துத் தனது திருவடிகளையே புகலாகப்பற்றியுள்ள) மெய்யடியார்களுக்கு (அவர்களது நின்மலமான தூயவுள்ளத்தில் அவர்களோடு இரண்டறக்கலந்து பேரொளியாய்) உணரப்படுகிறவன் அல்லாமல் ஏனையோர்களுக்கு அறியமுடியாதபடி எல்லாவுயிர்களுடைய உள்ளமாகிய தாமரைமலரில் பேரொளியாய் மறைந்து நிற்கிறவனும்; மெய்ச்சேவகன் — (யாவருக்கும் மேலாம் அத்துணை அளப்பரும் பெருந்தன்மை யுடையனுயினும், எல்லாவுயிர்களுடைய நலங்கருதி இடைவிடாது) ஐந்தொழிற்பணிகள் செய்துவருகின்ற உண்மையான பணியாளனுமாகிய சிவபெருமானுடைய; தூய மாமலர்ச் சேவடிக்கண் — பூக்கள்கொண்டு அடியார்கள் வழிபடுகிற தூய்மையும் பெருமையுமுடைய இரண்டு செவ்விய திருவடிகளாகிய மெய் அறிவானது; நம் சென்னிமன்னிச் சுடரும் — (மீளா அடிமைகளாய் ஆட்பட்டுள்ள அடியார்களாகிய) நமது தலைமேல் நிலையாக நின்று பேரொளிசெய்து (பேரின்பம் தந்து) கொண்டிருக்கும்.

[வி-ரை] இந்தப்பாட்டும் இதனுடன் சேர்ந்த ஒன்பது பாட்டுக்களும் மாணிக்கவாசக அடிகள் தாம், மானுடவடிவில் குருவடிவாய்த் திருப்பெருந்துறைக்கு வந்த சிவபெருமானுல் ஞான தீக்கைசெய்யப்பட்டு ஆட்கொண்டருளப் பெற்றவுடனே பாடிய பாட்டுகள். தீக்கை முடிவில் ஞானுசிரியருடைய திருவடிகள் தமது தலைமேல் வைக்கப்பெற்றதும் அதனுல் தாம் அடையப்பெற்ற பேரறிவு விளக்கமும் பேரின்ப விளக்கமும் இப் பாட்டுகளிற் கூறப்படுகின்றன. ஞானுசிரியன் திருவடிகளை மாணவகன் தலைமேல் வைத்தலானது, தீயானது இரும்பைத் தன்னிறமாக ஆக்குதல் போல, அவர் மாணவகனுடைய உள்ளத்திலுள்ள குற்றங்கள் முழுமையும் போக்கி, அதனிடம் சிவம் விளங்கச்செய்து, மாணவகனைத் தானுக்கி, உண்மையடிமையாக விளங்குகிற அவனிடத்தில் ஆண்டானுகிய தமது எண்குணங்களும் பதியச்செய்தலைக் குறிக்கின்றது.

திருநாவுக்கரசு அடிகள் (6-14-1) "நாறுமலர்த் திருவடியென் தலை மேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்லவாறே" என்றும், (6-38-1) 'பிரானாய் அடியென்மேல் வைத்தாய் நீயே' என்றும் பாடியருளினமை காண்க. தேவதேவன் — என்பதனால் உலகி லுள்ள எல்லாவுயிர்களுக்கும் ஒப்பற்ற தலைவன் என்பது கூறப் பட்டது. இதனால் அருவசிவத்தினது நிலை குறிப்பிடப்பட்டது. தென்பெருந்துறை நாயகன் — அடிகள் தமக்குச் சிவபெருமான் மானுடவடிவில் ஞானாசிரியனாய்த் திருப்பெருந்துறைக்கு வந்து ஆண்டு அருள்செய்ததைக் குறிப்பிப்பார், தென்பெருந்துறை நாய கன் என்றார். உள்ளுறையாகச் சமயங்களெல்லாம் வந்து சேர் கின்ற முடிவிடமாகிய சைவசமயத் தனிநாயகன் என்றும், எல்லா வுயிர்களும் பொருள்களும் தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் இட மாகிய துறை என்றும் பொருள்கொள்ளலாம். "சைவ சமயத் தனிநா யகனந்தி" என்று திருமூலர் 1567-வது திருமந்திரத்தில் கூறியருளினர். இதனால் உருவசிவத்தினது நிலை குறிப்பிடப் பட்டது. மூவராலும் அறியொணா ஆநந்தமூர்த்தியான் — ஒண்ணா என்பது ஒணா எனக் குறுகியது. ஒண்ணுதல் — இயலுதல், கூடு தல். அறி – முதனிலைத் தொழிற்பெயர். அறி ஒண்ணா – அறி தலை முடியாத, அதாவது அறியமுடியாத. மாயாபுவனங்களி லிருந்து படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களை யும் செய்கின்ற மும்மூர்த்திகள் மாயாபுவனங்களுக்கெல்லாம் அப் பாலாய் அவர்களுடைய முழுமுதற் கடவுளாய் இன்பவடிவமான சிறப்பியலை (சொரூப இலக்கணத்தை) உடைய பரம்பொருளை அறியமுடியாது என்பார், மூவராலுமறியொணா ஆநந்தமூர்த்தியான் என்றார். "இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குருவம், இன்ப கன மானதினால் இல்" என்று திருவருட்பயன் சிவபெருமா னுடைய இன்பவடிவத்தைக் கூறுதல் காண்க. இதனால் சொரூப சிவத்தினது நிலை குறிப்பிடப்பட்டது. அன்பரன்றி அறியொணா மலர்ச்சோதியான் — மலர் என்பது இங்கே உள்ளமாகிய தாமரை மலரைக் குறிக்கின்றது. 'மலர்மிசை ஏகினான்' என்பதிற்போல.

மலர்ச்சோதியான் — உள்ளமாகிய தாமரை மலர்மேல் எழுந்தருளி யிருக்கும் சோதியான். ஏழாம்வேற்றுமைத் தொகை. சோதியான்— பேரொளியை யுடையவன். ஆன்ம அறிவொளியோடு கலந்து விளங்கும் பேரொளியை யுடையவன். "பருவஞ்சே ருயிர்க்குத், துங்கவரன் ஞானக்கண் கொடுத்தருளி னாலே சோதிக்குட் சோதி யாய்த் தோன்றிடுவன் காணே". என்று சிவஞானசித்தியார் 11-வது சூத்திரம் 8-வது பாட்டில் கூறப்பட்டிருத்தல் காண்க. அன்பர் — அன்பினையுடைய அடியார்கள். அன்பு என்பது இங்கே ஒருவர் உயிர்ப்பற்று பொருட்பற்றுகளை விட்டு இறைவ னிடத்தில் செய்யும் பேரன்பு. இறைவன் உயிர்களுக்கு இடை விடாது செய்துவருகிற பேருதவிகளை ஒருவர் நேரே அநுபவத்தில் நினைப்பு மறப்புமற்ற நிலையில் அறிந்து, அதனால் இறைவன்மீது செய்யும் பேரன்பு. எல்லாவுயிர்களிடத்திலும் விளங்கும் பேரொளி யானது மலத்தால் மறைப்புண்ட ஏனைய உயிர்களுக்கு விளங்காதா யினும், மலத்தினின்றும் நீங்கப்பெற்ற பேரன்புடைய அடியார்க ளுடைய சிவகரணமாய் மாறின தூயவுள்ளத்தில் படலம் நீங்கப் பெற்ற கண்ணுக்கு ஞாயிற்றினொளி விளங்குதல்போல விளங்கு மென்பார், யாவராயினு மன்பரன்றி அறியொணாமலர்ச சோதியான் என்றார். மலர்ச்சோதியான் என்பதனால் தீவிரதரசத்திநிபாதம்பெற்ற அடியார்கள் தூயவுள்ளத்தில் விளங்குகிற இறைவனது பேரொளி நிறைவில் அடங்கிப் பேரறிவு விளக்கம்பெறுதல் கூறப்பட்டது. தூயமாமலர்ச சேவடிக்கண—தூய மா என்ற அடைமொழிகளிரண் டும் சேவடி என்ற சொல்லைத் தழுவுகின்றன. தூய்மை - மலத் தொடர்பின்மையையும், மா - ஒப்பில்லாதவுயர்வையும் இன்பத் தையும குறிககின்றன. சேவடிக்கண் என்பது சேவடியாகிய கண். கண் என்பது இஙகே ஞானக்கண். அதாவது மெய்யறிவைக்குறிக் கிறது. செம்மை + அடி = சேவடி. நேர்மையான அடி. இறைவன் தன்னை நேர்மையாக நோக்கி அறிகிற அடியார்களுக்குத் தானும் நேர்மையாக அதாவது அறிவு நிலைக்குத் தக்கவாறு அருள்செய் கின்றவனாதலின், அடி சேவடி எனப்பட்டது. திருநாவுக்கரசு

அடிகள் (6-6-3) "........வஞ்ச வலைப்பாடொன் றில்லா அடி" என்று கூறியருளினர். நம் சென்னி மன்னிச்சுடருமே—சென்னி என்பது தலையி லிருக்கிற பிரமரந்திரத்தைக் குறிக்கின்றது. மெய் யறிவுப் பேரொளியானது பிரமரந்திர வழியாய் எப்பொழுதும் நிலைபெற்று விளங்கவும், அதனால் ஆன்மவொளி அந்தப் பேரொளி நிறைவில் அடங்கிநின்று இறைவனுடைய எண்குணங்களும் விளங் கப்பெற்று நித்தியமான பேரின்பப்பெருவாழ்வு அடையப்பெற்ற அநுபூதி நிலையை, நம் சென்னி மனனிச் சுடரும் என்றருளினர். அப்பேரொளியாகிய மெய்யறிவானது இனித் தம்மைவிட்டு நீங் காது என்பார், மன்னிச் சுடருமே என்றார்.

---

திருப்பெருந்துறையில் அருளிய

# சரு. திருவார்த்தை.

---

வார்த்தை என்பது செய்தி. திருவார்த்தை - அருட்செய்தி. இறைவனாகிய சிவபெருமான் மெய்யடியார்களுக்கு அருள்செய்யும் செய்தியை அறிகின்றவர்கள் எம்பிரானாவாரென்று அடிகள் கூறு கிற பத்துப்பாட்டுக்களும் அடங்கிய பதிகம் திருவார்த்தையாகும்.

## அறிவித்தன்புறுதல்.

---

அறிவித்தன்புறுத லென்பது சிவபெருமான் தனது பேரரு ளால் அடியார்களுக்கு அவர்களுய்யும்படி செய்யும் நலத்தைக் கேட் டறிந்து இறைவனிடத்து அன்புறும் செய்தியாகக்கூறித் தாமும் அன்புறுதலாகும். மேலே கூறியபடி அடிகள் பத்துப் பாட்டுக்களி லும் இறைவனுடைய அருட்செய்தியைக் கூறுதலால், திருவார்த்தை அறிவித்தன்புறுதலைக் கூறுவதாகின்றது.

---

# திருவார்த்தை.

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

589. மாதிவர் பாகன் மறைபயின்ற
வாசகன் மாமலர் மேயசோதி
கோதில் பரங்கரு ணையடியார்
குலாவு நீதிகுண மாகநல்கும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்திழிந்து
ஆதிப் பிரமம் வெளிப்படுத்த
அருளறி வாரெம்பி ரானுவாரே. சுகு.

[ப-ரை] மாது இவர்பாகன் — (தனது இடது பாகத்தில்) உமாதேவியாரோடு பொருந்தி மாதிருக்கும் பாதியனாய் வீற்றிருந்தருளுகிறவனும்; மறைபயின்ற வாசகன் — (மக்கள் அறிந்து, அறிந்தபடியொழுகி உய்யும்பொருட்டு) அவர்களுக்கு வேதாகமங்களைக்கூறிய வாக்குடையவனும்; மாமலர் மேயசோதி — (அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களையும் அடையும்பொருட்டு வேதாகமங்கள் கூறுகிறபடி செந்நெறியிலொழுகுகின்றவர்களுடைய) சிறப்புடைய உள்ளமாகிய தாமரைமலரினிடத்து வீற்றிருந்து விளங்கும் ஒளிப்பொருளா யிருக்கிறவனும்; மண்ணிடை வந்திழிந்து — கயிலைமலையிலிருந்து நிலவுலகிற்கு வந்து; போதலர் சோலைப்பெருந்துறை — பூக்கள் மலர்ந்திருக்கிற மரச்சோலைகளாற் சூழப்பட்ட திருப்பெருந்துறையில்; கோது இல் பரங்கருணை — (குருந்தமரத்தடியில் வைத்து எனக்குத் தீக்கை செய்து ஆணவம், வினை, மாயையாகிய மும்மலப்பிணிப்புக்களையும் என்னைவிட்டு நீங்கும்படிசெய்து ஆண்டருளிய குற்றமில்லாத மேலான அருளுடையவனும்; அடியார் குலாவு நீதி — (எனது மலப்பிணிப்புக்களை நீக்கி என்னை யாண்டருளியதற்காகத்) தன்னு

டன்வந்த அடியார்களெல்லோரும் தன்னைப்புகழ்ந்து கொண்டாடும் நடுவுநிலைமை யுடையவனும்; குணமாக நல்கும் எம் புண்ணியன்— தனது எண்குணங்களையும் என்னிடம் பதிவித்து அவற்றை எனது அருட்குணமாகச்செய்து பேரின்பமருளிய எங்களுடைய புண்ணிய னாகிய சிவபெருமான்; ஆதி பிரமம்—(நான்முகன், மால், ருத்திரன், மகேசன், சதாசிவன் ஆகிய ஐந்து மூர்த்திகளுக்கும்) மூல காரண மாயிருக்கின்ற சுத்தசிவமாகிய பரமசிவனை; வெளிப்படுத்த -- அடி யார்களாகிய எங்களுகருத் தெரியும்படிசெய்த; அருளறிவார் — பெருங்கருணையைத் தமதுள்ளத்தில் உணர வல்லவர்கள்; எம்பிரா னாவார் — எங்கள் தலைவராவார்கள். ஆதலால் அடியார்களாகிய நாங்கள் அத்தகைய தலைவர்களையும், சிவபெருமானைத் துதித்தல் போலத் துதித்து வணங்குவோம் என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] மாது இவர்பாகன் — இதனால் மாந்தருக்கு அவர் களுடைய பொதுவியல்பு நிலைக்குரிய உலகவாழ்வில் திரோதான சத்தியாயிருக்கும் அருட்சத்தி இறைவனோடியைந்துநின்று அவர் களோடு ஒன்றாய் வேட்கையை விளைவிக்கும் அத்துவிதநிலை கூறப் பட்டது. மும்மலப்பிணிப்புடைய மாந்தர் அப்பிணிப்பினின்று ஒரே காலத்தில் அல்லாமல் படிமுறையில் நீங்கவேண்டிய சிறுவலி யுடையவர்களா யிருத்தலால், இறைவனோ டியைந்துநிற்கிற அருட் சத்தி அவர்களுக்கு மறைப்புத்தொழிலைச் செய்து அதன்வழியில் மாயையினிடம் படைப்பு, காப்பு, அழிப்பு என்னும் முத்தொழில் களைச் செய்கிறான். இங்ஙனம் உயிர்களினிடம் மறைப்புத்தொ ழில் செய்கின்ற அருட்சத்திக்குத் திரோதானசத்தி என்று பெயர். இந்தத் திரோதானசத்தி உயிர்களிடம் அருளைச் செலுத்துத லோடு மலத்தையும் இயக்கிநிற்றலால் திரோதமலமென்றும் உபசா ரமாய்க் கூறப்படுகின்றது. மறைபயின்ற வாசகன் — இதனால் மாந்தர் உலகில்வாழும்பொழுது அறவழியிலொழுகிப் படிமுறையில் தன்னைச்சேரும் பக்குவமடைதற்பொருட்டுப் பொதுநூலாகிய வேதங்களையும் சிறப்புநூலாகிய ஆகமங்களையும் இறைவன் கூறு

கின்றான் என்பது கூறப்பட்டது. மறை என்பது இங்கே வேதங் களையும் ஆகமங்களையுங் குறிக்கிறது. "ஆரணம் ஆகமங்கள் அரு ளினால் உருவுகொண்டு, காரணன் அருளாலுகிற் கதிப்பவ ரில்லை யாகும்" என்று சிவஞானசித்தியார் 1-வது சூத்திரம் 46-வது பாட் டில் அருணந்திசிவாசாரியார் கூறுகிறபடி மாந்தர் வீட்டின்ப நிலை யைப் பொதுவாயடைதற்கு வேதங்களும் சிறப்பாயடைவதற்குச் சிவாகமங்களும் இன்றியமையாது வேண்டப்படுவனவாகும். இங்ங னம் வேதாகமங்கூறுகிற அறநெறியைத் திரோதானசத்தி மாந்தர் உள்ளத்துள்நின்று அவர்களறியும்படி உணர்த்திக்கொண்டே யிருக் கிறாள். இப்படி யுணர்த்திக்கொண் டிருப்பதை மாந்தர் தங்கள் பொதுவியல்புநிலையில் உணர்வது மனச்சான்று என்று கூறப்படு கின்றது. இதனால் திரோதானசத்தி மாந்தருக்கு வேறாய் நின்று அவர்களுக்குக் கருவியறிவைத் திகழும்படிசெய்யும் அத்துவிதநிலை கூறப்பட்டது. மாமலர்மேய சோதி — மாமலர் என்பது தாமரை மலருக்கு உவமிக்கப்படுகிற மாந்தருடைய உள்ளத்தைக்குறிக்கிறது. "அகனமர்ந்த அன்பினரா யறுபகைசெற் றைம்புலனு மடக்கி ஞானப், புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர்கோயில்" என்று திருஞானசம்பந்த அடிகள் (1—132—6) பாட்டில் உள்ளத்தைத் தாமரை யென்றும், தூயவுளளத்தில் இறை வன் வீற்றிருப்பானென்றும் கூறியிருத்தல் காண்க. இறைவன் உடல் முழுவதும் நிறைந்திருப்பினும் உள்ளத்தில் சிறப்பாக எழுந் தருளியிருத்தலால் மாமலர் என்றார். இந்த உள்ளத்தில் இறைவ னோடியைந்து நிற்கிற திரோதனசத்தி படிமுறையில் மலவிருளைச் சுருக்கிக்கொண்டும், அருளொளியைப் பெருக்கிக்கொண்டும் வந்து, முடிவில் நிரம்பிய அருளொளிப் பெருக்கத்தினால் மும்மலப் பிணிப்பு முற்றிலும் நீங்குகிறது. அப்பொழுது திரோதனசத்தி அருட்சத்தியாக மாறி, அத்தூயவுள்ளத்தை யுடைய மாந்தருக்குக் கோதில் பரங்கருணை செய்யும் வேட்கையுடயவள் ஆகின்றாள். அடிகள் மறைபயின்ற வாசகன் என்று முன்கூறி, அதற்குப் பின் மாமலர்மேய சோதி என்று கூறியதனால், இறைவன் மறையின்வழி

யெர்ழுகும் மாந்தருடையவுள்ளத்தில் அம் மறையின் பொருளாய் விளங்குகின்றனென்பது கூறப்பட்டது. "மறையுமாய் மறையின் பொருளுமாய்", என்று அடிகள் (22 - 5) பாட்டிற் கூறியிருத்தல் காண்க. இதனால் திரோதானசத்தி மாந்தரோடு உடனாய்நின்று அவர்களுடைய செயலை நிகழ்த்துவிக்கும் உடனாய்நிற்கும் இறைவனுடைய அத்துவிதநிலை கூறப்பட்டது. மண்ணிடை வந்திழிந்து போதலர் சோலைப் பெருந்துறை கோதில் பரங்கருணை — இதனாலே அடிகள் தமக்குச் சிவபெருமான் திருப்பெருந்துறைக்கு வந்து தீகைக செய்து ஆண்டு பேரினபம் அருளியதைக் கூறுகின்றார். அங்ஙனம் சிவபெருமான் தம்மை ஆண்டருளிய பேரின்பமானது முன் கட்டுநிலையில் திரோதானசத்தியோடு கூடினவனாயிராமல் முழு அருட்சத்தியோடு கூடி அருளப்பெறுதலால், கோதில்பரங் கருணை யென்றார். திரோதானசத்தியோடு கூடிச் சிவபெருமான் பெய்யும் கருணைக்கு மேலானதாயிருத்தலால் பரங்கருணை என்றும், மும்மலக்குற்றத்தையும் நீக்கி நிறைவான அருள்செய்யப்படுதலால் கோதில்கருணை யென்றுங் கூறினார். "அலர்ந்தமெய்க் கருணையும் நீயும் அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்", என்று (20 - 10) பாட்டிலும், "தாரா அருளொன் றின்றியே தந்தாய்", என்று (32 - 9) பாட்டிலும் அடிகள் கூறுதல் காண்க. திருமூலரும் திருமந்திரம் 2633-வது பாட்டில் "முத்தியி லத்தன் முழுத்த வருள்பெற்று", என்று இதனைப்பற்றிக் கூறுகின்றார். அடிகள் தமக்குக் கோதில்பரங்கருணை யுடையவனாயிருந்து சிவபெருமான் முழுத்த அருள்செய்தலால், அடிகளுடைய மும்மலப்பிணிப்பும் அவரைவிட்டு நீங்கியது என்பது பெறப்பட்டது. அடியார் குலாவு நீதி — இங்கே அடியார் என்பது கயிலையிலிருந்து சிவபெருமானுடன் வந்த சிவகணங்களே. அவர்கள், முன் கயிலையில் அடிகள் தம்மோடு கூடியிருந்து, ஓர் காரணம்பற்றிப் பிரிந்து உலகிற்குவந்து சிலகாலமிருந்து, பின் பழையபடி தம்மைக்கூடியது மகிழ்ச்சியடைந்து சிவபெருமானைக் கொண்டாடுதற்குக் காரணமாயிற்று. அடிகள் தாம் முன் கயிலையில் சிவகணங்களுள் ஒருவராயிருந்தது

பற்றி(26 - 8) பாட்டிலும் (32 - 1)பாட்டிலும் கூறுதல் காண்க. நீதி என்பது நடுவுநிலைமை; அது பக்குவப்பட்ட அடியார்களுக்கு மாத்திரம் சிவபெருமான் அவர்களுடைய மும்மலக்குற்றத்தை நீக்கிப் பேரின்பமருளுதலால், நடுவு நிலைமையிலிருந்து பிறழுதலிலன் என்பது கூறப்பட்டது. "சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல், சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்",என்று சிவஞானபோதம் 10-ம்சூத்திர வெண்பாவில் சிவபெருமான் ஏனையோர்களை நீக்கிப் பக்குவப்பட்ட அடியார்களுக்குப் பேரின்பமருளுதலினால், நடுவு நிலைமையிலிருந்து பிறழுதலிலன் என்பது கூறப்பட்டிருத்தல் காண்க. குணமாக நல்கும் எம் புண்ணியன் — இதனாலே சிவபெருமான் தன்வயத்தனாதல் முதலிய தன்னுடைய எண் குணங்களையும் அடிகளிடம் பதிய வைத்து அவருக்குப் பேரின்பமருளியது கூறப்பட்டது. குணம் என்பது இங்கே சாதியொருமைப் பெயராய் எட்டு அருட்குணங்களையும் குறிக்கிறது. இதற்கு (5 - 26) பாட்டில் 'உன்னைத் தந்தனை' என்பதற்கு எழுதப்பட்டிருக்கிற விளக்கவுரையைக் கொள்க. அடிகள் தமக்குப் பேரின்பமளித்த சிவபெருமானைப் புண்ணியன் என்று இங்கே கூறுகின்றார். திருநாவுக்கரசு அடிகள் தாம் பேரின்பமடையும்பொழுது சிவபெருமானை, "புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே", என்று (6 - 99 - 1) பாட்டிற் கூறுதல் காண்க. அடிகள் அடியார்களையும் தம்மோடு சேர்த்து எம் புண்ணியன் என்றார். ஆதிப்பிரமம் வெளிப்படுத்த — ஆதிப்பிரமம் என்பது உயிர்களின் பொருட்டுப் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் ஆகிய ஐந்தொழில்களை முறையே செய்கின்ற நான்முகன் முதலிய ஐந்து மூர்த்திகளுக்கும் காரணமாயிருக்கிற தனி முழுமுதற்பொருளாகிய பரமசிவனைக் குறிக்கிறது. அவன் ஒருவனாய் வாளாவிருப்ப, அவன் சந்நிதியில் ஐந்தொழில்களும் ஐந்து மூர்த்திகளாலும் அவனருளாலே செய்யப்படுகின்றன. இந்த ஐந்து மூர்த்திகளும் மேலான தவஞ்செய்து ஐந்தொழில்களையும் செய்யும் பதவிகளையடைந்த ஆன்மாக்கள். "ஆமயன் மாலரன் ஈசன சதாசிவன், தாமடி சூடிநின்

றெய்தினர் தம்பதம்," என்று திருமூலர் திருமந்திரம் 1208-வது பாட்டில் இவ்வுண்மையைக் கூறியருளினுர். வெளிப்படுத்த — பெயரெச்சம். இது அருளென்னும் பெயரைக்கொண்டு முடிகிறது. ஶ்ரீகண்ட பரமசிவன் இமயமலையிலுள்ள கைலாயமலையில் வீற்றிருந்துகொண்டு உலகமுழுவதும் ஆட்சிசெய்து சகல வர்க்க வுயிர்களுக்கு அவர்கள் உய்யும் பொருட்டுப் பரமசிவன் ஆணைவழி நின்று ஐந்தொழிலையும் செய்கின்றாராதலின், அவரை ஆதிப்பிரமத்தினருளை நாமறியும்படி வெளிப்படுத்தினவர் என்று அடிகள் தமக்கு அவர் திருப்பெருந்துறையில் அருள்செய்த வகையில் வைத்துக் கூறுகின்றார். வெளிப்படுத்த என்பதனோடு இன்சாரியை சேர்த்து வெளிப்படுத்தினவென்று சாதாரணமாய்க் கூறப்படுகின்றது. அருளறிவார் எம்பிரானுவாரே — ஆதிப்பிரமத்தின் அருளை உலகததில் வாழும் மககளாகிய நமக்குத் தெரியும்படி செய்த சிவபெருமானுடைய அருளை அறிகின்றவர்கள் அவனோடு அத்துவிதமாய்க் கலந்துநின்று பேரின்பம் உணருகிறவர்களே யாதலின், அப்படி உணருகிறவர்கள் எம்பிரானுவார் என்று அடிகள் கூறினுர். மெய்கணடதேவர் சிவஞானபோதம் அவையடக்கப் பாட்டிற் கூறுகிறபடி "தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார் எம்மை உடைமை",யால் அவர் அஙஙனங் கூறினுர். சிவபெருமானுக்கு ஆளாந்தனமையுடைய அடியார்களெல்லாரும் சிறிதும் வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட்ட உணர்வுடையவர்களென்பது கருத்து. ஏ - ஈற்றசை. இந்தப் பாட்டில் மாது இவர் பாகன், மறைபயின்ற வாசகன், மாமலர்மேயசோதி என்றதனுலே சிவபெருமான் சகல வர்க்க மக்களுயிர்களுக்கு அவர்களுடைய பொதுவியல்பு நிலையில் அவர்களோடு மூவகை அத்துவித நிலைகளில் கலந்திருந்துசெய்யும் அருட்டிறத்தையும், கோது இல் பரம் கருணை, அடியார் குலாவுநீதி, குணமாக நல்கும் எம் புண்ணியன் என்றதனுலே சிவபெருமான் அவர்களுக்கு அவர்களுடைய சிறப்பியல்பு நிலையில் அவர்களோடு மூவகை அத்துவிதநிலைகளிற் கலந்திருந்து செய்யும் அருட்டிறத்தையும் அடிகள் தமக்குச் சிவபெரு

மான் செய்த அருட்டிறத்தில் வைத்து நாமறியும்படி கூறுகின்றார். மாந்தருடைய பொதுவியல்புநிலையில் அவர்களுடைய வேட்கை அறிவு செயல்கள் பல்வகையாகப் பல்வேறு நுகர்பொருள்களிலும் பல்வேறு உயிர்களிலும் நிகழ்த்தப்படுகின்றன. அவை மூன்றும் ஒன்றோடொன்று செம்மையாகவும், அங்ஙனம் செம்மையாக நிகழ்த் தப்பட்ட ஒருவருடைய வேட்கை அறிவு செயல்கள் பிறமக்க ளுடைய வேட்கை அறிவு செயல்களோடு செம்மையாகவும், அற நெறியிலே நிகழ்த்தப்படுதலாலே படிமுறையில் திருத்தமடைந்து வருகின்றன. அங்ஙனம் பொதுவியல்புநிலையில் திருத்தமடைந்த வேட்கை அறிவு செயல்கள் அவர்களுடைய சிறப்பியல்பு நிலையில் இறைவனுகிய ஒரு பொருளைப்பற்றியே அவனிடத்தில் ஒருங்கே நிகழ்ந்து பேரின்பத்திற் கேதுவாகிறது. இதனை விரித்துரைக்கப் புகின், உரை அளவுகடந்து விரியும். இதனுல் பொதுவியல்புக்குரிய உலகவாழ்க்கையில் மாந்தர் வேட்கை அறிவு செயல்களை நிகழ்த்தும் அறச்செம்மையொழுக்கம் உலகச்சிற்றின்பத்திற் கேதுவாகு மென் பதும், சிறப்பியல்புநிலையில் அவர்கள் வேட்கை அறிவு செயல்களை நிகழ்த்தும் அருட்செம்மை யொழுக்கம் பேரின்பத்திற் கேதுவாகு மென்பதும் நன்கு புலனுகும்.

---

தில்லையில் அருளிய

# ௪௪. எண்ணப்பதிகம்.

---

எண்ணப் பதிகம் என்பது எண்ணம், பதிகம் எனனும் இரண்டு சொற்களாலாகியது. எண்ணம் என்பது உள்ளக்கருத்து. அடிகள் தாம் இறைவனை விட்டுப்பிரியாது அவனடியார் தொகைநடுவே இருக்கும் பேராவின்பம் அருளுதல் வேண்டுமென்னும் தமது உள் ளக்கருத்தை இறைவனுக்கு விண்ணப்பிக்கும் ஆறுபாட்டுக்க ளடங் கிய பதிகம் எண்ணப்பதிகமாகும்.

# ஒழியா இன்பத்துவகை.

---

ஒழியாவின்பத்துவகை என்பது ஒழியா இன்பத்தால் உவகை எனவிரியும். ஒழியா இன்பம் என்பது இடையீடின்றி எப்பொழுதும் உணரும் பேரின்பம். உவகை என்பது மகிழ்ச்சி. ஒழியாவின் பத்துவகை என்பது இடையீடின்றி எப்பொழுதும் உணரும் பேரின்பத்தால் அடையும் மகிழ்ச்சி. இது ஆனந்தக்களிப்பென்றுங் கூறப்படும். இதனை அடிகள் தாமடைதல் வேண்டுமென்று இறைவனுக்கு விண்ணப்பஞ் செய்தலை இப் பதிகப்பாட்டுக்களிற் கூறுதலால் எண்ணப் பதிகம் ஒழியா இன்பத்துவகையைக் கூறுவதாகின்றது.

---

[ஆசிரிய விருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

601. என்பே யுருக நின்னரு ளளித்துன்
இணைமல ரடி காட்டி
முன்பே என்னை யாண்டு கொண்ட
முனிவா முனிவர் முழுமுதலே
இன்பே யருளி யெனை யுருக்கி
உயிருண் கின்ற எம்மானே
நண்பே யருளா யென்னுயிர்
நாதா நின்னருள் நாணுமே கூசு.

[ப-ரை] என்பே உருக — (எனதுடலிலுள்ள கடினமான) எலும்புகளுங்கூடக் குழைந்து உருகும்படி; நின் அருள் அளித்து — உன்னுடைய அருளை எனக்குத்தந்து; உன் மலர் அடியிணை காட்டி — பூக்கள்போலும் மெதுவான உன்னுடைய இரண்டுதிருவடிகளையும் நான் காணும்படி காட்டி; முன்பே — சிலநாட்களுக்கு முன் (திருப்பெருந்துறையில்); என்னை ஆண்டுகொண்ட முனிவா

— என்னை அடிமையாகக்கொண்டு ஆண்டருளிய முனிவனே; முனிவர் முழுமுதலே — துறவிகளுடைய முழுமுதற்றலைவனே; என் உயிர் நாதா — எனது உயிருக்குத் தலைவனுயிருப்பவனே; நண்பே — எனது அன்பே; இன்பே அருளி — நீ எனக்குப் பேரின்பத்தினையே நல்குதற்பொருட்டு; எனை உருக்கி — (நான் நின் அருட்செயலை அன்பினுலே நினைந்து) என்னை உருகும்படி செய்து; உயிர் உண்கின்ற எம்மானே — (அங்ஙனம் உருகச்செய்த லினுலே) எனது உயிருணர்வை உனது அருள்நிறைவில் அடக்கி அதனை இல்லையெனும்படிசெய்த எங்கள் தந்தையே; நின் அருள்— உனது அருளை; நாணுமே அருளாய் —(முன்னே திருப்பெருந் துறையில் நல்கியதுபோல உன்னைப் பிரிந்திருக்கும் இப்பொழுதும்) கூசாமல் நல்குவாயாக.

[வி-ரை] என்பே உருக—என்பே என்பதிலுள்ள ஏ—அசை. உயர்வுசிறப்பும்மை தொகநின்றது. எலும்பானது பருவுடலில் மண்தத்துவத்தைச்சேர்ந்த மிகக் கடினமான பொருள். என்பும் உருக என்றதனுலே உடலிலுள்ள ஏனைய முப்பத்தைந்து தத்துவங்களும் உருக என்பது சொல்லாமலே அமையும். நின் அருள் அளித்து— முப்பத்தாறு தத்துவங்களும் உருகும்படி இறைவன் அருள் அளித் தலாவது அத்தத்துவங்களெல்லாம் ஒடுங்குதற்கு நிலைக்களனுயுள்ள தூலவெளியில் அடங்கச்செய்து அருளொளியாக விளங்கச்செய்த லாம். இவ்வாறு முப்பத்தாறு தத்துவங்களும் ஒடுங்கினுலொழிய உடலானது அவற்றின் மலச்சேட்டையொழிந்து உயிரின்கண் அடங்காதாதலின், என்பேயுருக நின்னருள் அளித்து என்ருர். உன் மலரடியிணை காட்டி — இரண்டு திருவடிகளும் அருளாதலால் அடியிணைகாட்டுதல் அருளைக்காட்டுதற்கு அடையாளமாகும். முப் பத்தாறு தத்துவங்களாலாகிய உடம்பு மேலேகூறப்பட்டபடி உயி ரில் அடங்கினுலொழிய உயிர் அருளி லடங்காதாதலின, என்பே உருக நின்னருளளித்து என்றதற்குப்பின உன் மலரடியிணைகாட்டி என்ருர். முன்பே என்னை ஆண்டுகொண்ட முனிவா — சொக்கப்

பிரான் மதுரையில் பிட்டுக்கு மண்சுமந்த திருவிளையாடல் காட்டிய பின், அடிகள் பாண்டிமன்னனிடம் விடைபெற்று மறுபடியும் திருப்பெருந்துறைக்குவந்து தவஞ்செய்துகொண்டிருந்தபொழுது, எண்ணப்பதிகம் பாடியதனால் முன்பே என்னை ஆண்டுகொண்ட முனிவா என்றார். முனிவா - இறைவன் ஒரு பொருளிலும் பற்றில்லாத தன்மையமுடையனாதலின் இறைவனை முனிவா என்று விளித்தார். முனிவர் முழுமுதலே — முனிதல் - வெறுத்தல். மலப்பிணிப்பு நீங்கி உலகத்தை வெறுத்த பெரியார். சிவசமவாதிகள் கூறுகிறபடி மலப்பிணிப்பு முற்றிலும் நீங்கிய பெரியாரும் இறைவனுக்கு ஒப்பாகாராதலின் முனிவர் முழுமுதலே என்றார். என் உயிர் நாதா — இறைவன் உயிருக்கு உடலைத்தந்து அதனையியக்கும் நாதனாயிருப்பதன்றி உயிரையியக்கியும் அறிவித்தும் அதற்கு நாதனாயிருத்தலால் என்னுயிர் நாதா என்றார். நண்பே — அன்பினாலே இறைவன் உயிருக்கு அருள்செய்தலால் நண்பே என்று இறைவனை விளித்தார். இன்பே அருளி — இன்பே என்பதிலுள்ள ஏ - பிரிநிலை குறித்து நின்றது. உலகவின்பம் போலாது துன்பங்கலவாத பேரின்பமாதலின் இன்பேயருளி என்றார். அருளல் - ஆண்டான் அடிமைக்கு நல்கல். அருள என்னும் காரியப்பொருளில் வந்த வினையெச்சம் அருளி எனத்திரிந்து நின்றது. உயிர் உண்ணல் பேரின்பமருளுதலுக்குக் காரணமாயிருத்தலின் இவ்வாறு கூறப்பட்டது. எம்மான் — எங்கள் தந்தையே. எம் அம்மான் என்பது எம்மான் எனக் குறுகியது. எம் தந்தை என்பது எந்தை எனவும், எம் தம்பி என்பது எம்பி எனவும் வருதல்போல. "எம்மான் எம்மனை என்றனக் கெட்டனைச் சார்வாகார்" என்று சுந்தரமூர்த்தி அடிகள் (7—24—3)ல் முதலாவது வரியில் எம்மான் என்றது எம் தந்தை என்று ஐயமின்றிப் பொருள்படுதல் காண்க. அடிகள் தமமோடு பிற அடியார்களைச் சேர்த்து எம்மானே என்று பன்மையில் கூறினார். நின்னருள் நாணுமே அருளாய் — அடிகள் முதலடியில் நின்னருள் அளித்து என்றும், 3-வது அடியில் இன்பேயருளி என்றும் கூறியபின், 4-வது அடியில் நின்னருள் நாணுமே அருளாய் என்று

கூறியது முரணுதல் ஆகாதோவெனின், ஆகாது. அடிகள் முதலடியிற்கூறிய 'நின்னருள் அளித்து' என்பது, தமது உடற்பிணிப்பைத் திருப்பெருந்துறைக்கு வந்து நீக்கியதையும், மூன்றுவது அடியில் கூறிய' இன்பேயருளி' என்பது, தமது உயிர்ப்பிணிப்பை நீக்கியதையும் குறிக்கின்றன. நான்காவது அடியில் 'அருள் நாணுமேயருளாய்' என்று அடிகள் கூறியது, தாம் எடுத்த உடலோடு உலகில் வாழ்ந்து கொண்டு இறைவனைப் பிரியாதபடி அவ்வுடலைவிட்டுப் பிரிந்து அவனைச் சேர்ந்திருக்கவேண்டு மென்பதன்பொருட்டு. அடிகள் தமக்கு இறைவன் இந்த அருளை நல்கவேண்டுமென்று திருவாசகத்தில் பலவிடங்களில் கூறியிருக்கின்றார். உடற்பிணிப்பு என்பது உயிர் உடலோடு கூடியிருக்கும்பொழுது உயிருக்குண்டாகும் மலப்பிணிப்பாகும். இந்த மலப்பிணிப்பு உடலிலமைந்திருக்கும் 36 தத்துவங்களும் அவற்றின் நிலைக்களனான தூவெளியில் அடங்கி ஒடுங்கியபொழுது நீங்குகின்றது. இங்ஙனம் உடற்பிணிப்பிலிருந்து நீங்கின உயிருக்கு எனது என்னும் செருக்கு கெடுகின்றது. அப்பொழுதும் உயிரைப்பற்றியிருக்கிற யான் என்னும் செருக்கே உயிர்ப்பிணிப்பாகும். இந்த உயிர்ப்பிணிப்பும் உயிர் அருளிலடங்கியபொழுது நீங்குகின்றது. இங்ஙனம் உயிர்ப்பிணிப்பிலிருந்து நீங்கின உயிர் சிவத்தோடு அத்துவிதமாய்க் கலந்து பேரின்பமுறுகின்றது. அடிகள் இப்பாட்டின் முன் இரண்டு அடிகளில் இறைவன் திருப்பெருந்துறைக்கு வந்து தம்மை ஆட்கொண்டு உடற்பிணிப்பை நீக்கியருளியதைக் கூறி, நான்காம் அடியில் தாம் உலகில் இவ்வுடலோடு பிரிந்திராதபடி தன்னோடு சேர்த்துக் கொள்ளல் வேண்டுமென்று பாடியிருக்கின்றார்.

---

தில்லையில் அருளிய

# ௪௫. யாத்திரைப்பத்து.

---

யாத்திரை என்னும் வடமொழிச்சொல் போதல் என்று பொருள்படும். அது இங்கே உருவகமாய்ப் பக்குவமடைந்த அடியார்கள்

தாம் இதுவரையும் வாழ்ந்துவந்த நிலையில்லாத உலகைவிட்டுப் புறப்பட்டுச் சிவன்கழலை யடையும்பொருட்டுச் சிவலோகத்திற்குப் போதல் என்பதை உணர்த்துகின்றது. அடிகள் தம்மைப்போலப் பக்குவம்வந்த அடியார்களைத் தம்மோடு பொய்யான உலகைவிட்டு மெய்யான சிவன் திருவடிகளைச் சேருதற்குத் தக்கசமயம் இது வென்றுகூறி, அவர்களைச் சிவலோகத்திற்குக் காலந்தாழ்க்காது வரும்படி அழைக்கும் பத்துப் பாட்டுக்களை யுடைய பதிகம் யாத்திரைப்பத்தாகும்.

## அநுபவாதீதமுரைத்தல்.

அநுபவம் என்பது முன் பழகிவந்த அறிவு; அதீதம் என்பது எட்டாதது. அநுபவாதீதமுரைத்தல் என்பது உலகவாழ்க்கையில் பழகிவந்த அறிவுக்கு எட்டாத சிவலோக வாழ்க்கையைப்பற்றி உரைத்தலாகும். அடிகள் தாம் கூவி அழைக்கும் பக்குவப்பட்ட அடியார்களுக்கு அவர்களுடைய உலகவநுபவத்திற்கெட்டாத சிவலோக வாழ்க்கையைப்பற்றி யாத்திரைப்பத்தில் கூறுதலால், யாத்திரைப்பத்து அநுபவாதீதமுரைத்தலைக் கூறுவதாகின்றது.

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

605. பூவார் சென்னி மன்னனெம் புயங்கப் பெருமான் சிறியோமை, ஓவா துள்ளங் கலந்துணர்வா யுருக்கும் வெள் ளக் கருணையினால், ஆவா வென்னப் பட்டன்பா யாட்பட் டீர்வந் தொருப்படுமின், போவோங் காலம் வந்ததுகாண் பொய்விட் டுடையான் கழல்புகவே. கூள.

[ப-ரை] பூ ஆர் சென்னி மன்னன் — பூக்களை அணிந் திருக்கிற முடியையுடைய மன்னனும்; எம் புயங்கப்பெருமான் —

புயங்கமென்னும் நடனத்தைச் செய்கின்ற எங்கள் தலைவனுமாகிய சிவபெருமான்; சிறியோமை — சிறியோமாகிய எங்களை; ஓவாது உள்ளம் கலந்து — இடையறாது எங்களுள்ளத்தில் அத்துவித மாய்க் கலந்து; உணர்வாய் உருக்கும் வெள்ளக் கருணையினால் — உணர்வாக நின்று மெய்யன்பினா லுருகச்செய்யும் எல்லையில் லாத அருளுடையவனாய்; அன்பாய் ஆவா என்னப்பட்டு ஆட்பட் டீர் — ஐயோ என்று அன்பால் அவனால் இரங்கப்பட்டு அடிமைக ளாக ஆட்கொள்ளப்பட்ட அடியார்களே; வந்து ஒருப்படுமின் — என்னோடுவந்து ஒன்றுசேருங்கள்; போவோம் — நாமெல்லாரும் போவோமாக; பொய் விட்டு — (ஏனெனில்) நிலையில்லாத உலக வாழ்வைவிட்டு; உடையான் கழல் புக — நம்மை அடிமைகளாக ஆண்டருளும் சிவபெருமானுடைய திருவடிகளைச் சேர்ந்து இன் புறுதற்கு; காலம் வந்தது — ஏற்றசமயம் வந்துவிட்டது;

[வி-ரை] பூவார்சென்னி மன்னன் எம் புயங்கப்பெருமான் — சென்னி - தலை. அது இங்கே தலையிலணிந்திருக்கிற முடியைக் குறிக்கிறது. புயங்கம் - சிவபெருமான் செய்கிற ஒருவகை நடனம். பாம்பென்று கூறினும் பொருந்தும். உலகினை ஆளும் சிவபெருமா னுக்குத் தன் குடிகளை ஆளும் ஒரு நாட்டு மன்னன் ஒருபுடை உவமை (ஏகதேச உவமை) யாயிருத்தலால் மன்னன் என்றார். பெருமான் — தலைவன். சிறியோமை — சிறியோமாகிய (அடி யார்களாகிய) எங்களை. மலத்தினால் சிறுமை (அணுத்தன்மை) செய் யப்படுதலால் தம்மையும் தம்மைச் சேர்ந்த அடியார்களையும் சிறி யோம் என்றார். ஓவாது உள்ளம் கலந்து — மக்களுயிர்கள் உலக வாழ்வில் மயங்கித் தன்னை மறந்திருக்கும் பொழுது, அவர்களுடைய உள்ளத்தில் அவர்கள் அறியும்படியாக விளங்காமலிருக்கிற சிவபெரு மான், உலகவாழ்வு மயக்கத்தினின்று நீங்கித் தன்னைப் பற்றியிருக் கிற அடியார்களுடைய உள்ளத்தில் அவர்கள் உணரும்படியாக ஒளி யாய் விளங்கி இரண்டறக்கலந்து எப்பொழுதும் இருக்கின்றான் என்பார், ஓவாது உள்ளங்கலந்து என்றார். அடிகள் (36 - 3)ல்

"ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு தொண்டரை உள்ளங்கொண் டார்" என்று கூறியிருத்தல் கண்க. ஓவாது உள்ளங்கலத்தலாவது — உள்ளமானது நினைப்பு மறைப்பின்றி எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்கும்படி இரண்டறக்கலத்தல், நினைப்பு மறைப்பின்றி நினைத்தல் மலநீக்கத்தா லுண்டாகிறது. உணர்வாய் உருக்கும் வெள் ளக் கருணையினால் — உணர்வு என்பது அடியார்கள் தங்களுள்ளத் தில் சிவனை எப்பொழுதும் நினைந்துகொண்டு அவனோடு அத்து விதமாய்க் கலந்துகொண்டிருக்கும் சிவனுணர்வு. இந்தச் சிவ னுணர்வு சிவஞானக்கண் என்று கூறப்படும். இந்தக் கருத்தை "உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால் உணரப் படுவாரோ டொட்டிவாழ்தி" என்று திருநாவுக்கரசு அடிகள் (6 - 25 - 1) ல் கூறியிருத்தல் காண்க. இங்ஙனம் சிவபெருமானை உணரப்பெற்ற அடியார்கள் அவன் தங்கள்மேல் வைத்த பெருங்கருணையினாலே தாங்கள் பேரின்பம் நுகர்தற்குச் செய்துவரும் உபகாரத்தை நினைந்து நினைந்து அன்புமிகுந்து உள்ளம் உருகுதலால் உருக்கி என்றார். இங்ஙனம் சிவபெருமான் அடியார்களுக்குச் செய்து வரும் உபகாரம் அவர்கள்மேல் வைத்த பெருங்கருணையினாலா தலின், வெள்ளக்கருணையினால் என்றார். வெள்ளக்கருணை என் பது இத்துணையென்று அளவுபடாத பேரருள். ஆவா என்னப் பட்டு — ஆவா - இரக்கக் குறிப்பு. உயிர்கள் இத்துணைகாலமும் தன்னைவந்தடையாது துன்பமடைந்து வருந்தினதைப் பற்றிச் சிவபெருமான் கொண்ட இரக்கம். ஆட்பட்டீர் — தெரிநிலைப் பன்மை வினையாலணையும் பெயர் விளிப்பெயராய் வந்தது. சிறியோமை என்று மேலே அடிகள் தம்மை அடியார்களுடன் சேர்த்துத் தன்மைப் பன்மையில் கூறி, பினனே ஆட்பட்டீர் என்று தம்மை அடியாரினின்று பிரித்து முன்னிலைப்பன்மை யில் கூறியது இடவழுவமைதி. அடிகள் தம்மோடுவந்து சேர் தலுக்கு அடியார்களைத் தாம் வேறுநின்று விளித்தலால் அவர் அங் ஙம் கூறினர். வந்து ஒருப்படுமின் போவோம் — ஒருப்படுதல் - போதற்கு ஒன்றுசேர்தல். அடிகள் தம்மிடம் அடியார்கள் வந்து

சேர்ந்தபின் அவர்களோடு ஒன்றுசேர்ந்து போதலைக் குறித்தலால், போவோம் என்று தன்மைப்பன்மையில் கூறினார். பொய்விட்டு உடையான் கழல்புகவே — பொய் என்பது இங்கே ஆகுபெயராய் நிலையில்லாது அடிக்கடி நிலை மாறிக்கொண்டிருக்கிற உலக வாழ்வைக் குறிக்கிறது. ஏகான்மவாதி கூறுதல்போல மித்தை என்பது பொருளன்று. உடையான் — அடியார்களாகிய நம்மை அடிமைகளாகவுடைய ஆண்டவன். இந்தச் சொல்லானது அடியார்கள் ஆண்டவனைச் சேரும் உரிமையைக் குறிக்கிறது. கழல் – இங்கே ஆகுபெயராய்க் கழலையணிந்திருக்கிற திருவடிகளை உணர்த்துகின்றது. திருவடிகள் புகுதலென்பது சிவபெருமானோடு அத்துவிதமாய்க் கலந்து பேரின்பமுறுதலாகும். "அயரா வன்பி னரன்கழல் செலுமே" என்று இப்பேரினப அத்துவிதநிலையைச் சிவஞானபோதம் 11-வது சூத்திரம் கூறுதல் காண்க. புகவே என்பதிலுள்ள ஏ - அசை. காலம் வந்தது — காலம் – ஏற்ற சமயத்தைக் குறிக்கிறது. காண் முன்னிலை அசைச்சொல். அடிகள் இந்தப் பாட்டில் நிலையில்லாத உலகவாழ்வை விட்டுச் சிவன திருவடிகளைச் சேர்ந்து இன்புறுதற்கு ஏற்ற சமயம் வந்ததென்று அடியார்களை விளித்துக் கூறுகின்றார்.

---

606. புகவே வேண்டா புலன்களில்நீர் புயங்கப் பெருமான் பூங்கழல்கள், மிகவே நினைமின் மிக்கவெல்லாம வேண்டா போக விடுமின்கள், நகவே ஞாலத் துள்புகுந்து நாயே யனைய நமையாண்ட, தகவே யுடையான் றனைச்சாரத் தளரா திருப்பார் தாந்தாமே. கூஅ.

[ப-ரை] ஞாலத்து உள்புகுந்து — சிவலோகத்திலிருந்து நிலவுலகத்துக்கு வந்து; நாயே அனைய நமை நகவே ஆண்ட — நாய்க்கு ஒப்பான இழிவுடைய அடியார்களாகிய நம்மை (இருள் நீங்கி) அருள்விளங்கும்படியாக ஆண்டருள்செய்த; தகவு உடையானை — அருளுடைய சிவபெருமானை; சாரத் தளராதிருப்பார்—

அத்துவிதமாய்ச்சார்தற்கு சோர்வடையாமல் ஊக்கமாயிருப்பவர்கள்; தாம் தாமே (இருப்பர்) — பிறிதொன்றின் வயப்படாது சிவபெருமானுடைய திருவடி வியாபகத்துளடங்கித் தனியாக நின்று இன்பமுற்றிருப்பர்; புலன்களில் நீர் புகவே வேண்டா — ஆகையால், ஆட்கொள்ளப்படாத அடியார்களாகிய நீங்கள் உங்கள் மனம் [ஐம்பொறிகள், ஐந்து தொழிற்கருவிகள் (கன்மேந்திரியங்கள்) ஐந்து சூக்குமபூதங்கள், ஐந்து தூலபூதங்கள் இவற்றைக் கருவிகளாகக் கொண்டு] நீங்கள் உலகபோகம் நுகர்தற்கு ஐம்புலன்களில் (விடயங்களில்) செல்லாதிருங்கள்; புயங்கப்பெருமான் பூங்கழல்கள் மிகவே நினைமின் — புயங்கநடனஞ் செய்கின்ற தலைவனாகிய சிவபெருமானுடைய அருட்பொலிவுடைய திருவடிகளை (பசுகரணத்தின்மேற் படும்படி அருளின் வயப்பட்டுநின்ற மனதினாலே அவன் அருட் செயலை நினைந்து) உருகி நினையுங்கள்; மிக்கவெல்லாம் வேண்டா போகவிடுமின்கள் — அங்ஙனம் நினைதலை யொழிந்த பிறவற்றை யெல்லாம் விரும்பாது விட்டொழியுங்கள். (அதாவது எப்பொழுதும் அவனையே நினைந்துகொண்டிருங்கள்); அவ்வாறு செய்வீரானால் நீங்களும் சிவபெருமானுடைய திருவடிப் பேரின்பமுற்று இருப்பீர்கள் என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] ஞாலத்து உள்புகுந்து — இதனால் நான்காவது சத்திநிபாத நிலையடைந்த சகலவர்க்க அடியார்களைச் சிவபெருமான் நிலவுலகத்துக்கு மானுடவடிவில் குருவாய்வந்து ஆண்டருளுவரென்ற உண்மையை அடிகள் குறிகின்றார். அடிகள் (18 - 4)ல் "வான்பழித்திம் மண்புகுந்து மனிதரையாட் கொண்ட" என்று இவ்வுண்மையைக் கூறியிருத்தல் காண்க. நாயே அனைய நமை நகவே ஆண்ட—சிவபெருமானுடைய எண்ணுதற்கெட்டாப் பெருமையை நோக்கி அடிகள் தம்மையும் தம்மைச்சேர்ந்த அடியார்களையும் நாயேயனைய நமை என்று இழித்துக்கூறினார். நகுதல் - விளங்குதல், அதாவது அருளால் விளங்குதல். ஆட்கொள்ளுதலின் பயனாக மலவிருள்நீங்கி அருளொளி விளங்குதலால், நகவே ஆண்ட

என்றார். தகவே உடையான் தனைச்சாரத் தளராது இருப்பார் — தகவே என்பதிலுள்ள 'ஏ' யும் உடையான்தனை என்பதிலுள்ள 'தன்' னும் அசைநிலைகள். சிவபெருமான் அடியார்களை ஆளுதல் அவர்கள்மேல் வைத்த அருளினாலாதலால், தகவுடையான் என்றார். சார்தல் என்பது சிவபெருமானோடு அத்துவிதமாய்க் கலந்திருத்தல். ஒன்றைச்சார்தலும் சார்ந்தவண்ணமாதலும் உயிர்களின் இயல்பு. சாரத்தளராதிருப்பார் என்றதனாலே உலகச்சார்பினை முற்றும்விட்டுச் சிவபெருமானையே அத்துவிதமாய் முழுதும் சார்தல் கூறப்பட்டது. "சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின்" என்றார் திருவள்ளுவர். (குறள் - 359). நண்பகலில் ஞாயிற்றின் ஒளியை முழுவதுஞ்சார்ந்த பளிங்கே முற்றிலும் அவ்வொளியால் நிறைந்து விளங்குதல்போலச் சிவபெருமானை முழுவதுஞ்சார்ந்த உயிரே அவன் அருட்குணங்கள் முழுவதும் பதியப்பெற்றுப் பேரின்பமுறும் என்பது கருத்து. தாந்தாமே (இருப்பர்) — இருப்பர் என்ற வினைமுற்று அவாய் நிலையால் தொக்கிநின்றது. தாம் தாமாகவே இருப்பர். எல்லாப் பொருள்களும் எல்லாவுயிர்களும் தன்னுளொடுங்கியிருக்கிற சிவ பெருமானோடு அத்துவிதமாய்க் கலந்த உயிர்களும் அவனைப்போல எங்கும் வியாபகமுற்று விளங்கி இன்புற்றிருத்தலால் தாந்தாமே (இருப்பர்) என்றார். " இருந்தார் சிவமாகி யெங்குந் தாமாகி" என்று திருமூலர் திருமந்திரம் 127.வது பாட்டில் சிவசித்தரைப் பற்றிக் கூறுதல்காண்க. தாமே என்பதிலுள்ள ஏ — தேற்றம். அதாவது தாம் சிறிதளவும் பிறிதொன்றாகவே இருக்கமாட்டார். புலன்களில் நீர் புகவே வேண்டா — புலன்கள் - விடயங்கள். புகவே என்பதிலுள்ள ஏ - தேற்றம். ஐம்புலன்களில் புகுந்து சிவ பெருமானைச் சார்தற்குத் தடையாயிருத்தலால், புகவே வேண்டா என்றார். வேண்டா - விரும்பாதேயுங்கள். புயங்கப்பெருமான் பூங்கழல்கள் — பூ என்பது இங்கே அருளாலாகிய பொலிவைக் குறிக்கிறது. கழல்கள் - கழல்களை யணிந்திருக்கிற திருவடிகளைக் குறிக்கிறது. "ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப், போக மாய்த் தான்விளைந்த பொற்பினான்" என்று சிவஞானபோதம்

11-வது சூத்திர வெண்பா திருவடிப்பொலிவைக் கூறுதல் காண்க. மிகவே நினைமின் — மிக - மேற்பட. மிகுதல் - கடத்தல். மேற்படுதல், அதாவது பசுகரணத்தில் மேற்படுதல். முன்னாலே புலன்களில் நீர் புகவேவேண்டாவென்று சொன்னபின், அவற்றின் மேற்பட்டு, அதாவது அருள்வயப்பட்ட மனத்தினாலே நினைத்தல் வேண்டும் என்பது கூறப்பட்டது. மிக்கவெல்லாம் வேண்டா போக விடுமின்கள் — வேண்டாது என்னும் தெரிநிலை வினையெச்சம் ஈறுகெட்டு வேண்டா என நின்றது. மிக்கவெல்லாம் வேண்டா போகவிடுமின்கள் என்றதனாலே, சிவபெருமானுடைய திருவடிகளை ஒருமை மனத்தோடு எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருத்தல் கூறப்பட்டது. இந்தப் பாட்டில் பின்னிரண்டடிகளில் அடிகள் சிவபெருமானுடைய திருவடிகளை அத்துவிதமாய்ச் சார்ந்தவர் பிறிதொன்றன் வயப்படாது தாமாகவே இன்புற்றிருப்பர் என்றவுண்மையைக் கூறி, முன்னிரண்டு அடிகளில் அவ்வாறு இன்புற்றிருத்தலுக்கு வேண்டிய வழியை அடியார்களை நோக்கிக் கூறுகின்றார்.

---

613. சேரக் கருதிச் சிந்தனையைத் திருந்த வைத்துச் சிந்திமின், போரிற் பொலியும் வேற்கண்ணாள் பங்கன் புயங்கனருளமுதம், ஆரப் பருகி யாராத ஆர்வங் கூர அழுந்துவீர், போரப் புரிமின் சிவன்கழற்கே பொய்யிற் கிடந்து புரளாதே. கூகூ.

[ப-ரை] பொய்யிற் கிடந்து புரளாதே — (அடியார்களே) துன்பத்தோடுகூடிய நிலையில்லாத உலக வாழ்க்கையில் அழுந்தித் துன்பமடையாமல்; சிவன்கழற்கே போரப்புரிமின் — சிவபெருமானுடைய திருவடிகளுக்கே மிக்க அன்புசெய்யுங்கள்; சேரக் கருதி — (அங்ஙனம் நீங்கள் அன்புவைத்த திருவடிகளை அத்துவிதமாய்) அடைய நினைத்து; சிந்தனையைத் திருந்தவைத்துச் சிந்திமின்—மனதைத் திருத்தமாக அத்திருவடிகளிலே வைத்து (அயரா

அன்பினாலே) நினைந்துகொண்டிருங்கள்; போரிற் பொலியும் வேற் கண்ணாள் பங்கன் — (அவ்வாறு நீங்கள் நினைத்தலால் வரும்பயனாக) போரின்கண்ணே பகைவரை வருத்தி விளங்கும் வேல் போன்று, அடியவரை வருத்துகின்ற மலத்தின்மேற் சீறி அதன் வலியை அழிக்கும் அருட்கண்களையுடைய உமாதேவியை இடது பாகத்தில் வைத்திருக்கிறவனும்; புயங்கள் — புயங்கக்கூத்துச் செய்கிறவனுமாகிய சிவபெருமான்; அருள் அமுதம் — உங்கள் மேல்வைத்த அருளால் அளிக்கின்ற பேரின்பத்தை; ஆரப்பருகி — நிரம்ப நுகர்ந்து; ஆராத ஆர்வம்கூர அழுந்துவீர் — முடிவு பெறாத அன்பு மேலும் மேலும் மீதூர ஆழ்ந்து திளைப்பீர்.

[வி-ரை] பொய்யிற்கிடந்து புரளாதே — பொய் என்பது இங்கே ஆகுபெயராய்ப் பொய்யாயிருக்கிற உலகவாழ்வைக் குறிக்கிறது. துன்பத்தோடுகூடிய நிலையில்லாத உலகவாழ்வு இங்கே பொய்யெனப்பட்டது. கிடத்தல் என்பது, ஒருவன் ஆணவம் மாயை வினைமலங்களின் வலிக்கு எதிர்த்துநின்று அவற்றை அருட்டுணைகொண்டு கடவாது, அவற்றினுளகப்பட்டு உலகவாழ்வில் உடலைப்பற்றி அழுந்துதலைக் குறிக்கிறது. ஓர் ஈயானது தேனுளகப்பட்டு அதனுள் அழுந்திக் கெடுதல்போல. புரள்தல் என்பது, வயிற்றுவலிநோயால் வருந்தும் ஒருவன் அத்துன்பத்துக்கு ஆற்றாது உடலோடுகிடந்து புரளுதல்போல உலகவாழ்விலுள்ள துன்பத்துக்கு ஆற்றாது துன்புறுதலாகும். திருநாவுக்கரசு அடிகள் (4 - 1 - 10)ல் "வேர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்தால் என்வேதனை யான விலக்கி யிடாய்" என்று கூறியிருத்தல் காண்க. சிவன்கழற்கே போரப்புரிமின் — கழல் என்பது இங்கே ஆகுபெயராய்த் திருவடிகளைக் குறிக்கிறது. ஏகாரம் பிரிநிலையை உணர்த்துகிறது. புரிதல்— விரும்புதல், பற்றுவைத்தல். சிவன்கழற்கே போரப்புரிதல் என்பது பொய்யிற்கிடந்து புரளுதலாகிய உலகவாழ்வுப்பற்றினை முற்றிலும் விடுத்துச் சிவனுடைய திருவடிகளுக்கே மிக்க பற்று வைத்தல். சேரக்கருதி — சேர்தல் - இங்கே திருவடிகளை அத்துவிதமாய்ச்

சேர்த்து ஒன்றுதல். சிந்தனையைத் திருந்தவைத்துச் சிந்திமின் — சிந்தனை - சிந்தித்தல், நினைத்தல். அது இங்கே தானியாகுபெயராய் நினைத்தலைச்செய்யும் மனதைக் குறிக்கிறது. அடிகள் "சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்" என்று (8 - 3)ல் கூறுகிற சிந்தனையென்ற சொல் மனமென்று பொருள்படும்படி கூறியிருக்கின்றார். திருந்த — திருத்தமாக என்னும் பொருள்பட வந்தது. வைத்தல் — திருவடிகளிலே வைத்தல் - மனதைத் திருவடிகளிலே வைத்தல் என்பது மனது அகப்புறப் பொருள்களில் செல்லாது தன்முனைப்பின்றி எங்கணும் நிறைந்திருக்கிற திருவடிவியாபகத்துள் அடங்கிநிற்றல். அடிகள் (48-7)ல் "பேசிப், பெருந்துறையே யென்று பிறப்பறுத்தேன் நல்ல, மருந்தினடி யென்மனத்தே வைத்து" என்றும், திருநாவுக்கரசு அடிகள் (4 - 80 - 9)ல் "சித்தத் தெழுந்த செழுங்கம லத்தன்ன சேவடிகள், வைத்த மனத்தவர்" என்றும் (4 - 92 - 1)ல் "சிந்திப் பரியன சிந்திப் பவர்க்குச் சிறந்து செந்தேன், முந்திப் பொழிவன முத்தி கொடுப்பன.........ஐயாற னடித்தலமே" என்றும் கூறியிருத்தல் காண்க. போரிற்பொலியும் வேற்கண்ணாள் பங்கன் — ஒரு நாட்டு மன்னன் தன்கீழ்வாழுங் குடிகளைக் காப்பதற்காகத் தன் நாட்டின்மேல் படையெடுத்துவந்த பகைவரை எதிர்த்துப் போர்செய்தற்கு அவர்கள்மேல் தொடுக்கும் வேல் போல, அருட்சத்தியாகிய உமாதேவியாருடைய கண்கள் தன்னைத்தொழும் அடியார்களை வருத்தும் மலப்பகையைத் தொலைப்பதற்கு அவ்வடியார்கள்மேல் அருட்பார்வை செய்தலால் போரிற்பொலியும் வேற்கண்ணாள் என்றார். அருள் அமுதம் ஆரப் பருகி — அமுதம் இங்கே என்றுமழியாது நிலைத்திருக்கிற பேரின்பத்தைக் குறிக்கிறது. அருள் அமுதம் — அடியார்கள் மேல்வைத்த அருளால் அவர்களுக்கு அளிக்கும் பேரின்பம். அடிகள் (5 - 13)ல் "அருளமுதம் புரியாயேல் வருந்துவன்" என்று கூறியருளியதை நோக்குக. சிறிதுநேரம் பருகினபொழுது வெறுப்பினைச்செய்து துன்பத்தை உண்டாக்கும் சிற்றின்பம் போலல்லாது, என்றும் ஒரு தன்மைத்தாய்த் பெயராதிருக்கும் நிறைவினையுடையதாதலால்.

ஆரப்பருகி என்றார். ஆராத ஆர்வம் கூர அழுந்துவீர்—ஆர்தல்-நிறை தல், அதாவது மேலும் மேலும் பெருகுதலால் முடிவுபெறாதிருத் தல். கூர்தல் - மீதூர்தல், மிகுதல். அழுந்துதல் - பேரின்பமானது திளைக்குந்தோறும் அடியார்களுக்கு மேலும் மேலும் பெருகுதலால் அழுந்துவீர் என்றார். ஆர்வம் கூர அழுந்துதல் — ஆர்வங்கூர் தலால் அழுந்துதலாகும். கூர என்பது காரணப்பொருளில்வந்த இறந்தகால வினையெச்சம். திருவடிகளை அத்துவிதமாய்ச் சேர்ந்த அடியார்கள் சிவபெருமானுடைய அருட்செயல்களை நினையுந் தோறும் நினையுந்தோறும் அவர்களுடைய அன்பானது மேலும் மேலும் மீதூர்ந்து, மீதூர்கிற அவ்வன்பின்பயனாகிற இன்பமும் மேலும் மேலும் பெருகிவளர்தலால், அடிகள் ஆராத ஆர்வங் கூர அழுந்துவீர் என்றார். இவ்வாறு அடியார்கள் திளைக்கும் பேரின்பம் பெருகுதலால் அதனை அளிப்பவரை அடிகள் (31 - 1)ல் "அந்த மிலா ஆநந்தம்" என்று கூறினார். அடிகள் இந்தப்பாட்டில் போரப் புரிமின் என்றதனாலே அடியார்களுடைய வேட்கையும், சிந்தனை யைத் திருந்தவைத்துச் சிந்திமின் என்றதனாலே அடியார்களுடைய அறிவும், சேரக்கருதி என்றதனாலே அடியார்களுடைய செயலும் ஒருங்கே சிவபெருமானுடைய திருவடிகளிலே அத்துவிதமாய் ஒன்றிநிற்றல் வேண்டுமென்பதையும், 2, 3 அடிகளாலே அவ்வாறு அவர்கள் சிவபெருமானுடைய திருவடிகளில் ஒன்றிநிற்றலால் முடி விலாத பேரின்பத்தை அடைவார்களென்பதையும் அடியார்களை நோக்கிக் கூறியருளினார்.

---

தில்லையில் அருளிய

# சசு. படையெழுச்சி.

---

படை என்பது போர், எழுச்சி - புறப்படுகை. படையெழுச்சி என்பது போருக்குப் புறப்படுகை. போர் என்பது இங்கே உலகப் போர்; அதாவது உலகவாழ்க்கையின் அநுபவப்பயனாக அதனை

வெறுக்கும் பக்குவமுடைய தொண்டர்கள் மாயை வினை ஆணவம் என்னும் மும்மலகாரியங்களோடு எதிர்த்து அவற்றைவென்று இன்பப்பதியாகிய சிவலோகத்தை யடைதற்குச் செய்யும் போர். இப்போரை வெல்லுதற்குக் கருவியாயிருப்பது அருளாகிய வாட்படை; போர்வீரர்களா யிருப்பவர்கள் சிவபெருமானுடைய தொண்டர்கள் அல்லது அடியார்கள். அடிகள் இன்பவுலகமாகிய சிவலோகத்தைக் கைப்பற்றி ஆள்வதற்குத் தொண்டர்களைப் போருக்குப் புறப்படும்படிக் கூறுதல் படையெழுச்சி யாகும்.

## பிரபஞ்சப் போர்,

பிரபஞ்சம் என்பது உலகம்; பிரபஞ்சப்போர் என்பது உலக வாழ்க்கையில் அதனைவெறுக்கும் பக்குவம்வந்த மக்கள் இறைவனுடைய திருவடிகளையடைதற்கு அருளாகிய படைகொண்டு, மும்மலக்காரியங்களோடு எதிர்த்து அவற்றை வெல்வதற்குச் செய்யும் எதிர்ப்பு. இவ்வெதிர்ப்பினை உண்மையாகச் செய்கிறவர்களுக்கு இறைவன் அவர்களுடனிருந்து துணைசெய்தலால் அவர்கள் வெற்றி பெறுவது உறுதியாகும். இந்த எதிர்ப்பினைச்செய்து சிவலோகம் அடைதற்குத் தொண்டர்களை அடிகள் ஏவுதலைக் கூறுகிற படையெழுச்சிப் பாட்டுக்கள் இரண்டும் பிரபஞ்சப்போரைக் கூறுவதாகின்றது.

[கலி விருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

616 தொண்டர்காள் தூசிசெல்லீர் பத்தர்காள் சூழப்போகீர்
ஒண்டிறல் யோகிகளே பேரணி யுந்தீர்கள்
திண்டிறற் சித்தர்களே கடைக்கூழை சென்மின்கள்
அண்டர்நா டாள்வோம்நாம் அல்லற்படை வாராமே. ௱

[ப-ரை] தொண்டர்காள் — இறைவனுக்குப் பணிசெய்யும் சரியையாளரே!; தூசிசெல்லீர் — (நாம் மும்மலகாரியங்களோடு செய்யும் எதிர்ப்பில் அவற்றை வெல்லும்பொருட்டு) நீங்கள் முன்னணியாகச் செல்லுங்கள்; பத்தர்காள் — கிரியையாளராகிய அன்பர்களே!; சூழப்போகீர் —நீங்கள் நாலு பக்கங்களிலும் சூழப் படைவகுத்துச் செல்லுங்கள்; ஒள் திறல் யோகிகளே — (சிவோகம்பாவனையில்) ஒளி விளங்கப்பெற்று அதனாலே அருள்வலியுடைய யோகிகளே!; பேரணி உந்தீர்கள் — நீங்கள் பெரும்படையாக எழுந்து செல்லுங்கள்; திண்திறல் சித்தர்களே! – மிக்க மனவலியுடைய ஞானிகளே!; கடைக்கூழை சென்மின்கள் — நீங்கள் கடைசிப் படைவகுப்பாகச் செல்லுங்கள்; அல்லற்படை வாராமே — (இவ்வாறு நாம் படைவகுத்து மும்மலகாரியங்களை எதிர்ப்போமாயின்) நம்மைப் பிறவித்துன்பமாகிய படைவகுப்பு வந்துதாக்கித் தடைசெய்யாதபடி; நாம் அண்டர்நாடு ஆள்வோம் — நாம் சிவபிரானது இருப்பிடமாகிய சிவலோகம் போய்ச்சேர்ந்து அங்குப் பேரின்பத்தை நுகர்ந்துகொண்டிருப்போம்.

[வி-ரை] தொண்டர்காள் தூசிசெல்லீர் — தொண்டர்காள் என்பது சரியைப்பணியாளரைக் குறிக்கிறது. இது விளிப்பெயர். தூசி — முன்னணி. பத்தர்காள் என்ற விளிப்பெயர் கிரியைப்பணியாளரைக் குறிக்கிறது. இவர்கள் சரியைப்பணியாளரைப் பார்க்கிலும் மனவலியுடையராதலின், சூழப்போகீர் என்றார். சூழப்போகுதல் — முன்னணியிற்செல்லுஞ் சரியையாளர் பின்செல்லாதபடி செலுத்துதற்பொருட்டாகும். ஒள் திறல் யோகிகளே பேரணி உந்தீர்கள் — யோகிகள் சிவோகம்பாவனை உறைப்பினால் தங்களிடத்தில் அருளொளியைப் பெருக்கியதனால் அருள்வலியுடையவர்களாதலின் ஒண்டிறல் யோகிகளே என்றார். அணி—படைவகுப்பு, படைவரிசை. பேரணி — பெரும்படைவகுப்பு; உந்துதல் — எழுந்து செல்லுதல். உந்தீர்கள் — என்பதில், ஈர் முன்னிலைப் பன்மை விகுதி. கள் – விகுதிமேல் விகுதி. திண்திறல் சித்தர்களே

கடைக்கூழை செல்மின்கள் — சித்தர்களாவார் தங்கள் சிந்தையிலே சிவனையே இடையறாது நினைந்துகொண்டிருக்கும் ஞானிகள். இவர்கள் ஞானசித்தி அடைந்தவர்கள். இவர்கள் முன் கூறப்பட்ட சரியை கிரியை யோகம் என்ற மூவகைப் பணியாளரைப் பார்க்கிலும் மிக்க அருள்வலி யுடையராதலின், திண்திறல் யோகிகளே என்றார். திண்மையும் திறலும் வலிமையைக் குறிப்பன. கூழை—பிற்படைவகுப்பு. செல்மின்கள் என்றதில் மின் முன்னிலைப் பன்மை விகுதி. கள் — விகுதிமேல் விகுதி. இக்காலப் போரில் படைவகுத்தல்போல, அருள்வலி குறைந்தவர்களை முற்படை வகுப்பிலும், அருள்வலி மிகுந்தவர்களைக் கடைப்படை வகுப்பிலும் ஏனைய கிரியையாளரையும் யோகிகளையும் இரண்டாவது மூன்றாவது படைவகுப்பணிகளாகவும் இப்பாட்டில் கூறியிருத்தலை அறிக. அல்லற்படை வாராமே நாம் அண்டர்நாடு ஆள்வோம் — அல்லல்-துன்பம், இங்கே மும்மலகாரியங்களால் உண்டாகும் பிறவித்துன்பத்தை உணர்த்துகின்றது. அத்துன்பத்தை மேலேகூறப்பட்ட நாலுவகைப் படைவகுப்புகளையும் எதிர்க்கும் படையாக உருவகஞ் செய்தார். அல்லற்படை — அல்லலாகிய படை. வாராமே என்பதில் 'மே' என்பது வருங்கால வினையெச்சவிகுதி. வாராமே என்றது இங்கே வந்து நம்மை அண்டர்நாடு செல்லுதற்குத் தடை செய்யாமல் என்னும் பொருள்பட வந்தது. அவ்வாறு அது நம்மைத் தடைப்படுத்தாதிருத்தற்கு அதனை வென்று செல்லவேண்டும் என்பது கருத்து. அண்டர்நாடு ஆள்வோம் — அண்டன் என்பது எப்பொழுதும் உயிர்களை விட்டுப்பிரியாது அண்டியிருக்கும் சிவபிரான். இங்கே அது உயர்வுப் பன்மையில் கூறப்பட்டது. அண்டர்நாடு என்பது சிவபிரானது சாலோகபதவியாகிய சிவலோகத்தைக் குறிக்கிறது. ஆளுதல் — சிவலோகத்தில் அங்குள்ள அடியார் கூட்டத்தோடு பேரின்பம் நுகர்ந்துகொண்டிருத்தல்.

---

## திருப்பெருந்துறையில் அருளிய

# சஎ. திருவெண்பா.

திருவெண்பா என்பது திரு என்னும் அடைமொழிச்சொல்லோடு வெண்பா என்னும் சொல் சேர்ந்து ஆகியது. வெண்பா என்பது தமிழ்மொழி யாப்பிலக்கணப்படியுள்ள நான்கு முதன்மையான பாக்களிலொன்று. வெண்பா என்னும் பாவில் அணைந்தோர் தன்மைப் பதிகப்பாட்டுக்கள் பாடப்பட்டிருத்தலால் அணைந்தோர் தன்மை திருவெண்பா என்று கூறப்பட்டது. இவ்வெண்பாவில் இரண்டாமடியில் நாலாஞ்சீர் தனிச்சீராய் வருதலால் இப்பதிகப் பாட்டுக்கள் முழுவதும் நேரிசை வெண்பா இனத்தைச்சேர்ந்தவை.

## அணைந்தோர்தன்மை.

அணைந்தோர்தன்மை என்னும் சொற்றொடர் அணைந்தோர், தன்மை என்னுமிரண்டு சொற்களாலாகியது. அணைந்தோர் என்பவர் இறைவனுடைய திருவடிகளைச்சார்ந்து சிவப்பேறு பெற்றபின் உலகிலே தாம் எடுத்த உடலோடு வாழும் சீவன்முத்தர்கள். தன்மை என்பது இயல்பு. அணைந்தோர்தன்மை என்பது சீவன்முத்தர்கள் தாம் எடுத்த உடலோடு அவ்வுடல் நீங்குமளவும் உலகில் வாழுங் காலத்தில் தம்மை ஓரோவழி பிராரத்துவவினைமலவாசனை தாக்கும் பொழுது, உலகக்காட்சியில் நழுவாது சிவக்காட்சியில் நிலைபெற்றிருத்தற்பொருட்டுத் தங்கள் வேட்கை அறிவு செயல்களை நிகழ்த்துதற்கண் செல்லுமிடங்கள் இவையெனக் கூறப்படுமியல்பாகும். அணைந்தோர்தன்மை சிவஞானபோதம் 12-ம் சூத்திரத்திலும், சிவஞானசித்தியார் 12-ம் சூத்திரத்திலும், திருவருட்பயன் 10-வது அதிகாரத்திலும் கூறப்பட்டுள்ளது. திருவெண்பாப் பாட்டுக்கள் பதினொன்றும் அணைந்தோர்தன்மையைக் கூறுதலால் திருவெண்பா — அணைந்தோர்தன்மையைக் கூறுவதாகின்றது.

## திருவாசக அருள்முறைத் திரட்டு.

### [நேரிசை வெண்பா]

திருச்சிற்றம்பலம்.

---

617. வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகா தென்செய்கேன் — செய்ய
திருவார் பெருந்துறையான் தேனுந்து செந்தீ
மருவா திருந்தேன் மனத்து. ௬க.

[ப-ரை] செய்ய — செவ்விதான; திருவார்பெருந்துறையான் — அருள்பொருந்திய திருப்பெருந்துறையி லிருக்கிறவனும்; தேன் உவந்து செந்தீ — நிலையான இன்பத்தை உயிர் நுகரும்படி செலுத்துகின்ற சிவந்தநிறமுடைய ஒளிப்பொருளா யிருக்கிறவனு மாகிய சிவபெருமானை; மனத்து — என்னுடைய உள்ளத்திலே; மருவாது இருந்தேன் — அத்துவிதமாய்க்கலந்து சேராதிருந்தேன்; வெய்யவினை இரண்டும் வெந்து அகல — ஆகையால், கொடிய நல்வினை தீவினைகளைச் செய்விக்கின்ற வினைமலமும் (மாயாமலமும் ஆணவமலமும்) வலியற்றுச் செயலொழியும்படியாக; மெய் உருகி—எனது உடல்முழுதும் நெக்குநெக்காக அன்பினலேயுருகி; பொய்யும் பொடி ஆகாது — நிலையில்லாத உலகவாழ்வுப் பற்ருனது கெட்டு நீங்காமலிருக்கிறது; என்செய்கேன் — ஐயோ நான் என்னசெய்வேன். சிவபெருமானே நீ என்னைக் காத்தல்வேண்டு மென்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] செய்ய திருவார் பெருந்துறையான் — செய்ய— செம்மை என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புவினைப் பெயரெச்சம். அது பெருந்துறையான் என்னும் பெயரைக்கொண்டு முடிந்தது. செம்மை என்பது ஒருவருடைய வியாப்பிய அறிவு வேட்கை (அன்பு) செயல் மூன்றும் ஒன்றுக்கொன்று ஒத்துநின்று

சிவபெருமானுடைய வியாபக அறிவு வேட்கை செயல்கள் மூன்றி னுள்ளும் அடங்கிநிற்கும் பண்பு. இந்தச் செம்மைப்பண் புடைய வரையே சிவபெருமான் தனது திருவடிவியாபகத்து ளடக்கிப் பேரின்பம் நுகரும்படி செய்கின்றனாதலின், செய்ய திருவார்பெருந் துறையான் என்றார். திரு-அருள், ஆர்தல்-பொருந்துதல். திருவார் பெருந்துறையான் - அருளோடு பிரிப்பின்றிக் கூடிநிற்கிற பெருந் துறையான். அடிகள் பெருந்துறையென்று இறைவன் தமக்கு அருட்குரவனாய் வந்து தீக்கைசெய்த இடத்தை குறிப்பிடுகின்றார். தேன் உந்து செந்தீ — தேன் என்பது இங்கே பேரின்பத்தைக் குறிக்கிறது. தேனானது நோய்க்கு மருந்தாயிருப்பதுடன் நாவிற்கு இனிய சுவையையும் தருகின்றபொருளா யிருப்பதுபோல, பேரின்ப மானது மலநோய்க்கு மருந்தாயிருப்பதுடன் உயிர்கள் நுகரும் பொருளாயு மிருத்தலின், அது பேரின்பத்துக்கு உவமையாகக் கூறப்பட்டது. உவமையாகுபெயர். உந்துதல் - செலுத்துதல். மேலேகூறப்பட்ட செம்மைப் பண்புடையவர்களுக்குச் சிவபெரு மான் அவர்கள் பேரினபம் நுகரும்படி அவ்வின்பத்தை உயிரோடு உடனாய்நின்று செலுத்துதலால், தேனுந்து என்றார். அடிகள் (10 - 3)ல் "நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறும் எப்போ தும், அனைத்தெலும் புண்ணெக ஆநந்தத் தேன்சொரியுங், குனிப் புடையான்" என்று கூறுதல் காண்க. செம்மை + தீ = செந்தீ. செம்மை சிவப்புநிறத்தையும் தீ ஒளியையுங் குறிக்கின்றன. சிவ பெருமான் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்த தூவெளியில் (ஞானாகாசத்தில்) செந்தாமரை மலர்போலும் அல்லது பவளம் போலும் சிவந்தநிற ஒளியாகிய மேனியுடையவனா யிருத்தலால் செந்தீ என்றார். அடிகள் (5 - 26) ல் "செந் தாமரைக்கா டனைய மேனித் தனிச்சுடரே" என்று சிவபெருமானை விளித்துக் கூறி யிருத்தல் காண்க. மனத்து — மனம் + அத்து = மனத்து; அத்து - சாரியை. அது நிலைமொழியீற்று மகரவொற்றும் வருமொழியிலி லுள்ள அகரவுயிரும் கெட்டு மனத்து எனநின்றது. மனத்தி னிடத்து என ஏழாம்வேற்றுமையுருபு விரித்துரைக்க. மருவாது

இருந்தேன் — மருவுதல் - அத்துவிதமாய்க் கலந்துசேர்தல். ஒன்றனைச் சார்தலும் சார்ந்தவண்ணமாதலும் உயிரின் இயற்கைப் பண்பாதலின் சிவபெருமானைச் சேர்ந்தாலல்லது உயிரின்மலம் நீங்காது என்பார், மருவாதிருந்தேன் என்றார். "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச் — சார்தரா சார்தரு நோய்" என்று திருவள்ளுவர் 359-வது குறளில் இக்கருத்தைக் கூறியருளினார். வெய்ய வினை இரண்டும் வெந்து அகல — வெய்ய - வெம்மையென்னும் பண்படியாகப்பிறந்த குறிப்புவினைப் பெயரெச்சம். வினையிரண்டும் என்றது நல்வினை தீவினைகளை. வினையிரண்டும் என்பது நல்வினை தீவினைகளுக்குக் காரணமாயிருக்கிற வினைமலத்தைக் குறிக்கிறது. இனம்பற்றி வினைமலம் தொழிற்படுதற்குக் காரணமாயுள்ள ஆணவமலத்தையும் உடன் கொள்ளுக. வெந்து எனபது வினை வலிமுழுதும் அறுதலையும், அகல என்பது வலியறுதலால் செயல் ஒழிதலையுங் குறிக்கின்றன. அகல என்பது செய என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சமாய்க் காரியப்பொருள் தந்துநின்றது. அது உருகியெனனும் வினையெச்சத்தைக் கொண்டுமுடிந்தது, குளம் நிறைய மழைபெய்து என்றாற்போல. ஒருவருக்கு வினைமலம் நீங்கினாலொழியப் பேரின்பத்துக்குக் காரணமான மெய்யறிவு தோன்றாதாதலின், வெய்ய வினையிரண்டும் வெந்தகல என்றார். சிவஞானபோதம் 12-வது சூத்திர வெண்பாவில் "வினையா லசத்து விளைதலான் ஞானம், வினைதீரி னன்றி விளையா" என்று கூறப்பட்டிருத்தல் காண்க. மெய் உருகி — உடல்முழுதும் உருகுதலால் அதனை ஆக்கும் ஐம்பெரும் பூதங்களும் நுண்பொடியாகி அவை பிறத்தற்கு நிலைக்களனான தூவெளியில் ஒடுங்குகின்றன. அத்தூவெளியொளி உடலிலும் மனத்திலும் நிரம்புதலால் அவை பசுகரணத்தன்மை கெட்டுச் சிவகரணத்தன்மை அடைகின்றன. இங்ஙனம் மெய் உருகுதல் மெய் சிவகரணத்தன்மையடைந்து வினைமலம் ஒழிதற்குக் காரணமாயிருத்தலால் வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகி என்றார். அடிகள் (40 - 3)ல் "என்புள்ளுருக்கி இருவினையை யீடழித்து" என்று கூறியிருத்தல் காண்க.

பொய்யும் பொடி ஆகாது — பொய் என்பது இங்கே நிலையில்லாத உலகவாழ்வுப் பற்றைக் குறிக்கிறது. பொய் என்ற தமிழ்ச் சொல் வடமொழியில் அசத்து (unreality) என்று கூறப்படும். பொடி ஆதல் — தடித்த பருப்பொருளொன்று பொடியாகி அணுக்களாகப் பிரிதலாலே வலியழிந்து கெடுகின்றதாதலின், பொடியாகாது என்பது அழியாது (அதாவது வலிகெட்டுநீங்காது) என்ற பொருளில் வந்தது. அருளுக்கு அறிகுறியாகிய திருநீறானது உலகவாழ்வுப் பற்றைக் கெடுத்தலால், அதற்குப் பொடியென்று பெயர் வந்தது. என்செய்கேன் — செய்கேன் - ஒன்றுஞ்செய்தற்கு வல்லேனல்லேன் என்ற பொருளில் வந்தது. அடிகள் இந்தப்பாட்டில் சிவ பெருமானோடு அத்துவிதமாய்க் கலந்து ஒன்றுபட்டாலன்றி ஒருவருக்கு மும்மலங்களும் ஒழியாவென்ற உண்மையைத் தம்மேல் வைத்துக் கூறினார். இந்தவுண்மையை ஒருவர் மும்மலங்களினின்றும் நீங்கி மெய்யறிவு பெற்றாலொழியச் சிவபெருமானோடு அத்துவிதமாய்க்கலந்து பேரின்பமடைய முடியாதென்று மாற்றியும் கூறலாம். நான் — தோன்றாஎழுவாய், மருவாதிருந்தேன் - பயனிலை. பொய் - எழுவாய், பொடியாகாது - பயனிலை. நான் - தோன்றாஎழுவாய், செய்கேன் - பயனிலை. இந்தப்பாட்டில் மூன்று எழுவாய்களும் மூன்று பயனிலைகளும் உள.

---

620. முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் — தென்னன்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரந் தீர்க்கும் மருந்து. ௯௨.

[ப-ரை] தென்னன் — பாண்டிப்பிரானும்; பெருந்துறையின் மேய பெருங்கருணையாளன் — திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் திருக்கோயில்கொண்டு வீற்றிருக்கின்ற பேரருளுடையவனுமாகிய சிவபெருமான்; பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்—

(நான் செய்த மெய்த்தவப்பயனாக இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் அடைந்தபொழுது) எனது ஆகாமியவினை வரும்பிற விக்கு வித்தாகாமற்செய்து பிறவியையொழித்த பெரும்புகழையு டையவனாயிருக்கின்றான்; முன்னைவினை இரண்டும் — அதன்பின் நான் முன் எண்ணிலாத பிறவிகடோறும் ஈட்டிச் சேர்ந்துகிடந்த புண்ணிய பாவங்களாலாகிய சஞ்சித வினைத்தொகுதியை; வேர றுத்து — (தான் எனக்கு ஞானதீக்கைசெய்து எனதுள்ளத்தை அருளொளியுருவாக விளங்கச் செய்தமையால்) அடியோடே கழி யும்படிசெய்து; முன் நின்றான் — எனக்கு முன்னே (மானிட வடிவில் ஒளிப்பிழம்பாய்) நின்று காட்சிகொடுத்தான்; வருந்துயரம் தீர்க்கும் மருந்து—(அதுவன்றி நானெடுத்தவுடலோடு இவ்வுலகில் சீவன்முத்தனாய் வாழுங்காலத்தில், உடலூழாயிருந்து) துன்பத்திற் கேதுவாயுள்ள பிராரத்துவவினை மலவாதனைநோயைத் தீர்க்கிற மருந்தாயுமிருக்கின்றான். சிவபெருமான் என்பிறவி வேரோடே அறும்படி எனக்குச் செய்த பேருதவியை நான் என்னென்று சொல்லுவேன் என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] அடிகள் (8 - 10)ல் கூறுகிறபடி, சிவபெருமான், 'மண்ணாளு மன்னவர்க்கு மாண்பாகி நின்றானும், தண்ணார் தமிழ ளிக்கும் தண்பாண்டி நாட்டானு' மாய் இருத்தலால், அடிகள் அவரைத் தென்னன் என்று கூறினார். இதே கருத்தில் அடிகள் சிவபெருமானைப் 'பாண்டிப் பிரானென்று' கூறுதலையுங் காண்க. (36 - 5). சிவபெருமான் திருப்பெருந்துறைக்குவந்து தம்மைப் பேரருளினால் ஆண்டமையை நினைந்து அடிகள், பெருந்துறையின் மேய பெருங்கருணையாளன் என்றார். எடுத்த உடலால் நுகரும்படி முகந்துகொள்ளப்பட்ட பிராரத்துவ வினைப்பயன் நுகர்வுக்குச் செய் யப்படும் முயற்சியானது பிராரத்துவவினைப்பயன கழிந்துபோவது மல்லாமல் வரும்பிறவிக்கு வித்தாகவுமுள்ளது. விருப்பு வெறுப்புக் களோடுகூடிய தன்முனைப்பின்றி அம்முயற்சி செய்யப்படும்பொ ழுது, அது வரும்பிறவிக்கு வித்தை உணடுபண்ணாமலிருக்கிறது.

இங்ஙனம் வரும்பிறவிக்கு வித்தாகாமல் செய்யப்படும் முயற்சியானது அடிகள் தாம் செய்த மெய்த்தவப்பயனாக உண்டானபொழுது சிவபெருமான் தமக்குப் பின்னைவரும் பிறவியை அறுத்தருளினமையால், பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் என்றார். "உணக்கிலாததோர் வித்து மேல்விளை யாம லென்வினை யொத்தபின், கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே," என்று (30 - 1)ல் அடிகள் இக்கருத்தைக் கூறியருளினார். பக்குவப் பட்ட அடியார்களுடைய பிறவியறுத்தலே சிவபெருமானுடைய புகழாதலின், அவனைப் பேராளன் என்றார். பேர் = புகழ், கீர்த்தி. அடிகள் சிவபெருமானுடைய புகழைக் கீர்த்தித்திருவகவலில் கூறுதல்காண்க. வினைத்தொடர்பு நீக்கத்துக்கு இது முதற்கண் நிகழ்தலால், பதவுரையில் இது முதலாவது கூறப்பட்டது. வினையிரண்டும் என்பது சஞ்சிதவினையைக் குறிக்கிறது; நல்வினை தீவினைகளின் கருத்துக்களாகிய புண்ணியபாவங்களால் ஆக்கப்படுதலால் ஆகாமியவினை அற்றபின் சஞ்சிதவினைதொகுதி முழுவதும் தீக்கையால் நீக்கப்படுதலால், வினையிரண்டும் வேரறுத்து என்றார், (8 - 18)ல் — "சீரார் பெருந்துறையில், எளிவந் திருந்திரங்கி யெண்ணரிய இன்னருளால், ஒளிவந்தென துள்ளத்தி னுள்ளே யொளிதிகழ, அளிவந்த அந்தணனைப் பாடுதுங்கா ணம்மானாய்" என்றும், (5—91)ல் ஈறி லாதநீ யெளியை யாகிவந் தொளிசெய் மானுட மாக நோக்கியும்" எனறும், அடிகள் சிவபெருமான் தமக்குத் தீக்கைசெய்ததைப்பற்றிக் கூறுதல் காண்க. வருந்துயரம் என்பது மும்மலமும் நீங்கிய சீவன்முத்தர்களுக்குத் தாம் எடுத்தவுடலில் பிராரத்துவவினை மலவாதனையால் ஒரோவழி சிவக்காட்சி மறைந்து உலகம் காட்சிப்படுதலும், அதனால் மெய்யுணர்வு சிறிது நீங்கி விபரீதவுணர்வுண்டாதலுமாகிய துன்பங்கள். இறைவனோடு அத்துவிதமாய்க் கலந்துநின் றுணரும் மெய்யுணர்வில் உறைத்துநிற்றலால் பிராரத்துவவினை மலவாதனை நீங்குதலால், இறைவனை மருந்து என்றார். மூவகை வினைகளின் தொழிற்பாட்டைப்பற்றி இப் பதிகம் முதலாவது பாட்டுக்கு இந்நூல் 100-வது பாட்டில் கூறிய

விளக்கவுரையைக் கொள்க. அடிகள் இப்பதிகம் முதலாவது பாட்டில் சீவன்முத்தர்நிலையில் தமது அறிவு நிகழுமிடத்தையும், இரண்டாவது பாட்டில் தமது வேட்கை நிகழுமிடத்தையும், மூன்றாவது பாட்டில் தமது செயல் நிகழுமிடத்தையுங்கூறி, இப்பாட்டில் இறைவன் தமது ஆகாமியவினையை வரும்பிறவிக்கு வித்தாகாமற் செய்தும், சஞ்சிதவினைத்தொகுதியை முற்றிலும்நீக்கியும், இம்மையிலேயே தமக்கு வீட்டின்பம் அருள்செய்தாரென்று கூறுகின்றார்.

---

621. அறையோ அறிவார்க் கனைத்துலகும் ஈன்ற
மறையோனு மாலும்மால் கொள்ளும் — இறையோன்
பெருந்துறையுள் மேய பெருமான் பிரியா
திருந்துறையு மென்னெஞ்சத் தின்று. ௱௬.

[ப-ரை] அனைத்துலகும் ஈன்ற மறையோனும் மாலும் — உலகம் முழுதும் படைக்கும் ஆற்றலுடைய நான்முகனும்(அதனைக் காக்கும் ஆற்றலுடைய) திருமாலும் ஆகிய சிறந்த தேவர்களிருவரும்; மால்கொள்ளும் இறையோன் — (முறையே முடியும் அடியும் தேடிக்காண முயன்றும் காணமாட்டாது) மயங்குதற்கு ஏதுவாயுள்ள முழுமுதற்றலைவனும்; பெருந்துறையுள் மேயபிரான் — திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் வீற்றிருக்கின்ற எனது தலைவனுமாகிய சிவபெருமான்; இன்று — (நான் எடுத்த வுடலோடு சீவன்முத்தனாயிருக்கும்) இந்தக்காலத்தில்; என் நெஞ்சத்து — எனதுள்ளத்தில்; பிரியாதிருந்து உறையும் — என்னை விட்டுச் சிறிதுபொழுதும் நீங்காது (அவன் என்னோடு அத்துவிதமாய்க் கலந்து நான் பேரின்பமுணரும்படி) வீற்றிருந்து அருளுவன்; அறிவார்க்கு — (நான் இங்ஙனம் மலவலியை முற்றிலும் ஒழித்துப் பேரின்பம் உணர்ந்த செய்தியைச் சொல்லுவதன்றி அப்பேரின்பவுணர்வை) அறியவிரும்புகிற அடியார்களுக்கு; அறையோ (முடியும்)—சொல்லியறிவித்தல் முடியுமோ? (முடியாதென்றபடி).

நான் உணரும் பேரின்ப உணர்வை நான் என்னுள் உணரலாமே யன்றிப் பிறருக்குச் சொல்லமுடியாது என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] அனைத்துலகுமீன்ற மறையோனும் என்று நான்முகனுடைய ஆற்றல் கூறவே, அவனின்மேலாய் உலகம் முழுவதையும் காக்கும் திருமாலுடைய ஆற்றலும் கூறப்பட்டவாறாயிற்று. மால்–மயக்கம், இறைவனுடைய முடியும் அடியும் காணமாட்டாது மயங்குதல். உலகம் முழுவதும் படைக்கு மாற்றலும் காக்குமாற்றலுமுடைய தேவர்களிருவரும் காணுதற்கரிய சிவபெருமான் தாம் செய்த மெய்த்தவப்பயனாகத் தமக்கு எளியனாய்வந்து தமதுள்ளத்தில் அவனையுணரும்படி எப்பொழுதும் வீற்றிருக்கின்றான் என்று தமது வெற்றிப்பாட்டையும் அதனால்வரும் மகிழ்ச்சியையும் உலகிலுள்ள மக்களுக்கு அவரறியும்படி கூறுவார், 'அனைத்துலகு மீன்ற மறையோனும் மாலும் மால்கொள்ளும் இறையோன் பிரியாதிருந்துறையும் என்னெஞ்சத்தின்று' என்றார். திருநாவுக்கரசு அடிகள் "தேடிக் கண்டுகொண்டேன் திருமாலொடு நான்முகனும், தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே, தேடிக் கண்டுகொண்டேன்," என்று (4 - 9 - 12)ல் கூறியருளினார். உலகிலுள்ள ஏனைய சமயங்களும் கொள்கைகளும் இறைவனைக் காணமுடியாதென்று கூறுகின்றன. சைவசமயம் ஒன்றுமாத்திரமே பாசஞானத்தினாலும் பசுஞானத்தினாலும் காணமுடியாத கடவுளைப் பதிஞானத்தினாலே மக்கள் இம்மை வாழ்விலே காணமுடியுமென்று கூறி, அதற்கேதுவாயுள்ள சாதனங்களையும் கூறுகின்றது. இச்சாதனங்களைப் பழகுகிறவர்கள் கடவுளைக்கண்டு இன்புறுதல் கண்கூடு. ஈன்ற என்பது இயல்புபற்றி இறந்தகாலத்தாற் கூறப்பட்டது. இறையோன் என்றது சிவபெருமான் பொதுவாக எல்லாவுயிர்கட்கும் முழுமுதற்றலைவனாயிருத்தலையும், பெருந்துறையின்மேய பெருமான் என்றது அவ்விறைவனே திருப்பெருந்துறையில் வந்து தம்மை ஆண்டருளிய தலைவன் என்பதையுங் குறிக்கின்றன. இறையோன், பெருமான் என்பன ஒரு பொருட்சொற்கள். இன்று = இக்காலம்: அதா

வது சீவன்முத்தனாயிருக்கும் காலம். பிரியாதிருந்துறையும் என்பது இறைவன் எப்பொழுதும் மக்களெல்லாருடைய உள்ளத்திலும் பிரியாதிருப்பினும், மலவலி வேரோடு அழிந்தபின் அருளொளியாய் விளங்கும் தமதுள்ளத்தில் தாமுணரும்படி விளங்கித் தோன்றுகிறான் என்ற பொருளைக் குறிக்கிறது. அறிவார் – அறியவிரும்புகிறவர். அறிவார்க்கு அறையோ என்றதனாலே நான் பேரின்பவுணர்வை உணர்ந்தேன் என்ற செய்தியைச் சொல்லமுடியுமேயன்றி அது எப்படி இருக்குமென்று நான் சொல்லமுடியாதே என்னசெய்வேனென்று தாம் பிறருக்குச் சொல்லளவில் எடுத்துக் கூற முடியாமையைக் கூறியவாறாயிற்று.

எங்ங னிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ங னிருந்ததென் றுந்தீபற
அறியு மறிவதன் றுந்தீபற.

என்று திருவியலூர் - உய்யவந்ததேவ நாயனார் திருவுந்தியார் 4-வது பாட்டில் இக்கருத்தைக் கூறியது காண்க. அறை — அறைதல்; முதனிலைத்தொழிற்பெயர். அறைதல் என்ற சொல்லுக்குப் பின் முடியும் என்ற சொல் அவாய்நிலையாய்த் தொக்குநிற்கிறது; இது சொல்லெச்சம். அறையோ முடியுமென்பதில் 'ஓ' எதிர்மறைப் பொருளைக் குறிக்கிறது. அறைதல் முடியாது எனபது பொருள். அடிகள் இந்தப்பாட்டில் தாம் இம்மைவாழ்விலே சீவன்முத்தர் நிலையை அடைந்ததன்றி உடலூழாயிருக்கிற பிராரத்துவ வினைமலமாதனையினின்றும் நீங்கினதாகக் கூறுகின்றார்.

---

622\. பித்தென்னை யேற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
அத்தமே யாக்கும்வந் தென்மனத்தை — அத்தன்
பெருந்துறையா னாட்கொண்டு பேரருளால் நோக்கும்
மருந்திறவாப் பேரின்பம் வந்து. ௬௨௪.

[ப-ரை] அத்தன் — எனது தந்தையும்; வந்து பெருந்துறை யான் — (திருக்கைலாயத்திலிருந்து) வந்து திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் எனக்கு ஞானோபதேசஞ் செய்த தலைவனும்; இறவாப் பேரின்பம் — கடவாத பேரின்பத்தை நானடைதற்கு; ஆட்கொண்டு — என்னை அடிமையாக ஆட்கொண்டருளி; பேரருளால் நோக்கும் மருந்து — தனது பெருங்கருணையினாலே எனது மலப்பிணிப்பு நோய்முழுவதும் நீங்கும்படி அருட்பார்வையினாலே நயனதீக்கை செய்தருளும் மருந்தாயிருக்கிறவனுமாகிய சிவபெருமான்; என் மனத்தை வந்து — என்னுள்ளத்தில் விளங்கித்தோன்றி; என்னைப் பித்தேற்றும்—தனது இச்சாசத்தியினாலே அப்பேரின்பத்தில் எனக்கு இச்சையை மிகுவித்துக்கொண்டேயிருப்பான்; பிறப்பறுக்கும் — தனது ஞானசத்தியினாலே எனக்கு மெய்ஞ்ஞானத்தையருளிப் பிறவித்துன்பத்தை அடியோடே நீக்குவான்; பேச்சரிதாம் மத்தமேயாக்கும் — பிறருக்குச் சொல்லவொண்ணாத ஆனந்தக் களிப்பையே நான் உணரும்படி செய்வான்.

[வி-ரை] பெருந்துறையானென்பது இப்பதிகம் மூன்றாவது ஐந்தாவது பாட்டுக்களிற் கூறுகிறபடி பெருந்துறையின்மேய பிரானாகிய தலைவன் அல்லது ஆண்டவனென்ற பொருளில் வந்தது. அடிகள் தாமடைந்த பரமுத்தியின்பத்துக்கு மேலான முத்தியின்பமில்லையாதலால் இறவாப் பேரின்பம் என்றார். உயிர்களுடைய கட்டுநிலையில் சிவபெருமான் மருத்துவனாயிருந்து மாயாகாரியமாகிய தனு கரண புவன போகங்களையும் காமியத்தின் காரியமாகிய இருவினைகளையும் அவை வாயிலாகவரும் இன்ப துன்பங்களையும் ஆணவமலநோய்க்கு மருந்தாகக் கொடுக்கிறான். அதற்குப் பத்தியம் அறவொழுக்கம். அம் மலநோய் தீர்ந்தபின் வீட்டுநிலையில் அவனே மருந்தாயிருந்து உயிரோடு அத்துவிதமாய்க் கலந்துநின்று பேரின்பம் அருளுகின்றான். இங்கே கூறுவது வீட்டுநிலையாதலால், அடிகள் இறவாப் பேரின்ப மருந்து என்றார்.

"ஒருமருந் தாகி யுள்ளா யும்பரோ டுலகுக் கெல்லாம்
பெருமருந் தாகி நின்றாய் பேரமு தின்சு வையாய்க்
கருமருந் தாகி யுள்ளா யாளும்வல் வினைகள் தீர்க்கும்
அருமருந் தால வாயி லப்பனே அருள்செ யாயே"

என்று திருநாவுக்கரசு அடிகள் (4 – 62 – 3)ல் சிவபெருமானை மருந்து என்று கூறுதல் காண்க. அடிகள் தம்மைச் சிவபெருமான் சேர்ந்து பேரின்பம் அருளுதற்குமுன் மலநீக்கத்துக்கு ஏதுவாகிய ஆட்கொண்டு பேரருளால் நோக்குதல் இன்றியமையாது வேண்டப் படுதலால், ஆட்கொண்டு பேரருளால் நோக்கும் மருந்து என்றார். நோக்கும் என்ற வினைப்பெயரெச்சம் மருந்து என்ற பெயரைக் கொண்டு முடிகிறது. சிவபெருமான் இச்சா ஞானக் கிரியைகள் மூன்றையும் அடிகளுடைய உள்ளத்தில் நிகழ்த்துவித்தலால், வந்து என்மனத்தை என்றார். வந்து எனபதற்கு, சிவபெருமான் போக்கும் வரவும் புணர்வுமிலாது யாண்டும் நீக்கமற நிறைந்திருக்கின்றவனு தலின், புகுந்து என்று பொருள் கூறாது, விளங்கித்தோன்றி என்று பதவுரையிற் பொருள் கூறப்பட்டது. மனத்தை யென்பது வேற் றுமை யுருபுமயக்கம், 7-ம் வேற்றுமைப் பொருளில் வந்தது. அடிகள் பித்தென்னை ஏற்றும் என்றதனாலே, சிவபெருமான் தனது இச்சாசத்தியால் தம்மோடு ஒன்றாயிருக்கிற அத்துவித நிலையையும், பிறப்பறுக்கும் என்றதனாலே தனது ஞானசத்தியால் வேறாயிருக் கும் அத்துவித நிலையையும், பேச்சரிதாம் அத்தமேயாக்கும் என்ற தனாலே, தனது கிரியாசத்தியால் தம்மோடு உடனாயிருக்கும் அத்து வித நிலையையும், என் மனத்தை வந்து என்றதனாலே இம் மூவகை அத்துவித நிலைகளையும் தமது உள்ளத்தில் நிகழ்த்துவித்தார் என்ப தையும் கூறுகின்றார். வீட்டின்பநிலையை யடைந்த சீவன்முத்தர்க ளுக்கும் சிவபெருமான் அவர்களோடு மூவகை அத்துவித நிலைக ளின் தொடர்புபட்டுநின்று இச்சை அறிவு செயல்களை நிகழ்த்தினா லன்றி அவர்களது உள்ளத்தில் பேரின்பவுணர்வு நிகழாதாதலின் அடிகள் இங்ஙனமகூறினார். பித்தென்பது இங்கே இச்சையாகிய

அன்பைக் குறிக்கிறது. இப்பதிகம் இரண்டாவது பாட்டிற் கூறப் படுகிற "மாலேற்றும்" என்பதும் "பித்தேற்றும்" என்பதும் ஒரு பொருளன. ஏற்றுதல் – மிகுவித்தல் "பித்தனிவனென வென்னை யாக்குவித்து" என்று அடிகள் (31 - 7)ல் கூறியருளினர். யாதா மொரு உலகநுகர்வுப் பொருளில் மிகுந்த பற்றுவைத்து அதனிடத் திலே தோய்ந்து தொடர்புண் டிருப்பவன பித்தனெனக் கூறப்படு கின்றான். இங்கே பித்தனென்பது சிவபெருமானே சத்துப் பொருளா யிருக்கின்றானென அறிந்து அசத்தாகிய உலகில் யாவற் றையுங் கைவிட்டு அவனிடத்திலேயே பற்றுவைத்திருக்கிற சீவன் முத்த அடியாரொருவரைக் குறிக்கிறது. இந்தப் பித்துத்தன்மை யைச் சிவபெருமானே நிகழ்த்துவித்தலால், பித்தென்னை ஏற்றும் என்றார். இது சிவபெருமான் அடிகளிடத்தில் இச்சையை நிகழ்த்து வித்தலாகும். பிறப்பறுத்தலானது இருவினையின் கட்டறுத்து மெய்யுணர்வு விளங்கச்செய்து, அதனாலே சித்துத்தன்மையை யடைவித்தலால் உண்டாகிறது. இது சிவபெருமான் அடிகளிடத் தில் ஞானத்தை நிகழ்த்துவித்தலாகும். மத்தம் என்பது இங்கே களிப்பு. இது சிவபெருமான் அடிகளிடம் கிரியை நிகழ்த்துவித்த லாகும். உலகபோகம் நுகருங் களிப்புப்போ லல்லாது சிவபோகம் நுகரும் ஆனந்தக்களிப்பு என்பதற்குக் களிப்பென்று கூறுவார், பேச் சரிதாம் மத்தமென்று அடைகொடுத்துக் கூறினர். தாயுமான அடிகள் ஆனந்தக்களிப்புப் பாடியருளியதை நோக்குக. இப்பாட்டில் இறவாப் பேரின்பம் என்பது, சீவன்முத்தர் தங்கள் உடல் நீங்கிய பின் அடையும் பேரின்பத்தையும், பேச்சரிதாம் மத்தம் என்பது அவர்கள் எடுத்த உடலோடு உலகில் வாழுங்காலத்தில் அடையும் பேரின்பத்தையுங் குறிக்கின்றன. அடிகள் இந்தப்பாட்டின் தனிச் சீர் முதல் பின் இரண்டு அடிகளில் தந்தை தலைவன் மருந்து என்று சிவபெருமானுடைய மூன்று நிலைமைகளைக்கூறி, தனிச்சீர் வரையி லுள்ள முன் இரண்டு அடிகளில் முறையே தந்தையாகப் பித்தேற் றுதலாகிய இச்சை நிகழ்ச்சியையும், தலைவனாகப் பிறப்பறுத்தலாகிய ஞான நிகழ்ச்சியையும், மருந்தாக மத்தமாக்கும் செயல் நிகழ்ச்சி

யையும் சிவபெருமான் தமக்குச் செய்வித்தாரென்று கூறுகின்றார். அடிகள் தாம் தம்முடைய சீவன்முத்தநிலையில் பேரின்பமெய்து தற்குத் தந்தையின் இச்சையாகிய அன்பும் தலைவனின் ஞானமும் மருந்தின் செயலும் முறையே பித்தேற்றுதலுக்கும், பிறப்பறுத்த லுக்கும், மத்தமாக்குதலுக்கும் வேண்டுமென்பார் அவர் இங்ஙனம் கூறினர். இவ்வெண்பாவில் அத்தன், பெருந்துறையான், மருந்து இம்மூன்றும் எழுவாய்கள்; ஏற்றும் அறுக்கும் ஆக்கும் என்னும் இம்மூன்றும் முறையே வினைப்பயனிலைகள். சத்து சித்து ஆநந்தம் ஆகிய சிவபெருமானுடைய முச்சொரூபநிலைகளில் பித்தென்னை ஏற்றுமென்றதனாலே சத்துநிலையும், பிறப்பறுக்கும் என்றதனாலே சித்துநிலையும், மத்தமேயாக்கும் என்றதனாலே ஆநந்த நிலையுங் கூறப்பட்டன. அடிகள் இறவாப் பேரின்பம் அடைதற்குச் சிவபெருமானுடைய முச்சொரூப நிலைகளையும் அடைதல் இன்றியமையாது வேண்டப்படுவதாகும். அடிகள் இந்த முச்சொரூப நிலைகளை யடைதலே சிவபெருமானுடைய தன்வயத்தனாதல் முதலிய எண்குணங்களையும் தம்மிடத்தி லடையப்பெறுதலாகும். எண்குணங்களும் சத்து சித்து ஆநந்தமென்ற மூன்றிலும் அடங்குதலின், அடிகள் இந்த வெண்பாவில் சிவபெருமானாலேயே தாம் மலவாதனை முழுதும் நீங்கப்பெற்றுப் பேரின்பவாழ்வுநிலையை அடைந்ததாகக் கூறுகின்றார்.

---

623. வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா அமுதா யமைந்தன்றே — சீரார்
திருத்தென் பெருந்துறையா னென்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி. ாதி.

[ப-ரை] சீர் ஆர் — சிறப்புநிறைந்த; தென்திருப்பெருந்துறையான் — தெற்கே சோழநாட்டிலுள்ள திருப்பெருந்துறைக்கு அந்தணன் திருமேனியில் குருவடிவாய்வந்து குருந்தமரத்தடியில்

வைத்து எனக்கு மெய்யறிவை உபதேசஞ் செய்தருளினவனும்; என்சிந்தை மேய ஒருத்தன் — எனதுள்ளத்திலே தனது அருட் சத்தியோடு வீற்றிருக்கின்ற தனிமுதற்பொருளுமாகிய சிவபெரு மான்; வந்து பெருக்கும்ஒளி—அவ்வுள்ளத்தில் பற்றிக்கொண்டிருந்த எனது மலவிருள் முற்றிலும் நீங்கும்படி வந்து பெருக்கிக்கொண் டேயிருக்கும் அருட்பேரொளியானது; வாராவழியருளி — இனி உலகத்தில்வந்து பிறவாதிருத்தற்கு ஏதுவாயுள்ள வீட்டுநெறியைத் தந்து; மாறின்றி — எனது மனம் ஐம்பொறிகளிற் செல்லும் மாறு பாடில்லாமல்; எனக்கு ஆரா அமுதாய் அமைந்தன்று — எனக்குத் தெவிட்டாத நிறைந்த பேரின்பமாய் அமைந்தது.

[வி-ரை] திருத்தென்பெருந்துறையான் என்பதனை, தென் திருப்பெருந்துறையானென மாறுக. தென் என்பது அழகு என் னும் பொருளிலும் வரும். சிவபெருமான் தமக்கு மெய்யறிவு உப தேசம் செய்தமையால் திருப்பெருந்துறை சிறப்புப்பெறுதலால் சீரார் திருப்பெருந்துறையா னென்றார். பெருந்துறையா னென்ப தற்கு உருவகமாய் உயிர்களெல்லாம் முடிவில் தன்னிடம் வந்து சேரும்படியான பெரிய இடமாயிருப்பவனென்று பொருள் கொள் ளலாம் உலகிலுள்ள பிறசமயங்களெல்லாம் வந்துசேரு மிடமாகிய சைவசமயத்திற்கு அப்பால் உயிர்கள் சேருமிடமில்லை. ஆதலால் சைவசமயத்தைப் பெருந்துறையென்றும், சைவசமயக் கடவுளாகிய சிவபெருமானைப் பெருந்துறையான் என்றும் கூறுவர். அடிகள் தாம் முடிவான பேரின்ப நிலையடைதற்குச் சிவபெருமான் இடமா யிருத்தலால், அவரைப் பெருந்துறையானென்றார். "நாடும் பெருந் துறை நான்கண்டு கொண்டபின், கூடுஞ் சிவனது கொய்மலர்ச் சேவடி" என்று திருமூலர் 2651-வது திருமந்திரத்தில் கூறுதல் காண்க. அடிகள் தாமடைந்த முடிவான வீட்டின்பநிலையில் வளர்ந்து கொண்டேயிருக்கும் பேரின்பப் பேற்றுக்குப் பேரொளியாயிருக் கிற இறைவன் தம்மைவிட்டு என்றும் பிரியாதிருத்தல் வேண்டுமா தலால் பெருக்கின ஒளியென்று கூறாமல் பெருக்குமொளி என்றும்,

அந்த ஒளியை ஒப்பற்றவனாகிய சிவபெருமான் ஒருவனே பெருக்க வல்லவனாதலின் ஒருத்தன் பெருக்கும் ஒளி என்றுங்கூறினார். ஒளியென்பது இங்கே சிவபெருமானுக்கே உரிய உலவா வின்பப் பேரொளியைக் குறிக்கிறது. இந்த இன்பப்பேரொளியைப்பற்றி அடிகள் "உலவா இன்பச் சுடர்காண்பான், அலந்து போனேன் அருள்செய்யாய் ஆர்வங் கூர அடியேற்கே", என்று (32 - 1)ல் கூறியருளினார் வாராவழி யென்றதனாலே ஞானத்தின் ஞானமாகிய சன்மார்க்கங் குறிக்கப்பட்டது.

"பன்மார்க்கப் பொருள் பலவும் கீழாக மேலாம்
 பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டும்
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
 ஞேயமொடு ஞாதிருவும் நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றி" யைச்
 (சிவஞானசித்தியார் 8-வது சூத்திரம் 22-வது பாட்டு)

சன்மார்க்கம் அடையச்செய்தலால், அதனை வாராவழி என்றார். ஆரா அமுது—சிறிதுகாலவெல்லையில் தெவிட்டுவித்து வெறுக்கச் செய்கின்ற நிலையில்லாத சிற்றின்பத்தினின்று பிரித்துக்கூறுவார், ஆரா அமுது என்றார். அமைந்தன்று என்பதில் அன் சாரியை, அமைந்தது என்பது பொருள்; எதிர்மறை உருபன்று. இந்தச் செய்யுளில் மாணிக்கவாசக அடிகள் தாம் இம்மைவாழ்வில் இருக்கும்பொழுதே தெவிட்டாத பேரின்பநிலையை அடைந்ததாகக் கூறுகின்றார்.

---

624. யாவர்க்கும் மேலா மளவிலாச் சீருடையான்
 யாவர்க்குங் கீழாம் அடியேனை — யாவரும் [மான்
 பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெரு
 மற்றறியேன் செய்யும் வகை. ௬௪.

[ப-ரை] என் எம்பெருமான் — எனக்கும் என்னைப் போலொத்த ஏனைய அடியார்களுக்குந் தலைவனே; யாவர்க்கும்

மேலாம் — விண்ணுலகிலுள்ள தேவர்கட்கும் மண்ணுலகிலுள்ள மாந்தர்கட்கும் மேம்பாடுடைய; அளவிலாச்சீருடையான் — எல்லையற்ற சிறப்பினை யுடையவனாகிய நீ; யாவர்க்குங் கீழாம் அடியேனை — எவர்க்குங் கடையனாய் அடிமைப்பட்ட என்னை; யாவரும் பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கு — எவரும், (தாம் வேறு நீ வேறாக நிற்கிற துவிதநிலையில்) பெறுதற்கரிய பேரின்பத்தை நான் நின்னோடு அத்துவிதமாய்க் கலந்துநின்று உணரும்படி செய்தவனாகிய நினக்கு; மற்று செய்யும்வகை — நான் என்னுடைய சீவபோதத்தை உனக்குக் கொடுத்து உன்னிடம் அடங்கிநிற்பதல்லாது நினக்குக் கைம்மாறாகச் செய்யும் பிறிதொரு செயலும்; அறியேன் — நானறியமாட்டேன்; நான் என்னுடைய சீவன்முத்தநிலையில் நின்னோடு அத்துவிதமாய்க் கலந்து உணரும் பேரின்பம் நிலைத்துநிற்கும்படி நீ விரும்புவது என்னுடைய சீவ போதத்தை நினக்குக் கொடுத்து நின் சிவபோதத்துள் அடங்கிநிற்ற லாகு மென்பது முறிப்பெச்சம்.

[வி-ரை] சிவபெருமான் விண்ணுலகிலுள்ளார்க்கும் மண் ணுலகிலுள்ளார்க்கும் முழுமுதற்றலைவனாயிருந்து அவர்கள் பொ ருட்டு ஐந்தொழில் செய்யும் பேரருளுடையவனாதலின், அவனை யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையானென்றார்; நினைத்தற் குஞ் செய்தற்குஞ் சொல்லுதற்கும் முடியாத சிறப்புடையவனாத லின், அளவுபடாச் சீருடையானென்றார். எல்லாவுயிர்களுடைய நலத்தையும் தம் நலமாகக்கருதும் பணிவுடையாரா யிருத்தல்பற்றித் தம்மை அடிகள் "யாவர்க்குங் கீழாமடியேன்" என்றார். பேரின்ப மானது இறைவனோடு அத்துவிதமாய்க் கலந்துநின்று உணரு மின்பமேயன்றி எவரும் துவிதநிலையிற் பெறுமின்பமன்று ஆதலின், யாவரும் பெற்றறியா வின்பமென்றார். இறைவனுடைய பொது நிலையை யறிந்து ஒருவர் உணரும் இன்பமே அவர் பெற்றறியு மின்பமாகும். வைத்தாய்க்கு — வைத்தவனாகிய உனக்கு. மற்று என்பது பிறிது, அதாவது என் சீவபோதத்தைக் கொடுத்தலல்லது

பிறிதொருசெயல். செய்யும்வகை — கைம்மாறாகச் செய்யும்விதம். கேவலநிலையில் ஒன்றுமறியாது முழு ஆணவமல இருளிற்கிடந்த என்னை மாயையின் வடிவங்களாகிய தனு கரண புவன போகங்களோடு கூட்டிச் சகலநிலையில் வைத்து ஆணவமலத்தைக் கழிப்பித்துத் தூய்மைசெய்து சுத்தநிலையில் எனக்குப் பேரின்பந் தந்தருளிய நிறைவுப்பொருளாகிய நினக்கு நான் கைம்மாறு செய்யக்கடவது ஒன்றுமில்லை என்பது பொருள். "குறியுங் குணமுமறக் கூடாத கூட்டத், தறிவறிவாய் நின்றுவிட வாங்கே — பிறிவறவுஞ், சும்மா விருத்திச் சுகங்கொடுத்த மோனநின்பாற், கைம்மாறு நானொழிதல் காண்." (539) என்று தாயுமான அடிகள் சீவபோதம் ஒழிதலே தாம் இறைவனுக்குச்செய்யும் கைம்மாறென்று கூறுதலை நோக்குக.

---

627. இன்பம் பெருக்கி யிருளகற்றி யெஞ்ஞான்றுந்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியா — யன்பமைத்துச்
சீரார் பெருந்துறையா னென்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டா னுவந்து. ௱௭.

[ப-ரை] சீரார் பெருந்துறையான் — (எல்லாவுயிர்களுக்கும் நன்மையையே செய்யும்) அருட்பண்பு நிறைந்து திருப்பெருந்துறையில் திருக்கோயில் கொண்டருளி வீற்றிருக்கிற சிவபெருமான்; சோதியாய் இருள் அகற்றி(யும்) — (மண்முதல் நாதம் வரையுள்ள முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாலுள்ள பெருவெளியில்) பேரொளியாய் எனது உள்ளத்தில் தோன்றி, (எனது) அறிவுக்கு வேறாய்நின்று அதனை விளக்கிக்காட்டி) என்னைப் பற்றி நின்ற மலம் மாயை கன்மங்களை முற்றிலும் நீக்கியும்; அன்பு அமைத்து(ம்) — (பின் எனது அறிவோடு உடனாய்நின்று காணுதலினால் தான் பசுபாசங்கள் முழுவதும் வியாபகமாய்க் கலந்து நின்று ஐந்தொழில் செய்தலை எனக்கு வியாபக அறிவு அருளி நான் காணுமாறு செய்தல்பற்றி அவன் செய்துவருகின்ற பேருதவியை

நினைந்து உருகி) தன்னிடத்தில் அயரா அன்பு உண்டாகும்படி செய்தும்; எஞ்ஞான்றும் துன்பம் தொடர்வறுத்து(ம்)—இனி எப்பொழுதும் அவிச்சையினு லுண்டாகிய துன்பத்தினுடைய தொடர்பைச் சிறிதுமில்லாமல் நீக்கியும்; இன்பம் பெருக்கி (யும்)—தன்னை அத்துவிதமாய்க்கலந்து நுகரும் பேரின்ப உணர்வை மேலுமேலும் வளரும்படிசெய்தும்; உவந்து—மகிழ்ந்து; என்னுடைய சிந்தையே — எனது உள்ளத்தையே; ஊராகக் கொண்டான் — தானிருக்கும் உறைவிடமாகக் கொண்டான். ஆதலின் இனி நான் சிவபெருமானை இரந்து வேண்டுவது ஒன்றுமில்லை என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] வெண்பாச்செய்யுள் ஆதலின் சொற்கள் முறை பிறழ்ந்து வைக்கப்பட்டன. பதவுரையில் கூறப்பட்டிருத்தல்போல உரைநடை செய்க. சீர் ஆர் பெருந்துறையான் — சீர் - நன்மை. எல்லா உயிர்களுக்கும் எப்பொழுதும் நன்மையையே செய்கின்றான் ஆதலின், சீரார் பெருந்துறையான் என்றார். சீர், திரு என்பன ஒரு பொருட் சொற்கள். பெருந்துறையான் என்பது திருப்பெருந்துறைப்பதியைக் குறித்தலோடு, எல்லாச் சமயக் கடவுளரையும் அதிட்டித்து நின்று உயிர்களுக்கு அருள்செய்கிறவன் என்பதையும் குறிக்கின்றது. சோதியாய் இருள் அகற்றி — இதனுல் சிவபெருமான் உயிர்களோடு அத்துவிதமாய் நிற்கும் மூவகை நிலைகளில் வேறாய்நின்று காட்டும் உதவி கூறப்பட்டது. "இன்றெனக் கருளி" என்ற திருவாசகப்பாட்டில், இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று, நின்றநின் தன்மை' என்பதற்கு நான் கூறிய குறிப்புகளை இதற்கும் கொள்க. அன்பு அமைத்து — இதனுல் சிவபெருமான் உயிர்களோடு அத்துவிதமாய் நின்று செய்யும் காணும் உதவி கூறப்பட்டது. அப்பாட்டில், 'நீயலாற் பிறிது மற்றின்மை' என்பதற்கு நான் கூறிய குறிப்புகளைக் கொள்க. எஞ்ஞான்றும் துன்பந் தொடர்வு அறுத்து—துன்பத் தொடர்புள்ள சிற்றின்பத்தினின்றும் பேரின்பத்தை நீக்குவதற்கு, எஞ்ஞான்றும் துன்பந்தொடர் வறுத்து என்றார். 'இன்பமே எந்நாளும் துன்ப

மில்லை' என்று திருநாவுக்கரசு அடிகள் 'நாமார்க்குங் குடியல்லோம்' என்ற (6 - 98 - 1) திருத்தாண்டகத்தில் கூறியிருத்தல் காண்க. இன்பம் பெருக்கி — புணருந்தோறும் பெரும்போகம் புதிதுபுதி தாய் விளங்குதலினால், இன்பம் பெருக்கி என்றார். உவந்து — மலம் முற்றிலும் நீங்கிச் சிவமாகிய தூயசிந்தையாதலின், உவந்து ஊராகக் கொண்டான் என்றார். 'உடையான் விரும்பி என்னுள்ளத் திருந்தான்' என்றார் திருநாவுக்கரசு அடிகளும். ஊராகக் கொண் டான் — ஊர் என்பது இங்கே உறைவிடம் அல்லது தங்குமிடம் என்ற பொருளில் வந்தது. சாக்கிராதீதத்திலுள்ள வியாபகமான சிந்தையாதலின், அதனைப் பரந்த இடம் போலும் ஊர் என்றார். அப்பாட்டில் 'நினைப்பற நினைந்தேன்' என்பதற்கு நான் எழுதிய குறிப்புகளை இதற்குங் கொள்க. இப்பாட்டில் அடிகள் இறைவன் தாம் பேரின்பம் அடைதற்குச் செய்த அருட்செயல்களைக் கூறு கின்றார். 'இன்றெனக்கருளி' என்ற பாட்டில் இறைவன் செய்த அருட்செயலால் தாம் அடைந்த பயனைக் கூறுகின்றார்.

---

திருப்பெருந்துறையில் அருளிய

## ௪௮. பண்டாய நான்மறை.

---

பண்டாய — பழைமையாயுள்ள. நான்மறை — நான்கு வேதங்கள்; அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம். அவை உலக இன்பத்தை விரும்பி உலகில் வாழும் மக்களுக்குக் கூறப்பட்ட பொதுநூல்கள். ஆகமநூல்கள் உலகவாழ்வை வெறுத்துச் சிவ பெருமானுடைய திருவடிகளை அடைதல்வேண்டும் என்னும் விருப் பம் உடையவர்களாய்ச் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் அருள் நெறியில் ஒழுகும் சத்திநிபாதருக்குக் கூறப்பட்ட சிறப்பு நூல்கள். இந்தப்பதிகத்தின் முதலாவது பாட்டு 'பண்டாய நான் மறை' என்று தொடங்குதலால் இப்பதிகம் பண்டாய நான்மறை

என்று கூறப்படுகின்றது. இப்பதிகப் பாட்டுக்களில் அடிகள் தாம் பேரின்பானுபவம் அடைந்த செய்தியைப் பிறர் அறிந்துய்யும்படி அவர்களுக்குக் கூறுகின்றார்.

## அனுபவத்துக் கையமின்மை.

அனுபவமென்பது இறைவனுடைய திருவடிகளைச் சேருதலால் மக்கள் அடையத்தகும் பேரின்ப அனுபவம். அனுபவமுடையவர் தம்முள் உணரலாமேயன்றிப் பிறருக்குக் கூறமுடியாத இந்தப் பேரின்பானுபவத்தைத் தாம் அடைந்ததாக உலகிலுள்ளவர்கள் அறிந்துய்யும்பொருட்டு அடிகள் கூறுகின்றார். ஐயம் - சந்தேகம்; இன்மை - இல்லாதிருத்தல்; அனுபவத்துக்கையமின்மை என்பது ஒருவர் வேதாகமங்களின் வழியே ஒழுகிப் பதிஞானமாகிய மெய்யுணர்வு அடையப்பெற்று இறைவன் திருவடியை அடைந்து பேரின்பம் உணர்தல் உறுதிப்பாடாயுள்ளது என்று பொருள்படும். அடிகள் இந்த உறுதிப்பாடாயுள்ள பேரின்பானுபவத்தைப் பண்டாயநான்மறைப் பாட்டுக்களில் கூறுதலால் பண்டாய நான்மறைப் பதிகம் அனுபவத்துக் கையமின்மையைக் கூறுவதாகின்றது.

[நேரிசை வெண்பா]

திருச்சிற்றம்பலம்.

631. வாழ்ந்தார்க ளாவாரும் வல்வினையை மாய்ப்பாருந்
தாழ்ந்துலக மேத்தத் தகுவாருஞ் — சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சி யேத்துந் திருவார் பெருந்துறையை
நன்றிறைஞ்சி யேத்தும் நமர். ௱அ.

[ப-ரை] அமரர் சென்று சூழ்ந்து இறைஞ்சி ஏத்தும் — வானவர்கள் தங்கள் வானுலகத்திலிருந்து நிலவுலகத்துக்கு வந்து வலஞ்

செய்து வணங்கி வாழ்த்துகின்ற; திருவார் பெருந்துறையை — திருப்பெருந்துறையில் அருட்சத்தியாகிய உமாதேவியாரோடு வீற்றிருக்குஞ் சிவபெருமானை; நன்று இறைஞ்சி ஏத்தும் நமர்— திருத்தமாய் (மனதால் நினைந்து) வாயால் வாழ்த்தி மெய்யால் வணங்கும் அடியார்கள்; வாழ்ந்தார்களும் — உலகில் வாழும் மக்களுக்குள் நற்பயனுண்டாகும்படி வாழ்கிறவர்களும்; வல்வினையை மாய்ப்பாரும் —தாங்கள் முற்பிறவிகள் தோறும் ஈட்டிச் சேர்த்திருக்கின்ற வலிய வினைமலத்தையும் (ஆணவ மாயா மலங்களையும்) கெடுக்கிறவர்களும்; உலகம் தாழ்ந்து ஏத்தத் தகுவாரும் — உலகமக்கள் தாழ்மையுடன் புகழ்ந்து வணங்கத் தகுதியுடையவரா யிருக்கிறவரும்; ஆவார் — ஆவார்கள்.

[வி·ரை] அமரர் சென்று சூழ்ந்து இறைஞ்சி ஏத்தும் திருவார் பெருந்துறையை — பெருந்துறை என்பது இங்கே பெருந்துறையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைக் குறிக்கிறது. அமரர்கள் வந்து வணங்கல் திருப்பெருந்துறைச் சிவபெருமானுக்குச் சிறப்பாகக் கூறப்பட்டது. நன்று இறைஞ்சி ஏத்தும் நமர் — நன்று— திருத்தமாக. திருத்தம் என்பது சிவபெருமானுடைய வியாபக அறிவு வேட்கை செயல்களுள் உயிரினுடைய அறிவு வேட்கை செயல்கள் அடங்கியிருத்தல். இறைஞ்சி ஏத்தும் நமர் என்பதை ஏத்தி இறைஞ்சும் நமரென்று மாறிப் பொருள் உரைக்க. ஏத்துதல் — வாயால் வாழ்த்துதல். இறைஞ்சுதல் — மெய்யால் வணங்குதல். இனம்பற்றி மனதால் நினைதலும் உடன் கொள்ளப்படும். நமர்— நம்மவர். அதாவது நம்மைச்சேர்ந்த அடியார் கூட்டத்தினர். உலகப் பற்றுடையவர்கள் தங்க ளுறவினரை நம்மவரென்று சொல்லி ஒழுகுதல்போல, உலகப்பற்றினை நீங்கினவர் சிவபெருமானுடைய அடியார்களை எல்லாம் ஓர் இனத்தவராயெண்ணி, நம்மவரென்று சொல்லி ஒழுகுகிறார்கள். திருநாவுக்கரசு அடிகள் திருத்தென்குரங்காடுதுறைத் திருக்குறுந்தொகைத் தேவாரம் 8-வது பாட்டில் "நாடி நந்தம ராயின தொண்டர்காள்" என்றும், திருஞான

சம்பந்த அடிகள் குற்றாலப்பதிகம் முதலாவது பாட்டில் "நமரங் கான்" என்றும் அடியார்களைத் தங்கள் இனத்தவராகக் கூறியிருத்தல் காண்க. நன்று இறைஞ்சி ஏத்தும் நமரென்பது அடிமைகளாகிய தங் கள் வியாப்பிய அறிவு வேட்கை செயல்களை ஆண்டவனாகிய சிவ பெருமானுடைய வியாபக அறிவு வேட்கை செயல்களுக்குள் அடக் கித் தன்முனைப்பு (சிவபோதம்) இன்றி மனதால் நினைந்து வாயால் வாழ்த்தி மெய்யால் வணங்கும் நம்மவராகிய அடியார். வாழ்ந் தார்களாவாரும் — ஆவார் என்ற சொல்லை வாழ்ந்தார்களாவாரும் என்ற சொற்றொடரிலிருந்து பிரித்துத் தகுவாரும் என்பதற்குப் பின் வைத்துப் பொருள் உரைக்க. உலகவாழ்வு என்பதே இன் பத்தோடு பொருந்தியது. அவ்வின்பமுஞ் சிற்றின்பமாயிராது நிலையான பேரின்ப முண்டாகும்படி சிறப்பாக வாழ்வதே வாழ்வு என்பார், வாழ்ந்தார்களாவாரும் என்றார். நிகழ்காலத்தால் கூறற் பாலது தெளிவுபற்றி வாழ்ந்தார் என இறந்தகாலத்தால் கூறப்பட் டது. வல்வினையை மாய்ப்பாரும் — வல்வினை - கடத்தற்கரிய வினை. இங்கே வினை என்பது வினைமலத்தைக் குறிக்கிறது. வினை மலம் என்றதனாலே வினைமலம் தொழிற்படுகிற மாயாமலமும் வினைமலம் வருதற்குக் காரணமாகிய ஆணவமலமும் இனம்பற்றி உடன் கொள்ளுக. நிகழ்காலத்தால் கூறற்பாலது இயல்புபற்றி மாய்ப்பாரென எதிர்காலத்தால் கூறப்பட்டது. மாய்த்தல் — அழித் தல், கெடுத்தல். உலகம் தாழ்ந்து ஏத்தத்தகுவாரும் — ஏத்தல் - வாழ்த்தல். அது இங்கே வாழ்த்தி வணங்குதலைக் குறிக்கிறது. இறைவனே எல்லா உயிர்களிலும் ஒப்பற்ற பெரியவன். அவனை அன்பினாலேத்தும் அடியார் இறைவனுக்கு அடுத்தபெரியாராதலின் அவர்களே உலகத்தாரால் வாழ்த்தி வணங்கத்தகுந்தவர் என்பார், உலகந் தாழ்ந்து ஏத்தத்தகுவாரும் என்றார். இதனாலே இறைவன் என்றும் இனிதாக வீற்றிருந்தருளும் தூயநெஞ்சினையுடைய அடி யார் பிறமக்களால் வாழ்த்தி வணங்குதற்குரியார் என்பது கூறப் பட்டது. சைவசமயத்தில் அடியார்வழிபாடு (சங்கமவழிபாடு) சிவனை வணங்கும் குரு லிங்க சங்கமமாகிய மூவகை வழிபாடுகளில்

ஒன்று. திருநாவுக்கரசு அடிகள் திருக்கன்றாப்பூர்த் திருத்தாண்டகப் பதிகப்பாட்டுக்களில் சிவனடியார் வழிபாட்டின் பெருமையைக் கூறியிருத்தல் காண்க. நமர்—எழுவாய்; ஆவார்—பயனிலை. அடிகள் இந்தப்பாட்டில் சிவனடியார்களுடைய சிறப்பைக் கூறி அருளினார்.

---

[நேரிசை வெண்பா]

திருச்சிற்றம்பலம்.

---

633, காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப்
பேணு மடியார் பிறப்பகலக் — காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையி லென்றும்
பிரியானை வாயாரப் பேசு. ௱௬.

[ப-ரை] நெஞ்சே = நெஞ்சே; காணும் கரணங்கள் எல்லாம் — உலக வாழ்வில் சுட்டி அறிதற்கும் அச்சுட்டறிவின்வழி செயல் நிகழ்தற்கும் அவ்வறிவு செயல்களினால் உலகச்சிற்றின்பம் நுகர்தற்கும் ஏதுக்களாயுள்ள உள் அந்தக்கரணங்கள், அந்தக்கரணங்கள், ஐம்பொறிகள், தொழிற்கருவிகள், ஐம்பொறிகளும் தொழிற்கருவிகளும் முறையே அறிதலும் செய்தலுமாகிய தத்தம் தொழிற்பாட்டின்கண் மதுகையை விளைத்துநிற்கும் சூக்குமதன்மாத்திரைகள், தூலதன்மாத்திரைகள் ஆகிய எல்லாக்கருவிகளையும்; பேரின்பம் என— அக்கருவிகளை யெல்லாம் தூவெளி அருளொளியால் நிரப்பி மலஇருளை நீக்கிச் சிவகரணங்களாக்கிப் பேரின்பம் நுகர்தற்கு ஏதுக்களாயுள்ள கருவிகள் என; பேணும் அடியார் — தங்கள் மனத்தில் விரும்புகின்ற அடியார்களுடைய; பிறப்பு அகல — பிறவித்துன்பம் நீங்க (நித்தியமான பேரின்பவாழ்வை அடையும்படி); காணும் பெரியானை — அவர்களோடு உடனாய் விரவிநின்று விடயமாகிய தன்னை அறிவித்தலன்றி, அவ்வாறு அறிவித்த தன்னிடத்தில்

அவர்களைச் செலுத்தித் தன்னோடு உடனாய் நின்று தன்னைவிடயிக்குமாறு செய்தும் வருகிற பெருந்தகைமை யுடையவனும்; என்றும் பெருந்துறையிற் பிரியானை — எப்பொழுதும் திருப்பெருந்துறைக் கோயிலைவிட்டுப் பிரியாதிருக்கிறவனுமாகிய சிவபெருமானை; வாய் ஆரப்பேசு — (அவனுடைய அருட்செயலை மனதார நினைத்தும்) வாயாரப் புகழ்ந்துபேசியும் (மெய்யார வணங்கியும்) வழிபடுவாயாக. நீ அவ்வாறு வழிபடுவாயாகில் உன்னைச் சிவபெருமான் பேரின்பமடையச் செய்வன் என்பது குறிப்பெச்சம்.

[வி-ரை] (பஞ்ச கஞ்சுக உடலோடும் பஞ்சக் கிலேசங்களோடும் கூடிப் போகம் நுகர்தற்குத் தகுதியடைந்திருக்கிற புருடனாகிய உயிர் சிவசத்தியினு லியக்கப்பெற்று) காணும் கரணங்கள் எல்லாம் — முதற்கண் அந்தக்கரணங்களி னியையின்றி அராகத்தால் வேட்கை உடையதாய் வித்தையில் ஐம்பொறிகளி லொன்றாகிய கண்ணை அதிட்டித்து நின்று, புறத்திலுள்ள ஐம்புலப்பொருள்களில் உருவப்பொரு ளொன்றைப் பொதுவகையாற் பெயர், குணம், தொழில், கன்மம், பொருள் ஆகிய வேறுபாடுகளின்றி நிருவிகற்பமா யறிகின்றது. பின் அவ்வுயிர் தொழிற்கருவிகளி லொன்றாகிய வாக்கை அதிட்டிப்ப, வாக்கு வசனிக்கும். இது நிருவிகற்பக் காட்சியென்று கூறப்படும். இக்காட்சி நிகழ்தற்குத் தூலபூதங்களும் சூக்குமபூதங்களும் இருவகை இந்திரியங்களின் தொழிற்பாட்டிற்கு இடமாயிருந்து மதுகையை விளைத்து நிற்கும். (ஒருகாலத்தில் ஐம்பொறிகளி லொன்றாவது கன்மேந்திரியங்களி லொன்றாவது தொழிற்பட்டு விடயங்களி லொன்றைத் தான் விடயிக்கும்; ஆதலின், இங்கே கண் வாக்கு உருவம் ஆகிய ஒவ்வொன்றும் உதாரணமாக எடுத்துக்கொள்ளப்பட்டது.) பின், உயிர் மனத்தை அதிட்டித்துநிற்ப, மனமானது சித்தமாய் நின்று, இஃது யாதாகற்பாற்றெனச் சிந்தித்து, பின் இது குற்றியாகற்பாற்று மகனாகற்பாற்று எனச் சங்கற்பித்தும், அது ஆமோ அன்றோ என ஐயுற்றும் நிச்சயித்தற் கேதுவாகிய வேட்கையை விளைக்கும். அதன்பின், உயிர் ஆங்காரத்தை

அதிட்டிப்ப, ஆங்காரமானது குற்றி என்றுவது மகன் என்றுவது இதனை யான் நிச்சயிப்பேன் என்னும் அகந்தையை விளைத்து நிச்சயித்தற்கண் முயலும் ஊக்கத்தை உண்டாக்கி, அதற்கு ஏதுவாகப் பிராணவாயுவை இயக்கி நிற்கும். அதன்பின், உயிர் புத்தியை அதிட்டிப்ப, புத்தியானது பார்க்கப்பட்ட பொருள் மகன் அல்லது குற்றி என்று, பெயர், சாதி, குணம், கன்மம், பொருள் என்னும் வேறுபாடுகள் பற்றிச் சிறப்புவகையா லறியும். இவ்வாறு உயிர் சிறப்புவகையா லறிந்தபின்னும் தொழிற் கருவிகளின் தொழிற்பாடும் நிகழலாம். இது சவிகற்பக் காட்சி என்று கூறப்படும். பின்னர், காலம், நியதி, கலை, வித்தை, அராகம், என்னும் உள்ளந்தககரணங்கள் சாத்துவிக குணவிளககத்தால் இன்பமும், இராசத குணவிளக்கத்தால் துன்பமும், தாமதகுணவிளக்கத்தால் மோகமும், புத்தியில் கண்ணுடிபோலப் பிரதிவிம்பமான போகப்பொருள்களை உண்டாக்கி, அவற்றை உயிரினிடத்து விடயமாகும்படி செய்யும். இது தன்வேதனைக்காட்சி என்று கூறப்படும். இங்கே பதவுரையில் கூறப்பட்ட முப்பத்தொரு தத்துவக் கருவிகளால் உலகவாழ்வில் இன்ப துன்ப மோகங்கள் உண்டாகி, மக்களுக்கு உலகபோகம் நிகழுமென அறிக. சுத்தமாயைக்குச் சேர்ந்த ஐந்து தத்துவக் கருவிகள் சிவசக்தி முப்பத்தொரு தத்துவக்கருவிகளையும் இயக்குதற்குப் பிரேரகக் கருவிகளாக மாத்திரம் அமைதலால் அவை கூறப்படவில்லை. பேரின்பம் என — பேரின்பம் என்பது இங்கே பேரின்பக்கருவிகளைக் குறிக்கிறது. அதாவது மேலே கூறியவாறு சிற்றின்பம் நுகர்தற்கு ஏதுக்களாகிய கருவிகளெல்லாம் பேரினபம் நுகர்தற்கு ஏதுக்களாகிய கருவிகளாகப் பயன்படுத்தப் படுகின்றன. சிற்றின்பத்துக்கு ஏதுக்களாயுள்ளன காரியநிலையிலுள்ள தத்துவக்கருவிகள். இவை நிலையில்லாது மாறி மாறி வருதலால் பொய் (அசத்து) என்று கூறப்படும். அக்கருவிகளெல்லாம் காரணநிலையில் எப்பொழுதும் உள்ளனவாய் தூவெளியில் ஒடுங்குவனவாகும். இது மெய் (சத்து) என்று கூறப்படும். அடியார் ஒருவர் தமது சிவோகம் பாவனை முதலிய தவங்களால்

மலவிருள் நீங்கப்பெற்றுச் சிவத்தோடு அத்துவிதமாய் ஒன்றிநிற்கும்பொழுது தத்துவக்கருவிகள் முழுவதும் தூவெளியொளியால் நிரம்பப்பெற்று அவற்றி லடங்கியிருத்தலால், மல இருள்நீங்கித் தூய்மை யடைகின்றன. அவ்வொளி சிவனுடைய அகண்ட ஒளியாதலால், அவ்வடியாருடைய சிந்தை மல கன்ம மாயைகளினுடைய தொடர்களினின்றும் நீங்கிச் சிவகரணமாய்ச் சிவமேயாகும் என்று கூறப்படுகிறது. "சிந்தைய தென்னச் சிவமென வேறில்லை (2853) என்றும், "சித்தம் சிவமாய் மலமூன்றும் செற்றவர்" (2969) என்றும் திருமூலரும், "சிந்தையுட் சிவமாய் நின்ற உருவினைக் கண்டுகொண்ட தென்னுள்ளமே" (4 - 98 - 8) என்று திருநாவுக்கரசு அடிகளும் "சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்" (320) என்று மாணிக்கவாசக அடிகளும் சிந்தையைச சிவமென்று கூறியிருத்தல் காண்க. இத்தகைய அடியார் சிவமொன்றையே எங்கும் காணுதலால் ஐம்பொறிகளின் வழியாய் ஐம்புல விடயங்களிற் செல்லாது தத்துவக்கருவிகளையும் சிவமெனவே கண்டு அவற்றைப் பேரின்பம் நுகர்தற்கருவிகளாகக் கொள்ளுவர் என்பது கருத்து. உய்யவந்ததேவ நாயனார் தாம் அருளிச்செய்த திருவுந்தியார் 33-வது பாட்டில்,

> "பெற்றசிற் றின்பமே பேரின்ப மாமங்கே
> முற்றவ ரும்பரி சுந்தீபற
> முளையாது மாயையென் றுந்தீபற"

என்று இக்கருத்தைக் கூறியருளினர். பேணும் அடியார் — பேணுதல் - விரும்புதல். பேரின்பத்தை அடைய மிக்க வேட்கையுடைய அடியார். பேணும் அடியார் என்றதனாலே அவர்கள் துரியநிலைக்குரிய யோகம்பயின்று மும்மலச்சத்திகளை வாட்டிச் சிந்தைதெளிந்து யோகக்காட்சி உடையவராய்த் துரியாதீதத்திற்குரிய மெஞ்ஞான நிலை அடைதற்குத் தவமுயற்சி செய்துகொண்டிருக்கும் அடியார் என்பது பெறப்பட்டது. பிறப்பு அகல — பிறப்பு - பிறவித்துன்பம். பிறவித்துன்பம் நீங்குதல் என்பது பேரின்பமடைதலாகும்.

காணும் பெரியானை — காணுதல் - அறிதல். காணும் என்ற பெயரெச்சம் பெரியான் என்ற பெயர்கொண்டு முடிந்தது. அறிவிக்க அறியும் இயல்புடைய அடியார் பேரின்பப் பொருளாகிய தன்னையறியும்படி அவர்களோடு விரவிநின்று அறிவித்தல் அல்லாமல், அவர்களோடு ஒருங்கியைந்து நின்று அவர்களைப் போகப்பொருளாகிய தன்னிடத்திற் செலுத்தித் தன்னை விடயிக்குமாறு செய்தலாகிய காணுமுதவி இங்கே காணுதல் என்பதனுற் கூறப்பட்டது. இனம்பற்றி இங்கே கூறப்படாத காட்டுமுதவியும் பதவுரையிற் கூறப்பட்டது. 'காணும் கண்ணுக்குக் காட்டு முளம்போல்,காணவுள்ளத்தைக் கண்டு காட்டலின், அயரா அன்பி னரன்கழல் செலுமே' என்ற சிவஞானபோதம் 11-ம் சூத்திரக்கருத்து இஙகே கூறப்பட்டது. இஙகே கண்டு காட்டவின் எனபது காட்டிக் காண்டலின் என்று பொருள் கொள்ளப்படலால் இந்தக் காண்டல் கூறப்பட்டது. வேண்டுவார் வேண்டுவதே ஈவான் சிவபெருமான் ஆதலின், காணுங் கரணங்க லெல்லாம் பேரின்பமெனப் பேணுமடியாருக்குப் பிறப்பகலச் செய்வான் என்பார், காணும் பெரியானை என்முர். காணும் கரணங்களெல்லாம் பேரின்பமெனப் பேணுமடியார் தங்கள் வேட்கைபற்றி இறைவன் தங்களுக்கு இடைவிடாது செய்துவருகின்ற காட்டுமுதவியையும் காணுமுதவியையும் தங்கள் தூயசிந்தையில் நினைக்குந்தோறும் இறைவனிடத்துச் செல்லும் வேட்கையே அடங்காது மீதூர்ந்து பேரின்பமாக அவர்களுக்கு விளங்கித் தோன்றும். பேணுமடியார் என்றதனுல் அடியாரிடம் வேட்கை நிகழ்தலும் அவ்வேட்கையின்வழி அவ்வடியாரிடம் அறிவும் செயதும் நிகழ்தற்குச் சிவபெருமான் அவர்களுக்கு அறிவித்தலும், அறிதலாகிய செய்வித்தலும் நிகழ்த்துதல் ஆகிய மூன்று அத்துவித நிலைகளும் கூறப்பட்டவாருயிற்று. வாய் ஆரப் பேசு — ஆர்தல் = நிறைதல்; வாய் ஆரப் பேசுதலாவது மனதில் உண்மையான அன்பினுல் நினைந்து அந்நினைவை வாயினுலே பேசுதல். பேசுதலுககுக காரணம் மனநினைவு ஆதலாலும், மனதால் நினைத்தலும், மெய்யால் வணங்குதலும் உடன் கூறப்பட்டன. பேணுமடியார் பிறப்பகலக

காணும் பெரியான் என்று சிவபெருமானுடைய அருட்செயல் கூறப்படுதலின், நீயும் பயன்கருதாது அத்தகைய சிவபெருமானைத் தூயமனதால் நினைந்தும், வாயினால் அவன் அருட்செயலைப் பேசியும், மெய்யால் வணங்கியும் வழிபடுவாயாகில், அவ்வடியாருக்குச் செய்யும் உதவிகளை உனக்கும் செய்து உன்னைப் பேரின்பமடையச் செய்வன் என்று குறிப்பாக நெஞ்சைப் பார்த்துக் கூறப்பட்டவாறாயிற்று.

---

தில்லையில் அருளிய

## ௪௯. திருப்படையாட்சி.

---

திருப்படையாட்சியில் படையாட்சி என்பது படை ஆட்சி என்ற இரு சொற்களாலாயது. படை என்பது போர். அது இங்கே ஆன்மாவைப் பிணிக்கும் மும்மல காரியங்களை எதிர்க்கும் எதிர்ப்பைக் குறிக்கிறது. ஆட்சி என்பது இங்கே அவற்றை மேல் எழ ஒட்டாமல் அடக்கி நிற்கும் ஆன்மாவுக்குத் துணைசெய்யும் இறைவனது அருட்செயலாகும். படை ஆட்சி யென்பது ஆன்மா தன்னைப் பிணிக்கும் ஆணவம் வினை மாயை ஆகிய மும்மலங்களின் காரியங்களை எதிர்த்துநின்று அவற்றை அடக்கி வெல்வதற்குத் துணைசெய்யும் இறைவனுடைய வீரமான அருட்செயலாகும்.

### சீவ உபாதி ஒழிதல்

---

சீவ உபாதி ஒழிதல் என்பது சீவன் உபாதி என்ற இரு வடமொழிச்சொற்கள் சேர்ந்து நிற்பதோடு ஒழிதல் என்னும் தமிழ் மொழி சேர்ந்து ஆகிய ஒரு சொற்றொடர். சீவன் உலகபோகம் நுகரும் தகுதியுடையதாதற் பொருட்டுக் காலம் நியதி கலை வித்தை அராகம் என்னும் ஐந்து அசுத்தமாயா தத்துவங்களுடன் ஆன்மா

கூடிநிற்கும் நிலை. இவை ஐந்தும் ஆன்மாவுக்குப் பஞ்சகஞ்சுகம் எனப்படும். ஆன்மா உலகில் வாழ்தற்குத் துணைசெய்யும் மாயா காரியத் தொகுதியே உபாதியாகும். சிவோபாதி என்பது வடமொழி இலக்கண முடிவு. குணசந்தி. சிவோபாதி என்றது சிவன் உலகில் வாழ்தற்கு அதற்குத் துணையாக வேண்டப்படும் ஆறு அத்துவாக்களும் ஆகும். அவை வன்னம் பதம் மந்திரம் என்னும் மூன்றும் சேர்ந்த சொல்லுலகமும், கலை தத்துவம் புவனம் என்னும் மூன்றும் சேர்ந்த பொருளுலகமும் ஆக ஆறுஞ் சேர்ந்தனவாகும். ஒழிதல் என்பது ஆன்மாவை விட்டு இவை முற்றிலும் நீங்குதல். ஆணவமலப்பிணிப்பு நீங்குதற்காக ஆன்மாவுடன் இறைவனாற் சேர்க்கப்பட்ட இந்த ஆறு அத்துவாக்களும் மும்மலப்பிணிப்பு ஆன்மாவைவிட்டு நீங்கியபின் வேண்டப்படுவன அல்லவாதலின், அவற்றின் நீக்கமே சிவ உபாதி ஒழிதலாகும். படையாட்சிப்பதிகப் பாட்டுக்கள் சிவ உபாதி ஒழிதலால் ஆன்மாவுக்கு உண்டாகும் அருட்குணங்களைக் கூறுதலால், அப்பதிகம் சிவ உபாதி ஒழிதலைக் கூறுவதாயிற்று.

---

[பன்னிருசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

கண்க ளிரண்டு மவன்கழல் கண்டு களிப்பன வாகாதே
    காரிகை யார்கள்தம் வாழ்விலென் வாழ்வு கடைப்படு மாகாதே
மண்களில் வந்து பிறந்திடு மாறு மறந்திடு மாகாதே
    மாலறி யாமலர்ப் பாத மிரண்டும் வணங்குது மாகாதே
பண்களி கூர்தரு பாடலொ டாடல் பயின்றிடு மாகாதே
    பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள் பாடுது மாகாதே
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படு மாகாதே
    மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே.

[ப-ரை] மீன்வலை வீசிய கானவன் — வலைஞர்கோன் மகளாய் அவதரித்த உமாதேவியாரைத் திருமணஞ் செய்யும்பொருட்டு வலை

ஞர்களுக்கு அகப்படாத சுறா மீனைப்பிடிப்பதற்காகக் கடலில் வலை வீசிய வேடனாகிய சிவபெருமான்; வந்து வெளிப்படு மாயிடில் — என்னுள் விளங்கி என்னைத் தன்னுள் அடக்கி எழுந்தருளினால்; கண்கள் இரண்டும்—எனது இரண்டு புறக்கண்களும்; அவன்கழல் கண்டு — (திருப்பெருந்துறைக்கு அந்தணன் வடிவில்வந்து ஆண்டருளிய) அந்தச் சிவபெருமானுடைய திருவடிகளைப் பார்த்து; களிப்பன ஆகாது — களிப்பனவாகுதல் நிகழாது; காரிகையார்கள் தம் வாழ்வில் — பெண்களோடு சேர்ந்து வாழும் உலகவாழ்வில்; என் வாழ்வு கடைப்படும் ஆகாது — என்னுடைய வாழ்வு ஈடுபட்டுத் தாழ்வடைதலும் நிகழாது; மண்களில் வந்து பிறந்திடு மாறு— பூமியில் வந்து பிறக்கும் வகையில்; மறந்திடும் ஆகாது — அவனுடைய திருவடிகளை நான் மறந்திருத்தலும் நிகழாது; மாலறியா மலர்ப்பாதம் — திருமாலுக்கும் நான்முகனுக்கும் நடுவே தழற்பிழம்பாய் நின்றபொழுது திருமால் (பன்றியுருவம் எடுத்துப் பூமியை அகழ்ந்து சென்று காணமுயன்றும்) காணமாட்டாத தாமரை மலர் போலும் இரண்டு திருவடிகளையும்; வணங்குதும் ஆகாது — வணங்குவேன் என்றலும் நிகழாது; பண்களி கூர்தரு — பண்களைப்பாடி இன்பத்தில் திளைக்கின்ற; பாடலோடு ஆடல் பயின்றிடும் — பாடலினும் ஆடலினும் பழகுதலும்; ஆகாது — நிகழாது; பாண்டிநன்னாடு உடையான் — பாண்டிநன்னாட்டைச் சோமசுந்தரபாண்டியனாய் அரசாட்சிசெய்த சிவபெருமான்; படையாட்சிகள் பாடுதும் ஆகாது — ஆன்மாக்கள் உய்யும்பொருட்டுச் செய்கிற வீர அருட்செயலைப்பற்றிப் பாடுவேன் என்றலும் நிகழாது; விண் களிகூர்வதோர் வேதகம் — விண்ணவர் களித்து மகிழும்படியான துறக்கவின்பம் (சொர்க்கவின்பம்); வந்து வெளிப்படும் ஆகாது — என்னிடத்திற் பொருந்தி எனக்கு உணர்வாதலும் நிகழாது.

[வி-ரை] மீன்வலை வீசிய கானவன் — சிவபெருமான் முன்னொரு காலத்தில் உமாதேவியாருக்கு ஆகமப்பொருளை உணர்த்திக் கொண்டிருந்த பொழுது அவள் பராமுகமாக இருந்ததற்காக வலை

ஞர்கோன் மகளாகப் பிறக்கும்படிக்கும், பிள்ளையார் முருகர் என்னும் இருவரையும் அப்பொழுது உள்ளே வரும்படி விட்டதற்காகத் திரு நந்திதேவரைச் சுறுமீனுகப் பிறக்கும்படிக்கும், ஆணை செய்தனர். வலைஞர்கோன் வெளியிட்ட செய்திப்படி, சிவபெருமான் வலைஞர் களாற் பிடிக்கமுடியாத அந்தச் சுறுமீனைப் பிடித்து வலைஞர்கோன் மகளைத் திருமணஞ்செய்தனர். இந்த வரலாறு திருவிளையாடற் புராணம் வலைவீசின படலத்தில் கூறப்பட்டிருக்கிறது. இவ் வர லாற்றின்படி சிவபெருமானை மீன்வலைவீசிய கானவன் என்றார். காட்டிலுள்ள விலங்கு பறவைகளைப் பிடிக்கிற வேடன்போல வலை ஞன் கடலிலுள்ள மீனைப் பிடித்ததனுலே, கானவன் என்பது இங்கே வலைஞன் என்னும் பொருள்பட நின்றது. வந்து வெளிப் படும் ஆயிடில் — வந்து வெளிப்படுதலாவது, உள்ளத்தின்கண் விளங்கி மெய்யுணர்வுக்குப் புலனுதலாகும். மெய்யுணர்வு உண்டா கும் பொழுது சிவமன்றிப் புறப்பொருளாவது அகப்பொருளாவது காட்சிப்படுதலில்லை. 'ஒங்குணர்வில் உள்ளடங்கி உள்ளத்தில் இன் படங்கத், தூங்குவர்மற் றேதுண்டு சொல்' எனத் திருவருட்பயன் (10 - 1)ல் உமாபதி சிவாசாரியர் இந்தவுண்மையைக் கூறியது காண்க. கண்களிரண்டும் அவன் கழல் கண்டு களிப்பன ஆகாது — இதனுல் அடிகள் தமக்கு அருட்குரவனுய் அந்தணர் கோலத்தில் வந்த சிவபெருமானுடைய திருவடிக்காட்சியை நினைந்து கூறுகின் றார். 'காணு மாறு காணேன் உன்னை அந்நாட் கண்டேனும்' என (5 - 84)ல் அடிகள் அருட்குரவனுடைய உருவத் திருவடிக்காட்சி யைக் கூறியிருத்தல் காண்க. களிப்பன — களிப்பனவாகுதல். ஆகாது — இயல்பில் நிகழாது. காரிகையார்கள்தம் வாழ்வி லென் வாழ்வு கடைப்படுமோகாது — உலகவாழ்விலுள்ள ஆணும் பெண் ணுஞ் சேர்ந்து ஒருயிராகின்றது. உடலுக்கன்றி உயிருக்கு ஆண் பெண்ணென்ற வேற்றுமை யில்லை. உலகில் ஆண் பெண் ணென் னும் மக்கட் பாகுபாடு அவர்களுடைய உலகவாழ்வின் பொருட்டு வந்தது. உலகத்தைக் கடந்த பரானுபவ நிலையில் ஆண் பெண் பாகுபாட்டு வாழ்வு இல்லையாதலின், காரிகையார்தம் வாழ்வி லென்

வாழ்வு கடைப்படு மாகாது என்றார். கடைப்படு என்பது முதனிலைத் தொழிற்பெயராய்க் கடைப்படுதல் என்னும் பொருளில் வந்தது. உம் இறந்தது தழீஇய எச்சவும்மை. பின்வருகிற உம்மைகள் எச்சவும்மைகள். மண்களில் வந்து பிறந்திடுமாறு மறந்திடும் ஆகாது —இறைவன் உணர்வினுள் ஒடுங்கியிருக்கும் உத்தமர்களுக்கு மலத்திறனுண்டாகும் நினைப்பும் மறப்பு மில்லையாகலின் இவ்வாறு கூறினார். மறந்திடு - மறந்திடுதல் - தொழிற்பெயர். இதனால் இறைவன் திருவடிகளைக் கணநேரமாவது மறந்திருப்பவர்களுக்குப் பிறவி உண்டென்பது பெறப்பட்டது. "அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத், தினைத்த னைப்பொழுதும்மறந் துய்வனோ" எனத் தேவாரம் (5—2—1) பாட்டில் இவ்வுண்மை கூறப்பட்டிருத்தல் காண்க. மாலறியா மலர்ப்பாதம் இரண்டும் வணங்குதும் ஆகாது— மலர்ப்பாதத்தை வணங்குதல் அகச்செயல் அல்லது புறச்செயலாகலின், வணங்குதல் உள்ளும் புறமும் ஒருதன்மைக் காட்சியராயுள்ள உத்தமருக்கு இயல்பில் நிகழாது எனக் கூறினார். வணங்குதும் என்பது வணங்குவது என்னும் வருங்கால ஒருமைத்தன்மை வினைமுற்றும் 'உம்' என்னும் இறந்தது தழீஇய எச்ச உம்மையுஞ் சேர்ந்து ஆகியது. வணங்குது என்பது நான் வணங்குவேன் எனப் பொருள்படும். அது இங்கே நான் வணங்குவேன் என்றல் என்ற பொருளில் வந்தது. பாண்டி நன்னாடுடையான் படையாட்சிகள் பாடுதும் ஆகாது — சிவபெருமான் ஒருகாலத்தில் மலையத்துவச பாண்டியன் மகளாய் அவதரித்த உமாதேவியாரை மணந்து பாண்டி நாட்டை ஆட்சிசெய்த அருட்டிறம்பற்றிப் பாண்டிநாடுடையான என்னாது பாண்டிநன்னாடுடையான் எனக்கூறினார். போற்றித்திருவகவல்(4 - 164 - 165) வரிகளுக்கு இது பற்றிக்கூறிய உரையைக் கொள்க. படையாட்சிகளைப் பாடுதல் புறச்செயலாதலால் ஆகாது என்று கூறினார். வணங்குதும் என்பதற்குக் கூறப்பட்ட இலக்கணக் குறிப்பை இதற்கும் கொள்க. விண் களிகூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படும் ஆகாது — விண் ஆகுபெயராய் விண்ணில் வாழுகின்ற விண்ணவரைக்குறிக்கிறது. வேதகம் என்பது வேறுபாடு;

அது இங்கே உலக இன்பத்துக்கு வேறாயிருக்கிற துறக்கவின்பத்தைக் குறிக்கிறது. விண்ணவர்கள் மண்ணுலக வின்பத்துக்கு வேறாகிய துறக்கவின்பத்தில் களித்து மகிழ்கிறவர்களாதலின், அத்துறக்க வின்பத்திலும் மிகமேலாகிய பேரின்ப உணர்வுடையவர்களுக்கு அவ்வின்பம் நிகழாதாதலின் இவ்வாறு கூறினர். வெளிப்படு என்பது முதனிலைத்தொழிற்பெயர். அது வெளிப்படுதல் என்னும் பொருள்பட வந்தது. வெளிப்படுதல் உணர்வுக்குப் புலனாதல். இந்தப்பாட்டில் துரியாதீத நிலையில் இறைவனது பேரின்பவுணர்வில் ஒடுங்கியிருக்கும் அனுபவமுடையவர்களுக்கு உலகவாழ்விலுள்ளவர்களுக்கு நிகழும் அகச்செயலும் புறச்செயலும் இயல்பில் நிகழா என்றீ அடிகள் கூறுகின்றார்.

---

தில்லையில் அருளிய

# ௩௦. ஆனந்தமாலை.

---

ஆனந்தமாலை என்னும் சொற்றொடர் ஆனந்தம் மாலை என்னும் இரண்டு சொற்களாலாகியது. ஆனந்தம் என்னும் வடமொழிச் சொல் பேரின்பம் என்னும் பொருளில் வந்தது. மாலை என்ற சொல்லி னீற்றிலுள்ள ஐகாரம் சாரியை. மால் என்பது விருப்பம். ஆனந்தமாலை என்பது பேரின்ப வனுபவ மடையும்பொருட்டு ஒருவருக் குளதாகிய விருப்பம்.

## சிவானுபவ விருப்பம்.

---

சிவானுபவ விருப்பம் என்பது சிவம் அனுபவம் விருப்பம் என்னும் மூன்று சொற்களாலாகியது. சிவானுபவம் என்பது உயிரானது தன்முனைப்பின்றிச் சிவத்தோடு இரண்டறக் கலத்தலால் வேறுபொருளாயிருப்பினும் ஒன்றென்னும் தன்மைப்பட்டு

அச்சிவத்தி லடங்கிநின் றுணரும் பேரின்பானுபவம். சிவானுபவ விருப்பம் என்பது உயிரானது இந்தப் பேரின்ப அனுபவத்தை யடையும்பொருட்டுக் கொள்ளும் தூயவிருப்பம் (ஆசை). இந்த விருப்பமானது பேரின்ப அனுபவ மடைதற்கு இன்றியமையாது வேண்டப்படுதல் இங்கே கூறப்பட்டது. ஆனந்தமால், சிவானுபவ விருப்பம் இரண்டும் ஒருபொருளன.

---

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

---

645. சீல மின்றி நோன்பின்றிச் செறிவே யின்றி அறிவின்றித், தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை, மாலுங் காட்டி வழிகாட்டி வாரா வுலக நெறியேறக், கோலங் காட்டி ஆண்டானைக் கொடி யேன் என்றோ கூடுவதே. ௬௪௫.

[ப-ரை] செறிவின்றி — (நின் திருவடிகளைச் சேர்ந்தின்புறு தற்கு வேண்டப்படும்) மெய்யன் பில்லாமலும்; சீலமின்றி — மெய் யன்பு மெய்யறிவு மெய்த்தவம் என்னும் மூன்றினாலும் ஆகிய அருட்செம்மையாகிய நல்லொழுக்க மில்லாமலும்; தோலின் பாவைக் கூத்தாட்டாய் — ஒரு தோற்பதுமையானது ஒருவனால் ஆட்டுவிக்கப்பட்டு அவன் ஆட்டினவழியே ஆடுதல்போல என் மனத்தின் வயப்பட்டு அது என்னை உலகபோக நுகர்வில் ஐம்பொ றிகளின் வழியாய்ச் செலுத்துவிக்கும் நெறியெல்லாம் சென்று; சுழன்று விழுந்து கிடப்பேனை — உலகபோகங்களி லுழன்று அவற் றில் விருப்பமுடையவனாய்த் தன்வயமின்றிக் கிடப்பவனாகிய என்னை; மால் காட்டி — (நின் திருவடிகளைச் சேர்ந்தின்புறுதற்கு வேண்டப்படும்) மெய்யன்பை யுடையவனாகும்படி செய்து; வழியுங் காட்டி — அத்திருவடிகளை யடைதற்கு அறியும் நெறியையு முடை யவனாகச் செய்து; உலகம் வாரா நெறிஏற — மீள உலகத்திற்கு வந்து பிறவாதிருக்கும்படியான செயலாகிய இன்பநெறியில் ஏறிச்

செல்லுதற்கு; கோலங் காட்டி ஆண்டானை — (திருப்பெருந்துறையில்) அந்தணர் கோலத்தில் வந்து தீக்கை செய்து என்னை ஆண்டருளியவனை; கொடியேன் — வன்மனமுடையவனாகிய நான்; கூடுவது என்றோ — கயிலைக்கு வந்து முன்போல நின்னோடும் நின்னடியாரோடும் சேர்ந்து இன்புற்றிருத்தல் எக்காலமோ அறியேன்.

[வி-ரை] செறிவின்றி, அறிவின்றி, நோன்பின்றி — இறைவனது திருவடிப்பேற்றை யடைதற்குத் திருந்திய அன்பும், திருந்திய அறிவும், திருந்திய செயலும் ஒன்றுக்கொன்று நேர்பட்டு ஒருமைப்பட்டிருக்குந் தன்மையில் இன்றியமையாது வேண்டப்படுதலால், அத்திருவடிப்பேற்றை யடைதற்கு அத்தகைய அன்பும், அறிவும், செயலும் தமக்கில்லை என்று அடிகள் கூறுகின்றார். செறிவு— நெருக்கம்; அது இங்கே நெருங்கிக் கலந்திருக்கும் குணமாகிய அன்பைக் குறிக்கிறது. நோன்பு என்பது திருந்திய அன்போடும் அறிவோடும் இறைவனைச சேருதற்குச் செய்யும் தவமாகிய செயலைக் குறிக்கிறது. ஒருவருடைய அன்பும், அறிவும், செயலும் ஒன்றுக்கொன்று நேர்மையுடையதா யிருந்து பிறருடைய அன்பு, அறிவு, செயல்களோடும் நேர்மையாயிருத்தலால் அவருக்கு அறத்தின் வழியொழுகும் அறச்செம்மை யொழுக்கமுண்டாகின்றது. ஒருவருடைய இந்த அறச்செம்மை யொழுக்கத்தில் அவரறியாமல் இறைவன் அவரைத் தொடர்ந்துநின்று அவருடைய உள்ளத்தில் திரோதானசத்தியோடியைந்து உண்மையை உணர்த்திக் கொண்டே வருகிறான். இங்ஙனம் இறைவன் பலபிறவிகளில் அவருள்ளத்தி லுணர்த்திக்கொண்டே வருதலால், அவர் தம்முடைய வேட்கை, அறிவு, செயல்களில் அருளொளி விளங்குதலால் மலமறைப்பு நீங்கப்பெற்று, இறைவன் தமதுள்ளத்தில் நின்று உணர்த்திக்கொண்டு வருதலை உணரும்பருவ மடைகின்றார். இப்பருவம் அவரடைதலும் தமது அறிவு நிலையில் இருவினைத் தொடக்கிலிருந்து நீங்கி இருவினையொப்புப் பருவமடையத் தொடங்கி, தாமே இறைவனது அருட்செயலையறிந்து, அவனைத்

தொடர்ந்துநின்று, முன் தாம் ஒழுகிவந்த உலகநெறியைவிட்டு வீட்டுநெறியில் பேரின்பப் பேற்றுக்கேதுவான அருட்செம்மையொழுக்கத்தில் ஒழுகத் தொடங்குகின்றார். இந்த அருட்செம்மையொழுக்கத்தில் அவர் ஒன்று அல்லது இரண்டு பிறவிகளில் இருவினையொப்பும், அதன்வழி மலபரிபாகமும், அதன்வழி சத்திநிபாதமும் முறையே வளர்ந்து முதிர்ந்து நிரம்பப்பெற்றுப் பேரின்பப் பேற்றை யடைகின்றார். திருநாவுக்கரசு அடிகள் "உலகிற் றிருநின்ற செம்மை" (4–8–1) என்று கூறுவது இந்த அருட்செம்மையொழுக்கத்தையே. சீலமின்றி — சீலம் என்பது முன்னே கூறப்பட்ட திருந்திய அன்பு, அறிவு, செயல்களினாலே செம்மையில் நிகழப்பெறும் அருட்செம்மை யொழுக்கமாகிய நல்லொழுக்கம். இந்த அருட்செம்மை யொழுக்கத்தைத் திருநாவுக்கரசு அடிகள் மேற்கொண்டிருந்ததாகச் சுந்தரமூர்த்தி அடிகள் திருத்தொண்டத் தொகையில் "திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட திருநாவுக்கரையன்" (7 - 39 - 4) என்று கூறியருளினார். ஒருவரிடம் இந்த அருட்செம்மை யொழுக்கம் நிரம்புதலினாலே அவரிடம் பேரின்பப் பேற்றுக்கேதுவாகிய மெய்யுணர்வு விளங்குவதற்கு வேண்டப்படும் இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் ஆகிய மூன்று நிலைகளு முண்டாகின்றன. அடிகளுடைய வரலாற்றாலும் இந்நூலிற் பலபாட்டுக்களாலும் அவர் நான்காவது சத்திநிபாதம் நிரம்பப்பெற்று இறைவனாலாட்கொள்ளப் பெற்றுச் சீவன் முத்த நிலையை யடைந்தவரென்று நாமறிகின்றோம். அங்ஙனமாயினும் அவர் தமக்குச் சீலமில்லை யென்று இங்கே கூறுவது, சீலமின்றி உலகில்வாழும் பெரும்பான்மையான மக்கள் அறிந்துய்யும் பொருட்டு அவர்களுக்குத் தம்மேல்வைத்துக் கூறும் அறிவுரையாகும். தோலின்பாவைக் கூத்தாட்டாய் – இது உருவகம். இதிலடங்கிய உவமையும் உவமைப்பொருளும் பதவுரையில் விரித்துக் கூறப்பட்டது. மனமானது உயிரைத் தன்வசமாக்கி, அதனை ஐம்பொறிகளின் வழியாக உலக ஐம்புல நுகர்வுகளில் ஈர்த்துச் செல்லுதலை இங்கே அடிகள் கூத்தாட்டென்றார். உயிரானது மனத்தைத்

தன்வயமாக்கித் தன்னோடு சேர்த்துக்கொண்டு இறைவனுடைய திருவடிகளிற் பற்றுவைத்து ஒழுகுகிறவர்களுக்கு இந்தக் கூத்தாட்டு அடங்கிவிடும். திருவடி என்தலைமேல் நட்டமையாற், கடக்குந் திறல்ஐவர் கண்டகர்தம் வல்லாட்டை, அடக்குங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே'' என்று அடிகள் (40 - 8) பாட்டிற் கூறியருளினர். இதனாலே இறைவனுடைய திருவடிகளைப்பற்றி வாழும் ஒருவருடைய அருட்செம்மை வாழ்க்கைக்கு, அவர் மனம் ஐம்பொறிகளின் வயமாய் உலகநுகர்விற் செல்லும் மேலே கூறப் பட்ட அறச்செம்மை வாழ்க்கையிலிருந்து நீங்கல் வேண்டுமென் பது கூறப்பட்டது. அறச்செம்மை வாழ்க்கையிலிருந்து நீங்கி அருட்செம்மை வாழ்க்கை யடைதலாவது, உலகநுகர்வுகருதி அற வழியில் ஒழுகும் உலகநெறி வாழ்கையைவிட்டுச சிவநுகர்வு கருதி ஒழுகும் வீட்டுநெறி வாழ்க்கையிற் சென்று ஒழுகுதலாகும். சுழன்று விழுந்து கிடப்பேனை - சுழலுதல் - உழலுதல், அதாவது உலகநெறி வாழ்விலுள்ள பல்வகை நுகர்வுப் பொருள்களை நுகர்ந்து அவற்றில் இன்பவமைதிபெறாமல், என்னசெய்யலாமென்று அலைதலாகும், விழுந்துகிடத்தல் என்பது உருவகம். ஒருவன் ஓர் ஆழமான குழி யில் விழுந்து அதிலிருந்து நிலத்தில் ஏறிச்செல்வதற்கு வலியில்லா திருத்தல்போல, உலகநுகர்வுகளில் விழுந்து அவற்றைவிட்டு நீங்கு தற்கு வலியில்லாதிருத்தல். கிடப்பேன் - ஒருமைத்தன்மை வினை யாலணையும் பெயர். மால்காட்டி — மால் என்பது இங்கே இறை வனிடத்தில் செய்யும் மெய்யன்பு. மால்காட்டுதலாவது மனத்தி னுள்ளே நின்றுணர்த்தி மெய்யன்பை யுடையவனாகச் செய்தல். வழியுங்காட்டி — வழி என்பது இங்கே அறியும் வழி. இறைவனை யடையும் அன்புடையவனுக்கு அவனையடையும் மெய்யறிவு மெய் யன்புக்குப்பின் வேண்டப்படுதலின், மால் காட்டி யென்பதற்குப் பின் வழியுங்காட்டி என்றார். உம் - இறந்தது தழீஇய எச்சவும்மை. வழிகாட்டுதலாவது மனத்துள் நின்று அறிவித்தலாகும். உலகம் வாராநெறி என்றது மீள உலகத்திற்கு வந்து பிறவாமைக்கேதுவா கிய இன்பநெறி. அன்பும் அறிவும் நேர்மையாகச் சேர்ந்து செயல்

உண்டாதலால், அடிகள் மால்காட்டி வழியுங்காட்டி என்பதற்குப் பின் செயலாகிய இன்பநெறியை உலகம் வாரா நெறி என்றார். கோலங்காட்டி ஆண்டானை — இதனால் அடிகள் தமக்கு இறைவன் திருப்பெருந்துறைக்கு அந்தணனுருவில் குருவாய்வந்து ஆட்கொண்டருளியதைக் கூறுகின்றார். அடிகள், செறிவின்றி இருந்த தமக்கு இறைவன் மால்காட்டினானென்றும், அறிவின்றி இருந்த தமக்கு வழிகாட்டினா னென்றும், நோன்பின்றி இருந்த தமக்கு உலகம் வாரா நெறியேறக் கோலங்காட்டி ஆண்டானென்றுங்கூறி, இறைவன் அவ்வாறு செய்தலினாலே தமக்குப் பேரின்பமருளினா னென்று கூறினார். கொடியேன் என்றோ கூடுவதே —இறைவன், மேலே கூறியவாறு தமக்கு அருள்செய்து அடிமையாக ஆண்டபின் அவனோடும் கயிலைக்குப்போய், முன் தாம் சிவகணங்களிலொருவரா யிருந்தவாறு இருப்பதற்கு இல்லாமலிருந்ததை நினைந்து மனம் வருந்தித் தம்மைக்கொடியேன் என்றுகூறியபின், என்றோ கூடுவதே என்று ஏங்கிக் கூறினார். கூடுவது என்பது கயிலையில் இறைவனோடும் அடியாரோடும் சேர்ந்து பேரின்பக் களிப்புற்றிருப்பது. கூடுவதே என்பதிலுள்ள 'ஏ' அசை. மக்களெல்லாரும் அடைய விரும்புவது இன்பமே; அவ்வின்பம் உலகவின்பம் துறக்கவின்பம் பேரின்பம் என முறையே ஒன்றுக்கொன்று சிறப்புடையதாய் வருவனவாகும். உலகநெறியில் அறச்செம்மை யொழுக்கம் உலகவின்பத்திற்கும் துறக்கவின்பத்திற்கும் ஏதுவாயுள்ளது. வீட்டுநெறியில் அருட்செம்மை யொழுக்கம் பேரின்பத்திற்கு ஏதுவாயுள்ளது. இதனால் எந்த இன்பத்திற்கும் ஒழுக்கம் இன்றியமையாத துணையா யுள்ளதென்பது தெளிவாகும். உலகவின்பத்தையும் அதற்கு நேரே துணையாயிருக்கிற பொருளையும் மிகப்பெரிதாகக் கருதிவாழும் இக்கால மக்கள் பெரும்பான்மையும் அறச்செம்மை யொழுக்கத்தினின்றும் நழுவியொழுகுதலினால் உலகில் பெருந்துயர் விளைவித்துக்கொள்ளுகிறார்கள். இத்துயர் நீக்கத்திற்கு வழி அறச்செம்மை யொழுக்கத்தில் நிலைத்துநின்று ஒழுகுதலாகுமென்று இப்பாட்டால் நாமறிகின்றோம்.

தில்லையில் அருளிய

# ௩௧. அச்சோப்பதிகம்.

அச்சோப்பதிகம் என்பது அச்சோ பதிகம் என்னும் இரண்டு சொற்களா லாகியது. அச்சோ என்பது வியப்பினைக் காட்டும் ஓர் இடைச்சொல். ஒருவன் தான் முன் அனுபவத்தில் அறியாத ஒன்றை அறிதலால் அவனுக்கு வியப்புண்டாகிறது. அடிகள் தாம் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பெற்றதற்கு முன் தம்முள்ளத்தில் உணராத அனுபவத்தைச் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பெற்ற பின் உணர்ந்த அனுபவத்தைப்பற்றிப் பாடும் பாட்டுக்களடங்கிய பதிகம் அச்சோப்பதிகமாகும். இப்பதிகத்தி லடங்கிய ஒன்பது பாட்டுக்களும் அடிகள் தமது சிவானுபவத்தால் அடைந்த வியப் பைக் குறிக்கும் அச்சோ என்ற சொல்லால் முடிகின்றன.

## அநுபவவழி அறியாமை.

அநுபவம் என்பது சிவாநுபவம். அடிகள் தமக்கு இந்தச் சிவாநுபவம் எப்படி வந்ததென்று அறியாதிருத்தல் அநுபவவழி யறியாமை யாகும். அடிகள் இந்தச சிவாநுபவத்தைத் தாம் சிவ பெருமானோடு அத்துவிதமாய்க் கலந்து தம்முடைய வேட்கை அறிவு செயல்கள் சிவபெருமானுடைய வேட்கை அறிவு செயல் களில் வியாப்பியமாய் அடங்கிநின்று உணர்தலால் சிவாநுபவவழி யறியாமை நிகழ்ந்தது. இந்த அநுபவவழி யறியாமைபற்றி அடிகள் (34 - 3) பாட்டில் கூறுதல் காண்க.

[கலி விருத்தம்]

திருச்சிற்றம்பலம்.

650 முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்து பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமல மறுவித்து சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. ௬௫௰

[ப-ரை] முத்திநெறி அறியாத — வீடடைதற்கு ஏதுவாயுள்ள நெறி இன்னதென்று (சிறிதும்) அறியாதிருந்த; மூர்க்கரொடு முயல்வேனை — மூடர்களுடன் (பழகி நிலையுள்ளது உலக வாழ்வே என்று எண்ணி) வினைசெய்து கொண்டிருந்த எனக்கு; பழவினைகள் பாறும்வண்ணம் — முன் பல பிறவிகளில் நான் செய்த சஞ்சிதவினைகள் என்னை அடையாது விட்டு நீங்கும்படி; பத்திநெறி அறிவித்து(ம்) — (உண்மை ஞானத்துக்குச் சேர்ந்த சரியை கிரியை யோகம் ஞானம் அடங்குவனவாயுள்ள) அன்பு நெறியை எனக்குக் காட்டிக் கற்பித்தும்; சித்தமலம் அறுவித்து(ம்) — (அவ்வாறு கற்பித்தபடி நான் ஒழுகினதனு லுண்டாகும் பயனுக) எனது உள்ளத்தில் தனது அருட்பேரொளியை நிறைவித்து அதனுல் அதனைவிட்டு மும்மலத்தொடக்கு முற்றிலும் நீங்கும்படி செய்தும்; சிவமாக்கி(யும்) — (அவ்வாறு முற்றிலும் மும்மலங்கள் நீங்கியதாலுண்டாகும் பயனுகச்) சிவமாந்தன்மையை அடையும்படி செய்தும்; எனை ஆண்ட — (சிவமாந்தன்மை அடைந்த) என்னைப் பின் தனது அடிமையாக ஆண்டு பேரின்பம் அருளிய; அத்தன் — என் தந்தையாகிய சிவபெருமான்; எனக்கு அருளியவாறு — எனக்கு அருள்செய்ததுபோல; ஆர் பெறுவார் — வேறே யார் பெறவல்லார்.

[வி-ரை] முத்திநெறி — சமயம் என்பது மக்களுக்கு இறைவனை யடைந்து பேரினபமுறுதற்குக் காட்டும் நெறி (வழி) யாகும். சைவசமயத்திலும் சமய இலக்கணமுள்ள பிறசமயங்களிலும் இரு பெரும் பிரிவுகளுள் ஒன்று உலகநெறி, மற்றொன்று வீட்டுநெறி. உலகநெறியில் சமயங்கள் மக்களுக்கு அறத்தின்வழி ஈட்டிய பொருளைக்கொண்டு அறத்தின்வழி உலக இன்பமாகிய சிற்றின்பத்தை நுகரும் முறையைக் கற்பித்து, உலகபோகத்தில் அமிழ்த்தி, போகத்திற்கேதுவாகிய பொருள்களில் பற்றுவைத்து ஒழுகச்செய்யும். பல பிறவிகளில் உலக நெறியிலொழுகி அநுபவ முற்றியதனு லுண்டாகும் பயனுக, நிலையில்லாத உலகவாழ்வின்பத்தில் உவர்ப்

பானது மனதிலடையப்பெறும் பக்குவ அறிவுடைய மக்களுக்குச் சமயங்கள் வீட்டுநெறியைக் கற்பிக்கும். இந்நெறியில் மக்கள் உலக வாழ்வின் குறிக்கோள் இன்னதென நன்குணர்ந்து, அறம் பொருள் இன்பம் மூன்றிலும் பற்றுவிட்டுப் பேரின்பத்தையே அடையுங் கருத்துடையவர்களாய், அருளே களைகணாய்க்கொண்டு அருளின் வழியிலே தங்கள் அறிவு வேட்கை செயல்களைச் செலுத்தி ஒழுகி, முறையே சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நிலைகளை அடைந்து மெய்யறிவும் மெய்யன்பும் பெற்றுப் பேரின்பம் அடைவார்கள். இந்த நெறியே இங்கே கூறப்படும். முத்தி நெறி — முத்தி என்ற வடமொழிச்சொல் கட்டுவிடுதல் என்று பொருள்படும். (முஞ்ச் - விடுதல்) உலகப்பற்றை விட்டு இறைவனையே பற்றிப் பேரின்பம் அடைதற்கேதுவாகிய நெறி முத்திநெறி. இது வீட்டு நெறி என்று தமிழில் கூறப்படும். அறியாத மூர்க்கரொடு முயல்வேனை — பெறுதற்கரிய மானுடப்பிறவியைப் பெற்றிருந்தும் பெறுதற்கரிய பேரின்பப்பேறு இன்னதென்று அறியாது சிற்றின்ப உலகவாழ்வில் உழன்று வருந்துகிற மக்களை 'மூர்க்கர்' என்றார். மூர்க்கராவார் இன்னது செய்தால் இன்னது விளையும் என்று அறியாது ஒழுகுகிறவர்கள். இதனால் மூர்க்கர் என்ற சொல்லுக்கு மல மறைப்பை அறியாத மூடர் என்று பொருள் உரைக்கப்பட்டது. முயலுதல் — வினைசெய்தல். அறிவு வேட்கை செயல்களை உலக விடயங்களிற் செலுத்தி வினைசெய்தல். உலகநெறி ஒழுகுகிறவர்கள் ஒன்றுசேர்ந்து ஒருவரை யொருவர் மதித்து ஒழுகுகிறவர்களாதலின், மூர்க்கரொடு முயல்வேனை என்றார். முயல்வேன் — உயர்திணை ஆண்பால் தன்மை ஒருமை வினையாலணையும்பெயர். வழக்கமாய் முயன்றுவந்தவனாகிய நான். முயல்வேனை என்பது முயல்வேனுக்கு என்ற நானகாம்வேற்றுமைப் பொருளில் வந்த வேற்றுமை உருபுமயக்கம். முயன்றேன் (முயன்றுவந்த நான்) என இறந்தகாலத்தாற் கூறற்பாலது தெளிவுபற்றி முயல்வேன் என எதிர்காலத்தாற் கூறப்பட்டது. பழவினைகள் பாறும்வண்ணம் பத்திநெறி அறிவித்து — பத்திநெறி என்பது இறைவனைப் பற்

றும் மெய்யன்புநெறி. உலக அன்புநெறி அன்று.

இறைவன், உயிர்கள் தன்னை அடைந்து பேரின்பம் பெறும் பொருட்டுச் சலிப்பின்றிச் செய்துவரும் பேரருட் செயல்களை அறிந்து நினைந்து அகங்குழைந்து உருகி அவனிடத்துச் செய்யும் அன்பு மெய்யன்பாகும். இவ்வாறு அறிந்து செய்யும் அன்பே அழுத்தமாயுள்ள மெய்யன்பாயிருக்கும். இந்த மெய்யன்பானது தன்னையுடையவர்களை இறைவனுடைய திருவடிகளில் சேர்க்கும் திறனுடையது ஆதலின், பத்திநெறி யறிவித்து என்றார். "உன் குரைகழற்கே கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" என்று அடிகள் வேறொரு பாட்டில் (39-3) கூறியது காண்க. உண்மைச் சரியை கிரியை யோகம் ஞானம் நான்கும் அரும்பு மலர் காய் கனிகள் போன்ற வளர்ச்சிமுறைகளாக இந்தப் பத்திநெறியாகிய மெய்யன்பு நெறியில் அடங்கும். இந்தப் பத்திநெறியும் முதலாவது வரியில் கூறப்பட்ட முத்திநெறியும் ஒன்றுதான், வேறன்று. பழவினைகள்—முன் பலபிறவிகளில் ஈட்டப்பட்டு நுகர்ந்து கழிக்கப்படாது புத்திதத்துவத்தில் சூக்குமமாய்த் தங்கியிருக்கும் வினைத் தொகுதியாகிய சஞ்சிதவினைகள். மெய்யன்புநெறியில் நின்று இறைவனோடு ஏகமாய்நின்று அவன் பணியாக எல்லா வினைகளையும் செய்யும் மக்களுக்கு ஆகாமியவினை ஏறாது எடுத்தபிறவி நுகர்ச்சிக்கு முகந்துகொள்ளப்பட்ட பிராரத்தவினை உடலூழாய்க் கழியும் ஆதலின். அடிகள் எஞ்சிநின்ற சஞ்சிதவினையைப் பழவினைகள் என்றார். பாறுதல் என்பது ஓடுதல் அதாவது, தங்காது விரைவில் அகலுதல். தீயின்முன் பஞ்சுபோல தீக்கையால் சஞ்சிதவினை அழிதலின், பாறும்வண்ணம் என்றார்.

(1) சித்தமலம் அறுவித்து. (2) சிவம் ஆக்கி. (3) எனை ஆண்ட. (ஆண்டு) பேரின்பமருளிய சிவானந்த அநுபோகத்துக்கு இலக்கணமா யமைந்துள்ள இம்மூன்றும் முறையே வேறாதல், உடனாதல், ஒன்றாதல் என்னும் மூவகைச் சிறப்பு இயல்பு அத்துவிதநிலைகளைக் குறிக்கின்றன. 'இன்றெனக் கருளி' என்ற முதற்

குறிப்புப் பாட்டில் கூறப்பட்டபடியே இந்தப் பாட்டிலும் அவை கூறப்பட்டிருக்கின்றன. கூறப்பட்ட சொற்கள் மாத்திரம் வேறு. ஆதலின் அப்பாட்டினகீழ்க் கூறப்பட்ட குறிப்புகளை இவற்றிற்குங் கொள்க. பத்திமையும் பரிசுமிலா என்ற முதற்குறிப்புப் பாட்டிலும் இந்த மூவகை அத்துவிதநிலைகளும் வேறுசொற்களாற் கூறப்பட்டிருக்கின்றன. இந்திரிய வயமயங்கி என்ற முதற்குறிப்புப்பாட்டில் சிந்தைதனைத் தெளிவித்து என்றும், சிவமாக்கி என்றும், எனையாண்ட என்றும் இந்தப் பாட்டிற்போலவே கூறப்பட்டுள்ளன. ஆனால் அந்தப்பாட்டில் சிந்தைதனைத் தெளிவித்து என்பதற்கு மட்டும் இந்தப்பாட்டில் சித்தமலம் அறுவித்து என்பது சிந்தை தெளிவித்தலுக்குக் காரணமாகக் கூறப்பட்டுள்ளது. இப்பாட்டுக்கள் ஒன்றையொன்று விளக்குவனவா யுள்ளன. இந்த மூன்று அத்துவித நிலைகளும் பத்திநெறி என்று இந்தப்பாட்டிற் கூறப்பட்டபடியால் உண்மைசசரியை கிரியை யோகம் ஞானங்கள் பத்திநெறியில் எவ்வாறு அடஙகும் என்பது இங்கே குறிக்கத்தக்கது. உண்மைஞானத்துக்குச சேர்ந்த ஞானத்திற் சரியை சித்தமலமறுவித்து என்பதிலும், ஞானத்திற் கிரியையும் யோகமும் சிவமாக்கி என்பதிலும், ஞானத்தில்ஞானம் எனைஆண்ட என்பதிலும் அடங்கும். உயிரானது ஞானத்திற்சரியையால் மாயைத்தொடர்புடைய மலம் முற்றிலும் நீங்கப்பெற்றும், ஞானத்திற்கிரியாயோகங்களால் அருள் விளக்கம் அடைந்து சிவனுடைய எண்குணங்களும் பதியப்பெற்றுச் சிவமாகியும், ஞானத்தில் ஞானத்தால் பேரின்பப் பேற்றினிமித்தம் சிவனால் அடிமையாக ஆண்டருளப்பெற்றும் சிவனுடைய திருவடிகளை அடைகின்றது. இந்த மூன்று நிலைகளும் காரியசுத்த நிலைக்குச் சேர்ந்தவை. காரணசுத்தநிலையே நாவினால் இன்னது என்று கூறவொண்ணாத சிவாநந்த சிவானுபவ நிலையாகும். சித்த மலம் அறுவித்து என்பதிலும் சிவமாக்கி என்பதிலும் உம்மையுருபுகள் தொக்கன.

## அச்சோப்பதிகம்

அத்தன் — சிவபெருமானுக்கு பேரின்பம் அடையப்பெறும் தாம் மகன் என்னும் கேண்மையால் அவனுடைய உரிமைகள் எல்லாம் அடைதல்பற்றி அடிகள் சிவபெருமானை இந்த இடத்தில் அத்தன் என்று கூறியருளினர். சிவஞானசித்தியார் எட்டாவது சூத்திரம் முதலாவது பாட்டில் கூறப்பட்டிருக்கும் கருத்துக்களை நோக்குக. ஆர் பெறுவார் — அடிகள் தம்மைச் சிவபெருமான் திருப்பெருந்துறைக்குவந்து ஆட்கொண்டு பேரின்பமருளிய அரிய நிலையை அதற்குமுன்னுள்ள தமது நிலையுடன் ஒப்பிட்டுப்பார்த்து, அளவிலடங்காத் தமது வியப்பைக் கூறுகின்றார். "என் சிரத்தின் உறுகால் பிறற்கரியோன்" என்று அடிகள் திருக்கோவையார் 26-வது பாட்டிற் கூறியது காண்க. அச்சோவே—அச்சோ என்பது வியப்புக்குறிப்புச்சொல். 'ஏ அசை'

திருவாசக அருள்முறைத்திரட்டு உரை முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

மீரானியா அச்சுக்கூடம், திருநெல்வேலி. POAO.